# இந்தியப் பண்பாடும் தமிழரும்





எஸ். இராமகிருஷ்ணன்



மீனாட்சி புத்தக நிலையம்
60, மேலக் கோபுரத் தெரு, மதுரை--1.

# இந்தியப் பண்பாடும் தமிழரும்

உயர்திரு. சா. கணேசன்
அவர்கட்கு

அன்புடன்,
[signature]
30/8/71



எஸ். இராமகிருஷ்ணன்




மீனாட்சி புத்தக நிலையம்

60, மேலக்கோபுரத் தெரு, மதுரை-1.

## பதிப்புரை

ஒரு நாட்டின் ஒற்றுமையைக் காத்து நிற்பது எது? மொழியா, இனமா, நிலப்பரப்பா? இவையெல்லாம் மட்டும் ஒரு நாட்டின் ஐக்கியத்தைக் காத்து நிற்கவில்லையென்பதைத் தற்போதைய பலநாடுகளின் அமைப்பு நிரூபிக்கிறது. அப்படியாயின் நாட்டின் ஒற்றுமையைக் கட்டிக் காக்கும் ஏதோ ஒரு சக்தி இருக்கவேண்டுமே அது என்ன? அதுதான் அந்நாட்டு மக்களின் பண்பாடு அல்லது நாகரிகம்.

பாரதப் பண்பாடு மிகத் தொன்மை வாய்ந்தது. பழமை மிக்க இந்தியப் பண்பாட்டின் பெருமையையும் அந்தச் சிறந்த பண்பாட்டின் வளர்ச்சிக்கு, முன் தோன்றிய மூத்த குடியான தமிழ் இனத்தின் பெருங்கொடையையும் பற்றி மிகத் தெளிவாக விளக்கிக் கூறுகிறார், பேராசிரியர் எஸ். இராமகிருஷ்ணனவர்கள் இந்த நூலிலே.

இந்தச் சிறந்த நூலைத் தமிழ் வாசகர்களின் முன் படைப்பதிலே நாங்கள் பெருமையும் மகிழ்ச்சியும் அடைவதோடு நம் நாட்டின் சமயம், தத்துவம், கலைகள், இலக்கியம் ஆகியவை பற்றியும், மறுமலர்ச்சி சகாப்தத்தைப் பற்றியும் ஆசிரியர் எழுதியுள்ள மற்றொரு சிறந்த ஆராய்ச்சி நூலினையும் இதனை அடுத்து வெளியிடுவோம் என்பதையும் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

தமது சிறந்த இலக்கியப் படைப்புக்களைத் தொடர்ந்து வெளியிடும் வாய்ப்பினை எங்களுக்களித்து வரும் ஆசிரியர் எஸ். இராமகிருஷ்ணனவர்கட்கும். இந்நூலுக்கு நல்லதொரு முன்னுரை வழங்கியுள்ள பன்மொழிப் புலவர் பேராசிரியர் தெ. பொ. மீ. அவர்கட்கும் எங்கள் மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்,

இந்நூலை நல்ல முறையில் வெளியிட உதவிய தமிழ்ப் புத்தகாலய உரிமையாளர் திரு. கண. முத்தையா அவர்களுக்கும் ராமன் பிரஸ் உரிமையாளர் சீதாராமன் அவர்களுக்கும், பொருள் அகராதி தொகுத்துத் தந்த மதுரைப் பல்கலைக் கழக விரிவுரையாளர் திரு. கனகசபை அவர்கட்கும் எங்கள் நன்றி உரித்தாகுக.

இந்நூலில் இணைக்கப்பெற்றுள்ள படங்களைத் தந்துதவிய தமிழ்நாடு அரசு தொல்-பொருள் ஆராய்ச்சித் துறையினருக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

மதுரை<br>24—6—71 } மீனாட்சி புத்தக நிலையத்தார்

# முன்னுரை

டாக்டர் தெ பொ. மீனாட்சி சுந்தரனார்

''இந்தியப்பண்பாடும் தமிழரும்'' என்ற நூலை நண்பர் திரு. எஸ். இராமகிருஷ்ணன் அவர்கள் எழுதி வெளியிட்டுள்ளார்கள். அடிப்படையான இந்தியப்பண்பாடு தமிழ்ப் பண்பாட்டோடு ஒத்து விளங்குவதை விளக்குவதோடு தமிழரின் வரலாற்று வழியே தோன்றும் சிறப்பியல்புகளையும் சுட்டுகின்றார். ''ஒன்றே குலமும்'' என்று மனித குலத்தின் ஒற்றுமையை வற்புறுத்திக்கொண்டு இந்தியாவிலே பல மக்களினங்களும் ஒன்று கலந்த வரலாற்றையும் தமிழ் நாட்டிலும் அந்த உண்மை விளங்குவதனையும் கூறிப் பொதுவாக இந்தியர் இத்தகைய கலவைக்குள்ளான காக்கேசியா இனத்தவரே என்பதனை நிலைநாட்டுவதோடு, சிந்துநதி நாகரிகம் அதன் எழுத்து முறை முதலியன திராவிடமொழியைச் சேர்ந்தன என்பதனையும் தெளிவாகவும் சுருக்கமாகவும் விளக்குகின்றார். இரும்பினைப்பயன்படுத்தியவர்கள் பின் வந்தவர்களே என்பதனை ஒப்புக்கொண்டு, ஆனால் இவர்களுக்கு முன்னரே திராவிடர் இந்தியாவில் பரவித் தென்னாட்டில் குடிபுகுந்தனர் என்பதனைச்சிறப்புறத் தெளிவுறுத்துகிறார். நான் என்னுடைய மைசூர்ப் பல்கலைக்கழகச் சொற்பொழிவிலும் கேரளப்பல்கலைக்கழகச் சொற்பொழிவிலும் வேளிர்களே இந்த இரும்பைப் பயன்படுத்திப் பின்வந்த ஒரு கூட்டம் என்று ஐயுறுவதாகக் கூறியது உண்டு. இந்த ஆசிரியர் அந்தச் சொற்பொழிவுகளைக் கேளாமலே தாமாக அத்தகைய கொள்கையை நிலைநாட்டியிருப்பது கண்டு மகிழ்ந்தேன். சக்கரவர்த்தி மரபு என்ற தலைப்பில் அரசியல் வழியே இந்த இந்திய ஒருமைப்பாட்டை நிலைநாட்டுவதனைக் குறிக்கோளாக இந்த நாடு கொண்டிருந்தன் வழியே பல சக்கரவர்த்திகளான மௌரியர், சாதவாகனர்

முதலியோரைப்பற்றிக் குறிப்பிடுகின்றார். இந்த அடிப் படையில் அடுத்து அரசியல் கண்ட ஐக்கியத்தை நாட்டாட்சி ஊராட்சி என்ற வகையில் எல்லாம் பரந்த வடநூல்கள் வழியேயும் சங்கநூல்களும் திருக்குறளுமான தமிழ் மரபு வழியேயும் விளக்கி ஒற்றுமையை வற்புறுத்துகிறார். சமுதாய வாழ்வு என்பது இந்நூலின் உயிர்நிலையானது. தமிழ்ப்பண் பாடும் வடமொழிப்பண்பாடும் இங்கும் ஒற்றுமைகொண்டு நிலவுவதை விளக்குகின்றார். நால்வகை வருணம் என்ற வழக்கு வடமொழியிலே மட்டும் அன்றிப் பழந்தமிழ் நூல் களிலும் பயின்று வருவதை வற்புறுத்துகிறார். வேற்றுமைகள் அடிப்படை வேற்றுமைகளா என்பதனையும் ஆராய்கிறார். இங்குஏற்படும் குழப்பங்களுக்கு இடமில்லாமையையும் காட்டு கின்றார். வருணத்தினும் சாதி வேறு என்று பின்னதன் வளர்ச்சியைச் சுட்டிக்காட்ட முயன்றுள்ளார். சேரர்கள் குதிரைமழவர் மரபு என்றும் பாண்டியர் கள்வர்மரபு என்றும் கூறுவதோடு வேளிர்களைப்பற்றிய நீண்டதோர் ஆராய்ச்சியும் இங்கே செய்துள்ளார். கிராம அமைப்பு, குடும்பம், உறுதிப் பொருள் நான்கு, பெண்கள் நிலை, தமிழர் மணம் என்ற பல வற்றைப்பற்றியும் ஆராய்ந்து இந்திய ஒருமைப்பாட்டிற்குப் பழந்தமிழ் நூல்கள் அரண் செய்வதனைத் தெளிவுறுத்துகிறார்.

இந்திய ஒருமைப்பாட்டினைப்பற்றி எல்லோரும் எண்ணி யும் பேசியும் வருகிற இந்த நாளில் இத்தகையதோர் ஆராய்ச்சிநூல் பல குழப்பங்களை நீக்கி உண்மை நிலையை விளக்க முன்வந்தது, நம் நல்ல காலமே ஆம். இங்குள்ள கொள்கைகளை எல்லோரும் ஒப்புக்கொள்ளவேண்டும் என்ப தில்லை. ஆனால் இங்கே திரட்டித்தரப்பெற்றுள்ள சான்றுகளை அடிப்படையாகக் கொண்டே மேலும் ஆராய்ச்சிகள் எழ வேண்டும் என்பதில் ஐயத்திற்கு இடம் இல்லை.

எனவே நம் வாழ்த்துக்கள் நம் ஆசிரியருக்கு உரியன ஆம்!

கோவை
18—4—71 } தெ. பொ. மீனாட்சிசுந்தரன்

# பொருளடக்கம்



லோதாலில் காணப்பெறும் சிந்துவெளி கால துறைமுகத்தின் நீர்த்தேக்கம்



சிந்துவெளி பரப்பில் கண்ட முத்திரை





சிந்துவெளி பரப்பில் கண்ட முத்திரைகள்



# I. ஒன்றே குலம்

இந்தியர்களாகிய நாம் ஒரே ஒரு மக்கட் குழுவின் மரபினரல்லர்; ஒன்ருேடொன்று உறவு கொள்ளாத விதவித இனங்களின் வமிசங்களாக வேறுபட்டு வாழ்வோருமல்லர். வெவ்வேருன இனங்களின் பல வகையான குழுக்கள், பண்டொழிந்த காலத்திலேயே, கலப்புற்று உருவானதே பாரத சமுதாயம்.

## 1. யாவரும் கேளிர்

இந்திய நாட்டில் நிகழ்ந்த இனக்கலப்பைப் புரிந்து கொள்வதற்கு முன்னர், ஒரு சில பொதுப்படையான உண்மைகளை நினைவு கூர வேண்டும். அவற்றில் முதன்மையானது, மனிதர் அனைவரும் ஒரு குலம் என்பதே. எல்லா மாந்தர்க்கும் ஆதி பிதா மனுவே என்று சொல்லும் ரிக்வேதம்.* ''நான் உனக்கு ஓதும் மறை பொருள் இதுவே. மனிதனைவிடச் சிறந்தவன் எவனும் இலன்'' என்று மகாபாரதம் பேசும்போது, அது மனிதகுலத்தைப் பொதுவிலேயே குறிப்பிடுகிறது.

''யாதும் ஊரே, யாவரும் கேளிர்'' என்ருர் கணியன் பூங்குன்றனர் (புறநானூறு 192). ''ஒன்றே குலமும், ஒருவனே தேவனும்'' (2066) என்ருர் திருமூலர். ''பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும்'' (குறள் 971) என்று வள்ளுவர் போதிப்பார். இந்த அறநெறிக் கருத்து விஞ்ஞானத்துக்கும்

---

* மனு என்பதை ஒருவனின் பெயராக அன்றி, ஒரு குலத்தின் பெயராக வலிந்து பொருள் கொண்டால், இந்தக் கூற்று விஞ்ஞானத்துக்கும் ஏற்புடைத்து.

உடன்பாடே. 'யூனெஸ்கோ'* எனப்படும் ஐக்கிய நாடுகள் அமைப்பின் கல்வி, விஞ்ஞான, பண்பாட்டுக் கழகம், இனப் பிரச்சினைகளில் துறை போகிய நிபுணர்களின் கூட்டறிக்கையை 1950ல் வெளியிட்டது. பௌதிக மானிட இயல், பிறப்பியல்** ஆகியவற்றில் தேர்ந்த பேரறிஞர்களின் கூட்டறிக்கையை 1952ல் வெளியிட்டது. இன்று வாழும் மனிதர் அனைவரும் ஹோமோசேப்பியன்ஸ் (Homo Sapiens-அறிவுள்ள மனிதர்) என்ற ஒரே வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் என்பதிலும், அவர்கள் அனைவரும் ஒரே மூலவர் குழுவின் வழியினர் என்பதிலும் விஞ்ஞானிகள் பொதுப்படையான உடன்பாடு கண்டிருப்பதை அந்த அறிக்கைகள் வலியுறுத்துகின்றன.

## 2. வேற்றுமையின் வரையறை

ஒரே குலமரபினராயினும் வேறுபட்ட தட்ப வெப்ப நிலைகளிலும் காடு, மலை, பாலை முதலான மாறுபட்ட நிலங்களிலும் வாழ்ந்ததால் செயல்பட்ட பரிணாம காரணங்கள், மக்கட் குழுக்களிடையே வேறுபாடுகளைத் தோற்றுவித்தன. மேனிநிறம், மயிர், மண்டை வடிவம், மூக்கின் அமைப்பு முதலானவற்றில் இந்த வேறுபாடுகள் புலனாகின்றன. ஆனால் எந்த இரு மனிதருக்கிடையிலும் ஒப்புமை அதிகம், வேற்றுமை குறைவு.

உயிரியல் நோக்கில் மனித வர்க்கத்தை இனங்களின்*** தொகுதியாகக் காண்பர் விஞ்ஞானிகள். பரம்பரைப் பண்பு

---

* United Nations Educational Scientific and cultural Organization (UNESCO-யூனெஸ்கோ)

** மனிதனது உடலமைப்புச் சிறப்புக்களை ஒப்பு நோக்கி ஆராயும் விஞ்ஞானம், பௌதிக மானிடஇயல் (Physical Anthropology). உயிர்களிடையேகாணப்படும் ஒப்புமைகளுக்கும் வேற்றுமைகளுக்கும் காரணம் தேடும் விஞ்ஞானமான பிறப்பியல் (Genetics) உயிரியலின் (Biology) கூறு ஆகும்.

*** இனம்— Race

களுக்குக் காரணமாக அமைவதும், தாய் தந்தையரிட மிருந்து கருவில் அடையப் பெறுவதுமான உயிர்ப்பொருளின் —ஜீன்களின்*—வேறுபாடே இன வேற்றுமைக்குக் காரணம் என்று அவர்கள் கூறுவர். ஒரு மனிதனிடம் ஜீன் என்ற பரம் பரைப்பண்பு அலகுகள் ஆயிரக் கணக்கில் உள்ளன. ஆனால் எந்த இரண்டு இனத்து நபர்களுக்கு இடையிலும் வேறுபடும் ஜீன்கள் சிலவே. நூற்றுக்குத் தொண்ணூற்றுக்கு மேற்பட்ட ஜீன்கள் அனைத்து மானிடர்க்கும் பொதுவானவையே. எனவே, மாந்தர்களிடையே வேற்றுமைகளைவிட ஒப்புமை கள் மிகவும் அதிகமாக விருப்பதில் வியப்பில்லை.

எல்லா இனங்களும் ஒரே மனித வர்க்கத்தின் பிரிவுகளே என்பதை மறக்கக்கூடாது. எந்த ஓர் இனத்து ஆணும், வேறு எந்த இனத்துப் பெண்ணும் திருமணம் புரிந்து இல்லறம் நடத்தி வமிசத்தை விளக்க முடியும்.

பாரம்பரியமாக அமையும் உடலியல் வேறுபாடுகளின் அடிப்படையிலேயே, இனங்களை வகைப் படுத்துவர் மானிட இயலார். அறிவிலோ மனப்பான்மையிலோ இனவேற்றுமை காண்பதற்கு ஆதாரமில்லை. அறிவாலோ ஒழுக்கத்தாலோ ஓர் இனம் உயர்ந்ததென்றும் வேறு ஓர் இனம் தாழ்ந்த தென்றும் செப்புவதெல்லாம் பேதைமையே, அல்லது வஞ்ச னையே. ஓர் இனம் பின் தங்கியிருந்தால், அதற்குக் காரணம் அதன் இயற்கையான குறை அன்று; சமுதாயச் சூழலே. ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன் எகிப்திலும் சுமிரியாவிலும் சிந்து நதிச் சமவெளியிலும் மக்கள் நாகரிகம் கண்டபோது, ஐரோப்பியர் காட்டாட்களாகக் காலம் தள்ளினர்கள். அது அவர்களது இயற்கையான ஊனத்தால் நேர்ந்த அவப்பேறு அன்று; அதே ஐரோப்பியர்கள் இந்நாளில் பண்பாட்டில் சிறந்து விளங்குகின்றனர். அதே போல, இந்நாளில் ஆப்பி ரிக்க மக்கள் பின்தங்கி யிருக்கிருர்களென்ருல், அது அவர் களது அறிவுக்குறைவின் விளைவு என்பது அவதூறே ஆகும். மனிதர் யாவரும் சரிநிகர் சமானம் என்ற அறநெறியை, விஞ்ஞானம் உறுதிப்படுத்துகிறது; ஊறு செய்யவில்லை.

---

* Genes

## 3. மூன்று பேரினங்கள்

வெவ்வேறான மானிட இயலார் வெவ்வேறு விதமாக மக்களினங்களை வகைப்படுத்தினர் என்பது உண்மையே. ஆனால் இந்நாளில், மிகப் பெரும்பாலான மானிட இயலார் இனங்களை வகைப்படுத்துவதில் கருத்தொற்றுமை கண்டுள்ளனர். அவர்கள் மனித குலத்தை மூன்று பேரினங்களாக வகைப்படுத்துவர். அவையாவன: 1. நீக்ராயிடு. 2. மங்கோலாயிடு. 3. காக்கசாயிடு. ஒவ்வொரு வகையிலும் பல இனங்கள் உள்ளன.

நீக்ராயிடுப்பிரிவு, ஆப்பிரிக்காக் கண்டம் முழுவதிலும் மெலினிசியத் தீவுகளிலும் வேறுசில இடங்களிலும் காணப்படுகிறது. நீக்ராயிடுகளில் நெடிய உருவினர் உளர்; குறளர்களும் உளர். நீண்ட தலை இவர்களது சிறப்பாயினும் உருண்டைத் தலைக்குழுக்களும் உள. கம்பளிச்சுருளாகவோ (woolly) பரட்டையாகவோ (frizzly) உள்ள தலைமயிரும், கறுத்த மேனியும் நீக்ராயிடு வகையின் சிறப்புக்களாம். வெப்பம் மிகுந்த பிரதேசங்களில் வாழ்வதற்குக் கறுத்த மேனி உதவுவதால் கருநிற ஜீன்கள் இவர்களிடம் பெருகியிருக்க வேண்டுமென்பர். சப்பை மூக்கும், தடித்து வெளிப்பிதுங்கிய உதடுகளும் நீக்ராயிடுகளிடையே அதிகமாகக் காணப்படுகின்றன.

சீனர், மங்கோலியர், ஜப்பானியர், எஸ்கிமோக்கள், அமெரிக்க இந்தியர் முதலானோர் மங்கோலாயிடு இனங்களைச் சேர்ந்தவர்கள். சப்பை முகம், முகத்திலும் உடம்பிலும் குறைந்த மயிர், நேரான தலைமயிர், இலேசான மஞ்சள் அல்லது பழுப்பு நிற மேனி, புருவத்துக்கும் மேலிமைக்குமிடையே சதை மடிப்பு உள்ளதால் கீற்றுப் போல் தோன்றும் கண்கள் ஆகியவை மங்கோலாயிடுகளின் சிறப்புக்களாம். ஆனால் ஆங்காங்கே அதிகமான பழுப்பு நிறம் பெற்றவரும் உள்ளனர். அமெரிக்க இந்தியர்களில் பெரும்பாலோரின் கண் நுனியில் சதை மடிப்பு இல்லை. உருண்டைத் தலையும் சாமானிய அளவு மூக்கும் மங்கோலாயிடுகளின் சிறப்புக்களே எனினும், வேறு மண்டை வடிவங்களையும், மூக்கு அமைப்புக்களையும் காணலாம்.

காக்கசாயிடுகளை வெள்ளையர் என்றும் கூறுவர். ஆனால் அப்பெயர் பொருந்தாது; ஏனெனில் மிகப்பெரும்பாலான இந்தியர்களும் வேறு பலரும் கருநிறமோ மாநிறமோ உடைய காக்கசாயிடுகளாவர். காக்கசஸி*லுள்ள ஜார்ஜியாவில் கிடைத்த ஒரு பெண் மண்டையோட்டின் பண்புகள், இந்த வகையினருக்கு ஏற்ற எடுத்துக்காட்டாக அமைந்தன என்பதால், காக்கசாயிடு என்ற பெயரை இவ்வினத்துக்குச் சூட்டினார் புளூமன்பாக்**

பௌதிக மானிடஇயலின் தந்தை என்று போற்றப்படும் அவர், இவ்வகையினரின் பிறப்பிடம் காக்கசஸே என்று ஊகித்தார். ஆனால் காக்கசாயிடுகளின் பிறப்பிடத்தைப் பற்றி எவ்வகையான ஊகத்துக்கும் ஆதாரம் கிடைக்கவில்லை என்பர் தற்கால மானிட இயலார்.

காக்கசாயிடுகளுக்கு மேனி நிறத்தைப் போலவே கண் நிறமும் மயிர் நிறமும்கூட ஒரு மாதிரியாயில்லை. அவர்களில் உருண்டை வடிவ மண்டையினரும் உளர்; நீண்ட மண்டையினரும் உளர்; உயரமானவரும் உளர்; உயரம் குறைவானவரும் உளர். திருந்திய முகவமைப்பும், எடுப்பான மூக்கும் இவ் வகையினரது சிறப்புக்களாம். இவர்கட்குத் தலைமயிர் நேராகவோ சுருண்டோ இருக்கும்: கம்பளிச் சுருள் போல இருக்காது; பரட்டை மயிரும் அருமைதான். ஆண்களுக்கு முகத்திலும் உடம்பிலும் மயிர் வளர்ச்சி அதிகம் எனலாம்.

காக்கசாயிடு இனங்கள் பல. அவற்றில் முக்கியமானவை மூன்று: 1. மத்திய தரையினர், 2. நார்டிக்குகள், 3. ஆல்ப்பைன்கள். தொல்காலத்தில் பெரும் பங்காற்றியவர்களும், இன்று ஆஸ்திரேலிய ஆதிக் குடிகளாகவும், ஜப்பானிய

---

* காக்கசஸ் அல்லது காக்கேஷியா என்பது கருங்கடலுக்கும் காஸ்பியன் கடலுக்கும் இடையிலுள்ள பிரதேசம். இதைக் காக்கசஸ் மலைகள் இரண்டாகப் பிரிக்கின்றன. தெற்குக் காக்கேஷியாவில் ஜார்ஜியாவும் ஆர்மீனியாவும் அசெர்பெய்ஜானும் உள்ளன.

** புளூமன்பாக் (Blumenbach): ஜெர்மானியர். இவர் வாழ்ந்த காலம் 1752—1840.

2552



ஐநூக்களாகவும் (Ainu), இலங்கை வெட்டர்களாகவும், தென்னிந்திய, மத்திய இந்திய ஆதிக் குடிகளாகவும் எஞ்சியுள்ளவர்களுமான ஆஸ்திரலாயிடுகள், உடற்கூறுகளில் காக்கசாயிடுகளுடன் ஒப்புமை உடையவர்கள். எனவே, அவர்களைக் காக்கசாயிடு வகையினராகவே மானிட இயலார் கருதுவர். அவர்களைப் "பழைய காக்கசாயிடுகள்" என்று குறிப்பிடுவர்.

ஆக, முன்னைய போக்குவரத்துச் சிரமமும், பூகோள அமைப்பும், பல்வகைப் பண்பாடும், மொழி வேறுபாடும் இனக் கலப்புக்குத் தடைகளாக அமைந்து, பேரினங்களும் இனங்களும் நிலையாக உருப்பெறச் செய்தனஎன்பது உண்மை. அதேபோதில், தொன்று தொட்டுக் குடியேற்றங்களாலும் இடப் பெயர்ச்சியாலும் மக்களின் தொடர்பாலும் இனக் கலப்பு ஏற்பட்டு வந்திருப்பதும் உண்மையாகும். தூய இனமே உலகில் இல்லை. மனித வர்க்கத்தின் பரிணமப் போக்கில் மூன்று பேரினங்கள் அமைந்ததும், அவை பல இனங்களாகக் கிளைத்ததும், அந்தக் குழுக்களிடையே கலப்பு நிகழ்ந்ததும் மானிட இயல் ஆராய்ச்சியில் புலனாகின்றன.

காக்கசாயிடுப் பிரிவின் பல இனங்களும், ஏனைய பேரினங்களின் சில பிரிவுகளும் கலந்து பாரத சமுதாயம் உருவான வரலாறு, மானிட இயலாரின் முடிவுகளை உறுதிப்படுத்துகிறது.

## 4. இந்திய நெக்ரிட்டோக்கள்

பழங்காலத்துக்கு முன்பிருந்தே நீக்ராயிடு இனக்கிளையான நெக்ரிட்டோக்கள் நம் நாட்டில் நெடுங்காலம் வாழ்ந்தனர். உருண்ட தலையும், கம்பளிச்சுருள் போன்ற மயிரும், குறள் வடிவமும் பருத்த உடலும் கறுத்த மேனியும் அவர்களது சிறப்பியல்புகளாம். இந்தக் கிளையினத்தின் கால்வழிக் குழுவினரே அந்தமான் தீவின் ஆதிக் குடிகள். வேற்றினத்தால் அழிந்தவர்கள் போக எஞ்சிய நெக்ரிட்டோக்கள், தம்மை வென்றவரோடு கலந்து போயினர். அதனால்தான் ஆனைமலைப்புலையர்கள், இருளர்கள், அஸ்ஸாமின் அங்கமி நாகர்கள் ஆகியோரிடையே நெக்ரிட்டோ உடற்கூறு உடைய

நபர்கள் தென்படுகின்றனர். இந்திய நெக்ரிட்டோக்களது பேச்சு வழக்கு அந்தமானியரது மொழியிலேயே எஞ்சி நிற்கிறது. அவர்களது சொற்களில் சில, ஏற்ற மாற்றத்தோடு, இந்திய மொழிகளில் இடம் பெற்றிருக்கலாம். புத்திரப் பேற்றினை நாடி அரசமரத்தை வலம் வந்து வழிபடும் கொள்கை, நெக்ரிட்டோக்களிடமிருந்து பெறப்பட்டதாகலாம் என்பார் உளர்.

## 5. இந்திய ஆஸ்திரலாயிடுகள்

தென்னிந்தியாவிலும் மத்திய இந்தியாவிலும் வாழும் ஆதிக்குடிகள், ஆஸ்திரலாயிடு வகையினராவர். அவர்கள் தொல்காலத்தில் நெக்ரிட்டோக்களுடன் கலந்தனர் என்பது அவர்களது உடற்கூறுகளிலிருந்து புலனாகிறது. நீண்ட தலையும், சப்பை மூக்கும், தடித்த உதடும், கரிய நிறமும் அவர்களது உடற்சிறப்புக்கள். ஆஸ்திரலாயிடுகள் ஒரு காலத்தில் இந்தியாவின் பெரும்பகுதியில் பரவியிருந்தனர் என்பது தெளிவு. வடநாட்டுச் சமவெளியிலும் தென்னாட்டிலும் மக்களின் பல பகுதிகளில் இவ்வினத்தின் உடற்கூறுகள் வெவ்வேறு அளவில் விரவியுள்ளன. தாழ்ந்த சாதிகள் என்று கூறப்பட்ட பகுதிகளில் இவ்வினக் கூறுகள் அதிகம் என்பர்.

ஆஸ்திரலாயிடுகளது பேச்சு வழக்கிலிருந்து உருவான மொழிகளை ஆஸ்திரிக் மொழிகள் என்பர். முண்டா மொழிகள், மான்—கெமர் மொழிகள் முதலியன ஆஸ்திரிக் மொழித் தொகுதிக்கு உரியன. மான்-கெமர் மொழிகள் பர்மாவிலும் இந்தோ-சீனத்திலும் வழக்கிலுள்ளன. நிக்கோபார் தீவுகளது பழங்குடிகளின் மொழியும், அஸ்ஸாமில் வாழும் காஸிகளது மொழியும் மான்—கெமர் குடும்பத்தைச் சேர்ந்தனவே. சோட்டா—நாகபுரி பீடபூமியிலும் அதற்கு அயலான பகுதிகளிலும் முப்பது லட்சம் ஆதிக் குடிகள் முண்டா மொழிகளைப் பேசுகின்றனர். பண்டைக் காலத்தில் அம் மொழிகளைப் பேசிய வேறு பல பழங்குடிகள், இப்போது ஆரிய, திராவிட தொகுதிகளுக்குரிய மொழிகளைப் பேசுகின்றனர்.

ஆஸ்திரலாயிடுகள் தொல்காலத்திலேயே பிற இனங்களோடு சேர்ந்து, நாகரிக வாழ்வில் பங்கு கொண்டனர் என்பது சிந்து வெளி நாகரிகத்தின் புதை பொருட்களிலிருந்து

தெரிகிறது. மொகஞ்சதாரோவில் ஒரு 'நடனப் பெண்'ணின் உருவச் சிலை கிடைத்துள்ளது. ஆஸ்திரலாயிடின் உடற்கூறு களை உடையது அது. தவிர, அங்குக் கிடைத்த எலும்புக் கூடுகளின் மண்டையோடுகளைச் சோதனை செய்து, சிந்துவெளி யில், இந்த இனத்தினர் இருந்தனரென்பதை ஊகித்துள் ளார்கள்.

## 6. நிசாதர்கள்

இந்நாளைய ஆதிக்குடிகளில் ஒரு பெரிய வகுப்பினர் பில் லர் ஆவார். 'பில்' என்பது தமிழ் சொல்லாகிய 'வில்'லின் மாற்று வடிவமே என்பர் மொழியியலார். இப்போதும் பில் லர்களது தலைமையான ஆயுதம் வில்லே. பண்டைத் தமிழர் கள் இவர்களையே வில்லவர் என்றனர் போலும். இருளர் களை வில்லியர் என்று குறிப்பிடுவதும் தமிழ் வழக்கு. இப் பொழுது பில்லர்கள் பேசும் மொழி குஜராத்தியை அடிப் படையாகக் கொண்டது; அதில் மராத்தி மொழியின் செல் வாக்கும் தென்படும். ஆனால் அவர்கள் வாழும் சூழலிலி ருந்து தழுவிக் கொண்ட மொழியே அது. அவர்கள் ஆஸ்திர லாயிடு இனத்தின் வழித் தோன்றல்களே. இராமாயணமும் மகாபாரதமும் பில்லர்களைக் குறிப்பிடுவதோடு, அவர்களை நிசாதர்கள் என்றும் அழைக்கும்.

கங்கைக் கரையில் இராமனால் தோழனாக வரிக்கப்பட்ட குகன் நிசாதனே. தன்னை மாணாக்கனாக ஏற்க மறுத்த துரோ ணரையே குருவாகக் கொண்டு, அவரது பதுமையை வழி பட்டு, வில்வித்தையில் அர்ஜுனனுக்கு நிகராகத் தேர்ச்சி பெற்ற ஏகலைவனும் நிசாதனே. நிசாதர் காடுகளில் வாழ்ந் தனரென்றும், நிசாதப் பெண்களை மணந்து இல்லறம் நடத்திய அந்தணரும் இருந்தனர் என்றும் வடநூல்களிலி ருந்து அறிகிறோம். நிசாதரின் விநோதமான வழக்கமொன்றி னைப் பற்றிய சமஸ்கிருத மணிமொழியை டாக்டர் ஐராவதி கார்வே குறிப்பிடுகிறார். * "மகனைப் பெறுகிறாள் நிசாதத் தாய்; மருந்தைக் குடிக்கிறான் நிசாதத் தந்தை" என்று பொருள்படும் வாசகம் அது. நிசாதர் இனத்தில், மனைவியின்

* Kinship Organization in India: page 321.

பேறு காலத்தில், அவளுக்குப் பதிலாகக் கணவன் கஷாயம் குடித்தான் என்று இதிலிருந்து அறிகிறோம்.*

நிசாதர்நாட்டு (நிடத நாட்டு) வேந்தனுக விருந்த நளனின் கதை. மகாபாரதத்தில் வருகிறது. நிசாதர்களே நாகரிகம் கண்டார்களா? பிற இனக்கலப்பாலோ தொடர்பாலோ அவர்கள் கண்ட நாகரிகத்தை நளன் கதை வெளியிடுகிறதா? அல்லது வழிவழியாக மக்கள் நாவிலும் மனோபாவனையிலும் வளர்ந்த கதையே பாரதத்தில் இடம் பெறுவதால், நளன் நாகரிகத் தலைவனுகக் காட்சி தருகிறுனு? உறுதியாக விடை கூற முடியாது.

மத்திய இந்திய கானகத்தில் சவரி என்ற தவமுதியாளை இராமன் கண்டதாகப் பேசும் வான்மீகம். சுக்கிரீவன் இருந்த இடத்துக்கு வழி காட்டியவள் அவளே. இப்போதும் மத்திய இந்தியாவில் முண்டா மொழி பேசும் சவரர் என்ற ஆதிக்குடி மக்கள் வாழ்கின்றனர்.

## 7. நாகர்: பழமரபுக் கதைகள்

ஆஸ்திரலாயிடு இனத்தவரையே நாகர்கள் என்றும் குறித்தனர் பண்டைய இந்தியர்கள்.

பாலிமொழி இலக்கியத்தில் கௌதம புத்தர் காலத்து நிகழ்ச்சியைப் பற்றி ஒரு கதை சொல்லப்படுகிறது. கோசல தேசத்து அரசனுன பிரசேனஜித், புத்தமதத்தைச் சேராவிட்டாலும், புத்தரிடம் ஈடுபட்டு அவரை அடிக்கடி சந்தித்தான். அவன் புத்தரைத் தோற்றுவித்த சாக்கியர் குலத்தில் பெண் எடுக்க விரும்பித் தனக்கு ஒரு மகளைத் திருமணம் செய்விக்கும்படி சாக்கியர் தலைவனை வற்புறுத்தினுன். ஆனுல் அவனுக்குப் பெண் கொடுப்பது தமது இனத்துக்கு இழிவு என்றெண்ணினர் சாக்கியர். அதேபோதில் கோசல

---

* ''கருவுயிர்த்தாள் குறத்தி; காயம் தின்ருன் குறவன்'' என்பது தமிழ் வழக்கு. இந்தப் பழக்கம் உலகின் பல பகுதிகளில் பழங்குடிகளிடையே நிலவியது. இதனைக் கூவேட் (couvade) என்று ஆங்கிலத்தில் குறிப்பிடுவர். (கஷாயம்;காய்ச்சிய மருந்துக்குடிநீர். காயம்-கருவுயிர்த்தவட்குக்கொடுக்கும் கார மருந்து.)

வேந்தனது கோரிக்கையை நேராக மறுப்பதற்கும் அவர்கட்குத் துணிவு இல்லை. எனவே, தமது தலைவனுக்கு நாக—முண்டா என்ற அடிமைப் பெண்ணிடம் பிறந்தவளைச் சாக்கிய குலக்கொழுந்தாகக் காட்டிப் பிரசேனஜித்துக்கு மணம் செய்வித்தனர். அந்தப் பெண்ணுக்குப் பிறந்த விடேபன் தாய்வழிப் பாட்டன் வீட்டுக்குப் போனபோதே, உண்மை வெளிப்பட்டது. மனைவியையும் மகனையும் தள்ளிவைத்தான் மன்னன். அரசியின் குலம் யாதாயினும், தந்தையின் குலமே மகனுடையது என்று கூறி அவனைச் சமாதானப் படுத்தினார் புத்தர். அரசனும் தன் மனைவியையும் மகனையும் சேர்த்துக்கொண்டான். ஆனால் பின்னாளில் விடேபன் முடி சூடியபோது, சாக்கியர் குலத்தையே அழித்துப் பழி தீர்த்துக்கொண்டான். இந்தக் கதையில் சாக்கியர் தலைவனுக்கு மகளை ஈன்ற அடிமைப் பெண்ணின் பெயர் நாக-முண்டா என்பது கவனத்துக்குரியது. அவள் நாக-முண்டா இனத்தவள் என்பதை அப்பெயரிலிருந்தே ஊகிக்கலாம். எனவே, முண்டா மொழி பேசிய மக்களே நாகர் என்று அனுமானிப்பார் ஐராவதிகார்வே.*

ஹரி வமிச புராணம் 'கோலசர்ப்ப' என்ற இனத்தைக் குறிப்பிடும். சர்ப்ப (சர்ப்பர்) என்பது நாகா (நாகர்) என்ற இனத்தின் வேறு பெயராகப் பாரதத்தில் வருகிறது. மேலும், இன்று கோலர் என்போர் முண்டா மொழி பேசுவர். எனவே, முண்டா மொழியினரே நாகர் என்ற பாலி இலக்கிய மரபுக்கு ஹரி வமிச புராணச் செய்தி வலுத்தருகிறது என்பார் கார்வே.**

விஷாலனின் மகன் தட்சகன், ஐராவதனின் மகன் திருதராஷ்டிரன் என்ற இரு 'சர்ப்பர்களை' அதர்வ வேதம் குறிப்பிடும். ஐராவதன், திருதராஷ்டிரன், தட்சகன், அசுவசேனன், வாசுகி, கார்க்கோடகன் முதலான பல நாகர்களைப் பற்றிப் பாரதம் பேசும். காண்டவ வனத்து நாகர்களது தலைவனான தட்சகன், ஆரிய மன்னர் பலருக்கு நண்பனாக விளங்கினான்.

---

* Kinship organization in India

** Ibid

காண்டவ வனத்தைக் கண்ணனும் அர்ஜுனனும் எரித்த போது, இந்திரன் அதைத் தடுக்க முயன்ருன் என்ற கதை, தட்சகன்—ஆரியர் நட்பை உய்த்துணர உதவும். காண்டவ வன தகனத்தில் நாகர் பலர் மாய்ந்த போதும், தட்சகன் உயிர் தப்பினுன். அர்ஜுனனது பேரனுன பரீட்சித்து மன்னனைத் தட்சகன் என்ற பாம்பு கடித்துக் கொன்றது என்பது கதை; இது பாண்டவர் வமிசத்தைத் தட்சகன் பழி வாங்கியதைக் குறிப்பதாகும். பரீட்சித்தின் மகன் ஜனமேஜயன் சர்ப்பயாகம் செய்து, தன் தந்தைக்கு இறுதி சூழ்ந்த தட்சகன் குலத்தை அழிக்க முனைந்தான். இந்திரனுலும் தட்சகனைக் காப்பாற்ற முடியாத நிலைமை ஏற்பட்டது. ஏராளமான நாகர்கள் ஜனமேஜயனுல் கொல்லப்பட்டனர் என்பதை உணர்த்துவதே சர்ப்பயாகக் கதை.

வாசுகி என்ற நாகர் குலத்தலைவனது தங்கையை மணந்து கொண்டு, அவளோடு சில காலம் இல்லறம் நடத்தினுர் ஜரத்காரு என்ற முனிவர். அப்போது அவருக்குப் பிறந்தவரே ஆஸ்திகர். அவரும் சிறந்த முனிவரானுர். ஜனமேஜயன் நாகர் இனத்துக்கு அழிவு சூழ்ந்தபொழுது, தாயும் மாமனும் கேட்டுக் கொண்டதற்கு இணங்க, ஆஸ்திகர் அரசனிடம் சென்று பேசி, நாகர் வதையை நிறுத்தச் செய்தார். தட்சகன் முதலிய பலர் காப்பாற்றப்பட்டனர். இவ்வாறு மூன்று தலைமுறைக் காலம் பாண்டவருக்கும் நாகருக்கும் இடையே நடந்த போராட்டத்தைப் பற்றிப் பாரதத்திலிருந்து அறிகிருேம்.

காண்டவவன தகனத்துக்கு முன்பே, கண்ணன் நாகர் கூட்டத்துடன் நடத்திய போரைப் பற்றியும் புராணங்களிலிருந்து அறியலாம். கோகுலத்தில் மூர்க்க மிகுந்த ஓநாய்களின் பெருவரவினுல் கால்நடைகளுக்கு அபாயம் உண்டாயிற்று. எனவே, யாதவர்கள் பிருந்தாவனத்துக்குச் சென்று குடியேறினர். அங்குக் கண்ணன், காலிங்கன் என்பவனது தலைமையில் இருந்த நாகர்களுடன் போராடி, அவர்களைத் துரத்தினுன். இதுவே காலிங்கன் என்ற கொடிய சர்ப்பத்தை அடக்கி அதன்மீது ஆடித் துகைத்தான் கண்ணன் என்ற கதையாக வடிவெடுத்தது.

இழைய விந்தியப் பகுதியில் கார்க்கோடக நாகன் வாழ்ந்ததாகக் கூறும் பாரதம். நிசாதர் வேந்தனான நளன் நாட்டைச் சூதாடி இழந்த நிலையில், அவனுக்குக் கார்க்கோடகன் உதவி செய்த நிகழ்ச்சியை, நாகர்களை நாகங்களாகச் சித்திரிக்கும் மரபுக் கேற்றவாறு கதையில் அமைக்கும் அந்த இதிகாசம்.

வனவாசத்துக்குச் சென்ற அர்ஜுனன், ஐராவத நாகர் குல நங்கையான உலுபியை மணந்தான். அவள் ஈன்ற மகனே அரவான்; பாரதப் போர் தொடங்குமுன் தன்னைக் களப்பலி*யாகக் கொடுத்தான்.

மணிபுரத்தை ஆண்ட நாகர் தலைவனான சித்திரவாகனின் புதல்வி சித்திராங்கதை**யையும் மணந்துகொண்டான் பார்த்தன். அவனுக்கு அவளிடம் பிறந்த மகனே பப்புருவாகனன்.

ஆக, வழிவழியாக வளர்ந்து பாரதத்தில் வடிவெடுத்த நாகர் கதைகளிலிருந்து தொல்பழங்காலத்திய நாகர்களின் ஆற்றல், அரசியல், பண்பாடு முதலியனவற்றை உய்த்துணர்கிறோம்.

## 8. நாகர்: வரலாற்றுச் செய்திகள்

வரலாற்றிலும் நாகர் மரபை விளக்கம் செய்யும் செய்திகள் உள. மௌரியருக்கு முன்னரே மகதத்தை ஆண்ட நாகதர்சகனும் சிசுநாக வமிசமும் நாகமரபினரே என்பர் சில அறிஞர்கள். கி. பி. மூன்றும், நான்காம் நூற்றாண்டுகளில் வடபுலத்தின் பகுதிகளில் நாக அரசுகள் சிறந்து விளங்கின. மகாராஜன் பவநாகன், பாரசிவர் வமிசத்தைச் சேர்ந்தவனாகக் கூறப்பெறுவதால், சிவலிங்கத்தைத் தரித்தவர்களும் பேரரசு கண்டவர்களுமான பாரசிவர்களும் நாகர்களே என்று ஊகிக்கப் பெறும். சமுத்திரகுப்தன் வடபுலத்தில் வென்ற வேந்தர்களில் இருவரான கணபதிநாகனும்

---

* களப்பலி: யுத்த களத்தில் போர் தொடங்குமுன், கொற்றவைக்குக் கொடுக்கும் பலி.

** ஆனால் தென்புல மரபு, சித்திராங்கதையை மணலூர்புரத்துப் பாண்டியனின் மகளாகவே வருணிக்கிறது.

நாகசேனனும் நாக மரபினராவர். அதன் பிறகும் நாகர்கள் செல்வாக்குள்ளவராக விளங்கியதாலேயே, சமுத்திர குப்தனின் மகன் (சந்திர குப்த விக்கிரமாதித்தியன்) நாகர் குல இளவரசியான குபேரநாகாவைத் திருமணம் செய்து கொண்டு, நாகர் நட்பைப் பேணினுன்.

ஆதிநாளிலேயே, நாகர்கள் தென்புலத்திலும் இலங்கையிலும் பரவியிருந்தனர். ஆரிய மொழி பேசிய மக்கள் வடபுலத்திலிருந்து இலங்கை சென்று குடியேறியபோதே, அங்கு நாகர்களும் இயக்கர்களும்* வாழ்ந்தனர் என்று மொழியும் இலங்கை வரலாற்று நூலான மகாவமிசம். இலங்கையைப் பண்டைய இந்திய இலக்கியம் நாகத்தீவு என்றே குறிப்பிடும்.

வடபுலத்துக் கதைகளைப் போல நாகர்களுக்கும் பிறருக்குமிருந்த உறவுகளைப் பற்றிய கதைகள் பண்டைய தமிழகத்தில் வளரவில்லை.** ஆயினும்,சங்க காலத்தில்,அகநானூறு புறநானூறு முதலிய தொகை நூல்களுக்குரிய செய்யுட்களை இயற்றியோரில் நாகர்குலப் புலவர்களைக் காண்கிருேம். ஏறத்தாழ இருபது புலவர்கள் நாகன் என்ற பெயரையே உடையவர்கள். அவர்களில் இளநாகனுர், நன்ஞகனுர், வெண்ஞகனுர் ஆகிய பெயர்களைப் பூண்டவர் பலராவர். நாலைகிழவன் நாகன் என்பவன் பாண்டியனது படை வீரஞகவும் கொடை வள்ளலாகவும் போற்றப் பெறுகிருன் ஒரு புறப் பாட்டில் (புறநானூறு 179).

கொலையும் கொள்ளையும் புரிந்த பாலைநில மக்களான எயினர் நாகரே என்றும், அவர்தம் மரபினரே கள்ளர் என்றும், மறவரும் பரதவரும்கூட நாக மரபினரே என்றும் கூறுவார் அறிஞர் கனககபை.*** இவற்றுக்கெல்லாம் சான்று இல்லை. ஆனுல், ஒளியரும் அருவாளரும் நாக மரபினர் என்று அவர் கொண்ட முடிவைப் புறக்கணிப்பதற்கில்லை.

---

* Yakshas (யட்சர்)

** மணிமேகலையில் மட்டும் சில கதைகள் உள.

*** 1800 ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம்: பக்கம் 80-82.

பல்ஒளியர் பணிபு ஒடுங்க
தொல் அருவாளர் தொழில் கேட்ப*

என்று கரிகால் பெருவளத்தானது திக்கு விஜயத்தைப் பேசுங் கால், உருத்திரங் கண்ணனார் குறிப்பிடுவார்.

ஒளியர் நாகமரபினரே என்பதற்குச் சான்று காட்டுவார் கனகசபை. மாமல்லபுரத்து வராக சுவாமி கோயிலுக்கு மனே வழங்கிய மானியப் பத்திரம் அது. அதில் சோழனது அதி காரிகளிடையே கீழ்வரும் நாகர்களது பெயர்கள் உள்ளன என் பார்:

ஒளிநாகன் மாடையன் அழகிய சோழ
அமர்நாட்டு மூவேந்த வேளான்;
ஒளிநாகன் சந்திரசேகரன்;
ஒளிநாகன் நாராயணன்;
இந்துபுரவான் சங்கநாகன்;
உச்சன்கிழவன் முகுளிநாகன்.

இதிலிருந்து ஒளியர் நாகமரபினரே என்பதும் அவர்கள் கி.பி. **11**ஆம் நூற்றாண்டிலும் வலிமையோடிருந்தனர் என்ப தும் விளங்கும். தவிர, சங்க நாகர், முகுளிநாகர் என்ற பிரி வினரும் இருந்தனரென்பதும் தெரிய வருகிறது.

அருவாளரைப் பழங்குடியாகக் குறிப்பிடும் பட்டினப் பாலை.அவர்தம் நாட்டில், கரிகாலனுக்குப் பின்னர், சங்ககால முடிவில், நல்லியக்கோடன் என்பான் ஆண்டான். சிறு பாணாற்றுப்படை என்ற நூலுக்குத் தலைவன் அவனே. அவனை 'ஓவியர் தலைவன்' என்று சொல்லும் அந்நூல். ஓவியர்குடி நாகரினப் பிரிவு என்பர்.** ஓவியர் அருவாளர் மரபினராயின், அருவாளரும் நாகராவர்.

மணிமேகலைக் காப்பியத்தில் நாகரைப் பற்றிய கதைகள் உள. கீழ்த்திசையில் உள்ள நாகநாட்டு வேந்தர் இருவர்,

---

* பட்டினப்பாலை 274-275
பல்-பல; பணிபு-பணிந்து; தொல்-தொன்மையான; தொழில்கேட்ப-ஏவல்கேட்க.

** பத்துப்பாட்டு: உ.வே. சாமிநாதய்யர் பதிப்பு: பாடப் பட்டோர் வரலாறு.

பழம்பிறப்பை உணர்த்தும் புத்த பீடிகைக்காகப் போரிட்ட நாளில், புத்தரே தோன்றி போரை நிறுத்தி அறம் உரைத்தார் என்பது, எட்டாம் காதையில் வருகிறது. வடமேற்கு இந்தியாவில் காந்தாரத்தில் அமைந்த நாகநாட்டில், நில நடுக்கத்தால், நானூறு யோசனைப் பரப்பு பாதலத்தில் புகுந்தது என்று நவிலும் ஒன்பதாம் காதை. சோழன் நெடுமுடிக் கிள்ளி நாகநாட்டு இளவரசியான பீலிவளையை அடைந்த வியப்பான கதை 24ஆம் காதையில் உள்ளது. பாரதநாடு முழுவதும் அதற்கு அப்பாலும் நாகர்கள் சிறந்து விளங்கிய நினைவுகளையும், சோழர்—நாகர் உறவுபற்றிய மரபுரையினையும் போற்றுவன இக்கதைகள். உடை தரியாதவராயும், மனிதரையே கொன்று தின்பவராயும், பூம்புகாருக்கு அப்பால் நாகர் மலைத் தீவில் வாழ்ந்த நாகர்களைப் பற்றிப் பேசும் சாதுவன் கதை (16ஆம் காதை). நாகர் மொழியைச் சாதுவன் நன்கு கற்றவனாதலால், அவர்களிடம் அம்மொழியிலேயே பேசினான் என்று அக்கதை கூறும். எனவே நாகருக்குத் தனிமொழி இருந்ததும், அதைத் தமிழ் வணிகர்களேனும் அறிந்திருந்தனர் என்பதும் ஊகிக்கப்பெறும்.

## 9. நாகரின் பண்பாட்டுக்கொடை

ஆக, நிசாதர் என்றும் நாகர் என்றும் பேசப்பெறும் ஆஸ்திரலாயிடு இனத்தார் நம்நாட்டுப் பூர்வீக வரலாற்றில் வகித்த பாத்திரம் குறிப்பிடத்தக்கது. தொல்காலத்திலேயே காடுகளில் நிலத்தை வெட்டித் திருத்திப் பயிர் செய்த முன்னோடிகள் அவர்களே என்பர். பஞ்சினில் ஆடை நெய்யும் கலையைக் கண்டவர்களும் அவர்களே என்பர். நீலநாகன் தனக்களித்த ஆடையை, ஆய் என்னும் வள்ளல் சிவபெருமான் சிலைக்கு அணிவித்த செய்தி இங்குக் கருதத் தக்கது. மெல்லாடைகளுக்குப் பெயர் பெற்ற தமிழகத்தில், நீலநாகன் தந்த ஆடை தனிச் சிறப்பானதாக இருந்ததால்தான், அதை ஆய் கடவுளுக்குச் சூட்டியிருப்பான்; புலவரும் அதை அவனது வள்ளன்மைக்குச் சான்றாகப் போற்றியிருப்பார்.*

---

* சிறுபாணாற்றுப்படை அடிகள் 96-99.

சந்திரனது வளர்பிறை தேய்பிறை அடிப்படையில் நாட்களைக் கணக்கிடும் திதி என்ற சாந்திர நாள் முறை இந்துக்களின் பஞ்சாங்கத்தில் இடம் பெற்றுள்ளது. ஆதியில் நிசாதர் கண்டதே இது என்று சான்றுகாட்டி நிறுவுவார் சுநீதி குமார் சாட்டர்ஜி. நாக வழிபாடும் அவர்கள் நிறுவியதே. சிந்துவெளி நாகரிகத்திலேயே பாம்பு வணக்கத்தைக் காண்கிறோம். பண்டைய பாரதம் முழுவதிலும் நாக வணக்கம் பரவியிருந்தது.

'இதைத் தொடாதே, இதைச் செய்யாதே; இவனருகில் செல்லாதே' என்றெல்லாம் கட்டுப்பாடு விதிப்பதை 'டாபூ'* என்பர். புனிதமானவற்றையும் தீட்டானவற்றையும் தொடவோ நெருங்கவோ கூடாது என்பது இக்கொள்கையின் அடிப்படை. இது ஆஸ்திரலாயிடுகளிடம் தோன்றிய கொள்கை என்பதை அறிஞர்கள் நிறுவியுள்ளார்கள். பின்னாளில், சாதிகளிடையே தீண்டாமை நிலவச் செய்ததில் இந்த 'டாபூ' கொள்கைக்கும் ஒரு பங்கு உண்டு.

## 10. மங்கோலாயிடுகள்

பாரத சமுதாயத்தில் மங்கோலாயிடு இனக்கூறுகளும் இடம் பெற்றுள்ளன. மொகஞ்சதாரோவில் மங்கோலாயிடு மண்டையோடு ஒன்று கிடைத்திருக்கிறது. யஜுர், அதர்வ வேதங்களும் பாரதமும் கிராதர் என்று இந்த இனத்தாரைக் குறிப்பிடுகின்றன. பீமசேனன் கிராதர்களை வென்றதாகத் திக்குவிஜய பருவத்தில் கூறப்பெறும். இமயத்தில் தவம் செய்த பார்த்தன் முன்னர், பரமசிவன் கிராத வடிவில் தோன்றினராம். ஆக, இமாலயப் பகுதியில் கிராதர் வாழ்ந்தனர் என்பதை உய்த்துணரலாம். புத்தரைத் தோற்றுவித்த சாக்கியர் குலத்திலும், அதேபோதில் பீகாரில் பொலிவுடன் விளங்கிய லிச்சவி இனத்திலும், மங்கோலியக் கூறுகள் மலிந்திருந்தன என்றும் சில அறிஞர் மொழிவர். புத்தர் காலத்திலேயே கிராதர் பிற இனத்தாரோடு கலந்து இந்தியப் பண்பாட்டில் ஒன்றினரென்பது தெளிவு.

---

* Taboo

அஸ்ஸாம் எல்லைப்புற ஆதிக் குடிகளிடம் மங்கோலாயிடு இனக்கூறுகள் மலிந்துள்ளன. உருண்டைத் தலையே இந்த இனத்தின் சிறப்பாயினும், அஸ்ஸாம் ஆதிக்குடிகளுக்கு நடுத்தர மண்டையே உண்டு.

கி. பி. ஏழாம் நூற்றாண்டளவில் திபெத்திய மங்கோலாயிடுகளுக்கு இமாய மக்களோடு தொடர்பு ஏற்பட்டது. அதன் விளைவாக, மங்கோலிய இனக்கூறுகள் நேபாளம், சிக்கிம், பூட்டான் முதலிய பகுதிகளில் பெருகின. 'ஆயினும் இந்தியப் பண்பாட்டின் உயிராற்றலுக்கு ஊறு நேரவில்லை. நேபாளப் பள்ளத்தாக்கில் வாழும் நீவார்கள், பண்பாட்டில் முழுக்க முழுக்க இந்தியராயிருப்பதே இதற்குச் சான்று. திபெத்திலேயே இந்தியப் பண்பாடு தலைமையான செல்வாக்குப் பெற்றது.

வங்கத்தின் கிழக்கு, வடக்குப் பகுதிகளிலும், அஸ்ஸாமிலும், பீகாரின் வடபகுதியிலும், கிராதர் உடற்கூறுகள் பிற இனக்கூறுகளோடு விரவித் தென்படுகின்றன. மேலும், ஒரிசா முதல் கேரளம் வரையில் மங்கோலாயிடுக்கு உரியதை ஒத்த உருண்டை மண்டை அரிதாகத் தென்படுகிறதென்பர். தொல்பழங்காலத்தில், மங்கோலியர் வந்து கலந்தனர் போலும் என்று இதற்கு விளக்கம் தருவர்.* ஆயினும் சங்க காலத்துச் சேர சோழ பாண்டியர்களும் திரையர்களும் மங்கோலிய மரபினரே என்று அறிஞர் கனகசபை ஊகித்து உரைத்ததற்கு ஆதாரம் எதுவுமில்லை.**

இந்தியாவில் வழக்கிலுள்ள திபெத்—சீன மொழிகள் பலவாயினும் அவற்றைப் பேசுவோர் தொகை ஐம்பது லட்சத்துக்கும் குறைவே. நேபாளத்து நீவாரி மொழியும் மணிப்பூரிலுள்ள மணிப்புரியும் இந்த மொழிகளில் முக்கியமானவை.

---

* பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியின் 'தென்னிந்திய வரலாறு' ஆங்கிலப் பதிப்பு பக்கம் 58.

** ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம். பக்கம் 88—95.

அஸ்ஸாம் ஆதிக்குடிகளில் பெரும்பாலோர் பேசும் மொழிகள் இந்தக் குடும்பத்தைச் சேர்ந்தனவே. இந்தியப் பண்பாட்டு வரலாற்றில் திபெத்—சீன மொழிகள் குறிப்பிடத் தக்க பங்கு ஆற்றவில்லை என்பது உண்மையே.

## 11. மத்தியதரையினர்

காக்கசாயிடுப் பேரினக் கிளையான மத்தியதரை இனத்தாரின் உடற்கூறுகள் இந்திய மக்களிடையே பெருவாரியாகத் தென்படுகின்றன. மத்தியதரைக் கடலைச் சுற்றியுள்ள ஐரோப்பிய, ஆசிய நாடுகளில் அதிகமாக உள்ளனர் என்பதால், மத்தியதரையினர் என்று பெயர் பெற்றனர் இவ்வினத்தார். நீண்ட தலையும், மாநிற மேனியும், கரும்பழுப்பு அல்லது கறுப்பு மயிரும், குறுகலான மூக்கும் இவ்வினத்தாரின் சிறப்புக்களாம். இவர்கட்கு முகத்திலும் உடலிலும் கணிசமான மயிர் வளரும். செங்குத்தான தாடைகளும், நிமிர்ந்த நெற்றியும், முட்டை வடிவ முகமும் உடையவர் எனலாம். சராசரி உயரம் ஐந்து அடி, நான்கு அங்குலம்.

மத்தியதரையினர் என்று குறிப்பிடப் பெறுவோரின் பிறப்பகம் தென்னிந்தியாவே என்றும், அவர்களது பேச்சு வழக்குகளிலிருந்தே திராவிட மொழிகள் தோன்றின என்றும் கூறுவார் நம் நாட்டில் உளர். இங்கிருந்து சென்று குடியேறியவர்களே மத்தியதரை நாடுகளில் காணப்படும் இவ்வினக் கூறுகளுக்குக் காரணர்கள் என்பர். பண்பாட்டு ஒப்புமைகளுக்கும் அவ்வாறே விளக்கம் கூறுவர். ஆனால் மானிட இயலாரில் மிகப்பலர் இந்தக் கருத்தை மறுப்பர். மத்தியதரையினர் என்பார் மத்தியதரை நாடுகளில் உருவானவரே என்பது அவர்கள் நிறுவியுள்ள முடிவு.

## 12. உருண்டைத் தலையினர்

இந்திய சமுதாயத்தில் ஆல்ப்பைன் இனத்துக்கும் பங்கு உண்டு. ஐரோப்பாவில் ஆல்ப்ஸ் மலைத்தொடரை ஒட்டிய பகுதிகளில் இவ்வினக்கூறுகள் அதிகமாகத் தென்படுவதால், ஆல்ப்பைன்என்ற பெயர் வந்தது. ஆல்ப்பைன்கள் உருண்டை மண்டை உடைய காக்கசாயிடுகள். இவர்களுக்குத் திண்மை

யான உடல், அகன்ற மூக்கு, அடர்த்தியான மயிர், பழுப்பு நிற மேனி; சராசரி உயரம் ஐந்து அடி, ஐந்து அங்குலம். சிந்துவெளி நாகரிகப் புதைபொருளில் ஆல்ப்பைன் மண்டை யோடும் கிடைத்திருப்பதால், அந்த நாகரிக அமைப்பில் அவர்களும் பங்குகொண்டனர் எனத் துணியலாம். இந் நாளில் ஆல்ப்பைன் கூறுகளைக் குஜராத்திலும் நேபாளத் திலும் அதிகமாகக் காணலாம்.

ஆர்மிஞயிடு என்ற உருண்டை மண்டை இனத்தாரும் பாரத சமுதாயத்தில் இடம் பெற்றுள்ளனர். இந்த இனத்தை ஆல்ப்பைன் இனத்திலிருந்து கிளைத்த வகையாகச் சிலர் கருது வர்; தனி இனமாகக் கருதுவர் வேறு சிலர். கருங்கடலுக்கும் மத்திய தரைக்கடலுக்கும் இடையிலுள்ள மேற்காசியத் தீப கற்பமான ஆனட்டோலியாவிலும்* அதை அடுத்துள்ள ஆர்மீனிய, ஈரானிய பீடபூமிகளிலும் இந்த இனம் உருவான தென்று தெரிகிறது. ஐயாயிரம் ஆண்டுக்கு முன்னுல் தழைத் தோங்கிய சுமிரிய நாகரிகத்தின் சிற்பங்களில் இந்த இனச் சிறப்புக்கள் விளக்கம் பெற்றுள்ளன. இந்நாளில் துருக்கி, சிரியா, ஈரான் ஆகிய நாடுகளில் இந்த இனத்தின் தன்மைகள் அதிகமாகத் தென்படுகின்றன. ஏடறிந்த வரலாற்றுக்கு முற் காலத்திலேயே ஆர்மிஞயிடுகள் இந்தியா வந்தனர். தமிழ கத்தில் இவர்களது உடற்கூறுகள் காணப்படுகின்றன. ஆர் மிஞயிடுகளுக்கு மண்டை உருண்டையாயிருப்பதோடு மிக வும் உயரமாகவும் பின் கழுத்திலிருந்து செங்குத்தாக எழுவ தாகவும் இருக்கும். மூக்கு மிகவும் எடுப்பாகவும் குறுகலாக வும் வளைந்தும் இருக்கும். பழுப்பு அல்லது கரியமயிரும், மாநிற மேனியும் உடைய இவர்களது சராசரி உயரம் ஐந்து அடி ஆறு அங்குலம்.

வங்கத்திலும் ஒரிசாவிலும்தெளிவாகக் காணப்படுவதும், கத்தியாவாரிலும் கன்னடத்திலும் தென்படுவதுமான மற் ருெரு உருண்டை மண்டை வகையைத் திஞரிக் என்பர். ஆல்ப்பைன், நார்டிக் இனங்களின் குழுக்கள் கலப்புற்றதால்

---

* ஆசியா மைனர் என்றும் பெயர் பெறும். இது தற் போது துருக்கியில் உள்ளது.

உருவான வகை இது என்பர். இந்தக் கலப்பினம் பெரும்பாலும் ஆர்மிஞயிடு இனத்தை ஒத்த இனக்கூறுகளை உடையது. ஆர்மிஞயிடின் முகவடிவம் நடுத்தரமாகவோ குறுகலாகவோ இருக்கும்; திஞரிக்கின் முகவடிவம், நார்டிக் முகத்தைப்போல் குறுகலாகவே இருக்கும். நார்டிக்குகளைப்போல், திஞரிக்குகளுக்கும் சராசரி உயரம் ஐந்து அடி எட்டு அங்குலம். இருவகையினருக்கும் பொதுவில் மெலிந்த உடல்.

## 13. நார்டிக் இனம்

அடுத்துக் குறிப்பிட வேண்டியது நார்டிக் இனமாகும். வடக்கு ஐரோப்பாவிலேயே பெரும்பாலும் காணப்படுவதால், 'வடவர்' என்று பொருள்படும் 'நார்டிக்' என்ற பெயர் இவ்வினத்துக்கு அமைந்தது. பொன்னிறமாகவோ சிவப்பு அல்லது சாம்பல் நிறமாகவோ தலைமயிரும், சாம்பல் அல்லது நீல நிறக் கண்களும், வெள்ளை அல்லது சிவப்பு மேனி நிறமும் நேரான ஒடுக்கமான மூக்கும், நீளத்தலையும் இவர்களது சிறப்புக்களாம். சராசரி உயரம் ஐந்து அடி எட்டு அங்குலம். காக்கசாயிடுகளின் கிளையினரான இவர்கள், தென்ரஷ்யாவில் தோன்றினரென்று தெரிகிறது. மத்தியதரை இனத்திலிருந்து பரிணமித்தவர்களே இவர்கள் என்பது பல மானிட இயலாரின் முடிவு.

ஏறத்தாழ 3,500 ஆண்டுகளுக்கு முன்பாக, நார்டிக்குகள் ஆரிய மொழி பேசுவோராக இந்தியாவை அடைந்தனர். வழியில், மத்திய ஆசியாவிலுள்ள பாமிர் பீடபூமியிலும் அதற்கு அயலிலும், ஆல்ப்பைன் இனத்தாரோடு கலந்தவராகவே, அவர்கள் இந்தியா வந்தனர். காஷ்மீரத்திலும் பஞ்சாபிலும் ராஜபுதனத்திலும் நார்டிக் கூறுகளைக் காணலாம். மேற்கிந்தியாவிலும் கிழக்கில் வங்காளம் வரையிலும் இவ்வினக் கூறுகள் ஆங்காங்கே தென்படுகின்றன. மகாராஷ்டிரர்களிலும் திராவிட மொழிகளைப் பேசும் தென்னுட்டு மக்களிலும் சில பகுதிகளில் நார்டிக் இனக்கூறுகள் தென்படுகின்றன.

## 14. ஆரியர் திராவிடர்: மொழிவழிப் பெயர்களே

நார்டிக் இனத்தினரே ஆரிய மொழி பேசுவோராக இந்நாட்டுக்கு வந்தனர். ஆனால் இன்று ஆரிய மொழி பேசுவோரெல்லாம் நார்டிக் இனத்தவராகார். ஆரிய மொழியினர், இந்தியாவில் இடம் பெற்ற பல்வேறு இனங்களின் கலப்பில் உருவான கூட்டங்களே. திராவிட மொழிகளைப் பேசுவோரும் அத்தகையோரே. இனக் கலப்பு விகிதங்களில் ஏற்றத் தாழ்வு இருக்கலாம். ஆஸ்திரலாயிடு, மத்தியதரை இனங்களின் சிறப்புக்கள் வடநாட்டைவிடத் தென்னாட்டில் அதிகம். நார்டிக் இனக்கலப்பு காஷ்மீரில் கூடுதல்; தமிழகத்தில் குறைவு. உருண்டை மண்டைச் சிறப்பு ஆந்திரத்தில் அரிது; கேரளத்தில் இல்லை; தமிழகத்தில் ஓரளவுக்குத் தென்படும். ஆனால், எம்மொழியினரும், காலப்போக்கில் இனக் கலப்புற்றவர்களே. ஆரியர், திராவிடர் என்ற சொற்கள் இனப்பெயர்கள் அல்ல; மொழிவழிக் குழுக்களையே குறிப்பன.

ஆயினும் ஆதியில் ஒரு மொழி ஏதோ ஒரு கூட்டத்திலேயே தோன்றியிருக்க வேண்டும். ஓர் இனத்தில், பல மொழிகள் உதித்திருக்கலாம்; ஆனால் ஒரு மொழி பல இனங்களில் உதித்திருக்காது. ஆரியம் நார்டிக் இனத்தில் தோன்றியது என்பது தெளிவு. ஆனால் அதேபோல் திராவிடம் எந்த இனத்தில் உதித்ததென்று உறுதியாக உரைப்பதற்கில்லை. அது மத்தியதரையினரிடையே உதித்ததா? சிந்துவெளி நாகரிகத்தில் எந்த மொழி வழக்கிலிருந்தது? சில மானிட இயலார் மொழிவதுபோல், கி. மு. 700 அளவிலேயே திராவிடர்கள் பாரதம் வந்தனரா? ஆர்மினாயிடுகளிடையே திராவிடம் உருவாயிற்றா? இவையெல்லாம் முடிவான விடை காணவேண்டிய பிரச்சினைகள்.

## 15. திராவிடரின் பூர்வீகம்

பண்டொழிந்த காலத்தில், மேற்கு ஆசியாவில் திராவிடத் தொடர்புடைய மொழிகள் வழக்கிலிருந்தன என்று ஊகிக்க இடமுண்டு. ஆனட்டோலியாவில் வாழ்ந்த லிஷி

யர்களுக்குத் திரிம்ளை (Trimmlai) என்ற பெயர் வழங்கி வந்ததை அவர்களது கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன. அந்தப் பெயர் த்ரமிள (தமிழ்) என்பதைப் பெரிதும் ஒத்திருப்பதை அறிஞர் எடுத்துக்காட்டுவர். மெசப்பட்டோமியா*வில் சிறந்து விளங்கிய சில நகரங்களின் பெயர்கள்—அர் (Ur), நிப்புர் (Nippur) ஆசுர் (Assur) முதலியன—தமிழ் ஊர் என்பதை நினைவூட்டுகின்றன.

ஆப்கானிஸ்தானத்திலும் ஈரானியப் பீடபூமியிலும் உள்ள பல இடங்களின் பெயர்கள் திராவிட மொழி வடிவங்கட்கு ஒத்தனவே; அந்த இடப்பெயர் பலவற்றில் 'மலை' என்ற திராவிடச் சொல் இடம் பெறுகிறதென்பர்.

ஆனட்டோலியாவில் வாழ்ந்த ஹரியன்களது மொழியும், ஈரானியப் பீடபூமியில் வாழ்ந்த காசைட்டுகளது மொழியும் திராவிடத் தொடர்பு உடையன என்பர். ஈரானின் தென்மேற்குப் பாகத்தில், சுமிரியாவுக்குக் கிழக்கே, ஐயாயிரம் ஆண்டுக்கு முன் நாகரிகம் கண்ட ஈலம் நாட்டினரது மொழிக்கும், பலூச்சிஸ்தானத்தில் ஒரு கூட்டத்தார் பேசும் பிராஹுயி என்ற திராவிட மொழிக்கும் அமைப்பில் ஒப்புமைகள் உள என்பர்.

ஆனட்டோலிய, ஆர்மீனிய, ஈரானியப் பீடபூமிகளில் தான் ஆர்மினுயிடு இனம் உருவாகியது. ஈலமைட்டு, காசைட்டு, ஹரியன் முதலான ஆர்மினுயிடு மக்களே தொல் காலத்தில் திராவிடத்துடன் உறவுள்ள மொழிகளைப் பேசினர். எனவே, மேற்காசிய ஆர்மினுயிடு மக்களிடையே திராவிடம் உதித்தது என்ற கொள்கை தோன்றியுள்ளது. திராவிடத்தையோ அதன் முன்னுருவத்தையோ பேசியோர் மேற்காசியாவிலிருந்து பாரதம் வந்தனர் என்பர் அக்கொள்கையர்.

மொழி, உடற்கூறு ஆகியவற்றின் ஒற்றுமைகளை அடிப்படையாகக் கொண்ட இந்தக் கொள்கைக்கு வேறு சில பண்பாட்டுச் சான்றுகள் வலுத்தருவதையும் அறிஞர் எடுத்துக்

---

* டைக்ரிஸ் நதிக்கும் யூப்ரட்டீஸ் நதிக்கும் இடையேயுள்ள சமவெளி; தற்கால ஈராக்கில் உள்ளது.

காட்டுவர். மெசப்பட்டோமியாவின் தென்பகுதியில் ஐயாயிரம் ஆண்டுக்கு முன் நாகரிகம் கண்ட சுமிரியர்கள், தாய்த் தெய்வத்தை மலைமகள் என்று அழைத்து வணங்கினர். இது இமவான் மகளாகப் பார்வதியைப் போற்றி வணங்கும் இந்து மத மரபினை நினைவூட்டுகிறது. அர் நகரில் ஆண்டு தோறும் மலைமகளுக்கும் சந்திரக் கடவுளுக்கும் திருக் கலியாணம் நடத்தினார்கள். இது ஒவ்வோர் ஆண்டும் தென்னாட்டுச் சிவன் கோயில்களில் நடைபெறும் திருக்கலியாண விழாவினை—சிறப்பாக, மதுரையில் மீனாட்சி அம்மனுக்கும் சுந்தரேசுவரருக்கும் நடைபெறும் திருக்கல்யாண விழாவினை —நினைவூட்டுகிறது. கடவுளுக்கு உணவைப் படைத்து, அந்த நைவேத்தியத்தைக் கடவுளோடு புரோகிதனும் பக்தனும் பகிர்ந்து கொள்வதே சுமிரியரது கடவுள் வழிபாட்டின் சாரமாகும். தென்னாட்டுக் கோயில்களில் வழிவழி வந்த முறை இதுவே. இந்த வழிபாட்டு முறையில், மடைப்பள்ளியின் பாத்திரம் பெரிது. எனவே, தென்னாட்டுக் கோயில்களைப் போலவே, சுமிரிய ஆலயங்களும் பெரிய அடுக்களைகளைக் கொண்டிருந்தன. அவற்றில் நாள்தோறும் நைவேத்தியத்துக்கான உணவு நிறையச் சமையலாகியது. ஒரே ஒரு வேற்றுமை: சுமிரியர்கள் பிராணிகளைப் பலி கொடுத்து, அதன்பின் அவற்றின் இறைச்சியைச் சமைத்து நைவேத்தியம் செய்து உண்டனர். பின்னாளில், செல்வாக்குள்ளவர்கள், உயிர்ப்பலியையையும் ஊண் உண்ணலையும் வெறுத்தமையால், நமது கோயில்களில் சைவ உணவு வகைகளே சமைத்துப் படைக்கிறோம்.* தென்னாட்டில் பெருவழக்கு எய்திய தேவதாசி முறையும் பண்டைய சுமிரியர் விரும்பித் தழுவிய ஒன்றே. இங்குப்போல் அங்கும் வாழ்வின் நடுநாயகமாக விளங்கியது கோயில். ஆண்டவனே அரசன் என்றும், நாடாள்வோர் இறைவனது ஏவல் வழிநிற்கும் அடியார்

* காளி வழிபாட்டில் உயிர்ப்பலி இடும் அமிசம் அண்மைக்காலம் வரை நீடித்தது. ஆடு, பன்றி, எருமை என்ற முப்பலி கொடுக்கும் வழக்கம் நின்று வெகு காலம்ஆகிவிடவில்லை.

களே என்றும் கருதியது சுமிரியா. அரசுக்கும் ஆலயத்திற்கும் வேற்றுமை காணாத இந்தச் சுமிரிய மரபு, 'ராஜோபசாரம்' என்ற நமது இறைவழிபாட்டு முறையிலும், இறைவன், கோயில் என்ற தமிழ்ச் சொற்களின் பொருளிலும் விளக்கம் பெறும். இறைவன் என்பது ஆண்டவன், அரசன் என்ற இரு பொருளும் உடையது. கோயில் என்பது ஆலயத்தைக் குறிக்கும்; அரச மாளிகையையும் குறிக்கும். ஆக, இந்து மதம் தமிழரின் கொடையாக அடைந்திருக்கும் பல சிறப்புக்கள், முற்காலச் சுமிரிய நாகரிகத்தில் விளக்கம் பெற்றதென்பது பல அறிஞர் கொண்ட கொள்கை.

ஆயினும், இனவழியிலோ மொழி வழியிலோ சுமிரியருக்கும் முன்னோய திராவிடருக்கும் எத்தகைய உறவு இருந்தது என்று திட்டமாக அறிய முடியவில்லை. சுமிரியரிடையில் மத்தியதரை இனத்தாரின் உடற்கூறுகள் மலிந்திருந்தன என்பதும், ஆர்மினாயிடுகளின் உடலியல் சிறப்புக்களும் கலந்திருந்தன என்பதும், கல்லறைகளின் எலும்புக் கூடுகளிலிருந்தும் மண்டை ஓடுகளிலிருந்தும் ஊகிக்கப்பெறும். சுமிரிய மொழியினர். எபிரேயத்தையும் அரபு மொழியையும் ஒத்த செமித்திய மொழி பேசியோர், ஜேஃபடிக்(Japhetic)மொழியினர் ஆகிய மூன்று மொழிவழிக் குழுவினர் சுமிரியாவில் வாழ்ந்தனர் என்பது அங்குக் கிடைத்த ஓட்டோலைகளிலிருந்து * மொழி இயலார் உய்த்துணர்வதாகும். வழக்கில் உள்ளனவோ, வழக்கு ஒழிந்தனவோ, இதுவரைத் தெரிந்த மொழிகளில் எதனுடனும் உறவில்லாத் தனிமொழியே சுமிரியம் என்பர் மொழி இயலாரில் பலர். செமித்திய மொழிகளின் குடும்பம் வேறு, திராவிட மொழிகளின் குடும்பம் வேறு; இரண்டுக்கும் பொதுவான மூலத் தொடர்பு இல்லை. ஜேஃபடிக் மொழி என்பது புரியாத புதிர்; சில இடப்பெயர்

* ஓட்டோலை: களிமண்ணில் பலகை வடிவம் செய்து, அதில் எழுதி, அதன்பின் அதனைக் காயவைத்துப் பானை சுடுவது போல் சுட்டனர்; மழையோ நெருப்போ அந்த ஓட்டோலையை ஒன்றும் செய்ய முடியாது. ஆனால் எளிதில் உடையும்.

களிலிருந்தே அம்மொழி இருந்ததை ஊகித்து, அதற்குப் பெயரும் வழங்கினர் ஆராய்ச்சியாளர்.

## 16. சுமிரியர்: சில செய்திகள்

சுமிரிய மொழியினரின் பிறப்பகம் தென் மெசப்பட் டோமியா அல்ல என்பது அனைத்து ஆராய்ச்சியாளரும் கொண்ட முடிவாகும். அங்கு முதலில் குடியேறியவர்கள் அவர்களா, பிறரா என்பதிலேயே கருத்து வேற்றுமை உள் ளது. பார்க்கப் போனுல், டைக்ரிஸ் ஆறும் யூப்ரட்டீஸ் ஆறும் பாரசீக வளைகுடாவில் கலந்த இடங்களில், அவற்றின் வண்டல் மண்ணுல் தூர்ந்து கடல் மட்டத்துக்கு மேல் உயர்ந்த, புதிய நிலமே சுமிரியா. சேற்று நிலமாக இருந்த அதனை, ஆருயிரம் ஆண்டுக்குமுன்னர் குடியேறிய மக்கள் நாடாகத் திருத்தினர்; அணைகட்டியும் பாய்கால் வடிகால் அமைத்தும், விவசாயம் செய்தனர். அவர்கள், தனிச்சிறப் பான வண்ணப் பூச்சு மட்பாண்டம் வனைந்தவரும் செம் பைக் கனியத்திலிருந்து பிரித்து வார்ப்புருவம் செய்தவரு மான தென்மேற்கு ஈரான் மக்களே என்று பழம்பொருள் சான்றிலிருந்து ஊகிப்பர். தென்மேற்கு ஈரானிலேயே பின் ஞளில் (கி. மு. 3000 அளவில்) திராவிடத் தொடர்பான ஈலமைட்டுகளின் நாகரிகம் எழுந்தது என்பதையும், சுமிரி யாவின் பழைய இடப்பெயர்களில் பல திராவிட மொழிக்கு ஒத்தவையாயிருந்தன என்பதையும் கருதினுல், சுமிரியாவில் முதலில் குடியேறிய ஈரான் மக்கள் திராவிட மொழித் தொடர்பினரோ என்று எண்ணத் தோன்றும். அந்த ஈரானி யரும் பின் வந்த செமித்தியரும் கலந்தே, சுமிரியாவில் நகரங் களைப் படைத்து நாகரிகத்தைத் தோற்றுவித்தனர். இடை இடையே மேற்கு ஈரான் பகுதிகளையும் தழுவியதாகப் பேரரசு கண்ட பெருமையும் அவர்களுக்கு உரியது. அதன் பின், கி. மு. 3,200 அளவில் சுமிரியர் தென்மெசப்பட்டோமி யாவைப் படையெடுத்துப் பிடித்தனர் என்பார் சுமிரிய இயல் வல்லுனரான கிராமர் (Kramer). அடுத்த ஆயிரம் ஆண்டில் வளர்ந்து தழைத்த நாகரிகம், ஈரானிய, செமித்

தியரோடு இரண்டறக் கலந்த சுமிரியரது சாதனையாகும் என்பார் அவர்.*

சுமிரியர் எங்கிருந்து வந்தனர் என்பது விளங்கவில்லை. கடல் வழியே வந்தனரென்றோ, பூர்வீகப் பிறப்பகத்தில் கடலோடிகளாக இருந்தனரென்றோ கருதுவதற்கு இடம் தரும் பழங்கதைகளை அவர்கள் போற்றினர். உதாரணமாக, ஆழ்கடலில் வாழ்ந்த கடவுள், நாகரிக வாழ்வைப் படைத்தருளினார் என்று சொல்லும் ஒரு கதை. அந்தக் கடல்வாழ் தேவனிடமிருந்து பண்பாட்டுச் சிறப்புக்களைத் தெய்வத் தோணியில் கொணர்ந்து வழங்கினாள்பெண்தெய்வம் என்பது மற்றொரு பழைய கதை. அவர்களது கோயிலைக் கருதினால், மலைப்பாங்கான பிரதேசத்திலிருந்து வந்தனரென்று தோன்றுகிறது. உயரமான மேடை நிறுவி, அதன்மீது ஒன்றைவிட அதன் மேலுள்ளது குறுகுவதாகப் பல அடுக்குத் தளங்களைக் கட்டி, உச்சி மாடத்தில் மூலஸ்தானத்தை அமைத்துக் கடவுளை வழிபட்டனர் சுமிரியர். மலை உச்சியில் தெய்வத்தைத் தொழுது பழகியதாலேயே குடியேறிய நாட்டுச் சமவெளியில் செய்குன்றான கோயிலின் உச்சியில் இறை வணக்கம் செய்தனர் என்பர்.

அவர்கள் தெற்குக் காக்கேஷியாவிலிருந்தோ, காஸ்ப்பியன் கடலுக்குக் கிழ்ப்புறத்தில், எல்புருசு (Elbruz) மலைகளுக்கு வடபுறமாக அமைந்த பகுதியிலிருந்தோ வந்தனராகலாம் என்பார் உளர். இரண்டு பிரதேசங்களிலுமே செம்போடு வெள்ளீயமும் (tin) கிடைத்தது. செம்பும் வெள்ளீயமும் சேர்ந்த உலோகக் கலவையான வெண்கலத்தைச் செய்யத் தெரிந்தவராகவே அவர்கள் வந்தனர் என்பர் சிலர். நாகரிகம் அறியாதவராகவே வந்தனர் என்பர் வேறு சிலர். எவ்வாறு ஆயினும், அவர்கள் தென் மெசப்பட்டோமியாவின் பழைய குடிகளுடன் கலந்தே சுமிரியப் பண்பாட்டை உருவாக்கினர் என்று தோன்றுகிறது.

---

* அதன்பின் சுமிரியாவில் ஏற்பட்ட ஆக்காடிய, பாபிலோனிய, காசைட்டு, அசிரிய அரசுகளும் சுமிரிய நாகரிகத்தையே தழுவின.

மேற்கு ஆசியாவில் செல்வாக்குப் பெற்றுச் சிறந்த அந்தப் பண்பாட்டின் சில முக்கியமான தன்மைகள் தென்னிந்தியாவில் எப்படி இடம் பெற்றன? சிந்துவெளியில் நாகரிகம் கண்ட மக்களின் வழித் தோன்றல்களே தென்னுட்டுப் பண்பாட்டின் சிற்பிகள் என்ற கொள்கை இந்தப்புதிருக்குவிளக்கம் தரும். சுமிரிய, சிந்துவெளி நாகரிகங்கள் ஒரே மரபுமூலம் உடைய காரணத்தாலோ, சுமிரியாவுக்கும் சிந்துவெளிக்கும் இடையில் இருந்த உறவின் விளைவாகவோ, சுமிரியப்பண்பாட்டின் சில அமிசங்கள் சிந்துவெளியில் விளக்கம் பெற்று, அங்கிருந்து தென்னுட்டை அடைந்து நிலை கொண்டன என்பதே பொருத்தமான ஊகமாகும்.

## 17. தென்னுட்டுப் புதைபொருள் ஆய்வு

மேற்காசியாவில் நாகரிகம் தோன்றி வளர்ந்த நிகழ்ச்சியின் காலமுறையை ஆராய்ச்சியாளர்கள் பின்வருமாறு கணித்திருக்கிறார்கள். மழமழப்பான கற்கருவிகளை ஆண்டவரும், விவசாயம், கால்நடை வளர்ப்பு, மட்பாண்டம் வனைதல், நூல் நூற்று ஆடை நெய்தல் முதலான கலைகளில் தேர்ந்தவருமான புதிய கற்கால மக்கள், கி. மு. 4000 அளவில் செம்பில் கருவி செய்யத் தொடங்கினர். கனியத்தை உருக்கிச் செம்பைப் பிரித்தெடுக்கவும், செம்பை உருக்கி வார்ப்பு வேலை செய்யவும் அவர்கள் அறிந்தனர். அதன்பின், வெள்ளீயத்தையும் செம்பையும் சேர்த்து உருக்கி வெண்கலம் தயாரித்தால், அதில் வலுவான பொருட்களை எளிதாக வார்க்கலாம் என்பதைக் கண்டு பிடித்தார்கள். இவ்வாறு கி. மு. 3,000 அளவில் தொடங்கியது வெண்கல யுகம். கி. மு. 1400 அளவிலேயே உலகில் முதன் முதலாகத் தெற்குக் காக்கேஷியாவில் இரும்பைக் கனியத்திலிருந்து பிரித்துப் பயன்படுத்தத் தொடங்கினர். செம்பும் வெண்கலமும் ஆண்ட சமுதாயங்களுக்கு உலோகத் தொழில் அனுபவம் இருந்ததால், அவர்களிடையே வெகு விரைவில்—கி. மு. 1000 அளவில்—இரும்புத் தொழில் பரவிவிட்டது.

தென்னிந்தியாவில் திருத்தமுருத கற்கருவிகளைக் கொண்டு உணவு தேடிய ஆதிமனிதர் வாழ்ந்ததற்கும்

(அதுவே பழைய கற்காலம்), சிறு கற்கருவிகளை ஆண்டு இடைக் கற்கால மனிதர் வாழ்ந்ததற்கும் சான்றுகள் நிறைய உள. ஆயினும், புதிய கற்கால வாழ்வைப் புலப்படுத்தும் புதைபொருள்கள் சிலவே. பெல்லாரி (ஆந்திரம்), பிரம கிரி (மைசூர்) முதலிய இடங்களில், புதிய கற்காலக் கருவிகள் சிறு கற்கருவிகளோடு கிடைத்துள்ளன. பிரம கிரியில், செம்பிலும் வெண்கலத்திலும் செய்த ஆயுதம், கருவி, பாத்திரம் ஆகியன சிலவும் நயமான கற்கருவிகளோடு காணப்படுகின்றன. ஆனால் அவையெல்லாம் காலத்தாற் பிற்பட்டன என்பர். பெல்லாரிக் கருகில் கிடைத்த நயமான கற்கருவிகளும் கி. மு. 1000 அளவுக்கே உரியன என்பர். அதற்கு முற்பட்ட புதிய கற்காலச் சின்னங்கள் இனித்தான் ஆய்வாளனுக்குக் கிட்டவேண்டும். தவிர, சுமிரியா, ஈலம், சிந்துவெளி ஆகியவற்றில் அமைந்தனவற்றைப் போல், தென்னாட்டிலும் தொல்காலத்தில் நகர நாகரிகம் தோன்றியிருந்தால், அதன் புதைபொருளும் இனித்தான் வெளிப்படவேண்டும். எனினும், புதைபொருள் ஆய்வாளர் இரும்பு யுகத்துக்குரிய ஈமத்தாழிகளையும் அவற்றைப் புதைத்துக் கட்டப்பெற்ற கல்லறைகளையும் கண்டுபிடித்துச் சோதித்திருக்கிறார்கள். திராவிடரின் பூர்வீகத்தைப் புரிவதற்கு அவை துணை புரிவதாகச் சில அறிஞர் கருதுவதால், அவற்றைப்பற்றிச் சில சொல்ல வேண்டும்.

## 18 இரும்புயுகப் பெருங்கற்படைப் பண்பாடு

இறந்தோரின் உடலங்களுக்குச் செய்யப்பெறும் இறுதி வினையை ஈமச்சடங்கு என்பர். இது தமிழகத்தில் ஐந்து விதமாக நடைபெற்ற நினைவைப் போற்றும் சங்ககாலத்தை அடுத்து எழுந்த மணிமேகலை என்னும் காப்பியம்:

சுடுவோர், இடுவோர், தொடுகுழிப் படுப்போர்,
தாழ்வயின் அடைப்போர், தாழியிற் கவிப்போர். *

சங்க நூல்களில், பிணத்தை எரிக்கும் முறையும் அதனைத் தாழியில் கவிழ்த்துப் புதைக்கும் முறை**யும் குறிப்பிடப் படுகின்றன. தாழியை வாயின் கீழுள்ள தலைப்பகுதி அகன்றதாகவும், அடிப்பகுதி குறுகியதாகவும் மண்ணால் வனைந்து சூளையில் சுட்டனர் என்று சங்க இலக்கியத்தி லிருந்து உய்த்துணர்கிறோம். பின்னாளில், ஈமத்தாழியை முதுமக்கள் தாழி என்றும் வழங்கினர்.

முழுமையாக இட்டுப் புதைக்கப் பெற்ற பிணத்தின் எலும்புக்கூடு உடைய தாழி எதுவும் இதுவரையில் கிடைக்க வில்லை. அம்ச அடக்கத்துக்குப் (fractional burial) பயன் பட்ட தாழிகளையே புதைபொருள் ஆராய்ச்சியாளர் கண்டெடுத்துள்ளனர். சங்ககாலத்துக்கு முன்னர் அந்த முறையே வழக்கில் இருந்தது போலும். சவத்தைச் சில காலம் வெளியில் இட்டுப் பின் ஒருநாள் சில எலும்புகளைப் பொறுக்கிப் புதைப்பதே அம்ச வடக்கமாகும். புதைப்புக் குழிகளில் கிடைத்துள்ள தாழிகளில், அத்தகைய சுடப்பெறாத எலும்புகள் சிலவற்றோடு, கறுப்பும் சிவப்புமான மட்கலங்

---

* ஆறும் காதை: அடிகள் 66-67. சுடுவோர் - பிணத்தை எரிப்போர். இடுவோர்-வெளியே இட்டுச் செல்வோர். தொடுகுழிப்படுப்போர் — தோண்டப்பட்ட குழியில் இடுவோர். 'தாழ்வயின்' என்பது கற்பலகைகளால் செய்யப்பெற்ற பெட்டிபோலும். பின்னாளில் இம் முறை வழக்கொழிந்து போனதால், பொருளே விளங்காது போனது. தாழி-பிணத்தை இட்டுப் புதைப்பதற்கேற்ற பானை. கவிப்போர் - மூடுவோர் (பிணத்தைத் தாழியால் கவித்தனர்.)

** தாழியில் அடக்கம் செய்யும் முறையினை நற்றிணையின் 271 ஆம் செய்யுளும் (அடிகள் 11-12), பதிற்றுப்பத்தின் 44-ஆம் செய்யுளும் (22-23), புறநானூற்றின் 228 (12—15), 238 (1—5), 256 (5—7), 364 (11—13) எண்களுக்குரிய செய்யுட்களும் குறிப்பிடுகின்றன.

களும், முழுச்சிவப்பான மட்பாண்டங்களும், கத்தி, கோடரி, ஈட்டி, கலைக்கொட்டு, அரிவாள் முதலான ஆயுதங்களும் கருவிகளும் காணப்படுகின்றன. ஓர் அடக்கத்திலோ, ஒரே தாழியிலோ பலருடைய எலும்புகள் காணப்படுவதும் உண்டு.

புதைப்புத் தாழிகளைச் சுற்றிப் பலவகையான கல்லறை அமைப்புக்கள் காணப்படுகின்றன. தாழியைப் புதைத்துப் பலகைக் கல்லால் மூடி, அதன் மீது கற்களைக் குவித்து (cairns) பெருங்கற்களை வட்டவடிவில் அமைத்திருப்பதைத் தென்னிந்தியாவில் பல இடங்களில் காணலாம். பெருங்கல் வட்டமே (stone circle) கற்கிடை என்று ஒரு தமிழ்க் கல் வெட்டில் குறிப்பிடப் படுவதாகக் கூறுவார் தொல்கலை வல்லுநரான கே. ஆர். ஸ்ரீனிவாசன். கற்கிடையினுள், மூன்று பருமனான குத்துக் கற்கள் மீது ஒரு கல்லைப் படுக்கையாய் கிடத்திய அமைப்புக் (dolmen) காணப்படுகிறது. நிறை கல் தெற்றி (நிறுத்தப்பட்ட கற்களுடன் கூடிய திண்ணை) என்று மணிமேகலை இதனையே குறிப்பிடுகிறதுபோலும். கருங்கற் பலகைகளால் புதைகுழியில் பெட்டி அமைத்து, அதனுள் தாழிகளை இட்டு மூடும் முறையும் உண்டு. மணிமேகலை குறிக்கும் 'தாழ்வயின்' இதுவாகலாம். அந்தப் பெட்டிமீது கற்குவியலை அமைத்துத் தரைமட்டத்துக்குமேல் பெருங்கல் வட்டம் (கற்கிடை) நிறுவும் முறையும் (cist) உண்டு. புதுக்கோட்டை வட்டத்தில் தாயினிப்பட்டி என்னும் ஊரில் காணப்படும் இவ்வகை அடக்கங்களை, அடுத்துள்ள நார்த்தமலையில் காணப்பெறும் சோழர்காலக் கல்வெட்டு 'குரக்குப்படை' எனக் குறிக்குமென்பார் கே. ஆர். ஸ்ரீனி வாசன். புதைகுழிப் பெட்டியின் பக்கப் பலகைகள் தரை மட்டத்துக்கு மேல் ஆறு அடி அளவுக்கு உயர்ந்து நிற்க, அவற்றின் மீது பொருந்திய பலகைக் கல்லில் கற்குவியல் அமைக்கும் முறை (dolmenoid cist) தென்னிந்தியாவில் பரவலாகக் காணப்படுகிறது. கேரளத்தில், செம்பாறுங்கல் பறம்புச் சரிவில், குகையைக் குடைந்து, அதனுள் தாழியை வைத்து மூடி, அக்குகையின் மேல் கல்வட்டம் அமைத்தனர்.

பலவாருக அமைந்த இக்கல்லறைக் கட்டடங்களைப் பெருங் கற்படை (megalith) என்பர். *

அம்சவடக்கமும், கறுப்பும் சிவப்புமான வழவழப்பு மட்பாண்டமும், இரும்பில் செய்த கருவிகளும் இந்த வித விதமான பெருங்கற்படைகளுக்குப்பொதுவானசிறப்புகளாம்.

ஒரு சமூகத்தின் கூட்டுப்பணி மூலமே பெருங்கற்படை உருவாகியிருக்க முடியும். அது சாகுபடிக்குத் தகுதி யில்லாத மேட்டுப் பாங்கான நிலத்திலேயே காணப்படு கிறது என்றும், அதற்கு அருகில் குன்றும் ஏரியும் பயிர் நிலங்களும்** உள்ளன என்றும் கே. ஆர். ஸ்ரீனிவாஸனும் என். ஆர். பானர்ஜியும் கூறுவர். இந்த இரும்புயுக நாகரிகம், இங்கேயே புதிய கற்கால டண்பாட்டிலிருந்து இயல்பாக வளர்ந்ததென்று கொள்வதற்கு இடமில்லை என்பது பல அறிஞர் கருத்து. வடஇந்தியாவில், பிற்காலத் திலேயே இரும்பு ஆட்சிக்கு வந்ததாலும், வடபுல மக்கள் வெண்கலத்தைக் கொணர்ந்திருப்பர் என்பதாலும், தென் னிந்திய இரும்புயுக மக்கள் வடபுலத்திலிருந்து வந்தாரல்லர்

---

* அருந்தவர்க் காயினும், அரசர்க் காயினும்,
ஒருங்குடன் மாய்ந்த பெண்டிர்க் காயினும்,
நால்வேறு வருணப் பால்வேறு காட்டி
இருந்தோர் மருங்கிற் சிறந்தோர் செய்த
குறியவும் நெடியவும் குன்றுகண் டன்ன
சுடுமண் ஓங்கிய நெடுநிலைக் கோட்டமும்

பூம்புகார் சுடுகாட்டில் இருந்தன என்னும் மணிமேகலை (ஆறும் காதை: அடிகள் 55—60) இந்தச் செங்கற் கோட்டங்கள் முன்னோயப் பெருங்கற்படைகளின் வழித் தோன்றல்களாகலாம். (ஒருங்குடன் மாய்ந்த- உடன்கட்டை ஏறிய. பால்-இயல்பு அல்லது தகுதி. சிறந்தோர்-இறந்தவர்க்குச் சிறந்தோர். கண்டன்ன- கண்டாற்போல, சுடுமண் — செங்கல். நெடுநிலை— உயர்ந்த. கோட்டம்-அறை.)

** பெருங்கற்படைப் பண்பாட்டினர் நெற்பயிர் செய் தனர்.

என்பதும் தெளிவு. எனவே அவர்கள் வெளிநாட்டிலிருந்து வந்தனர் என்று தோன்றுகிறது.

மேலும், பெருங்கற்படைகள் தென்னிந்தியாவிலும், ஈரானிலும் காக்கேஷியாவிலும் மத்தியதரைக் கடலோர நாடுகளிலும் ஏறக்குறைய ஒரே முறையில் அமைந்துள்ளன. அவை ஓர் இடத்தில் தோன்றிப் பின்னர் பரவிய பண்பாட்டின் சின்னங்களாகலாம் என்று தொல்கலை வல்லுநர் ஊகிப்பர். மத்தியதரைக் கடலோர நாடுகளின் பெருங்கற் படைகளில் காணப்பெறும் கற்கருவிகளின் அடிப்படையில், அவை கி. மு. 2500 முதல் கி. மு. 1500 வரையில் உள்ள காலத்தவை எனக் கணிப்பர் அறிஞர். தென்னிந்தியப் பெருற்கற்படைகளில் இரும்புப் பொருள்கள் காணப்படுவதால், அவை கி. மு. பத்தாம் நூற்றுண்டுக்கு முற்பட்டவையாக இருக்க முடியாது என்பது உறுதி. எனவே, பெருங்கற்படைப் பண்பாடு ஒரே மூலத்தை உடையதென்றுல், அதன் சிற்பிகள் வெளிநாட்டிலிருந்து இந்தியா வந்தனர் என்பதே பொருந்தும்.

## 19. பெருங்கற்படையினர் திராவிடரா?

காக்கேஷியாவில் கி. மு. 1500 அளவில் பெருங்கற் படைகள் அமைத்தன. அந்தப் பிரதேசத்திலேயே கி. மு. 1400 அளவில் இரும்பைக் கனியத்திலிருந்து பிரித்தெடுத்துப் பயன்படுத்தத் தொடங்கினுர்கள். அங்கிருந்து ஒரு கூட்டம் ஈரானுக்கு வந்து தங்கிப் பின்னர் இந்தியாவுக்குப் புறப்பட்டிருக்கலாம். வந்த வழியில் சிலர் இடையில் தங்கினரென்றும், அவர்களே காராச்சிக்கு அருகிலுள்ள பெருங்கற்படைகளை அமைத்தனர் என்றும் மானிட இயல் வல்லுநரான ஹைமண்டார்ப் (Haimendorf) ஊகிப்பது பொருத்தமே. ஆனுல் அவர்களே பாரதத்துக்கு முதன் முதலாக வந்த திராவிடர் என்று அவர் அனுமானிப்பது ஏற்புடைத்தன்று. அவர்களின் பெருங்கற்படைகள்—கராச்சிக்கு அருகிலுள்ள சில நீங்கலாக-விந்தயத்துக்குத் தெற்கிலேயே — திராவிட மொழியினர் வாழும் பகுதிகளிலேயே—உள்ளன என்பது உண்மையே. ஆனுல் அதுகொண்டு அவர்கள் திராவிடரே என்று அறுதி

யிட்டுரைக்க முடியாது. அவர்கள் திராவிடராக இருந்திருக்கலாம்; அல்லது வேற்று மொழினராக வந்து, இங்கு நாளா வட்டத்தில் திராவிட மொழியினராக மாறியிருக்கலாம்—வட புலத்திலிருந்து வந்த ஆரியர்கள் காலப் போக்கில் திராவிடரானதைப்போல. பெருங்கற்படையினர் திராவிடரே ஆயினும், அவர்கள் வருகை தருவதற்குமுன் நம் நாட்டில் திராவிடம் வழங்கவில்லை என்று கூறமுடியாது. புதிதாக வந்தவர்கள் ஒரு மொழியினர் என்றால், முன்பே வாழ்ந்தவர்கள் வேறு மொழியினரே எனச் சாற்ற முடியாது. ஒரே மொழியினரே வெவ்வேறு காலங்களில் வருவதற்குத் தடையில்லை; ஒரே மொழியினர் இகலி நிற்பதும் புதுமையில்லை. எனவே, இரும்புயுக மக்கள் திராவிடரே என்றாலும், அது கொண்டு தென்னகத்தில் முன்னர் வாழ்ந்தோர் திராவிடர் அல்லாதார் என்று ஹைமண்டார்ப் துணிவது பொருந்தாது.

காலமுறைப்படி நோக்கினால், தமிழகத்தின் மூவேந்தர் ஏற்பாட்டைப் பெருங்கற்படையினரின் சாதனையாகக் கொள்ள முடியாதென்பது விளங்கும். அசோகன் காலத்தில் (கி. மு. 3-ஆம் நூற்றாண்டு) சேர சோழ பாண்டியர் அரசுகள் தமிழகத்தில் நிலைகொண்டிருந்ததை அசோகனின் கல் வெட்டுக்கள் நமக்கு உணர்த்துகின்றன. அசோகனுக்குப் பாட்டனான சந்திரகுப்த மௌரியனின் அரசவைக்கு வந்த கிரேக்க தூதன் மெகஸ்தனீஸ், பாண்டியரைப் பற்றிய பழ மரபுக் கதை ஒன்றைப் பாடலிபுத்திரத்தில் கேட்டறிந்து எழுதி வைத்தான். சந்திரகுப்த மௌரியனுக்கு அமைச்சனாகவும் ஆசானாகவும் திகழ்ந்த சாணக்கியர், தாம் அருளிய அர்த்த சாத்திரத்தில் பாண்டிய நாட்டு முத்துக்களையும் பஞ்சாடைகளையும் போற்றித் தென்னாட்டுடன் வணிகம் செய்தலே சிறந்தது என்பார். கி. மு. 350அளவில் பாணினியின் சமஸ்கிருத இலக்கணத்துக்கு வார்த்திகம்* எழுதிய

* வார்த்திகம் : சூத்திரக் கருத்தை விளக்கும் ஒருவகை உரை. பாணினிக்குப்பின் சொல்லிலும் பொருளிலும் தோன்றிய மாறுதலைக் கூறவும், சில சூத்திரங்களுக்கு விளக்கம் தரவும், சில சூத்திரங்களின் குறைகளைச் சுட்டவும் காத்தியாயனரின் வார்த்திகம் எழுந்தது.

காத்தியாயனர், 'பாண்டிய' 'சோழ' என்னும் சொற்களுக்கு விளக்கம் தந்தார். 'பாண்டிய' என்னும் சொல் பாண்டு குலத்தோனையும் அம்மரபினோர்க்குரிய நாட்டின் வேந்தனையும் குறிக்கும் என்றும், 'சோழ' என்ற சொல், சோழர் குலத் தோன்றலையும் அக்குலத்தோருக்குரிய நாட்டின் அரசனையும் குறிக்கும் என்றும் கூறுவார் காத்தியாயனர். எனவே கி. மு. நான்காம் நூற்றாண்டிலேயே தமிழகத்தில் மூவேந்தர் ஆட்சி விளக்கம் பெற்றது என்பது தெளிவு. ஆனால் இரும்புயுகப் பெருங்கற்படையினர் கி. மு. 700 அளவிலோ அதற்குப் பின்போ வந்தனரென்றே அவர்களின் கல்லறைப்பொருட்களை ஆராய்ந்த அறிஞர் கூறுவர். கி. மு. 700 அளவில் வந்த அவர்கள், பல்லாண்டுக் காலம் பாறைப் பிரதேசங்களிலும் அவற்றைச் சார்ந்த இடங்களிலுமே வாழ்ந்தனர் என்பதை, அவர்களின் பெருங்கற்படைச் சமாதிகள் உள்ள இடங்களி லிருந்து ஊகிக்கலாம். எனவே, கி. மு. நான்காம் நூற் றாண்டிலேயே ஆற்றங்கரை நாகரிகத்தில் எழுந்த மூவேந்தர் அரசுகளின் சிற்பிகளாக அந்த மக்களைக் கருத முடியாது என்பது தேற்றம். குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்து, நெற்பயிர் செய்தும் இரும்பை ஆண்டும் நாகரிகம் கண்ட பெருங்கற் படையினர் வேறு; ஆற்றோர நாகரிகம் கண்டு இசை கொண்ட மூவேந்தர் அரசுகள் வேறு. எனவே, பெருங்கற்படையினரே திராவிட நாகரிகத்தின் சிற்பிகள் என்பது ஏற்புடைத்தன்று.

## 20. திராவிடத்தின் தொன்மை

பெருங்கற் படையினர் இந்தியாவை அடைவதற்குப் பன்னூறு ஆண்டுமுன்பே, ஆரியர் இந்தியாவுக்கு வருவதற்கும் முன்பே, திராவிடம் இந்நாட்டில் வழங்கியது என்பதும், வட புலத்திலும் திராவிட மொழியினர் வாழ்ந்தனர் என்பதும் மொழி இயலார் ஆராய்ச்சிகளில் விளங்குகின்றன. ஆரியர்கள் பாஞ்சாலத்தில் (பஞ்சாபில்) குடியேறியபோது எழுந்ததும், இன்றுள்ள உலக நூல்களில் மிகத் தொன்மையானதுமான ரிக் வேதத்திலேயே இருபது திராவிடச் சொற்கள் இடம் பெற்றிருப்பதை பர்ரோ (Burrow) எமனோ (Emeneau) முதலிய திராவிட மொழிநூல் வல்லுநர்கள் நிறுவியுள்ளனர்.

மயில், களம், வலம், பழம் முதலிய திராவிடச் சொற்களிலிருந்து எழுந்த ஆரியச்சொற்களை ரிக்வேதத்தில் காண்கிறோம். ஏலம், பல்லி, புற்று, மலை, நீர், மாலை முதலிய திராவிடச் சொற்களிலிருந்து எழுந்த ஆரியச் சொற்களைப் பிற வைதிக நூல்களிலும் இதிகாசங்களிலும் காண்கிறோம். இந்நாட்டுக்கு வந்தபோதே, வடமேற்கு இந்தியாவிலேயே, ஆரியர் திராவிடரைச் சந்தித்தனர் என்பதும், பிற்பட்ட வேதகாலத்திலும், இராமாயண மகாபாரத இதிகாசங்கள் எழுந்த காலத்திலும், ஆரியம் திராவிடச் சொற்களை அடைந்து வளம் பெற்றது என்பதும் தெளிவு. இதிலிருந்து திராவிடத்தின் தொன்மையும் பரப்பும் விளங்கும்.

இந்தோ-ஐரோப்பிய மொழிகளில், இந்திய நாட்டு ஆரிய மொழிகள் மட்டுமே நாமடி ஒலிகளை* (retroflex or cerebral Consonants) உடையன. வடமொழியோடு உடன் பிறந்தான் போல் நெருங்கிய உறவுடைய பழைய ஈரானிய மொழி**யில்கூட இந்த ஒலிகள் இடம் பெறவில்லை. நாமடி ஒலிகளை ரிக் வேதத்திலேயே காண்கிறோம். எனவே, இந்த ஒலிக்கணத்தை இந்தியா வந்த ஆரியர்கள் விரைவில் அடைந்தார்கள் என்பது வெள்ளிடைமலை. நாமடி ஒலிகள் திராவிடத்தின் சிறப்பு என்பதால், ரிக் வேத காலத்து ஆரியர்கள் திராவிடத்திடமிருந்தே நாமடி ஒலிகளை அடைந்தனர் என்று அறிஞர் அனுமானிப்பர். ஆரிய மொழியைக் கற்றுக் கொள்

---

* நாமடி ஒலிகள்: நாக்கை மடித்து, நுனிநாவால் அண்ணத்தைத் தொடும்போது எழும் ஒலிகள்—டகர வகைகளும் ணகரமும்.

** இந்தோ—ஐரோப்பிய மொழி வமிசத்தினரில் ஒரு கிளையினர், சில நூற்றாண்டுக் காலம் பாமிர் மலைப் பிரதேசத்திலோ ரஷ்ய துருக்கிஸ்தானத்திலோ வாழ்ந்தனர் என்றும், அங்கிருந்து ஒரு பகுதியினர் ஈரான் எனப்படும் பாரசிகத்துக்கும் மற்றொரு பகுதியினர் பாரதத்துக்கும் சென்றனர் என்பதும், ஆராய்ச்சியாளர் கொண்ட முடிவு. ரிக் வேத மொழிக்கும் பண்டைய ஈரானியரின் மொழிக்கும் நெருங்கிய தொடர்பு உளது.

வதற்குத் திராவிடர் முயன்றபோதே, நாமடி ஒலிகள் ஆரியத்தில் நுழைந்திருக்க வேண்டும். மேலும், ஆரிய—திராவிட கலப்புத் திருமணங்கள் நிகழ்ந்தன என்றும், கலப்புத் திருமணத் தம்பதிகளின் குழந்தைகள் இரு மொழிகளும் பேசப் பழகின என்றும், இந்த நிகழ்ச்சிப் போக்கால் சில தலைமுறைகளில் ஆரிய மொழியில் மாற்றங்கள் ஏற்பட்டன என்றும் ஊகிக்கலாம். இவ்வாறே திராவிடச் சொற்களும் திராவிடத்தின் சிறப்பான நாமடி ஒலிக்கணமும் ஆரியர் மொழியின் வளர்ச்சியில் பங்குகொண்டன. இவ்வாறு, ரிக் வேத காலத்திலேயே ஆரியம் திராவிடத் தொடர்பால் பயன் அடைந்ததால், சிந்து வெளியில் நாகரிகம் கண்ட மக்கள் திராவிடர்களே என்ற கொள்கை வலுப்பெறுகிறது.

## 21. சிந்துவெளி நாகரிகச் சிறப்புக்கள்

கி. மு. 2500 முதல் கி. மு. 1500 வரையில் சிந்துவெளியில் தழைத்த நாகரிகம், சுமிரிய, பாபிலோனிய நாகரிகங்களுடன் தொடர்பு கொண்டிருந்தது. வளர்ச்சியடைந்த நகர வாழ்வு, சூளையில் இட்டுச் சுட்ட செங்கற்கள், மட்பாண்டத்தை உருவாக்குவதற்குப் பயன்படும் குயவன் சக்கரம், செம்பிலும் வெண்கலத்திலும் செய்த பாத்திரங்கள், சித்திர எழுத்து வகைகள் முதலியன மூன்றுக்கும் பொதுவான சிறப்புக்களாம். இத்தகைய ஒற்றுமைகளைக் கருதியே, சிந்துவெளி, மேற்கு ஆசிய நாகரிகங்களுக்குத் தாயக நாகரிகம் ஒன்று இருந்திருக்க வேண்டும் என்பார் உளர். அது எவ்வாறு ஆயினும், இந்திய மண்ணில் சுயமாக வளர்ந்து அலாதியான பன்புகளோடு ஒளிர்ந்ததே சிந்து வெளி நாகரிகம். நகர அமைப்பிலும் சுகாதார வசதியிலும் அது எய்திய சிறப்பை அந்நாளைய எகிப்திலோ மேற்கு ஆசியாவிலோ காண முடியாது. தென் வடலாகவும் கிழ் மேலாகவும் அகன்று அமைந்த முக்கியமான சாலைகள்; வீதியை ஆக்கிரமிக்காத வீடுகள்; நடுவில் முற்றமும் சுற்றிலும் அறைகளும் உடையனவாக வீடுகளின் அமைப்பு; வீடுகளைக் கட்டுவதற்குப் பயன்பட்ட தரமான செங்கல்; வீடுகளில் குளியல் அறை; குளியலறை நீர் சுட்டமண்

குழாய் வழியே தெருச் சாக்கடையில் வடிவதற்கு ஏற்பாடு; பாளம்போல் அமைந்த பெரிய செங்கற்களால் மூடப்பட்ட தெருச் சாக்கடை—இவையெல்லாம் சிந்துவெளி நகர அமைப்பின் அம்சங்களாகும். ஜலதாரை ஏற்பாட்டை நிர் வகிப்பதற்கு நகர ஆட்சி அமைந்திருக்க வேண்டும். ரோமா னிய நாகரிகம் தோன்றுவதற்கு முன், வேறு எந்தப் புரா தன நாகரிகமும், சிந்துவெளியைப்போல் நிறைபயனுடைய சாக்கடை ஏற்பாட்டை அமைத்ததில்லை.

பின்னுளைய இந்தியர்களைப் போலவே, சிந்துவெளி மக்களும் மரபைப் போற்றிப் பின்பற்றுவதில் ஈடுபாடு உடையவராயிருந்தனர். சிந்துநதி வெள்ளத்தால் மீண்டும் மீண்டும் பாழான மொகஞ்சதாரோவை, அதே இடத்தில் மண்ணைக் கொட்டி மேடிட்டுத் திரும்பத் திரும்பக் கட்டிய போது, பழைய நகர அமைப்புத் திட்டத்தையே அவர்கள் பின்பற்றினுர்கள். வரலாறு முழுவதிலும், எழுத்து வர்க் கத்தில் எத்தகைய மாற்றமும் காணுமைக்கும் முன்னேர் முறையில் இருந்த மதிப்பே காரணம். மெசப்பட்டோமியா வுடன் நல்ல தொடர்பு இருந்த போதிலும், அங்குத் தொழிற் கருவிகளில் ஏற்பட்ட பயனுள்ள மாற்றங்களைத் தழுவுவ தற்குத் தடையாக இருந்ததும் பழமை மோகமே. ஆக, நிறையோடு குறையிலும் சிந்துவெளி நாகரிகத்தின் தனித் தன்மை விளங்கும்.

மொகஞ்சதாரோ கோட்டையில் உள்ள மிகப் பெரிய கட்டடம், 33 அடி சதுர முற்றமும் அதைச் சுற்றி அறை களும் உடையது. 230 அடி நீளமும் 78 அடி அகலமும் உடைய அந்தக் கட்டடத்தையே புரோகிதர் இருப்பிடம் என்று கொள்வார் மக்கை (Mackey). 90 அடி சதுரமாக வுள்ளது மற்ருெரு கட்டடம். இதுவே சமயநோக்கத்துடனே நிர்வாக நோக்கத்துடனே பேரவை கூடிய இடமாகக் கருதப்படுகிறது. மற்ருெரு முக்கியமான கட்டடம் தானியக் களஞ்சியமாகும். புரோகிதர் இருப்பிடத்துக்குப் பக்கத்தில் பின்னுளைய (கி. பி. 2 ஆம் நூற்ருண்டு) பெளத்தத் தூபி உள்ளது. பெளத்தர்களது சமய உணர்ச்சியைப் புண் படுத்தக்கூடாதென்றே, தூபியின் அடியில் அகழாதிருக்

கின்றனர். அந்த இடத்தின் புனித மரபினைக் கருதியே அந்தத் தூபியை எழுப்பினரா என்பதை அறியோம். அத்தூபியின் முற்றத்துக்கு அடியில் ஒரு கட்டடத்தின் மிச்சங்கள் உள்ளன என்பது சோதனை அகழ்வுகளிலிருந்து தெரிய வருகிறது. இங்கே கோயில் இருந்திருக்கலாம்.

நமது கோயில்களில் புனித நீராடுவதற்காக அமைந்துள்ள திருக் குளங்களை நினைவூட்டும் வகையில், மொகஞ்சதாரோ கோட்டையில் பெரிய குளம் உள்ளது. வீட்டுக்கு வீடு தனிக் கிணறும் (குளியலறையும்), சந்துக்குச் சந்து பொதுக் கிணறும், ஊருக்கு அருகில் ஆறும் உடைய நகரம், பெரிய குளத்தை அமைத்துச் சிறப்பாகப் போற்றிய தென்றால், அதற்குச் சமயமே காரணமாக இருந்திருக்க வேண்டும். 180 அடி நீளமும் 108 அடி அகலமும் உள்ள செங்கல் முற்றத்தைக் கட்டி, நடுவில் நீர் நிற்கும் இடத்தை (39 அடி நீளம், 23 அடி அகலம் ) அமைத்துள்ளனர். குளத்தைத் துப்புரவு செய்வதற்காகக் குளத்துத் தண்ணீரை வடியச் செய்வதற்கான வசதியும், கிணற்றிலிருந்துப் பாடு பட்டுத் தண்ணீர் இறைத்துக் குளத்தை நிரப்பும் ஏற்பாடும் செய்திருந்தனர். வடபுறத்திலும் தென்புறத்திலும் குளத்துக்குள் இறங்குவதற்காகப் படிகள் உள்ளன. குளத்தைச் சுற்றி நடைபாதைகள்; மூன்று புறங்களில் உள்ள சிறு அறைகள் சமயவினைகளுக்குப் பயன்பட்டன என்று ஊகிப்பர் அறிஞர்.

தாய்த் தெய்வ வழிபாடு, சிந்து வெளியிலிருந்து கிரீட் என்ற மத்திய தரைக் கடற்தீவு வரையில் பரவியிருந்தது என்பது உண்மையே. ஆனால் இந்தியாவுக்கே உரிய இந்து மதச் சிறப்புக்கள் பலவும் சிந்துவெளியில் விளக்கம் பெற்றன. அவற்றில் முதன்மையானது, சிவனை வணங்கும் கொள்கையே. பரமசிவனது பண்டைய வடிவம் என்று ஆய்வாளர்களால் கருதப்பெறும் முத்திரையில், அவர் விலங்குகள் சூழப் பத்மாசனத்தில் அமர்ந்திருக்கிறார். * பசுபதியாகவும்

---

* பசுபதி: விலங்குகளின் தலைவன். 'ஆத்மாக்களின் தலைவன்' என்பது பின்னுளைய சாஸ்திரம் கண்டபொருள்.

மகாயோகியாகவும் பரமசிவனைக் கருதும் மரபு அந்நாளி லேயே நிலை கொண்டதற்கு அது சான்று. அவரை மூன்று முக முடையோராக முத்திரையில் காண்கிறோம். இதிலி ருந்தே பரமசிவனை முக்கண்ணனாகக் கருதும் கொள்கை வளர்ந்தது எனலாம். இருபுறம் கொம்புகளும், இடையில் நீண்ட தலைப்பாகையும் தரித்திருக்கிறார். இதிலிருந்தே திரிசூலம் (முத்தலைச்சூலம்) தரித்தவராகச் சிவனைக் காணும் கொள்கை உருவானது போலும். வேறு இரண்டு முத்திரை களில், கொம்புகளுக்கிடையே, தலையிலிருந்து, தழையோ மலரோ உடைய சிறுகிளை முளைத்திருப்பதைக் காண்கிறோம். சிவனைத் தாவர வளர்ச்சித் தெய்வமாகக் கருதினர் என்று இதிலிருந்து ஊகிப்பர். இதுவும் பின்னாளையக் கொள்கைக் குப் பொருந்துவதே. பரமசிவனைத் தெய்விக வேடனாகக் கருதும் மரபுக்கு ஏற்றவாறு, தழையாடை தரித்த வில்லாளி யாகக் கொம்பு உடைய சிவனைச் சித்திரிக்கிறது ஒரு முத் திரை. சிவலிங்கத் திருமேனியையும் சிந்துவெளி மக்கள் வழி பட்டனர் என்பதை, கூம்பு உருவத்தில் பல கற்கள் கிடைத் திருப்பதிலிருந்து ஊகிப்பர். பரமசிவனது வாகனமாகப் போற்றப் பெறும் ரிஷபம், பசுபதி முத்திரையின் விலங்கு களில் இடம் பெறவில்லை யென்றாலும், அது புனிதமான தாகக் கருதப் பெற்றதென்பதைக் காளை மாட்டு முத்திரை களிலிருந்து உய்த்துணர்கிறோம்.

சிந்து வெளியின் கலையும் தனித்தன்மை வாய்ந்ததே. திமில் பருத்த எருது, எருமை, புலி முதலியவற்றை இரண் டரைச் சதுர அங்குலத்துக்கு மேற்படாத சிறு முத்திரை களில் உயிர்த் தளிர்ப்போடு பொறித்திருக்கிறார்கள். மொகஞ்சதாரோவில் கிடைத்த நடனமாதின் வெண்கலச் சிலையைப் புகழாதார் இலர். அதே நகரில் கிடைத்துள்ளது, யோகியின் சுண்ணாம்புக் கற்சிலை. அது உருவச் சிற்பக் கலையில் சிறந்த முயற்சி. ஹராப்பாவில் கிடைத்த செம்மணற் கற் சிலைக்குத் தலையும் கையும் இல்லாத போதிலும், அதன் இயற்கை நவிற்சித்தன்மையை உணர்ந்து போற்ற முடி கிறது.

## 22. இதன் சிற்பிகள் யாவர்?

சிந்துவெளி நாகரிகம் ஆரியர் வருகைக்கு முற்பட்டது என்பதில் அநேக அறிஞர் உடன்படுவர். அது எழுத்துப் பயின்ற நகர நாகரிகம்; பரம சிவனது திருமேனி லிங்கத்தை வழிபட்ட நாகரிகம்; ரிஷபத்தைப் புனிதமாகக் கருதிய நாகரிகம். ஆரியரோ நகர வாழ்வைக் காணாதவராயும், எழுத்து அறியாதவராகவும், லிங்க வழிபாட்டை வெறுத்த வராகவும், பசுவைப் புனிதமாகக் கருதினராகவும் இந் நாட்டுக்கு வந்தனர் என்பது ரிக்வேதத்திலிருந்து தெளிவா கும். மேலும், ஆல்ப்பைன்களோடு இணைந்த நார்டிக்கு ளாகவே ஆரியர் பாரதம் வந்தனர்; சிந்து வெளியிலோ ஆல்ப் பைன் உடற்கூறுகள் காணப்பட்ட போதிலும் நார்டிக் கூறுகள் தென்படவில்லை.

இன்னொன்று: "கருநிற (த்தோர் வாழும்) அன்னிய நாடான மிலுஹ்ஹா"விலிருந்து தங்கம், வெள்ளி, முத்து, மயில் முதலிய பொருட்கள் கப்பல்களில் வந்தன என்பதைச் சுமிரிய ஓட்டோலைகள் குறிப்பிடுகின்றன. 'மிலுஹ்ஹா கப் பலைச் சேர்ந்த மனிதன்' என்ற குறிப்பு ஓர் ஓட்டோலையில் உண்டு. மிலுஹ்ஹா என்று சுமிரியர் இந்தியாவையே குறிப்பிடுகின்றனர் என்பது பல அறிஞர் கருத்து. இதை உறுதி செய்கிறது, 'மிலுஹ்ஹா' என்பதிலிருந்து 'மிலேச்ச' என்னும் வடசொல் எழுந்த உண்மை.* 'புரியாத மொழி பேசும் அசுரன்' என்னும் பொருளிலேயே மிலேச்ச என்னும் சொல்லை வட நூல்கள் ஆண்டதால், சிந்து வெளிக்கு ஆரியத்

---

* மிலுஹ்ஹா என்பதை மிலஹ்ஹா என்று படிப்பதும் உண்டாம். மிலஹ்ஹாவிலிருந்து மிலக்கா என்ற பாலிச்சொல் எழுந்து, அது மிலேச்சா என்னும் வடி வத்தை வடமொழியில் அடைந்திருக்கலாம் என்பர்.

தொடர்பில்லை என்பதுஉறுதியடைகிறது.*

சிந்துவெளி நாகரிகச் சிற்பிகளுக்கு ஆரியத் தொடர்பில்லை என்பதோடு, அதன் அழிவுக்கே ஆரியர் படையெடுப்பு ஒரு காரணமாகும் என்பதில் பல அறிஞருக்கு உடன்பாடே. சிந்துநதி கடலில் கலக்குமிடத்திலும் அதன் பக்கத்திலும், புவியமைப்பு மாறுதலால் கடற்கரை உயர்ந்து, சிந்துநதி கடலில் சேரமுடியாது கரைகடந்து வெள்ளக்காடாயிற்று, என்றும் இவ்வாறு மீண்டும் மீண்டும் நிகழ்ந்த பெரு வெள்ளத்தின் அழிவுக் கூத்தால் மொகஞ்சதாரோ அல்லலுற்றது என்றும் புவி இயலாரும் நீர் இயலாரும் கூறுவது மெய்யே. நகரின் கடைசிநாட்களில் அது சேரியாகமாறிக் கொண்டிருந்ததென்பதும் புதைபொருள் ஆய்வில் விளங்கும். ஆயினும் ஊழி வெள்ளத்தின் உடனடி விளைவாக நகரத்தின் இறுதிவீழ்ச்சி நிகழ்ந்ததென்று கூற முடியாது. கொஞ்சம் கொஞ்சமாக உயிராற்றலை இழந்து கொண்டிருந்த நகரம் படையெடுப்பால் அழிந்தது. படையெடுப்பை முன்னிட்டு நகர மக்கள் ஊரை விட்டு ஓட நேர்ந்தது என்று ஊகிக்க இடமுண்டு. ஒரு வீட்டில் பல மானிட எலும்புக் கூடுகள் தாறுமாறுகக் குவிந்து கிடந்ததிலிருந்தும், கிணற்றின் படிக்கட்டில் ஒரு பெண்ணின் எலும்புக் கூடு காணப்பட்டதிலிருந்தும், ஓடியவரில் சிலரைப் படையெடுப்பாளர் பிடித்துக் கொன்றனர் என்று ஊகிப்பர். ஹரப்பாவில் பழைய இடுகாட்டுக்குப் பக்கத்தில் அமைந்த புதியதோர் இடுகாட்டில் புதைக்கப்பட்ட மட்பாண்டங்களின்

---

* சதபத பிராமணமே முதன்முதலில் மிலேச்ச என்ற சொல்லை ஆள்கிறது. சௌராஷ்டிரத்தின் கடற்கரையில் அமைந்த லோதல் துறைமுகத்தின் மூலம் மெசப்பட்டோமியாவுடன் கடல்வாணிகம் நடத்திய மக்களின் வழித்தோன்றல்களை சந்தித்த பின்பே, ஆரியர் மிலுஹ்ஹா என்னும் சொல்லை அறிந்தனராகலாம் என்பர் பாஷம். சிந்துவெளி நாகரிகத்தின் கடைசி அரணுக விளங்கியது சௌராஷ்டிரம். கி. மு. 1600 வரையில் லோதல் செழிப்புற்றிருந்தது.

வடிவங்களும் சித்திரங்களும் ஹரப்பாவுக்குப் புதுமை யானவை. அவை புதிய மக்களுக்கு உரியன என்பர் தொல் கலேயார்.

அவ்வாறு சிந்துவெளி நாகரிகத்தை அழித்தவர், தேரும் குதிரையும் உயர்ந்த ஆயுதமும் உடையவராய் வந்த ஆரி யரே என்பது இந்நாளைய அறிஞர் பலரின் அனுமானம். ரிக்வேத சூக்தம் ஒன்றில், ஹரி-யூபிய (Hari-Yupia) என்னு மிடத்தில், இந்திரன் உதவியால் ஓர் ஆரிய அரசன் தன் பகை வர்களை முறியடித்தான் என்று படிக்கிறோம். ஹரி-யூபிய என் பது ஹரப்பாவைத் குறிப்பதாகலாம். மேலும், ஆரியர்க ளுக்கும், கோட்டை கொத்தளங்களோடு கூடிய புரங்களில் (நகரங்களில்) வாழ்ந்த தாஸர்களுக்கும் நடந்த போர்கள் பல என்பது ரிக்வேதம் ஓதும் சேதி. எதிரிகளின் புரங்களை அழித்தவன் என்பதாலேயே இந்திரனைப் புரந்திரனுகப் போற்றினர். எனவே தாஸர்கள் என்று சிந்துவெளி நாகரிக மக்களையே ரிக்வேதம் குறிப்பிடுவதாகக் கொள்வது தக்கதே.

தாசர்கள் என்றும் தஸ்யுக்கள் என்றும் ரிக்வேதத்தில் குறிப்பிடப்பெறும் சிந்துவெளி மக்கள் திராவிடரே என்ற கொள்கைக்குச் சூழ்நிலைச் சான்றுகள் உள. தனித்தனியே நோக்கின் அச்சான்றுகளில் குறைகூற இடம் இருக்கலாம்; ஆனால் அவை ஒன்றுக்கொன்று ஆதரவாக இணைவதால், புறக்கணிக்க முடியாதனவாக உள்ளன. முதலாவது, சிந்து வெளி மக்கள் திராவிடரே என்ற கொள்கைதான், ரிக்வேதம் திராவிடச் சொற்களாலும் நாமடி ஒலிகளாலும் பயன் அடைந்த உண்மைக்கு விளக்கம் தரவல்லது. இரண்டாவது, பல நூற்றுண்டுகளாக, ஆரிய மொழியே பேசும் பலூச்சிஸ் தான மக்களுக்கு இடையே பிராஹூயி என்னும் திராவிட மொழி பேசுவோர் வாழ்ந்து வருகின்றனர்.* அவர்கள் சிந்து வெளி மக்களின் வழித் தோன்றல்கள் என்பதே பொருத்த மான ஊகம். மேலும் இந்தத் திராவிடர்கள் (பிராஹூயி

* இந்நாளில் பிராஹூயி பேசுவோர் எண்ணிக்கை இரண்டேகால் லட்சம்.

பேசுவோர்) வாழும் குன்றுகளில்தான், சிந்துவெளிப் பண்பாட்டுக்கு முன் நிலையானவை என்று கருதப் பெறும் சிற்றூர்ப் பண்பாடுகளில் இரண்டு—நால் (Nal) பண்பாடும் ஷோப் (Zhob) பண்பாடும்—மலர்ந்திருந்தன. தவிர, வெளிநாடுகளிலிருந்து பண்பாட்டைக் கொணர்ந்த தமது முன்னோர்களே மொகஞ்சதாரோவின் சிற்பிகள் என்று பிராஹுயி மக்களின் மரபுரை கூறுகிறது. மூன்றாவதாக, தென்னாட்டைப் போலவே சிந்து வெளியிலும் மத்திய தரையினரும் ஆஸ்திரலாயிடுகளுமே பெரும்பான்மையராயிருந்தனர் என்ற மானிட இயல்உண்மையும் பொருளுடைத்து. நான்காவதாக, திராவிடர்களின் சமயத்தில் சிறப்பிடம் பெறும் பரமசிவனின் முன்னுருவம், சிந்துவெளி வழிபாட்டில் தலைமைநிலை மேவியிருந்தது. ஐந்தாவதாக, வரலாற்றுக் காலத்தில், ஆரியரல்லாததாரில் திராவிடர்களே தமக்கே உரிய உயர்ந்த பண்பாட்டால் புகழ் எய்தினர் என்பதால், அவர்களே சிந்து வெளிச் சிற்பிகள் என்று கருதுவதே ஏற்புடைத்து.

சிந்துவெளி மக்கள் கடலோடிகளாகச் சிறந்தனர் எனில், தென்னாட்டு மக்களும் இந்தியநாட்டு கடல்வாணிகத்தில் முதலிடம் பெற்று விளங்கினர் என்பதைக் கி. பி. முதலிரு நூற்றாண்டுகளில் எழுந்த கிரேக்க நூல்கள் வாயிலாகவும், சங்க நூல்கள் மூலமாகவும், சாதவாகனர் வரலாற்றிலிருந்தும், தென்னிந்தியப் புதைபொருள் ஆராய்ச்சியிலிருந்தும் அறிகிறோம். இந்தக் கடலோடி மரபும் சிந்து வெளியினரையும் தென்னாட்டுத் திராவிடரையும் இணைக்கிறது. ஆறாவது, திராவிட மொழிகளை ஒப்பு நோக்கி நுணுகி ஆராய்ந்த திராவிட இயல் வல்லுநர்,* பண்டைய திராவிடம் ஒரே மொழியாகக் கி. மு. 1500 வரையில் விளங்கியது என்று ஊகிப்பதால், பண்டைய திராவிடத்தின் காலமும் சிந்துவெளி நாகரிகத்தின் காலமும் ஒன்றே எனக் கொள்ளலாம். ஏழாவது, மடிவிழுப்புக் கருத்துக்கள் இந்து மதத்தின் சாதிமுறையில் சிறப்பிடம் பெறுவன என்றாலும், தீட்டையும் தூய்மையும்

---

* சுவிலபில் (Zvelebil), ஆன்டிரோநாவ் (Andronov) எஸ். கே. சாட்டர்ஜி (S. K. Chatterjee) முதலியோர்.

பற்றிய விதிகளைப் ('டாபூ'க்களைப்) பின்பற்றுவதில், மிகுந்த கண்டிப்பைக் கடைப்பிடித்தோர் தென்னாட்டுத் திராவிடரே என்பதாலும், ஆறுகுளங் கிணறுகளில் முழுகி மடி காத்தலில் துடிப்பாக இருந்த சிந்துவெளியினரின்* கால்வழியினரே தென்னாட்டுத் திராவிடர் என்று அனுமானிக்கிறோம்.

## 23. சிந்துவெளி எழுத்து

சிந்துவெளி நாகரிகத்தின் சிற்பிகள் திராவிடர்களே என்ற கொள்கைக்குச் சிந்துவெளி எழுத்தைப் பற்றிய ஆராய்ச்சிகள் வலுத்தருகின்றன. சிந்துவெளி நகரங்களில் கிடைத்துள்ள சுமார் இரண்டாயிரம் முத்திரைகளில், காளை மாடு, வெள்ளாடு, எருமை, புலி, யானை போன்ற விலங்குகளோ சமயக் கதைகளின் காட்சிகளாகத் தோன்றும் சித்திரங்களோ பொறிக்கப் பெற்றிருப்பதுடன், சில குறிப்புக்களும் காணப்படுகின்றன. அவை சிறு குறிப்புக்களே. அவை விளங்காப் புதிராகவே இருந்தன. சிந்துமொழிக் குறியீடுகளில் அமைந்த வாசகமும் அதன் மொழி பெயர்ப்பாக நாம் அறிந்த மொழி ஒன்றின் எழுத்தில் உள்ள வாசகமும் கிடைத்திருந்தால், புதிர் விடுபட்டிருக்கும். அல்லது, சிந்துவெளி எழுத்துக்களில் சிலவற்றைத் திரும்பத் திரும்ப ஆள்வதாக அமைந்த நீண்ட வாசகம் கிடைத்திருந்தாலும், எழுத்துக்குப் பொருள் காணும் முயற்சி வெற்றி பெற்றிருக்கலாம். ஆனல் இந்த இருவகையிலும் ஆய்வாளனுக்கு உதவி கிட்டவில்லை. சிந்துவெளி மொழி திராவிடத்தின் முன்னுருவமே (Proto-Dravidian) என்று கருதிய ஹீராஸ் பாதிரியார் (Father Heras), அந்த அடிப்படையில் முத்திரைக் குறிப்புக்களுக்கு விளக்கம் தர முற்பட்டார் என்பது மெய்யே. ஆனல் அவர் வலிந்து பொருள் கொள்கிறார்

---

* சிந்துவெளி நகரங்களின் குளியல் வசதிகளை முன்பே குறிப்பிட்டோம். உடல்நல ஆக்கம் அன்று, நீரில் முழுகிப் புனிதம் பேணும் சமயவினையே அவற்றுக்கு காரணம் என்று ஆராய்ச்சியாளர் ஒருமுகமாக வகிப்பர்.

என்றே பெரும்பாலான ஆராய்ச்சியாளர் கருதினர். பூர்வீகத் திராவிடம் சிந்துவெளியில் வழங்கியிருக்கலாம் என்று எண்ணியோரும் ஹீராஸ் பாதிரியாரின் விளக்கத்தை ஏற்க இயலாதவராயிருந்தனர். சிந்துவெளி எழுத்துக்கு விளக்கம் கிடைக்கும் என்ற நம்பிக்கையை முதன் முதலில் தந்தது, 1969 ல் பின்லந்து நாட்டு அறிஞர் குழு வெளியிட்ட முதல றிக்கையே.* புள்ளி விவரங்களைச் செம்மையாகப் பயன் படுத்தி, உன்னிப்பான கவனத்தோடு முறையாக ஆராய்ச்சி செய்த பின்னிஷ் அறிஞர்கள், சிந்துவெளி எழுத்து மூலத் திராவிடத்துக்கு உரியது என்று முடிவு செய்திருக்கிறார்கள். புள்ளி விவரங்களைத் திரட்டி வகைப்படுத்தித் தொகுத்து அளித்து, எலெக்டிரானிக் கம்ப்யூட்டர் அவர்களுக்குக் கை கொடுத்தது.

சிந்துவெளி இலச்சினைகளின் எழுத்து வழுவின்றித் திருத்தமாக அமைந்துள்ளது என்பது மெய்யே. ஆனால் ஓர் எழுத்துத் தனியே வரலாம்; ஒலி வேறுபாட்டைப் புலப் படுத்தும்குறியோடு (க, கி ஆவது போல்) அமையலாம்; வேறு எழுத்தோடு இணைந்து கூட்டெழுத்தாகலாம். அவையெல் லாம் வெவ்வேறான எழுத்துக்கள் என்றே கணக்கிட்டாலும், சிந்துவெளியில் 350 எழுத்துக்கு மேல் இல்லை என்பர் பின் னிஷ் அறிஞர். அவற்றில் பத்துத் தடவைகளோ அதற்கு அதிகமாகவோ இலச்சினைகளில் ஆளப்பெறுவன 103 எழுத் துக்களே.

---

* 1965 லேயே சோவியத் அறிஞர் குழு ஓர் அறிக்கையை வெளியிட்டது. அது ரஷிய மொழியில் வெளிவந்தது. 1968 ல் அந்தக்குழு ஓர் ஆங்கில அறிக்கையை வெளி யிட்டது. சோவியத் அறிஞர்களும் கம்ப்யூட்டரின் உதவி யோடு விவரங்களைத் திரட்டி ஆராய்ந்து வருகின்றனர். அவர்களும் பண்டைய திராவிடமே சிந்துவெளியின் மொழி எனத் துணிந்துள்ளனர். சில எழுத்துக்களுக்கு அவர்கள் கண்ட பொருள் வெளியாகியுள்ளது. விவர மான அறிக்கை விரைவில் வெளிவருமெனத் தெரிகிறது.

ஒவ்வோர் எழுத்தும் ஒரு முழுச்சொல்லைக் குறிக்கும் சொல்லெழுத்தையே சிந்துவெளியினர் பயன்படுத்தினர். ஒரு சொல்லெழுத்து அது குறிக்கும் சொல்லையே கருத வேண்டுமென்பதில்லை; கிட்டத்தட்ட அதே ஒலி உடைய வேறு சொல்லைக் குறிக்கலாம்; ஒத்த ஒலி வடிவமும் வேறு பட்ட பொருளும் உடைய சொற்களில் எந்தச் சொல்லைக் குறிப்பிட்ட எழுத்து குறிக்கிறது என்பதைத் தெளிவாக்கு வதற்குத் தேவையென்றால், அதனை அடுத்து வரையறைக் குறி (determinative) அமையும். வரையறைக் குறியாக வரும் சொல்லெழுத்துக்கு, அந்த இடத்தில் உடன் உள்ள எழுத்தின் பொருளுக்கு எல்லை வகுக்கும் பணி ஒன்றே உண்டு. ஓர் எடுத்துக்காட்டால் இதனை விளக்கலாம். சீன மொழியில் 'சௌ' என்ற சொல்லுக்குக் கப்பல், ஓயாமல் பேசுதல், பெருந் தீ, அண்டா என்னும் பொருள்கள் உள. பாய்மரத் தின் மீது கப்பற்பாயை வரைந்து, சௌ என்ற சொல்லை அவர்கள் புலப்படுத்தினார்கள். கப்பல் என்ற பொருளுக்கு அந்த வடிவம் மட்டுமே வரையப்பட்டது. 'ஓயாமல் பேசு தல்' என்ற பொருளைக் குறிப்பதற்குச் சௌ வடிவோடு பேசுதலைக் குறிக்கும் வாய்வடிவை வரைந்தனர். அதே போல் சௌ வடிவோடு நெருப்பைக் குறிக்கும் உருவை எழுதிப் பெருந்தீயையும், தண்ணீரைக் குறிக்கும் வடிவை வரைந்து அண்டாவையும் புலப்படுத்தினார்கள். இவ்வாறு சௌ வடிவோடு அமைந்த வாய்வடிவு முதலியன வரை யறைக் குறிகளாம்.

இலச்சினைப் பதிவுகளில் சில எழுத்துக்கள் மீண்டும் மீண்டும் வருவதைக் கண்டனர் பின்னிஷ் அறிஞர்கள். அவை முன்சொல்லோடு ஒட்டுவன என்று அவர்கள் ஊகித்தனர். அவர்கள் சொற்களை இனம்கண்டு, முன்சொல்லுக்குப் பிற கூறாக அமையும் பின்னொட்டுக்களை (suffix) அறிந்துகொண் டதை முதல் அட்டவணையிலிருந்து புரியலாம்.* இந்த அட்ட

---

* சிந்துவெளியில் வலமிருந்து இடமாக எழுதினர்; ஒன்றுக்கு மேற்பட்ட வரிகளை உடைய சில வாசகங்களில் முதல்வரி வலமிருந்து இடமாகவும் இரண்டாம் வரி இடமிருந்து வலமாகவும் எழுதினர்.

வணையில், கடைசி இரண்டு எடுத்துக்காட்டுக்களைத் தவிர, ஏனைய வாசகங்களின் (இடப்புறக்) கடைசியில் உள்ள குறியீடு, வேறு ஒரு குறியீட்டோடு—கடைசி உதாரணத்தின் இறுதியில் உள்ள 'அம்புக்குறி'யோடு—மாறி மாறி வருகிறது. இவை இரண்டையும் பின்னொட்டுக்கள் எனக் கொள்வதைத் தவிர்க்க முடியாது. இவற்றில் அதிகமாகப் பயன்படும் குறியீட்டைக் கிழமைப் பொருளைத் தரும் உருபு என்றும் (தமிழில் ஆறும் வேற்றுமை உருபு), குறைவாகப் பயன்படும் அம்புக் குறியைக் கொடைப்பொருள் தரும் உருபு என்றும் (தமிழில் நான்காம் வேற்றுமை உருபு) கொள்வது பகுத்தறிவுக்கு உகந்ததே. அந்த இரண்டு பின்னொட்டுக் குறிகளும் வேறொரு குறியீட்டோடு இணைந்து காணப்படும் இடங்கள் உள. அவ்வாறு இணைக்கப்பெறுவது பன்மையைக் குறிப்பது என்று இனம் அறிந்தனர் பின்னிஷ் அறிஞர். இவ்வாறு அவர்கள் கொண்ட முடிவுகளை இரண்டாம் அட்டவணையில் காணலாம்.

பின்னொட்டுக்களைப் பற்றிய முடிவுகளிலிருந்து ஓர் உண்மை விளங்கும். தமிழில், இடைநிலை, விகுதி, உருபு எனப் பல்கிப் பெருகும் இடைச் சொற்கள் (affix), பகுதிக்குப் பின் நிலையாக வருவதன்றி (suffix), முன் நிலையாகவோ (Prefix), பகுதியின் உள்நிலையாகவோ (infix) வாரா * சிந்துவெளி மொழியின் நிலையும் அதுவே. வேற்றுமை உருபு அனைய சொற்களைப் பின்னொட்டாகப் பெறும் வகையைச் சேர்ந்தது சிந்துமொழி என்பது இப்போது தெளிவாம்.

சிந்துவெளி வாசகங்களில், மேலும் இரண்டு குறியீடுகளை, வேறொரு வகையான பின்னொட்டுச் சொற்களாகப் பின்னிஷ் அறிஞர்கள் இனம் அறிந்தனர். அவையும் மாறி மாறி வருகின்றன. (ஒரே ஒரு வாசகத்தில் அவை இரண்டும் வருகின்றன.) அந்த இரண்டில் ஒன்று, மனிதனின் திருந்தா வடிவம்; அதற்கு முற்பட்ட வரைவடிவம் ஒரு மனிதனைக் குறிக்கிறது என்பதை அது சுட்டுகிறது எனலாம். அவ்

---

* இடைச்சொல்: பெயர்வினைகளோடு சார்ந்து வழங்கும் சொல். பகுதி: சொல்லின் முதனிலை.

வாறு எனில் அத்துடன் மாறி மாறி வரும் வடிவம் பெண் பாற் குறியீடு என்று ஊகிப்பது பொருத்தமே. இந்த இரு குறியீடுகளையும் மூன்றாம் அட்டவணையில் காணலாம்.

1114
1082
1120
1005 = 3018
1601
3289
3143
3071

அட்டவணை. I

அட்டவணை. 2.

அட்டவணை. 3.

இதுகாறும் கூறியவற்றில், சிந்துவெளி மொழி இதுவா அதுவா என்ற பிரச்சினை எழவேயில்லை. அது எம்மொழி யாயினும், சொல்லெழுத்தை உடையது என்றும், பின்னொட்

டுப்பண்பு உடையது என்றும், கிழமைப் பொருள், கொடைப் பொருள், ஆண், பெண் ஆகியவற்றைக் குறிப்பிட்ட வடிவங்களால் புலப்படுத்துகிறது என்றும் முடிவு செய்வதோடு அமைந்தோம். ஆனால் இங்கேயே ஒரு கேள்வி எழுந்தது. மூன்றும் அட்டவணையில், ஆள் வடிவம் மனிதனின் உருவம் என்பது தெளிவாயினும், பெண்ணைக் குறிக்கும் எழுத்து சிப்பு வடிவத்தில் இருக்கிறது. சிந்துவெளியில் சிப்புக்குச் சிறப்பு இருந்தது என்பதும், சுமிரியாவுக்குக்கூட சிந்து வெளியிலிருந்து தந்தச் சிப்புக்கள் ஏற்றுமதியாயின என்பதும் மெய்யே. ஆனால் 'சிப்பு' வடிவம் பெண்ணைக் குறிக்கவேண்டுமெனில், ஏதாவது ஒரு மொழியில் சிப்பு எனப் பொருள்படும் சொல்லும் பெண்ணைக் குறிக்கும் சொல்லும் நெருங்கிய ஒலி ஒற்றுமை உடையனவாக இருக்கவேண்டும். அம்மாதிரி ஒரு மொழி உளதா? 'உளது' என்பது பின்னிஷ் அறிஞர் பதில். மத்திய இந்தியாவில் வழங்கும் பார்ஜி என்னும் திராவிட மொழியில் 'பெண்டெடா' என்ற சொல் சிப்பு என்ற பொருளில் ஆளப்பெறுகிறது. அதையொத்த சொற்கள் கன்னடம், துளு, தெலுங்கு, முதலிய வேறு பல திராவிட மொழிகளிலும் சீப்பு என்ற பொருளில் வழங்குகின்றன (தமிழிலும் மலையாளத்திலும் வேறு சில மொழிகளிலும் அந்தச் சொல் இடம் பெறவில்லை). பூர்வீகத் திராவிடத்தில் பெண்டிகா என்னும் சொல் சீப்பு என்ற பொருளை உடையதாயிருக்க வேண்டும். பெண், பெண்டு என்று தமிழில் உள்ளதை ஒத்த சொற்கள்—மாது என்ற பொருளில்—மிகப் பெரும்பான்மையான திராவிட மொழிகளில் உள. பூர்வீகத் திராவிடத்தில் பெண்டி எனும் சொல் பெண் என்ற பொருளைத் தந்ததாக வேண்டும். எனவே, பெண்டிகா (சீப்பு) பெண்டியைக் (பெண்ணைக்) குறிக்கும் வடிவமானதில் வியப்பில்லை என்பர் பின்னிஷ் அறிஞர். மேலும், பெண்கள் பெரிதும் விரும்பிப் போற்றிய பொருள் என்பதாலேயே சீப்புக்குப் பெண்டிகா என்ற பெயர் வந்தது என்றும் அவர்கள் ஊகிப்பர். ஆனால் அந்த ஊகத்தை ஏற்க வேண்டுமென்ற இன்றியமையாமை ஏதுமில்லை. பெண், சீப்பு என்ற இரண்டை

யும் திராவிட மொழி சேர்த்து எண்ணியது என்பதொன்றே போதும், பெண்ணைக் குறிப்பதாகச் சிப்பு வடிவு விளங்கக் கூடும் என்பதைப் புரிவதற்கு.

சிந்துவெளியில் பெண்பாற் குறியீடாகச் சிப்பு அமைந்ததும், திராவிடத்தில் பெண்டி, பெண்டிகா என்ற சொற்கள் முறையே பெண், சிப்பு என்று பொருள்படுவதும் தற்செயல் ஒற்றுமையாக இருக்கலாம் என்று எண்ணுவது இயல்பே. ஆனால் இதேபோல் மேலும் பல எடுத்துக்காட்டுகள் இருப்பதால், அவை அனைத்தையும் தற்செயல் ஒற்றுமை என்று ஒதுக்க முடியாததால், சிந்துவெளி மொழி பண்டைய திராவிடம் என்று துணிந்ததாகப் பின்னிஷ் அறிஞர் கூறுவர்.

பின்னிஷ் அறிஞர் தரும் விளக்கங்களில் பிழையானவை சில உள; ஐயத்துக்கு இடமானவை சில உள; விவரமறிந்தவர் ஏற்கத்தக்கன சிலவும் உள. சிந்துவெளி இலச்சினைக் குறிப்புக்களையெல்லாம் படித்துவிடலாம் என்று கூறமுடியாவிடினும், சிந்துவெளி மொழி முன்னைய திராவிடமே என்று துணிவதற்குப் போதுமான சான்று உண்டு.

எடுத்துக்காட்டாக, மீன் வடிவத்தைக் குறிப்பிடலாம். பல இலச்சினைகளில் தலைமையான எழுத்தாகத் திகழ்வது மீன் வடிவம். அந்த இலச்சினைகள் தெய்வப்படையல்தொடர்புடையன என்பதில் கருத்து வேற்றுமை இல்லை. எனவே இங்கு மீன் வடிவம், நீரில் வாழும் மச்சத்தை அன்று, தெய்வத்தையே சுட்டுகிறது என்பது தெளிவு. திராவிடத்தில்தான் 'மீன்' என்பது நட்சத்திரத்தையும் குறிக்கும். எனவே, சிந்துவெளியினர் திராவிடம் பேசினர் என்ற கொள்கையே இந்த இலச்சினைச் செய்திகளைப் புரிவதற்கு உதவும் திறவுகோலாகிறது. செங்குத்தாக ஆறு சிறு கோடுகளை ( III III ) வரைந்து, அடுத்து மீன் உருபை எழுதி, அறுமீன் (கார்த்திகை) என்பதைக் குறிப்பிட்டனர். அறுமீனைக் குறிக்கும் கூட்டெழுத்தைத் தொடர்ந்து, கிழமைப்பொருள் உருபைக் குறிக்கும் உருவும் ஆள் வடிவும் அமைந்த தொடருக்கு அறுமீன் காதலன் (கார்த்திகேயன், முருகன்) என்றே சோவியத் அறிஞரும் பொருள் காண்பர். முருகன்

சிந்துவெளி மக்களால் வழிபடப் பெற்றுன் என்பது தெளிவு. இரண்டு கோடுகளை (ll) இட்டு, அடுத்து ஒரு மீனை வரைந்துள்ளனர். இந்தக் கூட்டெழுத்து இரட்டை எனப்பெறும் மிதுன ராசியைக் குறிக்கும் என்று பின்லிஷ் ஆய்வாளர் கருதுவது பொருத்தமே. சிவப்பு, கறுப்பு, வெண்மை, பொன்னிறம், பச்சை ஆகியவற்றுக்குரிய குறியீடுகளைத் துணிந்து, அவை ஒவ்வொன்றும் மீன்வடிவோடு காணப்படுவதை முறையே செம்மீன், மைம்மீன், வெள்ளிமீன், பொன்மீன், பச்சைமீன் என்று பொருள் கொள்வர் பின்னிஷ் அறிஞர்*.

---

* செம்மீன் என்பது செவ்வாய்க் கிரகத்தைக் குறிக்கும் என்பதால், செவ்வாயும் சிவனும் ஒன்று என்பர் பின்னிஷ் அறிஞர். ஆனுல் செம்மீன் என்பதற்குத் திருவாதிரை என்ற பொருளும் உண்டு (புறநா 60. உரை). 'ஓரையன்' என்று மேனுட்டாரால் குறிப்பிடப் பெறும் நட்சத்திர மண்டலத்திலுள்ள திருவாதிரை மஞ்சட் சிவப்பு நிறமுடையது. எனவே, இதனையும் செம்மீன் என்றனர் தொல்லோர். மைம்மீன் (கருநிற மீன்) சனீஸ்வரனைக் குறிக்கும் (புறநா. 117). சனி வழிபாட்டையும் கிருஷ்ணன் (கருநிறத்தோன்) வழிபாட்டையும் ஒன்ருக்குவர் பின்னிஷ் அறிஞர். ஆனுல் பரமசிவனுக்குத் திருவாதிரை புனிதமானது என்பது போல் மாயோனுக்கு (கருநிறத்தோன்-கிருஷ்ணன்) திருவோணம் புனிதமானது என்பதே தமிழ் மரபு. (பார்க்கப் போனுல், இருபத்தியேழு நட்சத்திரங்களில் ஆதிரை, ஓணம் என்னும் இரண்டே திரு என்னும் அடை பெறுகின்றன,) எனவே, நட்சத்திரங்களில் இறைமை கண்டனர் என்ற கொள்கையோடு கண்ணன் வழிபாடு இணைவதென்ருல் ஓணத்தானுக அவன் சிந்து வெளியில் வழிபடப் பெற்ருன் என்போம். ஆனுல் அதற்குச் சான்று கிடைக்குமா என்பதற்குக் காலமே விடை கூறும். வெள்ளிமீன் சுக்கிரன் என்னும் கோளைக் குறிக்கும். ஆனுல் வெள்ளிமீனைக் குறிக்கும் கூட்டெழுத்து, மைம்மீனைக் குறிப்பதை அடுத்துப் பல

பல முத்திரைகளில் தேள் வடிவம் தென்படுகிறது. அங்கெல்லாம் தேளைப் பற்றிப் பேசுகிருர்கள் என்று எவரும் கூருர். தேள் என்ற சொல்லைப் போல் ஒலிக்கும் வேருெரு சொல்லையே தேள்வடிவம் குறிக்கிறது என்பது தெளிவு. அத்தகைய சொல்லைத் திராவிடத்தில் காண்கிருேம். அனேக திராவிட மொழிகளில் 'தெள்' என்னும் சொல் தெளிவையும் ஞானத்தையும் குறிக்கும். மேலும், இலச்சினைகளில் தேள் வடிவம் ஆண் வடிவத்தோடு இணைந்தே காணப்படுகிறது. எனவே தேளும் ஆளும் சேர்ந்து அமைந்த கூட்டுச் சொல் 'தெள்ளியர்' (தெளிந்த அறிவினர்) எனப் பொருள் படுவ தாகப் பின்லிஷ் அறிஞர் கண்டது ஏற்புடைத்தே*.

---

இலச்சினைகளில் காணப்படுவதால், வெள்ளிமீன் வாலியோன் (வெண்ணிறமுள்ளவன்—பலராமன்) எனப் பொருள்படலாம் என்பர் பின்லிஷ் அறிஞர். பொன்மீன் என்பது வியாழன் (பிரகஸ்பதி) என்னும் கோளைக்குறிக்குமென்று கூறுவதோடு, பிரகஸ்பதி என்பது பிரமனின் பெயர்களில் ஒன்று என்பதையும் நினைவூட்டுவர். பச்சைமீன்என்பது புதன் என்னும் கோளாகும். புலமையோன் என்று புதனைப் போற்றுவர். புதனும் நல்லறிவுத் தெய்வமான கணேசனும் ஒன்றெனக் கொள்வர் பின்லிஷ் அறிஞர். கணேசன் என்னும் சொல்லில், 'கணம்' திராவிட மொழிக்கு உரியதாகலாம் என்றும் கூறுவர்.

* தமிழிலுள்ள தொன்மையான கல்வெட்டுக்கள் (கி.மு. 3ஆம். நூ.) பிராமியில்அமைந்தவையே. ஆனல் தொல்காலத்தில் சித்திர எழுத்தைத் திராவிடர்கள் பயன்படுத்தினர் என்பதை, 'எழுதுதல்' சொல்லின் பொருளிலிருந்தே அறியலாம். அட்சரம் வரைவதைக் குறிப்பதோடு சித்திரம் வரைவதையும் குறிப்பதால், ஒரு காலத்தில் சித்திர எழுத்து ஆண்ட மரபை எழுது என்னும் சொல் புலப்படுத்துகிறது எனலாம். மேலும் யாப்பருங்கல உரையில்,

## முடிவுரை

ஆக, ஐயாயிரம் ஆண்டுக்கு முன்பே, சிந்துவெளியில் தனக்கே உரிய இயல்புகளுடன் உதயமான இந்திய நாகரிகம், திராவிடரின் சாதனையே என்ற முடிவுக்கு வருகிறோம். மொழிவழியில் திராவிடராகத் திகழ்ந்த சிந்துவெளி மக்கள், இனவழியில், மத்தியதரையினர், ஆஸ்திராலாயிடுகள் ஆகியோரின் கூட்டமாக விளங்கினர். மேலும் ஆல்ப்பைன் களும் மங்கோலாயிடுகளும் கூட அச்சமுதாயத்தில் இடம் பெற்றனர். பின்னாளில் நார்டிக், ஆல்ப்பைன், தினரிக் இனங்களைச் சேர்ந்த மக்கள் ஆரிய மொழியினராகப் பாரதம் வந்தனர். எம்மொழியினராகவோ, ஆர்மினாயிடுகளும் மத்தியத்தரையினரோடு எண்ணத்தக்கஇரும்புயுகப்பெருங்கற் படையினரும் இந்தியாவுக்கு வந்தனர். இந்தப் பல்வேறு இனங்களின் கலப்பில் உருவானதே இந்திய சமுதாயம். வரலாற்றுக் காலத்திலும் புதிய மக்கட் கூட்டங்கள் வந்து இந்திய சமுதாயத்தில் கலந்தன. கிரேக்கர்கள், சகர்கள், குஷானர்கள், ஹூணர்கள், துருக்கியர்கள் முதலானோர் குறிப்பிடத் தக்கவர்கள். கேரளத்துக்கு வந்த அரேபியர், மலையாளப் பெண்களை மணந்து வாழ்ந்தனர்; இவ்வாறு உருவானதே மாப்பிள்ளைச் சமூகம். நவீன ஐரோப்பியர் களான போர்ச்சுக்கீசியர், பிரிட்டிஷார் முதலானோர் வந்த

---

காணப்பட்ட உருவம் எல்லாம்
மாணக் காட்டும் வகைமை நாடி
வழுவில் ஓவியன் கைவினை போல
எழுதப்படுவது உருவெழுத்தாகும்

எனவரும் மேற்கோள் செய்யுளும் தொல்லோர்கள் உருவெழுத்து ஆண்ட நினைவைப் போற்றுகிறது. எனவே பண்டைய திராவிடம் உருவெழுத்தை ஆண்டது என்று துணிவது நேரிதே. நம் நாட்டில் சிந்துவெளி நாகரிகமே சித்திர எழுத்தைக் கண்டது என்பதால், அது முன்னாளைய திராவிட மொழிக்குரியதே என்ற கொள்கை மேலும் வலுப் பெறுகிறது என்போம்.

பின்னர், அவர்களுக்கும் இந்தியரில் சிலருக்கும் உறவு உண்டாயிற்று. ஆங்கிலோ-இந்தியர் சமூகம் இந்த உறவின் வழியில் உருவானதே.

திராவிட நாகரிகமும் ஆரிய நாகரிகமும் இரண்டறக் கலந்ததால் பாரதப் பண்பாடு உருவாயிற்று. பின்னர் வந்த மக்கட் கூட்டங்களைச் சீரணித்துத் தன்மயமாக்கும் ஆற்றல் பெற்றதாகப் பொலிவுற்றது அது. அவ்வாறு அது தன்னகத்தே கிரகித்துக்கொண்ட மக்களிடமிருந்து புதியவலுவும் பெற்றது.

அரசோ சமய அமைப்போ ஆணை பிறப்பித்துப் பண்பாட்டு ஒருமைப்பாட்டை வன்முறையால் உருவாக்கும் வழியலா வழிமேல் பாரதம் படரவில்லை. விதவிதமான பண்பாடுகளை உடைய மக்கள் தம்மிச்சையாக உறவு கொண்டு, கருத்துக்களையும், கொள்கைகளையும், பழக்க வழக்க ஒழுக்கங்களையும் பரிவர்த்தனை செய்து, உளமார்ந்த ஒற்றுமையை உருவாக்கினர். எல்லாத்துறைகளிலும் ஒருபடித்தான வாழ்வியலைக் காணவிழையாது, விரும்பிய வேறுபாடுகளைப் போற்றிக்கொண்டே ஒற்றுமை காண்பதில் வெற்றிகண்டனர். ஒற்றுமையும் வேற்றுமையும் ஒருசேரப் பொருந்திய முரண் நிலைச் சேர்க்கையின் படைப்பாற்றலைப் பயன்படுத்தியது பாரதம். இதனையே பன்மையில் ஒருமை கண்ட பெருமை என்போம்.



# II. சக்கரவாத்தி மரபு

இந்தியா வழிவழியாக ஓர் ஆட்சியில் ஒன்றுபட்டு உயர வில்லை என்பது உண்மையே. மீண்டும் மீண்டும் பல அரசுகளாகக் குலைந்ததைச் சாற்றும் சரித்திரம். ஆயினும் அகில பாரதப் பேரரசினை அமைக்க நம் முன்னோர்கள் திரும்பத் திரும்ப முயன்றதைக் கருதி நாம் பெருமைப்பட முடியும். அராஜகத்தை நீக்கி, அமைதியை நிலைபெறச் செய்த அருளாளர்களாக ஆங்கிலேயர்களைச் சித்திரித்த ஐ. சி. எஸ். அதிகாரியான வின்சென்ட் ஏ ஸ்மித் என்ற வரலாற்றறிஞர் கூட இதை ஒப்புக் கொண்டார். ''அனைத்து இந்தியாவின் அரசியல் ஐக்கியம் ஒருபோதும் முழுமையாகக் கைகூடவில்லை யென்றாலும், எப்போதும், பல நூற்றாண்டுக் காலம் முழுமையும், அது மக்களின் இலட்சியமாக இருந்தது'' என்று எழுதினார் அவர். நவீனத் தொழிலும் போக்குவரத்தும் தோன்றுவதற்கு முன்னால், ஆயிரமாயிரம் ஆண்டுகளாக, பரந்த நாட்டில் வாழ்ந்த பல லட்சம் மக்கள் அரசியல் ஐக்கியத்தை லட்சியமாகக் கொண்டு பாடுபட்டார்களென்பது வியக்கத்தக்க ஒன்றாகும்.

## 1. நிலப்பரப்பு

பதினைந்து லட்சம் சதுரமைலுக்கு அதிகமான பரப்பளவைத் தழுவியது பாரதம்.* வடக்கே, சிவபெருமானது

---

* இங்கும் இதன்பின்வரும் வரலாற்றுச் செய்திகளிலும், பாரதம் அல்லது இந்தியா என்பதில் பாக்கிஸ்தானும் அடங்கும்.

சிரிப்பின் செறிவாகக் காளிதாசனது கற்பனைக் கண்ணுக்குக் காட்சி தந்த பனி முடிகளை உடைய இமாலயம். இமயம், அதன் கிழைய, மேலைய நீட்டங்களுடன் சேர்த்து, பலூச்சிஸ் தானத்திலிருந்து பர்மா வரையில், வளைந்த வில்லின் வடிவத்து மதிலாக விளங்குகிறது. அடுத்து, மேல்கோடியிலிருந்து கீழ்கோடிக்குக் கிட்டத்தட்ட 1,500 மைல் நீண்டிருக்கும் சிந்து-கங்கை தாழ்நிலங்கள்.* இமயத்தின் அருளால் வற்ருத நீர்ப்பெருக்கை உடைய அந்த இரு ஆறுகளின் சமவெளிகளுக்கிடையே ராஜபுதனப் பாலைநிலம்; பிறகு, விந்திய மலையை முதுகெலும்பாகக் கொண்ட மத்திய இந்திய மேட்டு நிலங்கள்; தெற்கே, நீலகிரி வரையில் நீண்டிருக்கும் தட்சிண பீடபூமி; இதன் இருபுற விளிம்புகளான மேற்குத் தொடர்ச்சி, கிழக்குத் தொடர்ச்சி மலைகளுக்கு அப்பால், மேலைய, கிழைய கடலோரச் சமவெளிகள்;— இத்தனை இயற்கைப் பிரிவுகளை உடையதாய், காஷ்மீரத்திலிருந்து கன்னியாகுமரிவரையில் இரண்டாயிரம் மைல் வியாபித்து, விதவிதமான தட்பவெப்ப நிலையுடன் விளங்குவது இந்தியா. இத்தனை பிரிவுகள் இருந்தபோதிலும், இமயத்திலிருந்து இந்திய சமுத்திரத்தினுள் ஓர் அமைப்பாகவே நீண்டது இந்திய தீபகற்பம். இதனைக் கருதி, இயற்கையே ஈண்டுப் பன்மையில் ஒருமைகாண விழைந்தது எனலாம்.

இயற்கைப் பிரிவுகளால் ஏற்பட்ட இடர்களையும் கடந்து, அகன்று நீண்ட நாட்டில் அரசியல் ஒற்றுமையை அமைத்துப் பேணுவது, அந்நாளில் எளிதான பணியல்ல. பாரதத்தோடு ஒப்பிடும்போது, பிரிட்டனும் பிரான்சும் சிறு நாடுகளே. இந்தியப் பரப்பளவில் பதினுன்கில் ஒரு பங்கே உடையது பிரிட்டன்; ஆறில் ஒரு பங்கே உடையது பிரான்ஸ். ஆனல் அந்த நாடுகளும் பதினைந்தாம் நூற்றுண்டின் முடிவில்தான் குறுநில மன்னர் அனைய பிரபுக்களின் தனி

* திபெத்திலிருந்து அசாம் பள்ளத்தாக்கு வழியே பாயும் பிரமபுத்திரா நதி வங்கத்தில் கங்கையில் கலக்கிறது.

உரிமைகளுக்கு முடிவு கட்டித் தேசிய ஐக்கிய அரசுகளை உறுதியாக நிறுவின. கிறிஸ்து பிறப்பதற்கு நூருண்டுக்கு முன்பே, அட்லாண்டிக் சமுத்திரத்திலிருந்து மேற்கு ஆசியா வரையில் பரவிய சாம்ராஜ்யத்தைக் கண்டது ரோமாபுரி என்பது மெய்யே. ஆனால் ரோமாபுரியை மையமாகக் கொண்ட இத்தாலி, ஐந்தாம் நூற்ருண்டிலிருந்து பற்பல அரசுகளாகச் சிதறுண்டே இருந்தது. இரண்டு லட்சம் சதுரமைலுக்கும் குறைவான பரப்பை* உடைய இத்தாலி தேசிய ஒற்றுமை கண்டது, பத்தொன்பதாம் நூற்ருண்டில் தான். சிதறுண்டிருந்த ஜெர்மனியின் அரசியல் ஒற்றுமையும் 1866—1871 ஆண்டுகளிலேயே கைகூடியது. பார்க்கப் போனல், நவீன விஞ்ஞானத்தின் பயனை யந்திரத்தொழிலும் விரைவுப் போக்குவரத்துமே இந்தியா போன்ற பெரிய தேசத்தில் ஒராட்சியை அமைத்துக் காப்பதைச் சாத்தியமாக்கியுள்ளன. கட்டை வண்டியும் கைத்தொழிலுமே இருந்த பண்டைய நாட்களில்கூட, அந்தப் பௌதிக நிலைமைகளால் ஏற்பட்ட சிரமங்களையும் வென்று, அப்போதைக்கப்போது அனைத்திந்திய ஆட்சி அமைப்பில் நம் முன்னோர்கள் கணிசமான முன்னேற்றம் கண்டது அற்புதம் என்றே சொல்லத்தகும். அவ்வாறு அற்புதம் இயற்றுவதற்கு இந்திய மக்களது பண்பாட்டு ஒற்றுமையே அடிப்படையாக விளங்கியது.

## 2. சிந்துவெளி கண்ட ஐக்கியம்

ஐயாயிரம் ஆண்டுக்கு முன்பே இந்தியாவில் நாகரிகம் தழைத்திருந்ததைப் பறைசாற்றும் சிந்துவெளிப் புதை பொருட்களே இந்திய மக்களின் ஒற்றுமை உணர்வுக்குச் சான்று பகர்கின்றன. சிந்துவெளி நாகரிகம், நீளத்தில் 1,500 கிலோ மீட்டரும் அகலத்தில் 1,100 கிலோமீட்டரும் பரவியிருந்தது. இதன் பெரிய நகரங்களான பஞ்சாபிலுள்ள ஹரப்பாவும் சிந்து மாகாண மொகஞ்சதாரோவும் ஒரே தன்மையான நகர அமைப்பை உடையன. இந்த நாக

* இந்தியப் பரப்பில் அரைக்கால் பாகம் எனலாம்.

ரிகத்துக்கு உரிய பிரதேசம் முழுவதிலுமே, செங்கற்களின் உருவளவு, மட்பாண்டங்களின் கொள்ளளவு, நிறுத்தல், முகத்தல் அளவைகள் முதலியவற்றில் ஒற்றுமையைக் காண் கிறோம். இவற்றையெல்லாம் கருதியே, சிந்து, பலூசிஸ் தானம், பஞ்சாப், ராஜபுதனம், சௌராஷ்டிரம் முதலிய பகுதிகளில் பரவியிருந்த அந்நாகரிகம் ஒரே அரசில் தழைத் திருக்கலாமென்று ஊகிப்பர் ஆராய்ச்சியாளர்.

வரலாற்று—முற்காலத்தின் மற்றொரு முக்கிய நிகழ்ச்சி ஆரியர் வருகையே. அதனால் ஏற்பட்ட கிளர்ச்சியில் பழைய நாகரிகமும் புதிதாக வந்த நாகரிகமும் முதலில் முரண் பட்டு மோதிக் கொண்டன; பின்னர் இணங்கி உறவாடி ஒன்றின. நாகரிகக் கலப்பு நிறைவுற்றபின்னர், வரலாற் றுத் தொடக்ககாலத்தில், மகதத்தில் (பீகாரில்) மலர்ந்தது புதிய பேரரசு. 2,500 ஆண்டுக்கு முன்பே, புத்தர்காலத்தில் மகதத்தை ஆண்ட பிம்பிசாரனும் அவனது மைந்தன் அஜாதசத்துருவும் பேரரசு அமைப்புப் பணியில் முனைந்து முன்னேற்றம் கண்டனர். கி. மு. நான்காம் நூற்றாண்டில் மகதத்தை ஆண்ட நந்தர்களின் பேரரசு, வடபுலத்தில் பெரும்பகுதியைத் தழுவியதோடு, தென்புலத்திலும் படர்ந் தது.* கலிங்கநாட்டை வென்றான் மகாபத்ம நந்தன். தட் சிணத்தில் குந்தலநாடு வரையில் நந்தர்ஆட்சி வியாபித்

---

* சங்ககாலத் தமிழர் நந்தரது வீரத்தையும் புகழையும் செல்வத்தையும் பற்றி அறிந்திருந்தனர். நந்தரின் செல்வத்தை அடைந்ததால், தலைவன் தன்னை மறந் தானோ என்று பிரிவால் வருந்திய தலைவி இயம்புவதா கக் கற்பனை செய்வார் மாமூலனார்.

பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்.
சீர்மிகு பாடலிக் குழீஇக் கங்கை.
நீர் முதற் கரந்த நிதியங் கொல்லோ (அகநானூறு 265) (பாடலி—பாடலிபுத்திரம், நந்தர் தலைநகர்; குழீஇ—திரண்ட (செல்வம்); நீர்முதற்கரந்த—நீரின் அடியில் மறைத்த)

திருந்ததாகப் பிற்காலத்துக் கன்னட சாசனங்கள் தெரிவிக்கின்றன.

## 3 மௌரியர் கண்ட பேரரசு

கி. மு. 327-ல் அலெக்சாந்தர்* வடமேற்கு இந்தியாவின் மீது படையெடுத்தான். அங்கு அவன் சில வெற்றிகளை அடைந்த போதிலும், நந்தரின் சேனையோடு இகலுவதற்குக் கிரேக்கப் படை துணியவில்லை. எனவே அவன் திரும்ப வேண்டியதாயிற்று. அதன்பின், சாணக்கியனின் உதவியோடு, சந்திரகுப்த மௌரியன் கிரேக்கர் பிடித்த பகுதிகளை மீட்டான்; நந்தர் வமிசத்தை வீழ்த்திப் பாடலிபுரத்தில் அரியணை ஏறினன். அலெக்சாந்தர் வென்ற பகுதியை மௌரியனிடமிருந்து பறிப்பதற்காகக் கிரேக்க அரசன் செலுக்கஸ் போர்மேல் வந்தபோது, சந்திரகுப்தனிடம் தோல்வியே கண்டான். இவ்வாறு, கி. மு. 305 அளவில், மௌரிய சாம்ராஜ்யம் மேற்கில் இந்துகுஷ் மலைவரையில் பரவியிருந்தது. காஷ்மீரம், வங்கம் ஆகியவை உள்ளிட்ட வடபுலத்தோடு, தட்சிணமும் மௌரியர் பேரரசில் அடங்கியிருந்தது.

மௌரியர் காலத்துக்குப் பிற்பட்ட சங்க காலத்தில் வாழ்ந்த தமிழ்ப் புலவர்கள், மௌரியரைப் பற்றியும் அவர்கட்கும் தமிழகத்துக்கும் இருந்த தொடர்பினைக் குறித்தும் குறிப்பிடுவர்.

''விண்பொரு** நெடுங்குடைக் கொடித்தேர் மோரியர்'' என்பது ஆத்திரையனார் வாக்கு (புறநானூறு 175). விண்ணை முட்டும் நெடுங்குடை உடையவர் என்றதால் மௌரியர் பேரரசின் மகோன்னத நிலை விளங்கும். புதிதாக அரியணை

---

* மகா அலெக்சாந்தர் (கி. மு. 356–323) என்று வரலாற்றில் கொண்டாடப்பெறும் மாசிடோனிய மன்னன்; கிரேக்க அரசுகளை அடிபணியச் செய்தவன்; எகிப்திலும் மேற்கு ஆசியாவிலும் பரவியிருந்த பாரசீகப் பேரரசை வீழ்த்தியவன். இந்தியாவிலிருந்து சென்றபோது, பாபிலோனில் மாண்டான்.

** விண்பொரு - வானத்தை முட்டும்.

ஏறிய மௌரியரின் படை தமிழகத்துக்கும் வந்ததாகச் செப்பு வார் மாமூலனுர். கோசர் மோகூரைத் தாக்கியபோது, அது பணியாமையால், கோசருக்கு உதவியாக 'மாகெழு தானை வம்பமோரியர்' வந்தனரென்பது மாமூலனுர் கூற்று (அகநா. 251).* அவ்வாறு வந்த மௌரியர் தமது தேர்ப் படை தடையில்லாது செல்வதற்காக மலையினை உடைத்து வழி செய்தனர் என்றும் அவர் கூறுவார். அவர்கட்கு வடுகர் முன்னணியாக விளங்கினராம்.** இச் செய்திகளிலிருந்து

---

* மாகெழுதானை - குதிரைகளுடன் கூடிய சேனை. வம்பமோரியர் - புதிய மௌரியர். இங்குக் குறிப் பிடப் பெறுவது தென்னுற்காடு ஜில்லாவிலுள்ள மோகூர் ஆகலாம் என்பது பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியாரின் ஊகம். ஹைதர் அலியின் படை யெடுப்புகளுக்கு வழியாக அமைந்த ஆத்தூர் கணவாய் வழியே மௌரியர் படை வந்திருக்கலா மென்றும் அவர் கூறுவார். தக்கணத்திலும் தென் னிந்தியாவிலும் சந்திரகுப்தனது மைந்தன் பிந்து சாரன் திக்குவிஜயம் செய்ததாகத் திபெத்திய சரித் திரப் புலவர் தாரநாத் கூறுவதும் இங்குக் கருதத் தக்கது. பாண்டிய நாட்டு மோகூரே குறிப்பிடப் பெறுவதாகக் கருதுவார் மகாவித்துவான் ரா. இராகவ ஐயங்கார். சங்க காலத்தில் கோசர் மோகூர் வேந்த னுக்கு உற்ற தோழராக விளங்கினரென்பது உண்மை. ஆனல் மௌரியர் காலத்துச் சரித்திரச் செய்தியே மாமூலனுர் குறிப்பிடுவது.

**முரண்மிகு வடுகர் முன்னுற மோரியர்
தென்திசை மாதிரம் முன்னிய வரவு. (அகநா. 281).
(முரண் - பகை, வலி; வடுகர் - வேங்கடத்துக்கு அப்பால் தட்சிணத்தில் வாழ்ந்தவர்; தற்காலக் கன்னடியர்க்கும் ஆந்திரர்க்கும் முன்னேர். முன்உற- முன்செல்ல. முன்னிய-கருதிய. தட்சிணம் மௌரியப் பேரரசில் இருந்ததால் வடுகப்படை முன்னணிப்படை யாக வந்ததென்பது உண்மையாக இருக்கலாம்.)

மௌரியருக்கும் தமிழகத்திற்குமிருந்த உயிர்த் தொடர்பையும், இந்திய அரசியல் ஒற்றுமையின் உண்மையினையும் உய்த்துணர்கிறோம்.

சந்திரகுப்தனின் பேரனே அகிலம் புகழும் அறவேந்தனான அசோகன். பேரரசிலிருந்து பிரிந்திருந்த கலிங்கத்தைப் போரில் வென்று, தன் சாம்ராஜ்யத்தில் சேர்த்துக்கொண்டான் அவன். அது வொன்றே அவன் நிகழ்த்திய போர். போரின் கொடுமைகளைக் கண்டு மனம் மறுகிய அசோகன், "யாரொடும் பகை கொள்ளலன் என்றபின் போர் ஒடுங்கும், புகழ் ஒடுங்காது" என்று எண்ணித் துணிந்தான். பாரதத்தில் தமிழகம் மட்டுமே அவனது ஆட்சி வட்டத்தினுள் அமையவில்லை.* திக்குவிஜயத்துக்குப் பதிலாகத் தரும விஜயத்தை மேற்கொண்ட சக்கரவர்த்தி, தமிழக அரசர்களான சதிய புத்திரர்களையும் சேர சோழ பாண்டியர்களையும் நண்பர்களாக வரித்துத் தமிழகமெங்கும் தருமப் பிரசாரம் செய்வதற்கும் மருத்துவ சாலைகள் முதலான சமுதாய நலப் பணிகள் நடைபெறுவதற்கும் ஏற்பாடு செய்தான். தமிழ் நாட்டு வேந்தர்களும் மக்களும் அசோகனுக்கு உளங்கனிந்த ஒத்துழைப்பை நல்கினர்கள். அதனுல்தான், தருமம் வெற்றி கண்ட களங்களாகத் தமிழக ராஜ்யங்களைக் குறிப்பிடுகிறான் அசோகன். இலங்கையிலும் அசோகனின் அறநெறி வாகை சூடியது. அவனுடைய மைந்தன் மகேந்திரனும் மகள் சுங்கமித்திரையும் இலங்கை சென்று அங்கு அரசனும் குடிகளும் பௌத்த நெறியினைத் தழுவச் செய்தனர். இலங்கை வேந்தனான தேவநாம்பிரிய திஸ்ஸா, பௌத்த சமயத்தைத் தழுவியதோடு, இரண்டாம் முறையாகப் பட்டாபிஷேகம்

---

* மாமூலனுர் குறிப்பிடும் மௌரியர் படையெடுப்புக்குப் பின்னர், தமிழக அரசுகள் சுயேச்சையாகவே இருந்தன என்பது அசோகனது கல்வெட்டுச் செய்திகளிலிருந்து புலனுகிறது.

செய்துகொண்டானென்று, அந் நாட்டு வரலாற்றைக் கூறும் நூலான மகாவமிசம் மொழிகிறது. அசோகன் தலைமையைத் திஸ்ஸா ஏற்றுப் போற்றினனென்பதைத் தேசிய உணர்வுக்குரிய மகாவமிசத்திலிருந்தே உய்த்துணரலாம் என்பார் பாஷம்.*

குடிமக்கள் உடல் நலனோடு மனநலமும் பெற்று உயர வேண்டுமென்பதற்காக அரசின் ஆற்றலையெல்லாம் ஈடுபடுத்திப் பாடுபட்ட பெருமகன் அசோகன். பரந்த பேரரசின் அன்றாட நிர்வாகத்தில், சமயத்தின் சிறந்த கொள்கைகளைக் கடைப்பிடித்த சிறந்த செம்மல் அவனே. அதனால்தான் அவனுடைய சாரநாத் ஸ்தூபியின் போதிகையிலுள்ள சக்கர வடிவம், நமது தேசியக் கொடியின் நடுநாயகமாக அமைந்திருக்கிறது. அசோகனின் சிங்கப் போதிகையே நமது குடியரசின் இலச்சினையாக விளங்குகிறது.

இமயம் முதல் இந்திய சமுத்திரம் வரையிலுள்ள நிலப்பரப்பை ஆள்வோனே சக்கரவர்த்தி என்று மௌரியர் பேரரசை உருவாக்குவதில் தலைமையான பங்கு வகித்த சாணக்கியன் விதிவகுத்தான், அர்த்த சாத்திரத்தில். இவ்வாறு மௌரியர் காலத்தில் நூலிலும் நடைமுறையிலும் உருவான பாரதப் பேரரசு மரபு—எத்தனையோ அரசியல் சிக்கல்களுக்கிடையே-வரலாற்றை உருவாக்குவதில் குறிப்பிடத்தக்க பாத்திரம் வகித்திருக்கிறது,

## 4. படையெடுத்த பரதேசிகள்

கி. மு. 232 அளவில் அமரனான அசோகனுக்குப் பின்னர், மௌரியர் பேரரசு தேய்ந்தது. கடைசி மௌரிய மன்னனைத் தொலைத்துவிட்டு அரசு கட்டில் ஏறியவனே சுங்கவமிச முதல்வனான புஷ்யமித்திரன். வைதிக மரபுக்கு இணங்க, அவன் பேரரசுக்குரிய அசுவமேத யாகங்களைச் செய்த போதிலும், நாட்டின் ஒரு பகுதியையே ஆண்டான். அலெக்ஸாந்தரோடு வந்து ஆசியாவில் குடியேறிய கிரேக்கர்கள் பாரதத்தின்மீது படையெடுத்தனர்.

---

* The Wonder that was India.

பஞ்சாபிலும் சிந்துவெளியிலும் கிரேக்கர் ஆட்சி புரிந்தனர். கிரேக்க அரசன் மினண்டருக்கும் (கி. மு. 2ஆம் நூற்றுண்டு) நாகசேனன் என்னும் பௌத்த சன்னியாசிக்கும் நடந்த விவாதங்களை விவரிப்பது மிலிந்தன்ஹோ என்ற பாலிமொழி நூலாகும். பௌத்தனை மினண்டர் (மிலிந்தன்) இறந்தபோது, அவனது எலும்புகளில் பங்கு கோரிப் பல நகரங்கள் போட்டியிட்டனவாம். வேறுசில கிரேக்கர்கள் வைதிக சமயத்தை ஆதரித்தனர் என்று தெரிகிறது. தட்சசிலத்தில் அரசு புரிந்த கிரேக்கனின் தூதனை ஹீலியோடோரஸ், வீதிசா நகரத்தில் கருடஸ்தம்பம் ஒன்றைக் கல்லில் அமைத்துத் தான் ஒரு பாகவதன் (அதாவது, விஷ்ணு பக்தன்) என்பதை விளம்பரம் செய்தான். கிரேக்கர்களைத் தொடர்ந்து சகர்கள், பஹ்லவர்கள், குஷானர்கள் ஆகிய பரதேசிகளின் படையெழுச்சிகள் ஒன்றன்பின் ஒன்ருக வடமேற்கு இந்தியாவில் நிகழ்ந்தன. இவர்களும் இந்தியர்களாகவே மாறினார்கள். மத்திய ஆசியாவிலிருந்து வந்த குஷானர்களில் சிறப்படைந்தவனே கனிஷ்கன். புருஷபுரத்தைத் (தற்காலத்துப் பிஷாவர்) தலைநகராகக் கொண்ட கனிஷ்கனின் ஆட்சி மத்திய ஆசியப் பகுதிகளிலும், வட இந்தியாவின் மேல் பகுதியில் காசி வரையிலும் பரவியிருந்தது. அவன் பௌத்த மதத்துக்கு ஆற்றிய தொண்டு பெரிது. பல சமயங்களைச் சார்ந்த தெய்வங்களின் வடிவங்கள் கனிஷ்கனின் நாணயங்களில் காணப்படுவதால் அவனது சமய சமரசக் கொள்கை விளங்கும். சக அரசர்களில் குறிப்பிடத்தக்கவன் ருத்திரதாமன் என்பவன். கி. பி. இரண்டாம் நூற்றுண்டில் கூர்ஜரத்தில் அரசு புரிந்த அவன், சமஸ்கிருத மொழியில் வல்லவனுக விளங்கினுன். அவனுடைய சாசனமே செம்மையான சமஸ்கிருதத்தில் அமைந்த முதல் கல்வெட்டு ஆகும். சந்திரகுப்த மௌரியன் கட்டுவித்த சுதர்சன ஏரியின் அணை புயலால் உடைந்தபோது, ருத்திரதாமன் தனது சொந்த நிதியிலிருந்தே பெரும்பணத்தைச் செலவுசெய்து அந்த அணையைத் திரும்பக் கட்டி முடித்தான்.

## 5. சாதவாகனரின் சாதனை

உண்மையில், மௌரியரைத் தொடர்ந்து இந்திய வரலாற்றில் தலைமை வகித்தவர்கள், கி. மு. 230 அளவில் கோலோச்சத் தொடங்கிய சாதவாகனர்* என்ற ஆந்திர வமிசத்தினரே. அவர்கள் அதற்குமுன் மௌரியருக்கு உட்பட்டுப் பணியாற்றினர் என்பது வரலாற்று அறிஞரின் ஊகம். மேற்கு தட்சிணத்தில் பிரதிஷ்டானத்தைத் தலைநகராகக் கொண்டு அமைந்த சாதவாகன அரசு, தட்சிணம் முழுவதையும் தழுவியதாக வளர்ந்து, வடபுலத்திலும் வியாபித்தது. மகதமும் அதனுள் அடங்கியதென்று கருதுவதற்கு இடமுண்டு. முதலாம் சாதகர்ணி, சுங்கர்களோடு போர்புரிந்து, தன் மேலாதிபத்தியத்தை உலகறியச் செய்யும் முறையில் அசுவமேதயாகம் செய்தான். விக்கிரமாதித்தியன் என்ற சாதவாகன வேந்தன், தன் தந்தை சகர்களிடம் பறிகொடுத்த உஜ்ஜயனியைத் திரும்பக் கைப்பற்றி, அந்த வெற்றியைக் கொண்டாடும் வகையில் கி. மு. 57ல் விக்கிரம சகாப்தத்தை ஏற்படுத்தினான் என்பது செவிவழிச் செய்தி; இந்த மரபுரைக்கு வரலாற்று அடிப்படை இருக்கக்

---

* சாதவாகனன் என்ற பெயரைப் பின்னாளில் சாலிவாகனன் என்று வழங்கினர். சாதவாகன அரசரில் 'சாதகர்ணி' என்ற பெயரைப் பூண்டவர் உண்டு. சாதகர்ணி என்பதைச் 'சதகர்ணி' என்ற வடமொழியின் திரிபாகக் கொண்டு, அதனை 'நூற்றுவர் கன்னர்' என்று மொழிபெயர்த்தார் இளங்கோ அடிகள். நூற்றுவர் கன்னர் வடபுலத்தையும் ஆண்டனரென்றும், அவர்கள் ஆரியரென்றும், சேரன் செங்குட்டுவனுக்குச் சிறந்த நண்பர்கள் என்றும், கனகவிசயர்களுக்கு எதிராகச் சேரன் போர் மேலெழுந்து வடபுலம் சென்றபோது, நூற்றுவர் கன்னர் உதவினரென்றும், சிலப்பதிகாரக்கதை அமைகிறது.

கூடும்.* ஏறத்தாழ ஐம்பது ஆண்டு சகர்களால் நலிவுற்ற சாதவாகன அரசு கௌதமிபுத்திர சாதகர்ணி ஆட்சியில் (கி.பி. 80—104) மறுமலர்ச்சி அடைந்தது. சகர், பஃலவர், யவனர் முதலியோரைத் தொலைத்துத் தட்சிணத்தோடு வட புலத்தின் பகுதிகளையும் ஆண்டான் அவன். அவனுடைய மகனின் நாணயங்கள் கீழைய கடற்கரையில் கூடலூர் வரையில் அகப்படுகின்றன. குஜராத்தை ஆண்ட சகர் களுடன் நிகழ்ந்த நீண்ட போர்களால் சாதவாகன அரசு கி.பி. மூன்றும் நூற்றூண்டு தொடங்குவதற்குமுன் மறைந்தது.

சாதவாகனர் ஆற்றிய பணி பெரிது. ஆரியர் வருகைக் குப்பின் வடபுலத்தில் உருவான ஆரிய-திராவிடக் கலப்பு நாகரிகமும், தென்புலத் திராவிட நாகரிகமும் மௌரியர் காலத்திலேயே உறவாடத் தொடங்கின என்பது உண்மையே. ஆயினும், கேந்திரமான தட்சிணப் பிரதேசத்தில் நீண்ட காலம் கோலோச்சிய ஆந்திர அரசர்களது ஆதரவில்தான், அந்த உறவு வளர்ந்து, இந்தியப் பண்பாட்டின் ஒற்றுமை உரு வானதென்பது தெளிவு. இந்தப் பின்புலத்தில், அவர்களால் இந்தியப் பேரரசு மரபு ஊற்றம் பெற்றதில் வியப்பில்லை.

## 6. சங்க நூல்கள் சாற்றும் செய்தி

இன்றுள்ள தமிழ் நூல்களில் தொன்மையானவை கி. மு. 50க்கும் கி.பி. 300க்கும் இடைப்பட்ட சங்ககாலத்தில் தோன் றியவையாகும். அவற்றிலேயே, இமயம் முதல் குமரிவரை யில் சக்கரவர்த்திக்கு எல்லை வகுக்கும் மரபு விளக்கம் பெற்றது.

---

* மேற்கு இந்தியாவில் சகர்களின் ஆட்சிக்குச் சாவு மணி அடித்தவன், இரண்டாம் சந்திர குப்தன் என்ற குப்தர் வமிச வேந்தனே. அவனும் விக்கிரமாதித்தியன் என்ற பட்டம் பூண்டவன். விக்கிரமாதித்தியனைப் பற்றி நாட் டில் வழங்கும் கதைகள், இரண்டு விக்கிரமாதித்தியர் களையும் இனங்காணுது ஒருவன் போலப் பேசுகின்றன.

*ஆரியர் துவன்றிய பேரிசை இமயம்
தென்னங் குமரியொடு ஆயிடை
மன்மீக் கூறுநர் மறந்தபக் கடந்தே

பொலிந்தான் நெடுஞ்சேரலாதன் என்பார் குமட்டூர்க் கண்ணனார்.

முனிவர் நிறைந்த இமயத்தைப் பெரும்புகழுக்குரியது என்றார் அவர். பரணரோ, கடவுள் வாழும் இமயம் என்று அதனைப் போற்றுவார். இமயத்துக்கும் குமரிக்கும் இடையிருந்த தொல்புகழ் வேந்தர்களையெல்லாம் வெஞ்சமரில் வென்று வாகை மாலை சூடினான் என்று சேரன் செங்குட்டுவனைப் பாராட்டுவார் பரணர் :

கடவுள் நிலைய கல்லோங்கு நெடுவரை
வடதிசை எல்லை இமய மாகத்
தென்னங் குமரியொடு ஆயிடை அரசர்
முரசுடைப் பெருஞ்சமம் ததைய, ஆர்ப்பெழச்
சொல்பல நாட்டைத் தொல்கவின் அழித்த
போர்அடு தானைப் பொலந்தார்க் குட்டுவ ! **

பாரத நாட்டுப் பல்வகை நிலங்களும் ஒன்றுபட்டு வழிபாடு செய்யும் வகையில், அறம் பேணித் தீமை களைந்து, நடு

---

* பதிற்றுப்பத்து 11.23.25 ஆரியர்: (இங்கு) முனிவர் துவன்றிய-நிறைந்த. பேரிசை-பெரும்புகழ் (உடைய). தென்அம்குமரி-தெற்கிலுள்ள அழகிய குமரி. ஆயிடை (இமயத்துக்கும் குமரிக்கும்) இடைப்பட்ட நிலத்திலுள்ள. மன்-மன்னருள். மீக்கூறுநர்-(செருக்கால்)தம்மை உயர்த்திப் பேசுவோரின்; மறம்-வீரம். தப-கெடும்படி. கடந்து-போரில் வென்று.

** பதிற்றுப்பத்து 43 : 6-11. கடவுள் நிலைய-கடவுள் நிலைபெற்றுள்ள (இமயம்). கல்லோங்கு-கல் உயர்ந்த. நெடுவரை-நெடிது உயர்ந்த மலை. சமம்-போர். ததைய-சிதைய. ஆர்ப்புஎழ-வெற்றி ஆரவாரம் எழ. தொல் கவின்-பழைய அழகு. போர்அடு-போரில் அழிக்கும் தானை-சேனை, பொலந்தார்-பொன்னால் அமைத்த மாலை (அணிந்த)

நிலை நழுவாது நல்லரசு புரிந்த சக்கரவர்த்திகள் என்று சேரர் மரபினை விதந்தோதுவார் குறுங்கோழியூர் கிழார் :

தென்குமரி வடபெருங்கல்
குணகுடகட லாஎல்லை
குன்றுமலை காடுநாடு
ஒன்றுபட்டு வழிமொழியக்
கொடிதுகடிந்து கோல்திருத்திப்
படுவதுண்டு பகலாற்றி
இனிதுருண்ட சுடர்நேமி
முழுதாண்டோர் வழிகாவல. *

அதேபோல் பாண்டியன் நெடுஞ்செழியனைப் பாராட்டு வார் மாங்குடி மருதனார் :

தென்குமரி வடபெருங்கல்
குணகுடகட லாஎல் லைத்
தொன்றுமொழிந்து தொழில்கேட்ப
வெற்றமொடு வெறுத்தொழுகிய
கொற்றவர்தம் கோன் ஆகுவை ! **

சங்க காலத்தை அடுத்து எழுந்த சிலப்பதிகாரம், இமயம் முதல் குமரிவரையில் வென்று ஆண்ட பெருமையைச் சங்க காலச் சோழ மன்னன் கரிகாலனுக்கும் கற்பிக்கிறது. மேலும்

---

* புறநானூறு 17. வடபெருங்கல் - இமயமலை. குணகுட கடலா எல்லை-கிழக்கிலும் மேற்கிலும் கடல் எல்லையாக. வழிமொழிய-வழிபாடு செய்ய. படுவது உண்டு-ஆறில் ஒன்ருகிய இறையை அனுபவித்து. பகல்-நடுநிலைமை. ஆற்றி-செய்து. சுடர்நேமி-ஒளிர்கின்ற ஆணைச் சக்கரம் (ஆக்ஞா சக்கரம் தடையின்றிச் செலுத்துவோனே சக் கரவர்த்தி). முழுது ஆண்டோர்-நிலம் முழுதும் ஆண் டோர். வழிகாவல-மரபின் காவலனே.

** மதுரைக்காஞ்சி 70-74. தொன்று-பழமை. தொழில்-ஏவல். வெற்றம்-வெற்றி. வெறுத்து-மிகுந்து. கொற்ற வர்-வெற்றி உடையோர், அரசர். கோன்-தலைவன். கொற் றவர்தம்கோன்-சக்கரவர்த்தி.

சேர சோழ பாண்டியர்களான முடிமன்னர் மூவரும் தெய்விக மான இமயத்தின் காவலர்களாக விளங்கினர் என்று செப்பும் அக்காப்பியம்.*

நெடுஞ்சேரலாதனும் செங்குட்டுவனும் நெடுஞ்செழிய னும் கரிகாலனும் பாரத தேசத்தின் சக்கரவர்த்திகளாகவிளங் கினர் என்பதற்குச் சரித்திர சான்று இல்லை. ஆயினும் பரதகண்டம் முழுமையும் ஒரு குடை நிழலில் ஒன்றுபட்டு உய்யவேண்டுமென்ற கருத்து தமிழர்களது உள்ளத்தையும் கொள்ளை கொண்டிருந்ததைப் புலவர்களது புகழுரை புலப் படுத்துகிறது.

## 7. குப்தர் பெருமை

இந்திய மக்களின் ஒற்றுமை ஆர்வமே, கி. பி. நான்காம், ஐந்தாம் நூற்றாண்டுகளில் குப்தர் சாம்ராஜ்யம் வலிவும் பொலிவும் பெறுவதற்கு அடிப்படையாய் அமைந்தது. சமுத்திர குப்தன், வடபுலத்தில் பல மன்னர்களை வென்று அழித்து, அஸ்ஸாம் முதல் பஞ்சாப் எல்லைவரையில் பரவிய பேரரசைப் படைத்தான். ராஜஸ்தானத்து அரசுகள் அவனது தலைமையை ஏற்றன. கிழக்குத் தக்கணத்தில் அவன் திக்கு விஜயம் செய்து காஞ்சி வரையில் வந்து பல்லவன் உள்பட பன்னிரண்டு அரசர்களை வென்றான். அவர்கள் வழங்கிய இறையை ஏற்றுக்கொண்டு, அவர்களே திரும்பத் திருமுடி சூடுவதற்கு இணங்கினான்.

சமுத்திர குப்தன் தன் சாம்ராஜ்ய பதவியை உறுதிப் படுத்தும் முறையில் அசுவமேத யாகம் செய்தான். ஆயினும், கூர்ஜரத்தையும் மாளவத்தையும் ஆண்ட சகர்களை வென்று தொலைத்தவன் அவன் மகன் இரண்டாம் சந்திர குப்தனே.

---

* முடிமன்னர் மூவரும் காத்தோம்பும் தெய்வ
வடபேர் இமய மலையில் பிறந்து
கடுவரல் கங்கைப் புனலாடிப் போந்த
தொடிவளைத் தோளிக்குத் தோழிநான் கண்டீர் !
சோணாட்டார் பாவைக்குத் தோழிநான் கண்டீர் !
என்பாள் தேவந்தி (வாழ்த்துக் காதையில்).

விக்கிரமாதித்தியன் என்ற பட்டம் பூண்ட இவன், தன் மகளை வடக்குத் தக்கணத்தின் வாகாடக வேந்தனுக்கு விவாகம் செய்வித்து, அவ்வரசின் நட்பினை உறுதிப்படுத்திக் கொண்டான். சந்திர குப்தன் காலத்தில் இந்நாடு போந்த சீன யாத்திரிகன் (பாஹியான்) நாட்டு அமைதியையும் அரசின் ஆக்கப் பணிகளையும் மக்களின் பண்பாட்டையும் விதந்தோதுகிறான்.

விக்கிரமாதித்தியன் மகன் குமார குப்தனும் பேரன் ஸ்கந்த குப்தனும் மக்கள் மேன்மேலும் நலமெல்லாம் துய்ப்பதற்கு ஆவன செய்தனர். இந்த குப்த சக்கரவர்த்திகள் நால்வரது காலத்தில், அனைத்துத் துறைகளிலும் பாரதம் முன்பின் கண்டறியாத வளர்ச்சியினை எய்தியது. எனவே, பாரத வரலாற்றின் பொற்காலமாக அதனைப் போற்றுவர் அறிஞர்.

கி. பி. 450 அளவில், மத்திய ஆசியாவிலிருந்து பரவிய ஹூணர்கள், ஐரோப்பிய ஆசிய நாகரிகங்களுக்குப் பேராபத்தாக விளங்கினார்கள். அட்டிலாவின் தலைமையில் சென்ற ஹூணர்கள். ரோம சாம்ராஜ்யத்தை அழித்தனர். ஆனால் பாரதத்தின்மீது படையெடுத்த ஹூணர்களை முறியடித்துத் துரத்தினான் ஸ்கந்த குப்தன். படையெடுத்து வந்தவர்களுக்கெல்லாம் பணிந்து போவதே பாரத வரலாறு என்ற கூற்றுக்கு ஏற்ற மறுப்பாக உள்ளது அவனது பெருஞ்சாதனை. நூற்றுண்டுக்குப் பின்னர் ஹூணர்கள் மீண்டும் பஞ்சாபினுள் புகுந்தபோது, அவர்களது வேகம் ஒடுங்கிவிட்டது. குப்தர் அரசு குலைந்திருந்த நிலையில், மிகிரகுலன் என்ற ஹூணன் 525 அளவில் காந்தாரம் முதல் மத்திய இந்தியா வரையில் பரவிய அரசினை நிறுவினான் என்பது உண்மையே. ஆனால் அதன்பின் அவனை வென்றான் மாளவ மன்னன் யசோதர்மன். கங்கைச் சமவெளியில் மிகிரகுலனை நரசிம்ம குப்தன் முறியடித்தானென்று மொழிவான் ஹர்ஷன் காலத்துச் சீன யாத்திரிகன் ஹியூன்சாங். இவ்வாறு, ஹூணரால் ஏற்பட்ட ஆபத்து நீங்கியது. மேலும் ஹூணரின் வழித்தோன்றல்கள், பின்னாளில் க்ஷத்திரிய மரபின் பெருமைக்குரிய ராஜபுத்திர வமிசங்களாக விளக்கம் பெற்றனர்.

## 8. ஹர்ஷனுக்குப் பின்

குப்தராட்சியின் குலைவுக்குப் பின்னர், ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில், ஹர்ஷன் (607-647) பேரரசு அமைத்தான் வடபுலத்தில். ஆனால் நருமதை நதிக்கரையில், சாளுக்கிய வேந்தன் இரண்டாம் புலிகேசியிடம் தோல்வியே கண்டான் ஹர்ஷன். ஹர்ஷனுக்குப்பின் வடபுல வரலாறு, பல அரச வமிசங்களின் போட்டியும் பகையும் போர்களுமாக ஒடுங்கியது. வங்கத்தின் பாலர்கள், கூர்ஜரத்தின் பிரதிஹாரர்கள் தக்கணத்தின் ராஷ்டிரகூடர்கள் ஆகியோர் வடபுலத்தில் பேரரசு காண முயன்று மோதியதைப் படிக்கிறோம். இஸ்லாத்தின் மூலம் எழுச்சி பெற்று, ஸ்பெயின் முதல் சீன எல்லை வரையில் பல நாடுகளை வென்ற அரேபியர்கள், கி. பி. 712-ல் சிந்துப் பிரதேசத்தை வென்றனர். அதன்பின் நூற்றாண்டுக் காலம் அவர்கள் தொடுத்த தாக்குதல்களை எல்லாம் முறியடித்த பெருமை ராஜபுத்திரர்களான பிரதிஹாரர்களைச் சாரும். ஆனால் பிரதிஹாரர்-ராஷ்டிரகூடர் பகையால், இரு அரசுகளும் நலிவுற்றன; ஆப்கானிஸ்தானத்தில் கஜினி சுல்தான்கள் பாரத நாட்டுக்குப் பகையாக முளைத்திருந்ததை அவர்கள் உணரவில்லை. 1001க்கும் 1027க்கும் இடையே கஜினி மாமூத் 17 தடவை இந்தியாவில் புகுந்து சூறையாடினான்; மாளிகைகளும் ஆலயங்களும் அவனது அட்டூழியத்தால் நாசமாயின. கன்னோசி நகரமும் யமுனைக்கரை மதுரையும் கத்தியவாரில் சோமநாதர் ஆலயமும் அழிவுக்கும் கொள்ளைக்கும் உள்ளாயின. அதன்பின்னும் 1192 வரையில் இந்தியா சுதந்திரத்தை இழக்கவில்லை. ஆனால் மாமூதின் படையெடுப்புகளிலிருந்து அது எந்தப் படிப்பினையும் கற்கவில்லை. அதன் உயிராற்றல் வடபுலத்தில் நசித்திருந்தது. 12ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில், வடபுலத்தின் மூன்று முக்கிய வேந்தர்களான ஜயச்சந்திரனும் பிரதிவிராஜனும் பரமர்த்தி தேவனும் ஒருவரையொருவர் இகலி நின்றனர். எனவே, 1192ல் பிரதிவிராஜனை மகமது கோரி

முறியடித்ததைத் தொடர்ந்து, டெல்லியில் சுல்தான்களின் ஆட்சி அமைந்தது. பாரத பேரரசுக்குத் தாமே உரிமையாளர்களென்றனர் சுல்தான்கள். ஆயினும் அலாவுதீன் கில்ஜியும் (1296-1315) முகம்மது துக்ளக்குமே (1325-1351) இந்தியப் பேரரசு காணும் முயற்சியில் குறிப்பிடத்தக்க வெற்றி கண்டனர். துக்ளக்குக்குப் பின்னர் சுல்தானுட்சி நிலை குலைந்தது. 1398-99-ல் தைமூர் வந்து நிகழ்த்திய அட்டூழியம் டெல்லி சுல்தான்களது ஆற்றலின்மைக்கு ஓர் அளவு கோல்.

## 9. தென்புலத்தின் சாதனையும் சோதனையும்

ஆனல் குப்தர் காலத்துக்கு பிறகுப் பாரதப் பண்பாட்டின் உயிராற்றல் திராவிடரால் விளக்கம் பெற்றது. தக்கணத்தில் முதலில் சாளுக்கியர்களும், அடுத்து ராஷ்டிரகூடர்களும் மீண்டும் சாளுக்கியர்களும் பேரரசு கண்டனர். தமிழகத்தில் பாண்டியர்களும் பல்லவர்களும் ஓங்கி உயர்ந்தனர். கி. பி. 870லிருந்து சோழர் அரசு புத்துயிர் பெற்று, சுமார் 300 ஆண்டுகள், தமிழகம் சோழ ராஜ்யமாகவே விளங்கியது, இந்தப் பெருமையின் சிற்பியே இராஜராஜன். அவன் மகன் இராஜேந்திரன், துங்கபத்திரையைக் கடந்து வந்த சாளுக்கியனை முறியடித்ததோடு, கலிங்கத்தையும் வென்று, கங்கைக்கரை வரையில் படையெழுச்சி நடத்திக் கங்கை கொண்ட சோழனுனன். ''அலைகடல் நடுவுட் பல காலம் செலுத்தி''த் தென் கிழக்காசியாவில் வலிமையோடு திகழ்ந்த ஸ்ரீவிஜய அரசை வென்றுன் அவன்.

தென்புல அரசுகளும் தமக்கிடையே ஓயாது போர் நிகழ்த்தின. 12ஆம் நூற்றுண்டில் தக்கணத்தில் சாளுக்கிய ஆட்சி ஒழிந்து, யாதவர், காகதீயர், ஹொய்சளர் ஆகிய மூன்று வமிசங்களின் அரசுகள் அமைந்தன. 13ஆம் நூற்றுண்டில் சோழர் ராஜ்யத்துக்கு இறுதி சூழ்ந்து, அதனைப் பங்கிட்டுக்கொண்டனர் பாண்டியரும் ஹொய்சளரும். இதன்பின், அலாவுதீன் கில்ஜியின் தளபதி மாலிக் காபூர் தென்னக அரசுகளைப் புறங்கண்டு அளப்பரிய செல்வத்தைக் கொள்ளையடித்துக்கொண்டு சென்றுன். அதன்பின் முகம்மது துக்ளக்

கின் படைகள் ஓரங்கல் நாட்டை வென்று, ஹொய்சளரின் துவாரசமுத்திரத்தை அழித்துப் பாண்டிய நாட்டையும் வென்று அடிமைப்படுத்தின.

ஆனால் அப்போதும் தலைவணங்கவில்லை தென்னகம். 1336-ல் தோன்றிய விஜயநகர அரசு, தென்னாட்டின் பெரும் பகுதியைத் தழுவியதாய் வளர்ந்தது. அது எய்திய சீர் சிறப்புக்களையெல்லாம் நேரில் கண்ட போர்ச்சுக்கீசிய யாத்திரிகரும் பிறரும் அதனைப் போற்றிப் புகழ்வர்.

சுமார் 250 ஆண்டுகள், வழிவழிவந்த பண்பாட்டின் காவலனாக விளங்கியது விஜயநகர சாம்ராஜ்யம். அதன் சக்கரவர்த்திகள் தம்மைச் சாளுக்கியர்களது வழித்தோன்றல் களாக வருணித்துக் கொண்டனர். இதிகாசங்களும் புராணங் களும் போற்றும் சம்ராட்*டுகளின் மரபுரிமையாளர்களாகத் தம்மைக் கருதியதால், தமது தலைநகருக்கு ஹம்பெ-ஹஸ்தின வதி என்று பெயரிட்டனர். சேது முதல் சுமேரு** வரையில் பரவிய தேசத்தின் அதிபர்கள் தாமே என்றும், இஸ்லாமியர் ஆட்சியிலுள்ள பகுதிகள் மீட்கப்பெற வேண்டிய பாரதம் என்றும் அவர்கள் எண்ணினார்கள்.

ஒரு நாடு, ஆபத்திலிருந்து தன் பண்பாட்டைப் பாது காக்கும் பணியில் ஈடுபடும்போது, அது தன் வழிவழி உடைமை அனைத்தையும், நல்லன, அல்லன என்று இனங் காணாது, பாதுகாக்க முற்படுவது இயல்பு. பழமை மோகம் தேசிய நெறியாகிறது. உள்ளதைக் காத்து நிற்பதே தேசியத் தன்மானத்தை நிலைநிறுத்தும் வழி என்ற மனப்பான்மை ஓங்கும்போது, புதுமையைப் பெரும்பாலும் புறக்கணிப்பதும் அஞ்சுவதும் வெறுப்பதுமே நாட்டு நடப்பாகும். சீர்திருத்தம் தேவையென்றாலும், ஆபத்து நீங்கிய பின்பே அதனைப்பற்றிச் சிந்திக்கவேண்டும் என்ற எண்ணம் வளரும் சூழல் அது. இந்தக் குறை விஜயநகரப் பேரரசில் அமைந்தது; பின்னாளைய மகாராஷ்டிரப் பேரரசிலும் இருந்தது. எனவே, காலத்துக்கு ஏற்ற மாற்றம் கண்டே தன் ஆத்ம சொரூபத்தை ஒளிரச்

---

* சம்ராட் - ஏகச் சக்ராதிபதி.

** சுமேரு - மேரு மலையின் ஒரு சிகரம் (புராணச் செய்தி).

செய்த பாரத நாகரிகம், வளர்ச்சிக்குத் தடையான வழக்க ஒழுக்கங்களையும் பழமை வேட்கையின் பெயரால் பேணியது. வடபுலத்தைப் போலவே தென்புலத்துக்கும் இந்தக் குறை இருந்ததால்தான், விஜயநகரப் பேரரசு யுகமாற்றத்துக்குத் தேவையான வரலாற்றுப் பணியைச் சாதிக்க முடியாது போனது. ஆயினும், தொடர்பு முறியாத தொன்மையான பண்பாட்டைப் பாதுகாத்த அதன் பணி பெரிது. அதுவே, பின்னுளில், வரலாற்றில் வேரூன்றி நின்று யுகமாற்றம் காண்பதற்கு வாய்ப்பு அளித்தது எனலாம்.

## 10. அக்பரும் ஔரங்கசீபும்

1526-ல் பானிப்பட்டுப்போரில் வாகைமாலை சூடி மொகலாயர் ஆட்சியை டெல்லியில் நிறுவினுன் பாபர். அவன் பேரன் அக்பர், வடபுலம் முழுவதையும் தக்கணத்தின் ஒரு பகுதியையும் தன் ஆட்சியில் ஒன்றுபடுத்தினுன். ஏமாந்த காலத்தில் ஏற்றம் கொண்ட அன்னிய ஆதிக்க வெறியர்களின் தலைவனுகத் தன்னைக் கருதினுனல்லன் அக்பர். மாருக, அனைத்து மக்களுக்கும் தந்தையாக அமைய வேண்டுமென்று அவன் எண்ணினுன். இஸ்லாமைத் தழுவிய வேந்தர்களில் பலரும் போற்ருத பண்பாடு இது. இந்துக்கள் செலுத்திய ஜஸியா, யாத்திரைவரி ஆகியவற்றை நீக்கினுன் அக்பர். இஸ்லாமியரும் இந்துக்களும் கலப்புமணம் செய்து கொள்வதற்கு ஊக்கம் தந்தான். அவனுடைய இந்து மனைவியின் வயிற்றில் உதித்த சலீமைத் தன் வாரிசாக ஏற்றுக் கொண்டான். பாலிய விவாகம், உடன்கட்டை ஏறுதல் ஆகியவற்றைச் சட்டவிரோதமாக்கினுன்; விதவை மணத்துக்கு ஊக்கம் தந்தான். இந்துக்களில் பலர், அரசியலில் பொறுப்புள்ள பதவிகளை வகித்தார்கள். ஆக, கண்மூடித்தனமான காழ்ப்புக்கும் வெறிக்கும் இடம் தராத விவேகியாக, மக்களின் மத நம்பிக்கைகளைப் புண்படுத்தாத சீலனுக, இந்து-முஸ்லீம் ஐக்கிய அடிப்படையில் ஐக்கிய இந்தியாவை அமைக்கும் இலட்சியவாதியாகப் பணியாற்றினுன் அக்பர். ஆனுல் அக்பர் அமைத்தகட்டடத்தைஅழித்தான் ஔரங்கசீப்.

பிற சமயத்தினரை கொடுமைப்படுத்தும் வெறியால், ராஜ புத்திரர், சீக்கியர், மராத்தியர் முதலியோரின் பகையை விசிறிவிட்டான். காசி, வடமதுரை, சோமநாதபுரம் ஆகிய வற்றின் ஆலயங்களை அழித்தும், ஜஸியாவரியை விதித்தும், இந்துக்களைப் பலவந்தமாக மதமாற்றியும், மதம் மாற மறுத்த டெக் பகதூர் என்ற சீக்கிய குருவுக்கு மரண தண்டனை விதித்தும், வெகுஜனப் பகைக்கு இலக்காகி, மொகலாயப் பேரரசுக்கு இறுதி சூழ்ந்தான் ஔரங்கசீப். அவன் இறந்த சில ஆண்டுகளில் சாம்ராஜ்யம் சிதறுண்டது. 1739-ல் நாதர்ஷா படையெடுத்தபோது, மொகலாயப் படைகள் போரில் தோற்றோடின. ஆக, அக்பரின் அறிவுத் தெளிவாலும் தீர்க்க தரிசனத்தாலும் வடபுலமும் தக்கணத் தின் பெரும்பகுதியும் ஆட்சி அமைப்பிலும் அரசு மொழி யிலும் மக்களின் உறவு மொழியிலும் ஒற்றுமை கண்டு முன்னேறிய நிலைக்கு உலைவைக்கப்பட்டது.

ஔரங்கசீப் காலத்தில் சத்திரபதி* சிவாஜியின் தலைமை யில் சுயாட்சி கண்டது மகாராஷ்டிரம். வழிவழி வந்த பேரரசு மரபுக்கு உரிமையாளனாகத் தன்னைக் கருதினான் சிவாஜி. மொகலாய சாம்ராஜ்யம் சின்னபின்னமான பின்னர், வட புலத்தில் மகாராஷ்டிரர்களது சக்தி பெருகியது. மொகலாயப் பேரரசின் மரபினை மதித்த மகாராஷ்டிரர்கள், பெயரளவில் மொகலாயச் சக்கரவர்த்தியாக இருந்த இரண்டாம் ஷா ஆலமைத் தம் ஆதரவில் வைத்திருந்தனர்.

## 11. ஆங்கிலேயர் வெற்றி

ஆயினும், நாட்டு வேந்தர்களிடையே ஒற்றுமை இல்லை. மராத்தியத் தலைவர்களிடையிலும் ஐக்கியம் இல்லை. பகையும், பொறுமையும், வீண்பெருமை ஆரவாரமும், உலகப் போக்கை உணராத பேதைமையும், பழமைமோகமும் ஆட்சியாளர்களை ஆட்டிப்படைத்தன. மறுபுறத்தில், வணிகத்

---

* சத்திரபதி-குடையை உடைய தலைவன்; அதாவது அரசன். (சத்திரம்-குடை)

திற்கென்று இந்நாட்டுக்கு வந்த ஆங்கிலேயரோ, கடலாதிக் கமும் அரசியல் சூழ்ச்சித்திறனும் படைக்கலச் சிறப்பும் ராணுவ சாகசமும் பெற்றுச் சிறந்தனர். அவர்கள் நாட்டுக்குக் கேடு சூழ்வார்கள் என்பதையும் புரியாது மெத்தனமாயிருந்தனர், இந்திய அரசர்கள்; தமது பரஸ்பரச் சண்டைகளுக்கு ஆங்கிலேயரைப் பயன்படுத்துவதாகவே அவர்கள் மயங்கினர். ஆபத்து விளங்கிய பிறகும் அதை எதிர்த்து நிற்கும் தெளிவும் ஒற்றுமையும் ஏற்படவில்லை. எனவே பிரிட்டன் வெற்றி மேல் வெற்றி பெற்றது. இந்தியாவில் கொள்ளை அடிக்கப்பட்ட செல்வம், பிரிட்டனில் தொழிற் புரட்சி நிகழ்வதைச் சாத்தியமாக்கியது. பிரிட்டனின் எந்திரத்தொழில் வளர்ச்சி, பாரதத்தின்மீது அது தொடர்ந்து ஆதிக்கம் வகிப்பதற்கு வாய்ப்பு அளித்தது.

ஆங்கிலேயரின் கிழக்கிந்திய கம்பெனியும் இந்தியப் பேரரசு மரபின் செல்வாக்கைப் புறக்கணிக்கவில்லை. 1803ல் பிரிட்டிஷ் படைகள் டெல்லியில் நுழைந்தபோது, மொகலாய வமிசத்தை அரியணையிலிருந்து அகற்றவில்லை. மாறாக, இந்தியப் பேரரசு மரபுக்குச் சின்னமாகத் திகழ்ந்த மொகலாய பாதுஷாவைத் தமது பேராதிக்கத்துக்கு மூடு திரையாக ஆங்கிலேயர்கள் பயன்படுத்தினார்கள்.

1857-ல் முதலாம் இந்திய விடுதலைப்போர் மூண்ட போதும், மீரத் சிப்பாய்கள் இயல்பூக்கத் தெளிவோடு யமுனையைக் கடந்து சென்று, பாரதத்தின் பரம்பரைத் தலைநகரான தில்லியை விடுவித்து, மொகலாய மரபுரிமை யாளரான பகதூர்ஷாவை இந்தியச் சக்கரவர்த்தியாகப் பிரகடனஞ் செய்தார்கள். ''கணநேரத்தில் மீரத் சிப்பாய்கள் தலைவனையும் கொடியையும் லட்சியத்தையும் அடைந்து விட்டனர். சிப்பாய் கலகம் புரட்சிப் போராக மாறியது'' என்றார் சார்லஸ் பால்.

புத்தெழுச்சி பெற்ற பாரத சமுதாயம், புதிய சூழலுக் கேற்ற தெளிவுடன், பேரரசுமரபின் வழியில் ஐக்கிய இந்தியக் குடியாட்சியை லட்சியமாகக் கொண்டு விடுதலைப் போரில் விந்தை நிகழ்த்தியது சமீபகால வரலாறு.

## 12 ஒற்றுமையே இதய ஒலி

ஆக, வாழ்வாவது மாயம், மண்ணாவது திண்ணம் என்று, பாரதம் மறுமையில் கருத்தூன்றி அரசியலை உதாசீனம் செய்தது என்று கூறுவதற்கு வரலாற்றுச் சான்று இல்லை. வியத்தகு பணியாற்றிய வீரர்களையும் வேந்தர்களையும் ராஜ தந்திரிகளையும் கண்ட நாடு இது.

ஆயிரமாயிரம் ஆண்டுகளாக, இமயம் முதல் குமரி வரையில் பரந்துகிடக்கும் பாரத நாட்டை ஓர் ஆட்சியில் ஒன்றுபடுத்த வேண்டுமென்ற லட்சியம், கோடானுகோடி குடிமக்களின் இதய ஒலியாக இருந்து வந்திருக்கிறது. அதற்கான முயற்சிகள் திரும்பத் திரும்ப நிகழ்ந்திருக்கின்றன.

மௌரியர், சாதவாகனர், குப்தர், ராஷ்டிரகூடர், விஜயாலய சோழர், விஜயநகர வேந்தர், மொகலாயர் முதலியோரின் பேரரசுகள் நிலைகொண்டு தேசிய ஒற்றுமை லட்சியத்தைப் பேணியிருக்கின்றன. கனிஷ்கன், ஹர்ஷன், பாலர், மராத்தியர் முதலியோரது பணியும் குறிப்பிடத் தக்கது. சக்கரவர்த்தி மரபின் தொன்மையும் பெருமையுமே வழிவழி வந்த இந்திய ஒற்றுமை உணர்வுக்குச் சான்று. தேசப்பரப்பையும், நாடு, காடு, மலை, பாலை முதலிய பல வகை இயற்கை அமைப்புக்களையும், விதவிதமான தட்ப வெப்ப நிலைகளையும், தொழிற்புரட்சிக்கு முற்பட்ட காலத்துப் போக்குவரத்துச் சிரமங்களையும் கணக்கிலெடுத் தால், இத்துறையில் இந்திய வரலாறு வேறு எந்த நாட்டு வரலாற்றுக்கும் இளைத்ததல்ல என்றுவது கூறலாம். ஆனால் இந்தக் கூற்றுக்கு மறுப்பாக உள்ளது சீனத்தின் சரித்திரம்.

## 13. இந்தியாவும் சீனமும்

இந்தியாவைப் போலவே சீனமும் பண்டொழிந்த நாட் களிலேயே பண்பாட்டைப் படைத்து, இடைமுறிவு இல் லாது பாதுகாத்து வந்தது. இரண்டுமே பெரிய நாடுகள். பாரதத்தைப் போலவே சீனமும் இயற்கை அமைப்பிலும்

சீதோஷ்ண நிலையிலும் பற்பல வேறுபாடுகளை உடையது தான். பண்டைக்காலத் தொழில் நுட்பத் தரக்குறைவால் போக்குவரத்து முதலான துறைகளில் இரண்டுக்குமே சிர மங்கள் இருந்தன. ஆயினும், ஓர் ஆட்சியில் வரலாற்றைப் படைக்கும் லட்சியத்தில் இந்தியர்களைவிடச் சீனர் அடைந்த வெற்றி பெரிது.

கிறிஸ்து பிறப்பதற்கு 200 ஆண்டுக்கு முன்பு அனைத்துச் சீன அரசு மலர்ந்தது. 400 ஆண்டு ஐக்கியமாகவிருந்த தேசம், அடுத்த 400 ஆண்டுக்காலம் உள்நாட்டுப் பிளவா லும் வெளியார் படையெடுப்பாலும் குலைந்து குழம்பிக் கிடந் தது. மீண்டும் சுமார் 300 ஆண்டுகள் ஓராட்சியில் உயர்ந்த நாடு திரும்பவும் பல அரசுகளின் பரஸ்பர பகை யால் குலைந்தது; அதனைத் தொடர்ந்து மூன்று அரசுகள் அமைந்தன. 1214ல் செங்கிஸ்கான் (மங்கோலியத் தலை வன்) பீகிங்கைக் கைப்பற்றினான். மங்கோலியரது படை யெழுச்சியின் விளைவாக 1280ல் கூப்ளைக்கான் என்ற மங் கோலியன் சீனத்தின் சக்கரவர்த்தியானான். அவன் நிறுவிய யுவான் வமிசம் 1368 வரையில் சீனத்தை ஆண்டது. 1368-ல் மங்கோலிய அரசை அழித்த சீனர்கள் மிங் வமிசத்தின் ஆட் சியைக் கண்டனர். 1644ல் மஞ்சுக்கள் மிங் வமிசத்தை ஒழித்துத் தமது ஆட்சியை நிறுவினர். மஞ்சு ஆட்சி 1912 வரை நீடித்தது: ஆனால் 1839ல் மூண்ட முதல் அபினிப் போரைத் தொடர்ந்து, மேலைய ஏகாதிபத்தியவாதிகளின் மறைமுக ஆதிக்கம் சீனத்தில் நிலைகொண்டது. ஆக, கி. மு. 200லிருந்து கி. பி. 1800 வரையிலுள்ள 2,000 ஆண்டுகளில் 1,200 ஆண்டாயினும் ஒரு குடை நிழலில் வாழ்ந்தது சீனம். ஆனால் இத்தகைய நற்பேறு பாரதத்துக்கு வாய்க்கவில்லை.

பேராற்றல் உடைய வேந்தர்களே பாரதத்தின் பேரரசு களைப் படைத்துக் காத்தனர். சீனத்திலோ, ஆற்றலற்றவர் களது ஆட்சியிலும், பெரும்பாலும், ஒற்றுமை குலையவில்லை.

பாரதத்தில் பல அரசுகள் திரும்பத் திரும்பத் தோன் றியதற்கு இயற்கைப் பிரிவுகளைக் காரணம் காட்டுவர் சிலர். சிந்துச் சமவெளி, ராஜபுதனப் பாலைவனம், கங்கைச் சம வெளி, மத்திய இந்திய மேட்டு நிலம், தக்கண பீடபூமி,

கிழைய மேலைய கடலோரச் சமவெளிகள் ஆகிய விதவித மான நில இயல் பிரிவுகள் அடுத்தடுத்து அமைந்த சூழலில், அரசியல் ஐக்கியம் காண்பதற்கு, அந்நாளைய பிற்பட்ட போக்குவரத்து நிலையில், சிரமம் இருந்ததென்பது உண் மையே. ஆனால் இது சமாளிக்க முடியாத சிரமம் அல்ல. சீனம் இத்தகைய இடையூற்றைக் கடந்தே நிலையான ஐக்கிய அரசைக் கண்டது. பாரதத்திலும் பேரரசுகள் மலர்ந்த ஆண்டுகளில், நிலஇயல் பிரிவுகளின் தன்மைகள் குறுக்கே நிற்கவில்லை. பல இயற்கைப் பிரிவுகளைத் தழுவிய சாம் ராஜ்யங்களையே மௌரியர், குப்தர், வாகாடகர், விஜயா லய சோழர், மொகலாயர் முதலானோர் படைத்துக் காத்தனர். பேரரசுகள் நலிவுற்ற நாட்களில், எந்த இயற்கைப் பிரிவிலும் ஓர் அரசு அமையவில்லை: மாறாக, ஒவ்வொரு இயற்கைப் பிரிவிலும் பல அரசுகள் பூத்தன.

சீனத்தில் அரசியல் ஒற்றுமைக்கு அரண் செய்வதில் அதிகார வர்க்கம் வழிவழியாக வகித்த பாத்திரம் பெரிது. முறையாக நடைபெற்ற பரீட்சைகளில் தேறியவர்களே நிர்வாகப் பொறுப்புக்களில் அமர்ந்தனர். கன்பூஷியஸ்* வகுத்த அறநெறிகளில் ஈடுபாடு உடையராக அவர்களை உருவாக்குவதற்கு அனைத்து முயற்சிகளும் செய்யப்பெற் றன. ஏட்டுப் படிப்புக்குச் சிறப்பு அளித்த ஏற்பாட்டில், அதிகாரிகள் பழமைமோகமும் புலமைக் கண்டிப்பும் நூல் விதிமுறை வெறியும் கொண்டிருத்தல் இயல்பே. இந்தக் குறை இருந்தபோதிலும், சீன அதிகாரிகள் அறிவாற்றலும் அறஉணர்வும் உடையோராக விளங்கினர். தகுதி பெற்ற வர்களே அனுபவ அடிப்படையில் பதவி உயர்வு அடைந் தனர். இந்தச் சூழலில், அரசன் அக்கறையோ ஆற்றலோ இல்லாதவனாயினும், அரசு முறையாக நடைபெற்றது.

வலைப்பின்னல் போன்றமைந்த இத்தகைய அதிகார

---

* கன்பூஷியஸ் (Confucius கி. மு. 551-479). அறநெறிப் பணியில் ஈடுபட்ட சீனப் பெரியார். சீனப் பண் பாட்டை உருவாக்கியதில் இவரது கருத்துக்களின் பாத்திரம் பெரிது.

வர்க்கம் பாரதத்தில் நிலைகொண்டிருந்தால், நாட்டின் ஒற்றுமையைப் பேணுவதில் அது பெருந் தொண்டாற்றி யிருக்கும். ஆனால், அது அமையாததே ஒற்றுமை குலைவுக்குக் காரணமென்பது, குதிரைக்கு முன்னால் வண்டியைப் பூட்ட முயல்வதற்கொப்பாகும்.

நிர்வாக அமைப்பின் தேவையைத் தொல்லோர் நன்கறிந் திருந்தனர். அதிகார வர்க்கத்தை எப்படி உருவாக்க வேண்டு மென்பதைப் பற்றி அர்த்தசாத்திரத்தில் விரிவாகவும் விவர மாகவும் ஓதுகிறான் சாணக்கியன். மௌரியர் பேரரசின் ஆட்சி முறையும் அந்தக் கருத்துக்கேற்ற காட்சியாக அமைந்ததை விதந்தோதுவர் வரலாற்றுப் புலவர்.

குடிமக்கள் அச்சமில்லாத அறவாழ்வு நடத்துவதற்கு அரணாகக் குப்தர் ஆட்சிமுறை செவ்வனே செயலாற்றிய தென்று கூறுவான் பாஹியான். விஜயாலயன் வமிசத்துச் சோழர் பேரரசில் நிர்வாகம் நன்கு அமைந்து திறம்பட வினையாற்றியதற்குச் சான்றுகள் பல உள. அதிகாரிகளைத் தேர்ந்தெடுப்பதற்கான பரீட்சை முறையினைப் பாரதம் பயன்படுத்தவில்லை; எனினும் தகுதி உடையவர்களே பெரும் பாலும் பொறுப்பு வகித்தனர் என்று ஊகிக்க இடமுண்டு. ஆனால் அமைதியான சூழலில்தான் அதிகார வர்க்கம் வேரூன்றி வலிவும் பொலிவும் பெறமுடியும். அரசுகளி டையே பல போர்களைக் கண்ட பாரத வரலாற்றில், நிர்வாக அமைப்பு வேரூன்றித் தளிர்த்துக் கிளைத்துப் பருத் துப் படர்ந்து விழுதுகள் விட்டு, ஊழிக்காற்றே அனைய அர சியல் குழப்பத்துக்கும் ஈடுகொடுக்க வல்லதாகச் சிறப்பதற்கு இடமில்லாது போனது.

## 14. போர்முறை மரபால் விளைந்த கேடு

சக்கரவர்த்தியைக் கண்கண்ட தெய்வமாகப் போற்று வது சீனமரபு. அவனைத் தேவபுத்திரன் (Son of Heaven) என்றனர். இந்த வழிபாட்டுக் கொள்கை தேசிய ஒற்று மைக்கு உறுதி தேடியது. பாரதம் அந்தக் கொள்கையைத் தழுவவில்லை. ஆனால் அரசியல் ஒற்றுமை நிலை கொள்வ

தற்கு உலைவைத்தவற்றில் தலைமையானது நமது போர் முறை மரபேயாகும். அரியணை ஏறியவன் அடுத்த நாட்டின் மீது போர் தொடுப்பதை விதியாக்கியது நீதிநூல். வீரத்தை விளக்கம் செய்து புகழ் தேடுதலே அரசலட்சணம் என்று கருதப்பெற்றது. ''நால்வகைப் படைகள் எஞ்ஞான்றும் விழிப்புடன் இருக்க வேண்டும். அரசன் தன் வில்திறமை புகழுடன் விளங்கச் செய்ய வேண்டும்'' என்று மொழியும் மனு தரும சாஸ்திரம்*. ''ஒருவரை ஒருவர் கொல்ல நினைத்துச் செய்யும் போரில் புறங் கொடாமல் அமர்செய்து மாள்வோர் சுவர்க்கம் புகுவர்'' என்றும் அது இயம்பும்.**

மூப்பாலும் பிணியாலும் மாயாது, சமர்க்களத்தில் வீழ்ந்தோரே துறக்கம் புகுவர் என்று தமிழகத் தொல்லோரும் இசைத்தனர். நோயால் இறந்தோனது உடம்பை, நான்மறை அந்தணர் போற்றும் தருப்பைப் புல்லில் கிடத்தி, வாளால் கூறு செய்து, ''இவன் வீர சுவர்க்கம் எய்துக.'' என்று கடவுளை வேண்டி அடக்கம் செய்தலே விதி என்னும் புறநானூறு (93).

ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்.
புதுவது அன்று, இவ்வுலகத்து இயற்கை*** (புற நா 76)
என்றார் இடைக்குன்றூர் கிழார்.

சோழன் பெருந்திருமா வளவனும் பாண்டியன் பெருவழுதியும் ஒருங்கிருந்ததைக் கண்ட காரிக்கண்ணனார், கண்ணனும் பலராமனும் போல் அவர்கள் ஒன்றுபட்டிருப்பதைப் பாராட்டியது மெய்யே. ஆனால் உலகை வெல்வதற்கு அந்நட்பு பயன்பட வேண்டுமென்றே ஆசி கூறினார் அவர்:

---

* அத்தியாம் 7 சுலோகம் 102

** அத் 7: 89

*** அடுதல் வெல்லுதல், அழித்தல், தொலைதல்-அழிதல் புதுவது—புதிது

ஒருவிர் ஒருவிர்க்கு ஆற்றுதிர்: இருவீரும்
உடன்நிலை திரியிர் ஆயின், இமிழ்திறைப்
பௌவம் உடுத்தஇப் பயங்கெழு மாநிலம்
கைஅகப் படுவது பொய்யா காதே

என்று உரைத்து,

இன்றே போல்கநும் புணர்ச்சி; வென்றுவென்று
அடுகளத்து உயர்கநும் வேலே ...* (புறநா. 58)

என்று வாழ்த்தினர்.

இந்தப் போர் நெறியினைப் பாரத அரசுகள் விடாப் பிடியாகத் தழுவியிருந்தால், நாளாவட்டத்தில் ஏனைய அரசுகளை அழித்துவிட்டு ஓர் அரசு நிலைகொள்வதற்கு வாய்ப்பு ஏற்பட்டிருக்கும். பிம்பிசாரனும் அஜாதசத்துருவும் மகாபத்ம நந்தனும் இவ்வழியிலேயே பேரரசைத் தோற்றுவித்தனர். சந்திரகுப்த மௌரியன் சாணக்கியனின் உதவியுடன் பாரத நாட்டுச் சக்கரவர்த்தியாகச் சிறந்தது இப்பாதையைப் பின்பற்றியே. ஆனால் மாற்று வழியைக் கண்டான் சந்திர குப்தனது பேரன். ''தோற்றவர் துயரில் நலிவதால், வெற்றியில் விளைவது வெறுப்பே'' என்று பௌத்தம் புகன்றதைப் புரிந்து, அமைதிக்காகப் பாடுபட்டான் அசோகன். அவனுடைய சாத்விக நெறியால் பயனுண்டாகியது. இலங்கையும் தமிழக அரசுகளும் அசோகனுடன் நட்புக்கொண்டு, தருமத்தின் வெற்றிக்காக ஒத்துழைத்தன. ஆனால் போரை வெறுப்பவரும் தற்காப்புப் பொறுப்பைப் புறக்கணிக்க முடியாது. அசோகனும் தற்காப்புப் பொறுப்பை உணர்ந்தே இராணுவத்

---

* ஆற்றுதிர் — உதவுவீர். உடன்நிலை — நட்பு.
இமிழ்திறை — ஆரவாரம் உடைய அலை;
பௌவம் — கடல்; உடுத்த—சூழ்ந்த;
பயங்கெழு — பயன்பொருந்திய. மாநிலம்—உலகம்.
புணர்ச்சி — நட்பு. அடுதல் — கொல்லுதல்.
அடுகளம் — கொலைக்களம், போர்க்களம்.

தைக் கலக்காதிருந்தான். எனினும், போரில்லாத புதிய உலகம் என்ற லட்சியம் — என்றோ நனவாக வேண்டிய கனவு — தன் காலத்திலேயே கைகூடுவதாக அவன் எண்ணினான். சிரியா, எகிப்து முதலிய நாடுகளின் கிரேக்க அரசுகளில் தனது தருமம் வெற்றி கண்டதென்று மகிழ்ந்தான். உண்மையில், பாட்டன் காலத்தில் பாரதத்தின் மீது படையெடுத்த கிரேக்கர்கள் பேரன் போதனையால் மனம் மாறினார்களல்லர். போர்ப்பறை முழங்கிய பாரதத்தில் தரும கோஷமே நிறைந்தது கண்டு உவந்த அசோகன் அமரனான பின்னர், கிரேக்கர்கள் இந்தியா மீது படையெடுத்தனர். அசோகனின் பின்தோன்றல்கள் ஆற்றலற்றவர்களாயிருந்த நிலையில், மௌரிய சாம்ராஜ்யம் சிதறிப்போயிற்று

அதன் பிறகும் ஆக்கிரமிப்பைத் தவிர்க்கும் நெறியில் நாடு சென்றிருந்தால், அசோகனுக்கும் தமிழரசுகட்கும் தோழமை ஏற்பட்டதைப் போல், பாரதத்தின் பல அரசுகள் நல்லுறவு கண்டிருக்க முடியும். ஆட்சிக்கலையின் கூறாக, அரசுகளின் நல்லுறவைப் பற்றி இராஜதந்திர இயல் உருவாகியிருக்கும். நாளாவட்டத்தில் பண்பாட்டு ஒற்றுமையும் பொருளாதார உறவும் பாரதப் பாதுகாப்புப் பொறுப்பும் நட்பை வளர்த்து ஐக்கிய இந்திய அரசுக்கே அடிகோலியிருக்கலாம். ஆனால் இந்தச் செந்நெறியில் படரவில்லை பாரதம்.

அயலரசுகளை அழிக்கும் சந்திரகுப்த மௌரியனின் கொள்கையையும் வெகு சிலரே கடைப்பிடித்தனர். வட்புலத்தில் ஒன்பது ஆட்சிகளை அழித்து, அவற்றின் ராஜ்யங்களைத் தன் நேரான ஆட்சியில் சேர்த்துக் கொண்டான் சமுத்திர குப்தன். ஆனால், ஏனைய இடங்களில், கப்பங் கட்டிய அரசர்கள் தொடர்ந்து ஆள்வதற்கு இணங்கினான். தென்புலத்தில், இராஜராஜனும் இராஜேந்திரனும் அயலரசுகளை அழிக்கும் நெறியை இயன்ற அளவுக்குப் பின்பற்றினார்கள். ஆனால் மொத்தத்தில், பெரும்பாலான வேந்தர்கள், தோற்ற அரசர்களிடம் திறை பெறுவதையே தமது திக்குவிஜயத்தின் லட்சியமாகக் கொண்டனர். தோற்ற

வேந்தர்களின் ராஜ்யங்களைக் கைப்பற்றுவது அதர்மம் என்றே கருதினர்.

"அரசன் அதர்மத்தால் அவனியை வெல்லக்கூடாது. அதர்ம வெற்றியைப் பெற்ற கொற்றவனை எவர்தான் போற்றுவார்? அதர்ம வெற்றி நிலையற்றது; அதன் மூலம் சுவர்க்கத்தை அடைய முடியாது" என்று மகாபாரதத்தில் தரும புத்திரனுக்கு அறிவுறுத்துவான் பிதாமகன் பீஷ்மன்.*

போர் செய்வது அரசனின் தொழில். அவன் நேர்மையாகப் போர் செய்து மாற்றரசனை வெல்லவேண்டும். தோற்றவன் பணிந்து நின்று திறை கட்டினுல், அதை ஏற்றுக் கொண்டு, அவனையோ அவன் குடும்பத்தில் வேறு ஒருவனையோ அரியணையில் அமர்த்தி முன்போல் அரசு புரியச் சொல்லவேண்டும். இதுவே தரும விஜயம் எனப்பட்டது. மாருக, இளைத்தவனது அரசை ஏற்றம் பெற்றவன் கவர்ந்து கொண்டால் அது அதர்மவிஜயம் அல்லது அசுரவிஜயம்என்றுகண்டிக்கப்பட்டது.பாரதம் பல அரசுகளாகக் குலைவதற்கும் அவற்றுக்கிடையே இடைவிடாப் போர் நிகழ்வதற்கும் வாய்ப்பான அரசநீதி இது.

பிரதேச ஆட்சிகளை அழிக்க விரும்பாத மனிதாபிமான மரபே இந்த அரச நீதியைத் தோற்றுவித்தது என்பது உண்மை. ஆனுல் காரணம் யாதாயினும், அது அரசுப் பன்மைக்கு அடிகோலியது என்பதை மறத்தற்கில்லை.

யுத்தம் புரிதல் அரச தருமம் என்று ஓதும் நூல்களே, போரைக் கடைசி உபாயமாகக் கொள்ள வேண்டுமென்று வலியுறுத்துதலும் மெய்யே. "சாமதான பேதங்களால் வயப்படாத பகைவரையே தண்டோபயத்தால் மெதுவாக வயப்படுத்த வேண்டும்" என்றும், "இவ்வுபாயங்களில் சமாதான முறையில் பொருள் இழப்பே இல்லை. தண்டோபாயம் வெற்றி தருவது. எனவே இவ்விரண்டும் வேந்தர்க்கு நாடு முதலிய ஆதாயங்களை அளிக்குமென்று

---

* சாந்திபருவம் அத்தியாயம் 96.

சான்றோர் கூறுகிறார்கள்'' என்றும் மொழியும் மனுதரும சாஸ்திரம்.*

மகாபாரதத்தில் பீஷ்மரும் இதனை வலியுறுத்துகிறார். ஆனால் சாம, தான, பேதம் என்ற உபாயங்களும் அரசர்க்கிடையில் அவநம்பிக்கையும் பகையும் வளர்வதற்கே உதவின. மேலும், நடைமுறையில், போர் வழியை விரும்பித் தழுவுவதே பெருவழக்கானது.

இந்தச் சூழலில் பேரரசுகள் கொற்றவர்களின் ஆற்றலைப் பெரிதும் பொறுத்திருந்ததில் வியப்பில்லை. திக்குவிஜயம் செய்த வேந்தன் சக்கரவர்த்தியாகி ஏனைய அரசர்களிடம் திறை பெற்றுக் கோலோச்சினான். ஆனால் அவனது பின் தோன்றல் இளைத்தவனாயின், பேரரசு மறைந்தது; அரசர்கள் நிறைவுரிமையோடு செயல்பட்டனர்.

இந்த அரசியல் சூழலில், நில இயல் இடர்களையும் கடந்து, மௌரியர் முதல் மொகலாயர் வரையில் பல வமிசங்கள் பேரரசுகளைக் கண்டு பல்லாண்டுக் காலம் பேணின என்றால், அது பாரத மக்களுடைய பண்பாட்டின் உயிராற்றலுக்கே சான்றாகும்.



* அத். 7: 108, 109

# III. அரசியல் கண்ட ஐக்கியம்

ஆதிநாளிலிருந்தே ஆட்சிக் கலையை விரும்பிப் பேணியது நம்தேசம்.

சிந்துவெளியில் நாகரிகம் கண்ட தொல்லோர்களின் அரசியற் கருத்துக்களை நாம் நேராக அறிவதற்கில்லை. ஆனால் நமது பண்பாட்டின் பிறதுறைகளைப் போலவே, அரசியலும் சிந்து வெளிச் சிந்தனையால் வளம் பெற்றிருக்க வேண்டும். ஆரியரல்லாதவரான தைத்தியர்களின் அரசியல் குருவாகச் சுக்கிரன் போற்றப் பெறுவதால், சாணக்கியரும் பீஷ்மரும் போற்றிய சுக்கிரன் மரபு* சிந்துவெளியில் எழுந்ததாக லாம்.

ரிக் வேதத்திலேயே அரசனைப் பற்றிய குறிப்புக்கள் உள. பிராமணங்களில் அரசியற் கருத்துக்களைக் காண்கிறோம். போதாயனர், கோதமர், ஆபஸ்தம்பர் ஆகியோரின் தரும சாஸ்திரங்கள் அரசர்தம் கடமைகளையும் அவர்களுக்கும் குடிகளுக்கும் இருக்கவேண்டிய உறவு முறைகளையும் வகைந்து கூறுகின்றன. நமக்குக் கிடைக்கும் தண்டநீதி நூல்களில்

---

* சுக்கிரன் மரபு தொன்மையானதாயினும், சுக்கிர நீதி என்ற பெயரில் இப்போது கிடைக்கும் நூல் பிற்காலத்ததே. அது இடைக்காலத்தின் பிற்பகுதியில் தோன்றியதென்பர் பல ஆய்வாளர். சென்ற நூற்றாண்டிலேயே யாரோ ஒருவர் எழுதிச் சுக்கிரன் தலையில் கட்டிவிட்டார் என்று டாக்டர் வி. ராகவன் கூறுவார் (Raja Vidya No. 1).

தொன்மையானது சாணக்கியரின் அர்த்தசாஸ்திரமே.* அது தண்ட நீதியை முறையாகவும் விரிவாகவும் பேசும். மேலும் மனு, குரு, சுக்கிரன் ஆகியோரும் அவர்தம் வழியினரும், பாரத்துவாஜர், விசாலாட்சர், பராசரர் முதலிய பலரும் வழங்கிய கருத்துக்களைத் திறனாய்வு செய்வார் சாணக்கியர். எனவே, அவருக்கும் முன்பே பல அரசியற் நூல்கள் இருந்தன வென்று அறிகிறோம். மனுதரும சாஸ்திரத்தில்** அரசியல் விளக்கமும் இடம் பெறுகிறது. மகாபாரதத்தின் சாந்தி பருவத்தில் பீஷ்மரின் திருவாக்காகப் பல அரசியற் கருத்துக் கள் அமைந்துள்ளன.*** பௌத்த, சமணத் திருநூல்களி லும், தமிழில் சங்க இலக்கியத்திலும், அரசியற் கருத்துக்கள் பேசப்படுகின்றன. வள்ளுவரின் பொருட்பால் பண்டைய இந்திய அரசியலுக்குச் சிறந்த விளக்கமாகும். நமது முன் னோர்கள் அரசியலுக்குத் தந்த ஏற்றத்தை இவற்றிலிருந்து உய்த்துணரலாம்.

## 1. அரசின் உதயம்: பழமரபுக் கதைகள்

அரசு எவ்வாறு தோன்றியது என்ற வினாவுக்கு கி. மு. 8 ஆம் நூற்றாண்டில் எழுந்த ஐதரேயப் பிராமணமே முதன் முதலில் விடை தந்தது. அது கூறும் :

---

* தண்டம்-செங்கோல். தண்ட நீதி-அரச நீதி. அர்த்த சாஸ்திரம் (பொருள்நூல்) அருளிய சாணக்கியருக்கு விஷ்ணுகுப்தர், கௌடல்யர் என்ற பெயர்களும் உள. சாணக்கியரின் நூலைப் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரும், சிரோமணி, வித்துவான் பி. ஸ்ரீ. இராமானுஜாசாரியும் தமிழில் மொழி பெயர்த்துள்ளனர்.

** மனுவின் மரபு தொன்மையானதே; ஆனால் இன்று கிடைக்கும் இந்நூல் சாணக்கியர் காலத்துக்குப் பின்பே உருவானது என்பர்.

*** கிறிஸ்துவ சகாப்தத்தின் தொடக்க நூற்றாண்டு களிலேயே, இந்தப் பகுதி மகாபாரதத்தில் சேர்ந் திருக்க வேண்டுமென்று அறிஞர் அனுமானிப்பர்.

''தேவர்களும் அசுரர்களும் போர்புரிந்தபோது, தேவர்கள் தோற்றனர்...'நமக்கு அரசன் இல்லாமையால், அசுரர் நம்மை வென்றனர். எனவே, நாம் ஒரு வேந்தனைத் தேர்ந்தெடுப்போம்' என்று இயம்பினர் தேவர். அவர்கள் ஓர் அரசனைத் தேர்ந்தெடுத்து, அவனது உதவியால் அசுரரை எதிர்த்து முழு வெற்றி கண்டனர்.''

முன்னோர் செயலே தேவாசுரர் செயலாக இந்தக் கதையில் வடிவம் பெறுகிறதென்பது தெளிவு. எனவே, ஆரியரிடையில் போர்த் தேவையை முன்னிட்டு, மக்களின் சம்மதத்தோடு, அரசு தோன்றியது என்று ஊகிக்கலாம்.

ஐதரேயப் பிராமணத்திலேயே, இந்திரன்* வேந்தனானதைப் பற்றிய கதையும் வருகிறது. அது சொல்லும் :

''பிரஜாபதி**யின் தலைமையில் கூடிய தேவர்கள், 'இவனே (இந்திரனே) நம்மில் வலிமையும் வீரமும் வீரியமும் செயலாற்றலும் மிகுந்தவன்; இவனையே அரசனாக்குவோம்' என்று ஒருவருக்கொருவர் கூறினர்.''

இங்கும் சமுதாய ஒப்பந்த அடிப்படையிலேயே இந்திரன் அரசனாகிறான். மேலும் அவர்கள் அவனுடைய தகுதியையும் கணக்கில் எடுத்து, அவனைத் தேர்ந்தெடுக்கிறார்கள்.

பின்னாளில், சிந்துவெளித் திராவிடரும், ஆரியரும், பிறரும் இரண்டறக் கலந்த சூழலில், அரசின் உதயம் குறித்து வேறு கதைகள் செல்வாக்குப் பெற்றன. பௌத்த, சமண நூல்களிலும், இதிகாசங்களிலும், மனு தரும சாஸ்திரத்திலும் இவற்றைக் காண்கிறோம்.

புத்த பகவானின் திருவாக்காக வரும் கதை, ஆதிநாளைய மாந்தர் பேரின்ப வாழ்வு நடத்தினர் என்று நவிலும். அவர்

---

* இந்திரனை 'வேந்தன்' என்றே கூறும் தொல்காப்பியம்:
''வேந்தன் மேய தீம்புனல் உலகமும்''
(பொருளதிகாரம் 5)
(மேய-விரும்பிய. தீம்புனல் உலகம்-தண்புனல்நாடு. மருதம்)

** பிரஜாபதி; அனைத்து உயிர்கட்கும் தலைவன்; தலைமைத் தேவன்.

கள் மண்ணுலகில் கட்டுண்டு கிடந்தாரல்லர்; உணவு, உடை, உடைமை, குடும்பம், அரசு முதலான தேவைகள் அவர்கட்கு ஏற்படவில்லை. அதன்பின் மானிடர்கள் மண்ணுலகப் பிறவிகளாயினர்; தமது பூர்விக மசிமையை இழந்தனர்; உணவும் பிற பொருளும் அவர்கட்குத் தேவை ஆயின; வருண வேற்றுமைகள் தோன்றின. குடும்பம், தனி உடைமை ஆகியவற்றை ஏற்றுப் போற்றுவதாக அவர்கள் தமக்கிடையே உடன்பாடு கண்டனர். அப்போது, களவு, கொலை, பிறன்மனை நயத்தல் முதலிய குற்றங்கள் தோன்றின. எனவே, மக்கள் ஒன்றுகூடித் தமக்குள் தோற்றப் பொலிவும் திறமையும் மிகுந்த ஒருவனைத் தலைவனாகக் கொண்டனர். குற்றம் புரிவோரைக் கண்டித்தோ தண்டித்தோ நாடு கடத்தியோ ஒறுக்கும் உரிமையை அவனுக்கு அளித்ததோடு, அவன் பணிக்குக் கூலியாகத் தமது விளைபொருளில் ஒருபகுதியைத் தருவதற்கும் முன்வந்தனர். குடிமக்கள் அனைவரும் சேர்ந்து அவனைத் தேர்ந்தெடுத்ததால், அவனை 'மகா சம்மதன்' என்றனர். அவன் ஒழுங்கைப் பேணி யாவரையும் ரஞ்சனம் செய்ததால் (மகிழ்வித்ததால்), ராஜன் (அரசன்) எனப்பட்டான்.

முறை செய்து மக்களைக் காப்பதற்காகச் சமுதாய ஒப்பந்த அடிப்படையில் அரசு தோன்றியதென்ற கருத்து, இந்தப் பழமரபுக் கதையில் விளக்கம் பெறுகிறது. சாணக்கியரின் அர்த்த சாத்திரமும் இந்தக் கருத்தை வலியுறுத்துகிறது. ''மச்சநியாயமாக அல்லற்பட்ட குடிமக்கள், கதிரவன் புதல்வனான மனுவை அரசனாக்கிக் கொண்டார்கள். கூலப்பொருள் வருவாயில் ஆறில் ஒரு கூறும், வாணிகப் பொருள் வருவாயில் பத்தில் ஒரு கூறும், பொன்னும் அரசனுக்குரிய இறைப்பொருளாக ஏற்படுத்தினர்.* அந்த இறைப்

* மச்சநியாயம்: பெரிய மீன்கள் சிறிய மீன்களை விழுங்குதல்போல, வலியோர் எளியோரை வதைத்தல். கூலப்பொருள்-நெல் முதலியன. நிலத்திலிருந்து எடுக்கப்படும் பொன்முழுவதும் அரசனுக்கு உரியது என்பது கருத்து.

பொருட்கூலியைப் பெற்றுக்கொண்டு அரசர்கள் குடிமக்களைப் பாதுகாப்பாராயினர்''* என்று ஒற்றன் எடுத்துரைக்க வேண்டுமென்பார் கௌடல்யர். இங்கு, மக்களே மனுவை மன்னனாக்கினார்கள் என்று மொழிவதுடன் மக்களைக் காக்கும் பணிக்குக் கூலியாகவே அரசன் இறைப் பொருள் பெற்றதாகவும் இயம்புகிறார் ஆசிரியர். மேலும், 'உங்களைப் போல, நானும் ஊதியம் பெறுவோனே'' என்று வேந்தன் படைவீரர்களிடம் பேசவேண்டுமென்றும் அவர் கூறுவார்.**மனுவுக்கும் மக்களுக்கும் இடையே ஏற்பட்ட உடன்பாட்டைப் பற்றி மகாபாரதத்தில் பீஷ்மரும் மொழிவார்.***

பீஷ்மரே, கடவுளர் அருளால் அரசும், அரசநீதியும் தோன்றிய கதையையும் விரித்துச் சொல்லுவார். ஆதி நாளில், அரசோ அரசனோ, தண்டமோ தண்டிப்பவனோ இருந்ததில்லையென்றும், மக்கள் இயல்பாக அறம் பயின்றரென்றும் கூறுவார் பீஷ்மர். பிறகு காமம், கோபம், பேராசை, பொறாமை முதலிய குற்றங்கள் மலிந்தன; தருமம் அழிந்தது. அஞ்சிப் பதறிய தேவர்கள், பிரமதேவனிடம் சரண் புகுந்தார்கள். அவர்கட்கு அபயம் அருளிய பிரமதேவன், தண்ட நீதியைப் பெருநூலாக இயற்றினார். அதனை ஒருவர்பின் ஒருவராகச் சிவபெருமானும் இந்திரனும், வியாழன் வெள்ளி*** என்ற முனிவர்களும் சுருக்கி அருளினர்.

---

* முதல் அதிகரணம், 13ஆம் அத்தியாயம்.

** பத்தாம் அதிகரணம், அத்தியாயம் 131.

*** சாந்திபர்வம், 66-ஆம் அத்தியாயம். களவு போன பொருளை மீட்டுத்தர முடியாத அரசன், அப்பொருளைத் தன் கருவூலத்திலிருந்து எடுத்து இழந்தவனுக்குத் தரவேண்டுமென்பார் பீஷ்மர் (சாந்தி—அத்தியாயம் 75). காவலுக்குக் கூலியாகவே அரசன் இறைபெறுவதாகப் பீஷ்மரும் கருதினாரென்று இதிலிருந்து ஊகிக்கலாம்.

**** வியாழன் : பிரகஸ்பதி
வெள்ளி : சுக்கிரன்

அதன்பின் மனிதர்கட்குத் தலைமைதாங்கும் தகுதி உடைய ஒருவனைத் தரவேண்டுமென்று தேவர்கள் திருமாலை வேண்ட, அவர் தமது ஒளியிலிருந்து விரஜஸ் என்ற குமாரனை உண்டாக்கினர். அவனுடைய வழிமுறையில் ஏழாவது வேந்தனாகப் பட்டத்துக்கு வந்த வேனன் கொடுமை புரிந்ததால், முனிவர்களது மந்திர வலுப்பெற்ற தருப்பைப் புல்லால் கொல்லப்பட்டான். அவர்கள் வேனனின் வலது கரத்தைக் கடைந்தபோது பிருது என்பவன் தோன்றினன். தண்டநீதிக்கு இணங்கத் தருமத்தை நிலைநாட்டுவேனென்றும், பூமியைப் பிரமம் என்றே கருதி எப்போதும் காப்பாற்றுவேனென்றும், ஒருபோதும் தான்தோன்றியாகச் செயல்படேனென்றும் உறுதிமொழி தந்தான் பிருது. அவனது ஆட்சியில் அறம் பொருளின்பங்களால் உலகம் மேன்மை எய்தியது. திருமாலின் அமிசம் அவனிடம் கோயில் கொண்டது. எனவே, தேவர்களுக்கு ஒப்பாக அரசர்களை வணங்குகிறது உலகம்.*

## 2. கொடுங்கோன்மைக்கு உரிமை இல்லை

அரசின் தோற்றத்தைத் தெய்விகச் செயலாகவே இங்குப் பீஷ்மர் சித்திரிக்கிறார் என்பது உண்மைதான். ஆனால் அரசன் அக்கிரமம் செய்தாலும் அதற்கு அடங்கி நடக்க வேண்டுமென்று அவர் கூறினரல்லர். செங்கோல் செலுத்தி மக்களைப் புரப்பேன் என்று வாக்களித்து, அதனை நிறைவேற்றியதாலேயே—திருமாலின் வழித்தோன்றல் என்பதால் அல்ல—பிருது மன்னன் காத்தற் கடவுளின் அம்சமாகப் போற்றப் பெற்றான். தவிர, அதே குலத்தில் உதித்த வேனனை முனிவர்கள் மாய்த்த நிகழ்ச்சி, கொடுங்கோலனைக் கொல்வது நியாயம் என்று உணர்த்துகிறது. மேலும், பாதுகாவாத அரசனை, உடைந்த கப்பலைப் போல் தள்ளி விட வேண்டுமென்று பிராசேதஸமனு புகன்றாரென்பார் பீஷ்மர்.** தீவினைபுரியும் கொடியோரை அமைச்சராக

---

* சாந்திபர்வம்: அத்தியாயம் 59.

** சாந்திபர்வம்: அத்தியாயம் 56.

உடையவனும் 'தருமத்தைக் கெடுப்பவனுமான வேந்தன்' குடிகளால் கொல்லத் தக்கவன் என்று வாமதேவர் கூறியதாகவும் சொல்வார் பீஷ்மர்.* வெறிநாயைக் கொல்வது போல், காவாத மன்னனைக் குடிகள் சேர்ந்து கொல்ல வேண்டுமென்றே அவர் மொழிவார்.** ஏனைய ஆசிரியர்களும் அவ்வாறே மொழிவர். மக்களைத் துன்புறுத்தும் கொடுங்கோலன், குடிகளால் கொல்லப்படுவான், அல்லது பகைவரின் படையெடுப்பால் அழிவான் என்ற எச்சரிப்பார் சாணக்கியர்.*** கொடுங்கோலர்களைக் குடிகள் நாடுகடத்தினார்கள் என்று வேத நூல்களிலிருந்து அறிகிறோம். கிருத யுகத்தில் கனிநேத்திரன் என்ற மன்னன் குடிகளைத் துன்புறுத்தியதால், அல்லற்பட்ட மக்கள் அவனை அரியணையிலிருந்து அகற்றினர் என்பர் வியாசர்.*௪ குடிகளால் துரத்தப்பட்ட அல்லது கொல்லப்பட்ட கொடுங்கோலர்களைப் பற்றிப் பௌத்த நூல்களில்—சிறப்பாக ஜாதகக் கதைகளில்—படிக்கிறோம்.௫* ஆக, தெய்விக மன்னுரிமையின் பெயரால் கொடுங்கோன்மைக்குத் தலைவணங்கும் கொள்கை இந்திய அரசியலில் இடம் பெறவில்லை என்பது தெளிவு.

## 3 செங்கோலுக்கே இறைமை

உலகத்தைக் காப்பதற்காக, இந்திரன், வாயு, யமன், சூரியன், சந்திரன், அக்கினி, வருணன், குபேரன் ஆகிய தெய்வங்களின் கூறுகளைக் கொண்டு இறைவன் வேந்தனைப் படைத்தார் என்று மனுதரும சாஸ்திரம் கூறும். ௫** ஆனால் இதுவும் அரசனது தெய்விகத்தைப் பேசுவதாகக் கொள்ள முடியாது. அரசன் கடமைகளையும் அவனுக்கு அமைய

---

* சாந்திபர்வம்: அத்தியாயம் 92.
** அநுசாஸன பர்வம்: அத்தியாயம் 96.
*** அதிகரணம் 7 அத்தியாயம் 103.
*௪ அசுவமேத பர்வம் அத்தியாயம் 4.
௫* Jataka stories 73; 482; 537 (Cowell's edition)
௫** அத். 5: 96; அத். 7 : 3, 4.

வேண்டிய இயல்புகளையுமே இது சுட்டும். மழை வழங்கும் இந்திரன் போல் மக்களுக்கு வாழ்வளித்தும்; நீரை ஆவியாக்கி வாங்கிக் கொள்ளும் சூரியன்போல் சிறுகச்சிறுகத் தீர்வை வாங்கியும்; உயிர்களின் உட்புகுந்து விளையாடி இயக்கும் காற்றுப்போல் எதிரி நாட்டில் நடப்பதை ஒற்றர் மூலம் அறிந்தும்; இன்னான் இனியன் என்று பாராது யமனைப் போல் குற்றவாளிகளை ஒறுத்தும்; பாவிகளைப் பாசத்தால் கட்டும் வருணனைப் போல் கண்ணோடாது தண்டித்தும்; சந்திரனைப் போல் அவையோர் மகிழக் காட்சிதந்தும்; தீயைப் போல் துரோகிகளை அழித்தும்; அனைத்தையும் தாங்கும் நிலத்தைப்போல் கற்றோர் கல்லாதவர் யாவரையும் ஒருங்கு காத்தும், அரசன் விளங்கவேண்டுமென்று மனுவே கூறுவார்.* "அரசர் கண்கூடாக அளியும் தெறலும் உடையோராதலின், இந்திரனையும் யமனையும் ஒப்பாவர்" என்று சாணக்கியரும் செப்புவார்** "அடைக்கலம் அளிப்பவனே பெரும்பயன் அடைவான். உயிர்கொடுப்பதற்கு ஒப்பானது, உலகில் வேறொன்றும் இல்லை. ஆகையால் அரசன் இந்திரனாகவும், யமனாகவும் தரும தேவதையாகவும் உயிர்களைக் காக்கின்றான்" என்பார் பீஷ்மர்.*** அரசனின் கடமைகளை வலியுறுத்தும் வகையிலேயே இந்திரன் முதலான தெய்வங்களின் கூறுகள் குறிப்பிடப் பெறுகின்றன என்பது தெளிவு. மேலும், தருமத்தின் உருவமென்றும், மெய்யான வேந்தன் என்றும், மக்களின் அரண் என்றும், தண்டத்தையே போற்றுவார் மனு.*௪. "செங்கோல் செலுத்தும் அரசன், அறம் பொருள் இன்பப் பேறுகளால் மேம்படுவான்.

---

* அத்தியாயம் 9, சுலோகங்கள் 304—311. இங்குக் குபேரனுக்குப்பதிலாக நிலத்தைக்குறிப்பிடுகிறார் மனு,

** அதிகரணம் 1—அத்தியாயம் 13. அளி—அன்புகாரணமாகத் தோன்றும் அருள். தெறல்—அழித்தல், வருத்தல்.

*** சாந்தி பருவம் அத்தியாயம் 72.

*௪ அத்தியாயம் 7 சுலோகங்கள் 14, 17.

அவ்வாறு ஆளாது, காமம், கோபம் முதலானவற்றைப் பேணும் அரசனை அவனுடைய கோலைக்கொண்டே மந்திரி முதலானோர் கொன்று விடுவர்'' என்று எச்சரிப்பார் மனு.* தான்தோன்றி மன்னனைக் குலத்தோடு அழித்துவிடும் தண்டம் என்றும் மொழிவார் அவர்.** இவ்வாறு மனு தண்டத்துக்கு இறைமை கற்பித்தாரே அல்லாது, அதிலிருந்து மாறுபட்ட வேந்தனுக்குக் கடவுட் தன்மை உண்டென்றாரல்லர்.

அரசனின் கடமையில் தெய்விகம் காண்பது பாரத மரபு. ஆனால் அரசனுக்குத் தனியே தெய்விக உரிமை உண்டென்று அது கருதவேயில்லை. ராஜசூய, வாஜபேய யாகங்களைப் பற்றிய விளக்கத்தில், வேள்விசெய்யும் வேந்தனை இந்திரனா கவும் பிரஜாபதியாகவும் சதபதப் பிராமணம் வருணிப்பது உண்மை. ஆனால் பக்தன் தான் வழிபடும் தெய்வத்தோடு மனத்தில் ஒன்றிவிடுவதே இந்தவழிபாட்டின் அடிப்படை. எனவே, அரசியல் யாகம் செய்வோன் இந்திரனாகவும் பிரஜாபதியாகவும் பாவிக்கப்படுவதில் வியப்பில்லை. மேலும், ''பிரஜாபதியின் பிரதிநிதி'' என்று மன்னனைப் பரவும் சதபதப் பிராமணத்திலேயே, சபை, சமிதி*** என்ற குடிமக்கள் மன்றங்களைப் பிரஜாபதியின் புதல்வியராகப் பரவி, அவற்றின் ஒத்துழைப்பை நாடுகின்றான் வேந்தன். எனவே, அரசனுக்கு அலாதியான தெய்விகப் பெருமையைச் சதபதப் பிராமணம் அளிப்பதாகக் கூறுவது பொருந்தாது.

---

* அத்தியாயம் 7; சுலோகம் 27.

** அத்தியாயம் 7; சுலோகம் 28.

*** சபை, சமிதி என்ற வேத கால மன்றங்களுக்கிடையே இருந்த வேற்றுமை தெளிவாகப் புலனாகவில்லை. சபை என்பது சான்றோர் கூட்டமாகவும், சமிதி என்பது வயது வந்த மக்களின் அல்லது குடும்பத்தலைவர்களின் மன்றமாகவும் விளங்கினபோலும் என்பர். நீதி வழங்குவதில் சபை வகித்த பாத்திரம் பெரிது என்பர்.

சான்றாண்மையில் இறைமையைக் காண்பது இந்திய மரபு. ஞான நெறியில் நின்ற நான்மறையாளர்களைப் பூசுரர் என்றும் பூதேவர் என்றும் போற்றியதிலும், துறவிகளைத் தெய்வத் தன்மை உடையராக வணங்கியதிலும் அந்த மரபே விளக்கம் பெற்றது. நல்லற வேந்தனை நரதேவனாக முன்னோர் போற்றியதையும் இந்த மரபின் பின்புலத்திலேயே புரிய வேண்டும்.

'நானே கடவுள்' என்று ஆணவ மிகுதியில் ஆர்ப்பாட்டம் செய்தவன் இரணியன் ஒருவனே. அதனாலேயே அவன் அழிந்தான் என்ற கதை, அத்தகைய ஆரவாரத்துக்கு எதிரான எச்சரிக்கையாகும். உண்மையில், வாழ்நாளெல்லாம் மன்னுயிர் ஓம்பும் விரதியாக வேந்தன் இருக்க வேண்டுமென்பது இந்திய அரசியல். எனவே, திருமுடி சூடும் போது, தன்னை நாட்டுப் பணிக்காக அர்ப்பணித்துக் கொள்வதாக அரசன் உறுதிமொழி எடுத்தான். அந்த உறுதிமொழிக்கு விரோதமாகச் செயலாற்றினால், தான் ஈட்டிய புண்ணியம் அனைத்தையும், இன்னுயிரையும், மக்கட் பேற்றினையும் இழப்பேனாக என்று அவன் வஞ்சினம் கூறினான் என்று சொல்லும் ஐதரேயப் பிராமணம்.

## 4. பழந்தமிழ் நூல்கள் தரும் விளக்கம்

அரசின் தோற்றத்தைப் பற்றி வடமொழியிலும் பாலி மொழியிலும் உள்ளன போன்ற பழமரபுக் கதைகள், பழந்தமிழ் இலக்கியத்தில் இடம் பெறவில்லை என்பது மெய்யே. ஆயினும், வடமொழிவாணர்களைப் போலவே தமிழ்ச் சான்றோர்களும் அரச நீதியைப் புனிதமானதாகவும் இன்றியமையாததாகவும் கருதினர் என்பது தேற்றம். உண்மையில், செங்கோலுக்கு இறைமை கற்பிக்கும் தத்துவம், தமிழ் நூல்களிலேயே முழுமையாகவும் தெளிவாகவும் விளக்கம் பெற்றிருக்கிறது.

அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்
நின்றது மன்னவன் கோல்* (குறள் 543)

என்று செங்கோலின் சிறப்பை விதந்தோதுவார் திருவள்ளுவர்.

மன்னனுக்கு வெற்றி தருவதே செங்கோல்தான். நாற்படையும் நன்கு அமைந்திருந்தாலும்,

மாண்ட
அறநெறி முதற்றே அரசின் கொற்றம்;
அதனால், நமரெனக் கோல்கோடாது
பிறரெனக் குணம்கொல் லாது**

ஆட்சிபுரிவாயாக என்று பாண்டியன் நன்மாறனுக்கு அறிவுறுத்துவார் மதுரை மருதன் இளநாகனார்.

வேல் அன்று, வென்றி தருவது, மன்னவன்.

கோல், அதூஉம், கோடாது எனின் *** (546) என்பார் வள்ளுவரும். மக்களைக் காக்கும் மன்னனைக் காப்பது செங்கோலே என்றும் அவர் செப்புவார்:

இறைகாக்கும், வையகம் எல்லாம்; அவனை
முறைகாக்கும், முட்டாச் செயின். **** (547)

அவ்வாறு செங்கோல் முறையால் உலகைக் காப்பவனே இறைவனாகப் போற்றப் பெறுவான்:

முறைசெய்து காப்பாற்றும் மன்னவன், மக்கட்கு
இறையென்று வைக்கப்படும். ௫* (388)

---

* அந்தணர் நூல்-வேதம். ஆதி—ஆதாரம், பீஷ்மரும் இவ்வாறே கூறுவார் (பார்க்க: சாந்தி பர்வம், அத்தியாயம் 62)

** புறநானூறு 55. மாண்ட-மாட்சிமைப்பட்ட. கொற்றம்-வெற்றி. நமர்-நம்மவர். கோடாது-வளையாது. பிறர்-அயலார். கொல்லாது—கெடாது.

*** வென்றி-வெற்றி.

**** இறை-அரசன்.
முட்டாச் செயின்- (முறைமையைத்) தடையில்லாது செய்தல்.

௫* இறை-இறைவன், கடவுள்.

அவ்வாறின்றி, அரசன் கொடுங்கோலனாயின், அவன் விரைவில் கெடுவது உறுதி:

வெருவந்த செய்தொழுகும் வெங்கோலன் ஆயின்,
ஒருவந்தம் ஒல்லைக் கெடும்.* (563)

வேதமும் அறமும் நின்று நிலவச் செய்யும் செங்கோலை அரசன் துறந்தால், வேதம் விலகிப் போகும்; பசுவின் பயன் குன்றும்:

ஆபயன் குன்றும், அறுதொழிலோர் நூல்மறப்பர்,
காவலன் காவான் எனின்.** (560)

செங்கோன்மை சிறக்கும் நாட்டில் பருவமழை தப்பாது பெய்து, விளைபொருள் பெருகும்:

இயல்புளிக் கோலோச்சும் மன்னவன் நாட்ட
பெயலும் விளையுளும் தொக்கு. *** (545)

ஆனால் மன்னவன் கொடுங்கோலனாயின், மேகம் மழையைப் பொழியாது:

முறைகோடி மன்னவன் செய்யின், உறைகோடி
ஒல்லாது வானம் பெயல். ௪* (559)

எனவே, வானம் பொய்த்தாலும், விளைவு குறைந்தாலும், இயல்பு அல்லாதன மக்களின் தொழிலில் தோன்றினாலும், வேந்தனையே தூற்றும் உலகம் என்பார் வெள்ளைக்குடி நாகனார்.

---

* வெருவந்த-குடிகள் அஞ்சும் செயல்களை. வெங்கோலன்-கொடுங்கோலன். ஒருவந்தம்-நிச்சயமாக. ஒல்லை-விரைவில்.

** ஆ-பசு. அறுதொழிலோர்:-ஓதல், ஓதுவித்தல், வேள்விசெய்தல், வேள்விசெய்வித்தல், ஈதல், ஏற்றல் என்ற ஆறு தொழில்களுக்கு உரிய அந்தணர்கள். நூல்-வேதம். காவலன்-காவற்பணி புரியும் அரசன்.

*** இயல்புளி-நீதிநூலில் சொல்லிய இயல்பால். கோல் ஓச்சும்-செங்கோல் செலுத்தும். நாட்ட-நாட்டில். விளையுள்-விளைபொருள். தொக்கு-ஒருங்கு கூடி.

௪* கோடி--தவறி. உறை-மழைத்துளி. ஒல்லாது-செய்யாது.

மாரி பொய்ப்பினும், வாரி குன்றினும்,
இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்,
காவலர்ப் பழிக்கும்இக் கண்ணகன் ஞாலம்.*

மன்னன் முறை தவறினுல், மகளிர் கற்புக்கும் அரணில்லை என்று தொல்லோர் உரைத்ததைக் குறிப்பிடுவான் செங்குட்டுவன்:

"அரும்திறல் அரசர் முறைசெயின் அல்லது,
பெரும்பெயர்ப் பெண்டிர்க்குக் கற்புச் சிறவாது" எனப்
பண்டையோர் உரைத்த தண்டமிழ் நல்லுரை.**

முறையில்லை என்ருல், கற்புமில்லை, தவமுமில்லை என்று கூறும் மணிமேகலை:

மாதவர் நோன்பும் மடவார் கற்பும்
காவலன் காவல் இன்றெனின் இன்ருல்.***

கோல்கோடினுல், மாரி பொய்க்குமென்றும் மணிமேகலா தெய்வம் மொழியும்:

கோல்நிலை திரிந்திடின், கோள்நிலை திரியும்;
கோள்நிலை திரிந்திடின், மாரிவறங் கூரும்;
மாரிவறங் கூரின் மன்னுயிர் இல்லை;
மன்னுயி ரெல்லாம் மண்ணுன் வேந்தன்
தன்னுயி ரென்னும் தகுதியின் ருகும்.****

மழையால் நீரும் நெல்லும் அடைந்து வாழச் செய்வது செங்கோலே. எனவே, சமுதாயத்தின் உயிர் தானே என்று

---

* புறநானூறு 35 மாரி-மழை. வாரி-விளைச்சல். செயற்கை-தொழில். காவலர்-அரசர். கண்ணகன்—இடம் அகன்ற. ஞாலம்-உலகம்.

** சிலப்பதிகாரம், நடுகற்காதை, அடிகள் 207-209. திறல்-வலிமை. பெரும்பெயர்-பெரும்புகழ்.

*** மணிமேகலை, 22ஆம் காதை, அடிகள் 208-209.

**** மணிமேகலை காதை 7, அடிகள் 8-12. கோள்—கிரகம். வறங்கூரல்-வறண்டு போதல். தகுதிஇன்று—தகுதி இல்லாது.

உணர்ந்து, முறை செய்து, குடிகளைக் காப்பது அரசன் கடமை என்று முன்பே புகன்றார் மோசிகீரனார்:

நெல்லும் உயிரன்றே; நீரும் உயிரன்றே;
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்;
அதனால், யான்உயிர் என்பது அறிகை
வேல்மிகு தானை வேந்தற்குக் கடனே.*

அரச நீதி தவறாத மன்னனை, அவனது பணிகளைக் கருதி, இந்திரன் முதலான எட்டுத் தெய்வங்களின் கூறுகளால் அமைந்தவன் என்று மனு மொழிந்ததை முன்பே கண்டோம். முடிநாகராயரோ, உதியஞ்சேரலாதனைப் புகழும் முகத்தான், நிலம், ஆகாயம், காற்று, தீ, நீர் என்ற ஐம் பெரும் பூதங்களின் பண்புகளை உடையவன் அரசன் என்பார். பூமியின் பொறுமையும்** ஆகாயத்தின் விரிவுடைய ஆராய்ச்சித்திறனும், காற்றின் வலிமையும், தீயின் அழிக்கும் திறனும்,*** நீரின் அருளும் அமைந்தவன் என்று உதியஞ்சேரலாதனை விளிப்பார்:

மண்திணிந்த நிலனும்,
நிலனேந்திய விசும்பும்,
விசும்புதைவரு வளியும்,
வளித்தலைஇய தீயும்,
தீமுரணிய நீரும் என்றாங்கு
ஐம்பெரும் பூதத்து இயற்கை போலப்

---

* புறநானூறு 186. மன்னன் உயிர்த்து—மன்னனாகிய உயிரை உடையது. மலர்தலை உலகம் — பரந்த இடத்தை உடைய உலகம்; தானை—சேனை.

** 'அகழ்வாரைத் தாங்கும் நிலம்' என்பது குறள் (151) (அகழ்வாரை—தோண்டுவாரை; தாங்கும்—பொறுக்கும்)

*** "தீமிகின் மன்னுயிர் நிழற்றும் நிழலும் இல்லை; வளிமிகின், வலியும் இல்லை" என்றார் ஐயர் முடவனார் (புறம் 510)

(நிழற்றும்—நிழல்செய்யும். வளி—காற்று. மிகின்—மிகுந்தால்).

போற்ருர்ப் பொறுத்தலும், சூழ்ச்சியின் அகலமும்
வலியும் தெறலும் அளியும் உடையோய் *

சூரிய சந்திரர்களோடும் மழையோடும் (மழைக்கு அதிபதி வருணன்) அரசுக்கு ஒப்புமை காண்பார் மதுரை மருதன் இளநாகனுர்:

ஞாயிற் றன்ன வெந்திறல் ஆண்மையும்,
திங்கள் அன்ன தன்பெருஞ் சாயலும்,
வானத் தன்ன வண்மையும், மூன்றும்
உடையை ஆகி, இல்லோர் கையற
நீநீடு வாழிய நெடுந்தகை ! **

என்று அவர் நன்மாறனை வாழ்த்துவார். இளங்கோ அடிகளோ, ''வளவனின் குடையை ஒத்த சந்திரனை வணங்குவோம்; சென்னியின் திகிரி போன்ற சூரியனைப் போற்றுவோம்; சோழனது அருள் அனைய மழையினைத் தொழுவோம்,'' என்று புனைந்துரைப்பார்:

---

* புறநானூறு 2. மண்திணிந்த—அணுச்செறிந்த. ஏந்திய—ஓங்கிய; விசும்பு—ஆகாயம். தைவரு—தடவிவரும். வளி—காற்று. தலைஇய—தலைப்பட்ட. தீமுரணிய—தீயோடு மாறுபட்ட. போற்ருர்—பகைவர் [''பொறையெனபடுவது போற்ருரைப் பொறுத்தல்'' என்று கலித்தொகையும் கூறும் (133.)] சூழ்ச்சி—ஆராய்ச்சி. அகலம்—விரிவு. தெறல்—நிக்கிரகம், அழித்தல். அளி—அநுக்கிரகம், அன்பால் பிறக்கும் அருள்.

** புறநானூறு 55. ஞாயிற்றன்ன—சூரியனைப்போன்ற; வெந்திறல்—பெருவலி. திங்கள்—சந்திரன். தண்—குளிர்ந்த. சாயல்—மென்மை. வானத்தன்ன—மழை போன்ற. வண்மை—கொடை. கையற—இல்லையாக,

திங்களைப் போற்றுதும்! திங்களைப் போற்றுதும்!*
கொங்கலர் தார்ச் சென்னி குளிர்வெண்
குடைபோன்று, இவ்
அங்கண் உலகளித்த லான்.
ஞாயிறு போற்றுதும்! ஞாயிறு போற்றுதும்!—
காவிரி நாடன் திகிரிபோல் பொற்கோட்டு
மேரு வலந்திரித லான்.
மாமழை போற்றுதும்! மாமழை போற்றுதும்!—
நாமநீர் வேலி உலகிற்கு அவன்அளிபோல்
மேல்நின்று தான்சுரத்த லான்.

ஆக, அரச நீதியில் இறைமைப் பண்புகளைக் காண்பதிலும், நல்லற வேந்தனை நரதேவனாகப் போற்றுவதிலும், அறம் தழுவா அரசன் அழிவான் என்று எச்சரிப்பதிலும் ஆரியமும் தமிழும் வேறுபடவில்லை. மேலும், செங்கோலும், வேதமும், தவமும், கற்பும், வான்சிறப்பும் ஓர் இறைமையின் உறுப்புக்களே என்றும், ஒன்றையொன்று சார்ந்தவை யென்றும் முழுமையான தத்துவத்தைச் சிறப்பாக வழங்குவது தண்டமிழ் நல்லுரையே.

கொடுங்கோலனை மந்திரி முதலானோர் மாய்ப்பர் என்று மனுவும், குடிகள் கொன்றுவிடுவர் என்று சாணக்கியனும், வெறிநாயைக் கொல்வதுபோலக் கொடுமை சூழும் வேந்தனைக் குடிகள் சேர்ந்து கொல்ல வேண்டுமென்று பீஷ்மரும் புகன்றதைப்போல், வள்ளுவர் கூறினார் அல்லர்.

---

* மங்கல வாழ்த்துப்பாடல் அடிகள் 1-9. கொங்கு—மகரந்தம். அலர்—பரப்பும். தார்—மாலை. சென்னி—வளவன்,சோழன். அங்கண்—அழகிய. அளித்தலான்—காப்பாற்றுதலால். காவிரிநாடன்-சோழன். திகிரி-ஆக்கினைசக்கரம். பொற்கோட்டு மேரு--பொலிவுபெற்ற கொடுமுடி உடைய மேரு. நாமநீர்வேலி உலகு—புகழ் அமைந்த கடல் சூழ் உலகம். அவன்அளிபோல்—சோழனது அளி (கொடை) போல. மேல்நின்று-மேலாய் நின்று. சுரத்தல்--இடைவிடாது பொழிதல்.

அல்லற்பட்டு ஆற்ருது அழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை.* (555)

என்பதுடன் அவர் அமைந்தார். துன்ப மடையும் மக்கள் அக்கிரம ஆட்சிக்கு எதிராக ஆர்த்தெழலாமா என்ற கேள்வியை அவர் எழுப்பிஞரல்லர். ஆயினும், காமக்குரோதங்களால் கெட்டலைந்த வேனனை முனிவர்கள் கொன்றது போல், அறத்துக்குச் செவிகொடாத அரசனைச் சான்ருேர் அழிப்பர் என்பதே குறளின் கொள்கையுமாகும். எனவே,

எரியால் சுடப்படினும் உய்வுண்டாம்; உய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார் (896)

என்று எச்சரிப்பார் வள்ளுவர். தவமும் ஞானமும் ஒழுக்க நெறியும் உடைய சான்ருேர் முனிந்தால், படை, அரண், நட்பு முதலியனவும் பெருஞ்செல்வமும் அரசனைக் காப்பாற்றுமா என்று கேட்கிருர் அவர்:

வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருள்என்னும்
தகைமாண்ட தக்கார் செறின்?** (897)

உயர்ந்த கொள்கையைத் தழுவிய சிலர் சீறிஞல், இந்திரனும் தன் பதவியை இழப்பான் என்றும் கூறுவார்.

ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுறிந்து
வேந்தனும் வேந்து கெடும்.*** (899)

நெறி பிறழ்ந்த ஆட்சியை எதிர்த்தெழும் உரிமையும் கடமையும் பெருமையும் சான்ருேருக்கே வள்ளுவர் வெளிப்படையாக வழங்குகிருர் என்பது தெளிவு. பீஷ்மரைப்போல்,

---

* ஆற்ருது—தாங்க முடியாமல். படை—ஆயுதம்.

** வகைமாண்ட - எல்லாவகையும் மாட்சிமைப்பட்ட (வகையாவன படை, அரண், நட்பு முதலியன). வான் பொருள்-மிக்க செல்வம். தகை-தகைமை, பெருமை. தக்கார்-தவம் முதலியன உடைய சான்ருேர். செறின்-வெகுண்டால்.

*** ஏந்திய-உயர்ந்த. சீறின்-முனிந்தால்; வெகுண்டால். இடை-இடையில். வேந்தனும்-இந்திரனும். வேந்து-அரசு. முரிந்துகெடும் - இழந்துகெடும். (இந்திரனை வேந்தன் என்றே தொல்காப்பியமும் குறிப்பிடும்.)

குடிகளுக்கும் அந்த ஏற்றத்தை இளங்கோ அடிகளே தருவார். அல்லற்பட்டு ஆற்ருது அழுவதோடு அமையாது, அறப் புரட்சி செய்வதற்கே ஆர்த்தெழுவாள் கண்ணகி.

மன்பதை அலர்தூற்ற, மன்னவன் தவறிழைப்ப,
அன்பனை இழந்தேன்யான் அவலம்கொண்
டழிவலோ ?*

என்று சீறுவாள் அவள். செல்லும் சொல்லால் வழக்காடி வேந்தனை வென்ற பின்பும்,

பட்டாங் கியானுமோர் பத்தினியே ஆமாகில்,
ஒட்டேன்; அரசோடு ஒழிப்பேன் மதுரையும்.**

என்று வஞ்சினம் உரைத்துத் தீயோரையெல்லாம் எரிக்கு இரையாக்குகிறுள் அந்த வீரவனிதை. கொடுங்கோலாட்சியை அழிக்கும் அறப்புரட்சியைச் செய்யும் சிறப்பைக் குடி மக்களில் பெண்களுக்கு அளித்த நயத்தக்க புதுமை சிலப்பதிகாரத்தின் சாதனையாகும்.

## 5. வடபுலம் கண்ட குடியரசுகள்

பண்டைய இந்திய அரசுகளில் பொதுவாக நிலவியது கோனுட்சி முறையே. ஆயினும் வடபுலத்தின் சில பகுதிகளில் குடியரசுகளும் தளிர்த்தன. பகவான் புத்தரைத் தோற்றுவித்த சாக்கியர் நாட்டில், குடும்பத் தலைவர்கள் சந்தாஹாரம் என்ற திறந்த மண்டபத்தில் முறையாகக் கூடி அரசியல் விவகாரங்களை விவாதித்து முடிவுகள் எடுத்தனர். புத்தரின் தந்தையான சுத்தோதனர், அரசன் என்று குறிப்பிடப்பட்ட போதிலும், பேரவையின் முடிவுகளை நிறைவேற்றும் நிர்வாகத் தலைவராகவே விளங்கினுர். பாவா,

---

* (சிலப். 18 : 36-37) மன்பதை—மக்கட்கூட்டம். அலர்-பழிஅழிவலோ-மனம் அழிவனே?

** (சிலப். 21: 36-37) பட்டாங்கு-உண்மை. ஒட்டேன்-(இனிது இருக்க) இசையேன். அரசன் இறந்ததை அறியாள் அரசனேடு மதுரையையும் அழிப்பேன் என்பாள்.

குசிநாரா என்ற ஊர்களைச் சேர்ந்த மல்லர்களும், சந்திரகுப்த மௌரியனைத் தோற்றுவித்த பிப்பிலிவனத்து மோரியர்களும், மிதிலை மக்களான விதேகர்களும், வைசாலியில் வாழ்ந்த லிச்சவிகளும் குடியரசு கண்டு வாழ்ந்தனர். விதேகர்களும் லிச்சவிகளும் வேறுசில குலங்களும் சேர்ந்து அமைத்த வஜிய சங்கம் (வஜ்ஜிகளின் சங்கம்) அஜாதசத்ருவின் எதிர்ப்புக்கு நெடுங்காலம் ஈடு கொடுத்தது.

பழைய பௌத்தத் திருநூலான மகாபரி நிர்வாண சூத்திரத்தில், வஜிய சங்கத்தைப் பற்றிப் புத்தர் புகன்றதைப் படிக்கிறோம்.

வஜியர்கள் தமது பேரவைகளை அடிக்கடிக் கூட்டும் வரையில்,

அவர்கள் அனைவரும் அக்கூட்டங்களில் பங்குகொண்டு ஒரு மனதாக முடிவு எடுத்துச் செயலாற்றும் வரையில்,

அவர்கள் தமது பண்டைய முறைகளுக்கு ஒத்தவகையில் வினையாற்றும் வரையில்,

அவர்கள் தமது மூத்தோர்களை மதித்துப் போற்றி ஆதரித்து, அவர்தம் சொல்லுக்குச் செவிசாய்ப்பதைக் கடமையாகக் கொண்டிருக்கும் வரையில்,

வஜியர்களின் வாழ்வு தாழ்வுறாது வளம்பெறும் என்று எதிர்பார்க்கலாமெனப் புத்தர் ஆனந்தனிடம் கூறினார்.

குடியாட்சி அமைப்பின் உள்ளார்ந்த ஆற்றலில் புத்தருக்கு இருந்த நம்பிக்கை இந்த அறிவுரையில் புலனாகிறது. மேலும், ஒற்றுமையின்மையாலும், முதியோரையும் மரபுகளையும் மதிக்காது இளைஞர் செயல்படுவதாலும் ஏற்படக் கூடிய தீமையை அவர் உணர்ந்திருந்ததையும் இந்த நல்லுரை தெளிவாக்குகிறது.

மகதம் ஆண்ட பிம்பிசாரன், கோசலத்தில் கோலோச்சிய பிரசேனஜித் முதலிய வேந்தர்களின் நண்பராக விளங்கினார் புத்தர். ஆயினும் அவர் குடியாட்சி நெறியில்தான் ஈடுபாடு கொண்டிருந்தார். எனவே, துறவிகளுக்கென்று அமைத்த சங்கத்துக்கு ஜனநாயக விதிமுறைகளையே வகுத்தார் அவர். ஒவ்வொரு துறவி மடத்தின் விவகாரங்களையும் அதனைச் சார்ந்த துறவிகளின் பேரவையே நிர்வகித்தது. குறைந்த

பட்சம் எத்தனை உறுப்பினர்கள் பங்குகொண்டால் முறை யான கூட்டமாகக் கருதப்பெறும் என்பதைக் குறித்தும், விவாத முறையினைக் குறித்தும், வாக்கெடுப்புப் பற்றியும், புத்தர் வகுத்த விதிகள் நம்கால ஜனநாயக மரபுக்கு முற்றிலும் ஒத்தனவே. ஒரே ஒரு வேற்றுமை; பௌத்த சங்கத்தில், எந்த முடிவும் கூடியிருந்த துறவிகள் அனைவரது இணக்கத்தையும் பெறவேண்டும். ஒருமனதான முடிவு ஏற்படாத போது, அந்தச் சிக்கலை மூத்தோர் குழுவின் முடிவுக்கு விட்டது சங்கம்.

குடியரசுக் குலங்களைக் 'கணம்' என்றும் 'சங்கம்' என்றும் குறிப்பிடுவார் பாணினி.* வடமேற்கு இந்தியாவிலிருந்த பல கணங்களின் பெயர்களைப் பாணினியின் இலக்கண நூலிலிருந்து அறிகின்றோம். அவற்றில் பல, பின்னாளில், அலெக்சாந்தரின் ஆக்கிரமிப்பை உறுதியாக எதிர்த்தன என்பது கிரேக்கர் நூல்களிலிருந்து தெரியவரும்.

படையைக் காட்டிலும், வேற்றரசரின் நட்பைக் காட்டிலும், குடியரசுக் குலமான சங்கத்தின் தோழமை சிறந்தது என்பார் சாணக்கியர். ஒற்றுமையால் உண்டான ஆற்றல் உடையதாகலின், சங்கத்தைப் பகைவர் வெல்வது அரிது என்பது அவரது கருத்து. சாணக்கியர் சங்கத்திடம் பகைமை பாராட்டினார் என்பது பொருந்தாது. சங்கத் தலைவன், சங்கத்துக் குடிமக்களிடம் அன்பு பாராட்டியும், அவர்கட்கு இனியன செய்தும், அறவழிப் பிழையாது ஒழுகியும், அடக்கம் பேணியும், ஒற்றுமையைக் காக்கவேண்டுமென்று அவர் கருத்துரை பகர்வார். சக்கரவர்த்தியாக விரும்பும் வேந்தன், அனுகூலமான சங்கங்களை இன்சொல்லாலும் கொடையாலும் போற்றவேண்டுமென்றும் மொழிவார் அவர். இகலிநிற்கும் சங்கங்களையே பேதம், தண்டம் என்ற முறைகளால் தன்வயப்படுத்த வேண்டுமென்று அறிவுறுத்துவார் அவர். ஆயினும், தேசியப் பேரரசே

---

* வடமொழிக்குச் செம்மையான இலக்கணம் செய்த பேரறிஞர்; கி. மு. 6ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தார்.

நாட்டுக்குத் தேவை என்று கருதிய சாணக்கியர், அப்பேரர சுக்கு உட்படாத சங்கத்தில் பேதத்தை வளர்த்து, அதனைப் பணியவைக்கும் சூழ்ச்சிகளை விரிவாக ஓதுகிறார் என்பது உண்மையே.*

பீஷ்மர், கணங்களிடம் பரிவு காட்டுவார். கணங்களுக்கு இரண்டு வகையில் அபாயம் நேருமென்பது அவரது எச்ச ரிக்கை. ஒன்று, கண உறுப்பினருக்கிடையே பேதம் வளர் வதால் உண்டாவது; இன்னொன்று ஒற்றுடல், மந்திரா லோசனை என்ற ரகசியமான விவகாரங்களையும் பேரவையில் விவாதிப்பதால் வருவது. கண உறுப்பினர், ஒற்றுமையைப் பேணுவதில் விழிப்பாயிருக்க வேண்டும் என்றும், கணத் தலைவர்களின் குழுவை அமைத்து, ரகசிய விவகாரங்களை அவனிடம் விடவேண்டுமென்றும் வற்புறுத்துவார் பீஷ்மர். கணங்கள்—''உட்பகையைக் குறித்து விழிப்பாயிருக்க வேண் டும். புறப்பகை அத்துணை முக்கியமானதல்ல. பேதத்தை வளர்த்தும், பொருள் கொடுத்தும் கணங்களைச் சீர்குலைப்பார் கள் பகைவர்கள். எனவே, ஒற்றுமையே கணங்களின் தலை யாய அரண்'' என்பார் பீஷ்மர்.**

யாதவர்களின் சங்கத்தைப் பற்றி கண்ணனுக்கும் நாரத ருக்கும் நடந்த உரையாடலைப் பீஷ்மர் தருமனுக்குக் கூறு வார். சங்கத்தின் தலைவர்களான உக்கிரசேனரும் கண்ண னுமே ஆட்சிப் பொறுப்பை நிர்வகித்தனர். ஆனால் கண்ணனாலும் சங்கத்தின் உட்பூசலைச் சமாளிக்க முடிய வில்லை. நெருப்பை வேண்டுவோனால் கடையப் பெறும் அரணிக் கட்டைபோலத் தன்உள்ளம் சங்கத்தினரது கடுஞ் சொற்களால் கடையப் பெறுகிறது என்பான் கண்ணன்.

---

* சங்கத்தைப் பற்றிய கௌடல்யரின் கருத்தை அர்த்த சாத்திரத்தின் 11ஆம் அதிகரணம் ஓதுகிறது. பேதம் என்ற உபாயத்தைச் சாணக்கியருக்கும் முன்பே, அஜாதசத்துரு கடைப்பிடித்தான். வஜியர்களுக் கிடையேகலகங்களைத் தூண்டிவிட்டு அதன்பின் வைசா லியைப் படையெடுத்துக் கைப்பற்றினான் அவன்.

** சாந்திபர்வம், அத்தியாயம் 107.

பொறுமையும் நேர்மையும் இங்கிதமும் பகுத்துணர்வும் பயின்றும், இன்சொல் பேசியும், கெட்ட எண்ணமுள்ளவர் களையும் வெல்ல வேண்டுமென்று நாரதர் கண்ணனுக்கு அறி வுறுத்துவார். "மேடுபள்ளமில்லாத நிலத்தில் எந்தக் காளை யும் பெருஞ்சுமை தாங்கிச் செல்லும். செல்வதற்குக் கடின மான வழியில் பெயர்பெற்ற உயர்ந்த காளையே பெரும் பாரத்தைத் தாங்கிச் செல்லும். கேசவ, நீ சங்கத்தில் முக் கியனாக (தலைவனாக) இருக்கிறாய். இச்சங்கம் கலைந்தால் பெரு நாசம் உண்டாகும். ஆகையால் அது உன்னை அடைந்து துன்பமில்லாதிருக்கும்படி நீ செய்ய வேண்டும்" என்பார் நாரதர்.** கட்சிப் பூசல்களால் குடியரசுகளுக்கு நேர்ந்த தொல்லைகளைக் கண்ணன்-நாரதர் உரையாடலிலிருந்து ஊகிக்கலாம். சமுதாய, பொருளாதார நிலைமைகளில் ஏற்பட்ட மாறுதல்களே இவற்றுக்குத் தலைமையான கார ணம். கிழக்கிந்தியாவில், கணங்களின் உள்நிலையைப் பயன் படுத்தி, அவற்றை அழிப்பதில் மகதப் பேரரசர்கள் வெற்றி கண்டனர். ஆனால் மேற்கே, குடியரசுக் குலங்கள் நீண்ட காலம் நீடித்தன. யௌதேயர்களும் மாலவர்களும் அவர் களில் குறிப்பிடத்தக்கவர்கள். சமுத்திர குப்தன் அந்தக் குலங்களைத் தனக்கு உட்படுத்தினான். ஹூணர் படை யெடுப்பு அவற்றுக்கு இறுதி சூழ்ந்தது.

வயதுவந்தோர் அனைவருக்கும் வாக்குரிமை அளித்து, அவர்கள் தேர்ந்தெடுக்கும் பிரதிநிதிகளைக் கொண்டு ஆட்சி நடத்துவது தற்கால ஜனநாயகக் குடியரசு. பண்டைய இந்தியக் குடியரசுகள் அவ்வாறு அமைந்தனவன்று. அவற் றில் சில ரோமானியக் குடியரசைப் போல், சிலராட்சியே கண்டன. வேறுசில, குடும்பத் தலைவர்கள் நேராகப் பங்கு கொள்ளும் பேரவை மூலம் பலராட்சி நடத்தின. ஆகக்கூடி, பலர் கூடிப்பேசி முடிவுகாணும் மக்களாட்சி மரபு ஆயிர மாண்டு வரலாற்றில் (கி. மு. 600-கி. பி. 400) உருவாகி இந்தியப் பண்பாட்டுக்கு ஊற்றம் தந்தது.

---

* சாந்திபர்வம். அத்தியாயம் 81.

## 6. அரசன் கடமை

முடியாட்சியில் தருமத்துக்கே அரசுரிமை வழங்கியது இந்திய அரசியல் என்பதைக் கண்டோம். அறங்காப்பதே அரசன் பணி என்பதால், அவனைக் காவலன் என்றனர் தமிழ்ச்சான்றோர். மேலும், ஆட்சியின் ஓர் அங்கமாகவே அரசனைக் கருதினர் முன்னோர். அரசன், அமைச்சு, நாடு, அரண், பொருள், படை, நட்பு என்ற ஏழு உறுப்புக்களை உடையது அரசு என்பது ஆரியமும் தமிழும் ஒருமனப்பட்டுத் தரும் இலக்கணம். ஓர் உறுப்பே ஆயினும், ஏனைய ஆறு அங்கங்களுக்கும் தலைவன் அரசனே என்பதால், ''அரசனும் ஆட்சியும் உறுப்புக்களின் தொகையாம்'' என்றும் கூறுவார் சாணக்கியர்.* வள்ளுவரும்:

படைகுடி கூழ்அமைச்சு நட்புஅரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு** (381) என்பார்.

தத்துவஞானிகளே வேந்தர்களாக வேண்டுமென்று பண்டைய கிரேக்க ஞானி பிளேட்டோ புகன்றதுபோல் இந்திய அறிஞர் கூறினரல்லர். ஆயினும், கல்விகேள்விகளால் அரசன் சிறந்து விளங்க வேண்டுமென்று*** அவர்கள் வற்புறுத்துவர். கல்வியால் அறிவும் அறிவால் ஒழுக்கமும், ஒழுக்கத்

---

* அதி. 8-அத் 118.

** குடி-மக்கள். அவர்கள் வாழும்நாடும் 'குடி'யுள் அடங்கும். கூழ்-பொருள். நட்பரண்-நட்பு, அரண். ஏறு-ரிஷபம், சிறந்தவன்.

*** தத்துவம், மூன்று வேதங்கள், பொருளாதாரம், அரசநீதி என்ற வித்தைகள் நான்கிலும் அரசன் வல்லவனுயிருக்க வேண்டுமென்பார் சாணக்கியர்(அதி1.அத். 2) ''சாங்கியம், யோகம், உலகாயதம் என்ற மூன்றும் தத்துவம் எனப்படும்'' என்று சாணக்கியர் கூறுவது சுவையானதாகும். சாங்கியத்தையும் யோகத்தையும் போலவே, உலகாயதமும் நன்மதிப்புக்கு உரிய

தால் மனவுறுதியும் அடைவோனே செங்கோல் செலுத்தும் திறமுடையவன் என்பது ஆன்றோர் கருத்து. அரசர்க்கு ஒழுக்கம், அறுவகைக் குற்றங்களைக் கடிதல் என்று வள்ளுவரும் சாணக்கியரும் உரைப்பர். அவை, காமம், மதம், கோபம், உலோபம், மாண்பில்லா மானம், நன்மை செய்யா உவகை என்றும் அவர்கள் கூறுவர்.* அவனிக்கே அரசன் ஆயினும், பொறியடக்கமில்லாதவன் விரைந்து கேடு எய்துவான் என்று எச்சரிப்பார் சாணக்கியர். தன்குற்றம் நீக்கியவனே, பிறர் குற்றத்தைக் கடிந்து முறைசெய்யும் உரிமை உடையன் என்பார் வள்ளுவர்.

தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்
என்குற்றம் ஆகும் இறைக்கு! (436)

தன்குற்றங் கடிந்த கொற்றவன், குடிகளைத் தழுவியவனாய் செங்கோல் செலுத்த வேண்டுமென்பது முன்னோர் முடிவு. காட்சிக்கு எளியனாயும் கடுஞ்சொல் அல்லனாயும்,

---

தாக விளங்கியதை இதிலிருந்து ஊகிக்கலாம். இன்னொன்று: ''அனைத்து வித்தைகளுக்கு விளக்காகவும், சகல செயல்களுக்கும் சாதனமாகவும், எல்லா அறங்களுக்கும் பற்றுக் கோடாகவும் தத்துவம் எப்போதும் எண்ணப்படும்'' என்பார் சாணக்கியர். தத்துவத்துக்குத் தண்ட நீதி அளித்த உயர்வை இதிலிருந்து ஊகிக்கலாம்.

* மதம்-செல்வம் முதலியவற்றால் உண்டாகும் களிப்பு. இதனைச் செருக்கு என்னும் குறள். உலோபம்-இவறல்; பிறர் பொருள்மீது உண்டாகும் அவா. மாண்பில்லா மானம்-நன்மையில்லா மானம். கருதியது, செய்யத் தகாதது ஆயினும் முடிக்கத்துடிப்பது. இதனால் கெட்டவன் துரியோதனன். நன்மை செய்யா உவகை-எளியாரை அழித்த மகிழ்ச்சியால் வலியார் மீது சொல்லுதல். இதனால் கெட்டான் வாதாபி. பார்க்க: குறள் 431, 432: அர்த்தசாத்திரம் அதி. 1; அத். 6.

வெறுப்பான சொற்களையும் பொறுமையோடு கேட்கும் பண்பாளனையும், விழிப்போடு வினையாற்றித் தளர்ந்த குடிகளை தாங்குவோனையும் அரசன் விளங்க வேண்டுமென்பார் வள்ளுவர் (குறள் 386, 389, 390) மேலும்,

குடிதழீஇக் கோலேச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு* (544)

என்பார்.

''குடிமக்களுக்கு இன்பம் உண்டாயின் அரசனுக்கு இன்பம் உண்டாம். மக்கள் நலம் பெற்றால் அரசனும் நலம் எய்துவான். வேந்தனுக்கு விருப்பமான செயல் அவனுக்கு நன்மையாகாது. குடிகளுக்கு விருப்பமான செயலே அரசனுக்கு நலம் தருவதாகும்'' என்பார் சாணக்கியரும்.**

சீலம், செய்வினைத் திறன், செல்வாக்கு முதலியவற்றால் சிறந்த வேந்தனும் கூட்டொருவரை வேண்டானாகக் கோலோச்ச முடியாது.

''வண்டியுருள்கள் இரண்டில் ஒன்றின்றி மற்றொன்று சுழலாது; அதுபோல், அரசியல் துணைவலியின்றி நடைபெறாது. ஆதலால் அரசன் துணைவர்களை அமைத்துக் கொண்டு அன்னார் கருத்துக்களையும் கேட்டு ஒழுகுதல் வேண்டும்'' என்பார் சாணக்கியர்.***

சூழ்வார்கண் ணாக ஒழுகலான், மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல் @* (445)

என்பார் வள்ளுவரும். அறிவு சீலங்களால் உயர்ந்தோரைத் துணைவராகக் கொள்வது, கிடைத்தற்கரிய பேறு என்றும் அவர் அறிவுறுத்துவார் :

---

* தழீஇ-தழுவி.

** அதி. 1-அத். 19

*** அதி. 1-அத். 7.
துணைவர்-ஆசிரியர், அமைச்சர் முதலியோர்.

@* சூழ்வார்—சூழ்வோர்; அமைச்சர். சூழ்ந்துகொளல்—[அமைச்சருக்குரிய தகுதிகள் உடையரா என்று] ஆராய்ந்து தேர்ந்தெடுத்துக் கொள்ளல்.

அரியவற்றுள் எல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்.* (443)

சாணக்கியரும் (அதி. 1; அத். 9) தக்காரைப் புரோகிதராகவும் மந்திரியாகவும் கொண்டு, நீதிநூல் வழி ஒழுகும் அரசன், படைத்துணை இன்றியே எய்தற்கரிய வெற்றிகளை அடைவான் என்பார்.

'கொடுந்தண்டம் மக்களை நடுக்க முறுத்தும்'** என்பது சாணக்கியம். அது அரசற்கும் கேடுசூழும் என்பது வள்ளுவம்:

கடுமொழியும் கைஇகந்த தண்டமும் வேந்தன்
அடுமுரண் தேய்க்கும் அரம்.*** (567)

'குறைந்த தண்டம் அவமதிப்புக்குள்ளாகும், என்றார் சாணக்கியர். காமம், சினம் முதலியன போல், 'கழி கண்ணோட்டமும்'. 'அறம் தெரிதிகிரிக்குவழியடையாகும்'@* என்பார் பாலைக் கௌதமனார். கண்ணோட்டமில்லாத கண் புண்ணே (குறள் 575) என்ற போதும், முறை திறம்பும் வகையில் கண்ணோடாதும், முறைக்குக் குறை இல்லாத போது கண்ணோடியும் அரசன் ஆளவேண்டுமென்றே வள்ளுவர் கூறுவார்:

---

* தமராக்கொளல்—தமக்குச்சிறந்தாராகக் கொள்ளுதல். இங்குப் பெரியார் என்பது மந்திரி புரோகிதரைக் குறிக்குமென்று பரிமேலழகரும் மணக்குடவரும் உரைப்பர்.

** அதி. 1; அத். 4.

*** கை-செய்யத்தக்கது, உலக ஒழுக்கம். இகந்த-கடந்த அடுமுரண்—பகைவரை வெல்லும் வலிமை.

@* பதிற்றுப்பத்து 22. கண்ணோட்டம்—அருள், இரக்கம், தாட்சிணியம். கழிகண்ணோட்டம்—அளவு கடந்த கண்ணோட்டம். அறம் தெரிதிகிரி—அறத்தைத்தெரிந்து அதன் வழி செலுத்தற்குரிய ஆணைச்சக்கரம். வழியடை-தடை.

கருமம் சிதையாமல் கண்ணோட வல்லார்க்கு
உரிமை உடைத்துஇவ் வுலகு*. [578]

ஒருவன் செய்த குற்றத்தை அரசன் ஆராய்தல்வேண்டும்; அதன்பின், குற்றத்திற்குத்தக்க தண்டனையை நீதிநூலோரோடு ஆராய்ந்து முடிவுசெய்யவேண்டும்: அடுத்து அத்தண்டனையை நிறைவேற்ற வேண்டும். நண்பர் என்றோ உறவினர் என்றோ கண்ணோடாது, யாவர்க்கும் ஒரு தன்மையாக இம் மூன்று செயல்களையும் செய்வதே முறை, செங்கோன்மை, தகுதியான தண்டம் என்பார் வள்ளுவர்:

ஓர்ந்து,கண் ணோடாது, இறைபுரிந்து யார்மாட்டும்
தேர்ந்துசெய் வஃதே முறை** (541)

சாணக்கியருக்கும் இது உடன்பாடே. ''தகுதியான தண்டம் நன்கு மதிக்கப்படும். நூல்முறை 'வழுவாது, நன்கு நுனித்துணர்ந்து செலுத்தப்படும் தண்டம் மக்களை அறம் பொருளின்பங்களில் தலைப்படுத்தும்''*** என்பார்.

இவ்வாறு செய்யுங்கால் குற்றவாளிகளை ஒறுத்தல் அரசனுக்குப் பழியன்று; அதுவே அவனது தொழில்.

குடிபுறங் காத்து,ஓம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று, வேந்தன் தொழில் @* [549]

கொடியவர்களுக்குக் கொற்றவன் கொலைத் தண்டனை வழங்குவதும் குற்றமன்று. அது பசும்பயிரைக் காக்கக் களையினைப் பறித்து எறிவதற்கே ஒப்பாகும் என்றும் கூறுவார் [குறள் 550].

---

* கருமம்—முறை, தண்டம்.

** இறைபுரிந்து—'நடுநிலைமையைப் பொருந்தி' என்பார் பரிமேலழகர். 'தலைமையைப் பொருந்தி' என்பார் மணக்குடவர். தேர்ந்து—நீதி நூலாரோடு ஆராய்ந்து. செய்வஃதே—செய்வதே.

*** அதி. 1; அத். 4.

@* புறங்காத்து—பிறர் நலியாமல் காத்து.
ஓம்பி—தானும் நலியாது பேணி. குற்றம் கடிதல்—[அவர்களில் யாரேனும்] குற்றம் செய்தால், அவரை ஒறுத்தல். வடு—பழி.

## 7. அறம்கூறும் அவையம்

அறம்காத்துக் குற்றம் கடிவதில், வேதகாலத்தைப் போலவே சங்ககாலத்திலும், சபை [அவை] வகித்த பாத்திரம் பெரிது. தரும நூல் முறைப்படி நீதி வழங்கிய தால், அதனை அறம் கூறும் அவையம் என்றனர். அவையத் தார் தன்னலம் சிறிதும் கருதார்; குற்றத்தை மறைக்கும் விருப்போ, குணத்தை மறைக்கும் வெறுப்போ, வாதி, எதிர்வாதி, சாட்சிகளிடம் கொள்ளார். உண்மையை உள்ள வாறு அறிய முயல்வர்; நடுநிலையில் நின்றே தீர்ப்புக் கூறுவர். எனவே,

அச்சமும் அவலமும் ஆர்வமும் நீக்கிச்
செற்றமும் உவகையும் செய்யாது காத்து
ஞெமன்கோல் அன்ன செம்மைத் தாகிச்
சிறந்த கொள்கை அறங்கூறு அவையமும்.*

என்று மதுரைக்காஞ்சியில் மகிழ்ந்து மொழிவார் மாங்குடி மருதனுர். காமவெகுளி மயக்கங்களை நீக்கிய சான்ருேரே இவ்வாறு நீதி வழங்குவர். யாவர்க்கும் நலமே நாடும் அன்புநெறியில் அறங்காக்கும் திறன் அச்சான்ருேருக்கே உண்டு. அதனுல், சான்ருேரை அன்றிப் பிறரை அவை யத்தில் வைப்பது கொடுங்கோன்மையாகவே கருதப்பட்டது. எனவே, தன்னைத் தாக்க வந்தோரைப் புறங்காணேனுயின்? தகுதியற்ற ஒருவனை அவையில் நியமித்த கொடுங்கோலன் ஆவேன் என்று வஞ்சினம் கூறுவான் பூதப்பாண்டியன்.

அறநிலை திரியா அன்பின் அவையத்துத்
திறனில் ஒருவனை நாட்டி முறைதிரிந்து
மெலிகோல் செய்தேன் ஆகுக [புற நா. 71]

என்பது அவன் கூற்று.

---

* அடிகள் 489—492.

செற்றம்—மனவைரம். ஞெமன்கோல்—துலாக்கோல்.

நீதியைச் சுணங்கி வழங்குவதும் வழங்க மறுப்பதும் ஒன்றே என்று கூறும் ஆங்கிலப் பழமொழி. சங்ககாலச் சான்றோர் முறை செய்வதில் காலம் தாழ்த்தினரல்லர். அதனால், தம் வறுமையை விரைவில் போக்குக என்று சோழனை வேண்டிய பெருங்குன்றூர்க்கிழார்,

சான்றோர் இருந்த அவையத்[து] உற்றோன்
ஆசுஆகு என்னும் பூசல் போல
வல்லே களைமதி* [புறம் 266]

என்றார். தஞ்சம் வேண்டி வந்தவனுக்கு அவையத்தார் உடனே குறை தீர்ப்பதைப் போல், தம் இன்மைக் கொடுமையையும் விரைவில் களையும்படி வேண்டினார் புலவர்.

உறையூர் அவையத்தில் அறம் நின்று நிலைகொண்டிருப் பதாகப் பாடுவார் நப்பசலையார்:

மறங்கெழு சோழர் உறந்தை அவையத்[து]
அறம்நின்று நிலையிற்று** (புறம் 39)

நடுநிலை நழுவாது நீதி வழங்குவதைப் பெரிதும் போற்றினர் முன்னோர். அரசர் அநீதி செய்யத் துணிந்தா ரெனில், அதைத் தடுக்க முயன்றனர் சான்றோர். குலப் பகையினைக் கருதி மலையமான் மக்களை யானைக்காலில் இட்டுக் கொல்ல முயன்றான் கிள்ளிவளவன். அப்போது அவனுக்கு அறிவூட்டி அச்சிறுவர்களைக் காப்பாற்றினார் கோவூர்கிழார் [புறம் 46]. நெடுங்கிள்ளி ஒரு புலவனை ஒற்றனென்று அயிர்த்துக் கொல்லப்போக, அதனைத் தடுத்து அப்புலவனைக் காத்தவரும் கோவூர்கிழாரே (புறம் 47).

உண்மை தேராது, கோவலனைக் கொல்வித்த பாண் டியன், தன் இழிசெயலை உணர்ந்தவுடன்,

தாழ்ந்த குடையன், தளர்ந்த செங்கோலன்,
பொன்செய் கொல்லன் தன்சொல் கேட்ட

---

* ஆசு—பற்றுக்கோடு;
பூசல்—ஆரவாரம். வல்லே—உடனே.

** மறம்கெழு—வீரம்பொருந்திய. உறந்தை—உறையூர்

யானே அரசன்? யானே கள்வன்;
மன்பதை காக்கும் தென்புலம் காவல்
என்முதல் பிழைத்தது: கெடுகஎன் ஆயுள் என*

இயம்பி, அதிர்ச்சி தாங்காது மாண்டான். அதனைக் கேள்வியுற்ற செங்குட்டுவன்,

வல்வினை வளைத்த கோலை மன்னவன்
செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோல் ஆக்கியது**

என்று பாண்டியன் செயலைப் பாராட்டுவான்.

பாய்ந்து வந்த கன்று, மகன் ஓட்டிய தேரில் அகப்பட்டு மாய்ந்ததால், மகனையே தேர்க்காலில் இட்டுக் கொன்றான் மனுநீதி கண்ட சோழன். கிரந்தை என்ற ஏழை அந்தணனின் வீட்டுக் கதவை உண்மை அறியாமல் தட்டியதற்காகத் தன் கையை வெட்டிக்கொண்டு, அதன்பின் பொற்கை வைத்துக் கொண்டான் பொற்கைப் பாண்டியன். மன்னன் நீதிநூல் நெறி பிறழாது ஆளவேண்டுமென்ற உணர்ச்சியின் முனைப்பில் உருவான இரு கதைகள் இவை.

## 8. மூவகை ஆற்றல்

அரசுக்கு ஆற்றல் மூவகைத்து என்றனர் முன்னோர். அந்த மூவகையை மந்திர சக்தி, உற்சாக சக்தி, பிரபு சக்தி என்பர் வடநூலார். அவற்றை முறையே அறிவு, ஆண்மை, பெருமை என்பார் பரிமேலழகர். கருமத்தை எண்ணித் தொடங்குவதும் இடுக்கண் களைந்து இனிது முடிப்பதும் அறிவாம். அவ்வினையில் விடாமுயற்சியைத் தூண்டும் மனவெழுச்சி ஆண்மையாம். கருமத்துக்கு வேண்டும் பொருளும் படையும் பெருமையாகும். கொள்கை வகுத்தலாகிய மந்திர

* வழக்குரை காதை அடிகள் 73-77. தென்புலம்-பாண்டிய நாடு. என்முதல்-என்னை முதலாகக் கொண்டு.

** காட்சிக் காதை அடிகள் 98-99. வல்வினை-பழைய தீவினை. செல்லுயிர்-பிரிந்த உயிர்.

மும், ஊக்கமும், பொருள் படைகளும் ஒன்றையொன்று சார்ந்திருப்பதைத் தெளிவாக விளக்குவது திருக்குறள்.

கல்வி கேள்விகளால் பண்பட்ட அறிவுடையார் 'ஆவது அறிவார்*' என்றும்,

> அறிவுடையார் எல்லாம் உடையார்; அறிவிலார்
> என்னுடைய ரேனும் இலர்** (430)

என்றும் கூறுவார் வள்ளுவர். தக்காரை அமைச்சராக அடைவதே அறிவுடை அரசனின் முதற்பெருஞ் செயலாம். அன்பிற்கு உரியார் என்று அறிவிலாரை அமைச்சு முதலிய பொறுப்புக்களில் வைக்கக்கூடாது (507). அறிவோடு, உயர் குடிப்பிறப்பும், குணமிகுதியும், செயலாற்றலும் தலைமை வினையாளரின் தகுதிகளாம் (502, 504, 505). அவரவர் திறமைக்கு ஏற்ற பொறுப்பை ஒப்படைப்பது வேந்தன் கடமை (517).

தேர்ந்த அமைச்சரோடு ஆராய்ந்து செயலாற்றும் மன்னனுக்குக் கிட்டாத பொருள் யாதுமில்லை.

> தெரிந்த இனத்தொடு தேர்ந்துஎண்ணிச் செய்வார்க்கு
> அரும்பொருள் யாதொன்றும் இல்.*** (462)

நால்வகை வலியையும் இனத்தோடு நுனித்தாராய்ந்தே வெளிநாட்டுக் கொள்கை வகுப்பான் விவேகமுடைய வேந்தன்:

---

* 427ஆவது-நிகழக்கூடியதை. அறிவார்-முன்கூட்டியே எண்ணி அறிவார்.

** அனைத்துச் செல்வங்களையும் அறிவால் படைக்கவும் காக்கவும் முடியும்; எனவே 'அறிவுடையார் எல்லாம் உடையார்'. முன்பே அமைந்த செல்வத்தையும் அறிவிலார் இழப்பர்; எனவே அவர்கள் எல்லாம் உடையரேனும் ஒன்றும் இலர் ஆவர்.

*** தெரிந்த இனம்; தேர்ந்த அமைச்சர். அவர்கள் பலர் என்று சொல்ல 'இனம்' என்றார். அரசியற் காரியங்கள் யாவையும் எண்ணித் துணிந்து நடத்துவதற்கு அமைச்சர் அவை இருக்க வேண்டுமென்று வட நூல்கள் விளம்பும். எட்டு மந்திரிகளோடுசூழ்ந்தே

வினைவலியும் தன்வலியும் மாற்ருன் வலியும்
துணைவலியும் தூக்கிச் செயல்.* (401)

தன்வலியின் அளவறியாது, ஊக்கத்தால் சமர்செய்து அழிந்தவர் பலர் (471). வலிமிகுந்த நிலையிலும் போருக்கு ஏற்ற காலமும் இடமும் தேர்வது அறிவு. பகைவனது துணைவலியைச் சிதைத்தலும், தன்னரசின் துணைவலியைப் பெருக்கலும் அமைச்சின் பணி:

பிரித்தலும், பேணிக் கொளலும், பிரிந்தார்ப்
பொருத்தலும், வல்லது அமைச்சு.** (633)

---

வேந்தன் முடிவு செய்யவேண்டும் என்பார் பீஷ்மர் (சாந்தி. அத்தியாயம் 85). அமைச்சர்களோடு தனித் தனியேயும் அவைக் கூட்டத்திலும் ஆராய வேண்டுமென்று மனுவும் சாணக்கியரும் மொழிவர். அரசன் அருகிலுள்ள உறுப்பினரோடு கலந்தும் சேய்மையிலுள்ளாரோடு கடிதம் போக்கியும் ஆலோசனை செய்ய வேண்டுமென்றும் கூறும் சாணக்கியம். அமைச்சரைக் கண்ணுக உடையவன் அரசன் என்று வள்ளுவமும் (445) சாணக்கியமும் (அதி. 1 அத். 15) ஒருங்கு மொழிவன. இந்திரனுக்கு ஆயிரம முனிவர்கள் அமைச்சராக உளர் என்பதால், அவனை ஆயிரம் கண்ணன் என்பர் என்றும் சாணக்கியர் கூறுவார்.

* வினைவலி-காரியத்தின் வலிமை. ஏனைய மூன்று வலிகளும், மந்திர சக்தி, பொருள் படைகள், ஊக்கம் ஆகியவற்ருல் சிர்தூக்கிப் பெறுவன.
துணைவலி-நட்பரசரது வலிமை.

** பிரித்தல்-பகையரசரின் துணைவரை அவரிடமிருந்து பிரித்தல். பேணிக்கொளல்-தமரைப் பிரியாமல் பேணுதல். தானம், சாமம் என்ற கொடை இன்சொற்களால் பேணுதல் என்பார் பரிமேலழகர். இது நேரிதே; சுற்றம் பேணவே சாம தானங்களைக் குறள் கூறுவதால் (525). பிரிந்தார்ப் பொருத்தல்-முன்னே தம்மினும் பிரிந்தாரை மீண்டும் நட்பாக்கல். பிரித்தலை விக்கிரகம் என்றும் பொருத்தலைச் சந்தி என்றும் கூறுவர் வடநூலார்.

நட்பிற்கு ஆவாரை ஆராய்ந்து, மாசற்றார் கேண்மையை மருவியும் (800), பேதையர் நட்பை விலக்கியும் (797). பகைவர் நண்பராக நடிக்கும்போது, உள்ளத்தில் நட்புக்கொள்ளாது, இன்சொல் கூறியும் சிரித்தும் முகத்தால் நட்புச் செய்தும் பணியாற்றல், அமைச்சுத் தழுவிய அரசின் வெளிநாட்டுக் கொள்கைக் கூறுகளாம். உள்நாட்டுக் கொள்கையில், நீதி செய்தலோடு, உழவு முதலியன மூலம் செல்வத்தைப் பெருக்குவதற்கு அமைச்சரும் பிறரும் ஆவன அறிந்து செய்வதும் இடம் பெறும் (512). வறியவர்க்கு ஈதல் முதலிய செலவுகளை அளவாகச் செய்வதற்கு, அரசன் பொருள்வலி அறிதல் வேண்டும் (477-480).

மந்திர சக்தி சித்தி பெறுவதற்கு, ஒற்றர் மூலம் உலக நடப்பை அறிவான் அரசன். ஒற்றும் நீதி நூலும் கொற்றவனுக்குக் கண்களாம் (581) பகைவர், நண்பர், இருவருக்கும் ஒத்து ஒழுகும் நடுவன், ஓர் இயைபும் இல்லானை நொதுமலன் என்ற நால்வகை அரசர்க்கும் அவரது சுற்றத்தார்க்கும் நிகழ்வன எல்லாம் விரைந்து அறிவது வேந்தன் பணி:

> எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும்
> வல்லறிதல், வேந்தன் தொழில்.* (582)

ஒற்றர் இலராயின் வெற்றி இல்லை (583). அரசன் தன் உறவினரையும் வினையாளரையும் உள்நாட்டு விரோதிகளையும் ஒற்றுட வேண்டும்(584). முற்றும் துறந்த முனிவர் வேடத்திலும் ஒற்றர் பணியாற்றுவர் (587). ஒருவனை ஒருவன் அறியாது ஒற்றரை ஆண்டு, வேறுவேறு சென்ற மூன்று ஒற்றர் ஒரு பொருளைப் பற்றி ஒப்பக் கூறினால், அது மெய் யென்று தெளிவான் அரசன் (589). ஒற்றர்க்குச் சிறப்புச் செய்யுங்கால், பிறர் அறியாமல் செய்து, மறை காக்கவேண்டும் (590)**

---

* எஞ்ஞான்றும்-எப்போதும். வல்அறிதல்-விரைவில் அறிதல்.

** ஒற்றரைப் பற்றி வடநூலாரும் இவ்வாறே கூறுவர். ஒற்றரைப் பலவகைப்படுத்துவார் சாணக்கியர். தவமுதுமகளிரையும் ஒற்றராகக் கொள்கவென்பார்.

மந்திர சக்தியில்லாத மன்னனின் உற்சாக சக்தியால் பயனில்லை. ஆனால் நாலுப் ஒற்றும் கண்ணெனக் கொண்டு, அமைச்சரோடு உசாவி வினையாற்றும் வேந்தனுக்கு ஊக்கம பெரும்பயன் தரும். ஊக்கத்தின் அளவே உயர்வு:

வெள்ளத்து அனைய, மலர்நீட்டம்; மாந்தர்தம்
உள்ளத்து அனையது உயர்வு.* (595)

இடைஇடையே சோம்பல் வருவதைத் தவிர்த்து, இடைவிடா முயற்சியில் ஈடுபடுத்துவது ஊக்கம். விதியே எதிர்த்தாலும், விடா முயற்சியால் வெற்றி காணலாம் (620).

அறிவும் ஊக்கமும் உடையான் இடுக்கண்களைக் கண்டு மனமுடையான்; அவற்றைக் கடந்து வினைமுடிப்பான்.

மந்திர சக்தியும் உற்சாக சக்தியும் பிரபுசக்தியென்ற கருவியைக் கொண்டே செயல்படமுடியும். பொருளும் படையும்" கருவிகளாம். எந்நலம் உடையரேனும், ''இல்லாரை எல்லாரும் எள்ளுவர்''; வேறு நலம் வாய்த்திராரேனும், ''செல்வரை எல்லாரும் செய்வர் சிறப்பு'' (752). அரசுக்குப் பொருள் நான்கு வகைகளில் கிடைக்கும். கூலத்தில் ஆறிலொரு பங்கைத் தருவர் குடிகள். அதுதவிர, கலத்தினும் காலினும் வரும் பண்டங்கட்கு இறையாக அவன் பெறுவது சுங்கம்; பகைவரை வென்று அவன் பெறுவது திறை; உடையார் இறந்து நெடுங்காலம் ஆனபின்னர் கண்டெடுக்கப்பெறும் புதையலும் அவனையே சேரும் (756), வினைவும் வாணிகமும் பெருகுவதற்குத் தக்க வினையாற்றியே வேந்தன் தன் வருவாயைப் பெருக்க வேண்டும். மாறாக இறைவிகிதத்தை உயர்த்துவதோ 'நன்கொடை' கேட்பதோ அரசர்க்குப் பொருந்தாது. கோலேந்திய மன்னன் குடிகளிடம் இரப்பது, காட்டுப்பாதையில் வேலோடு நின்ற கள்வன், கைப்பொருளைத் தாவென்று வழிப்போக்கனை வேண்டுவதற்கு ஒப்பாகும்:

---

* நின்ற நீரின் அளவு நீர்ப்பூவின் தாள் நீளும். அதுபோல் ஊக்கத்தின் அளவு மக்கள் உயர்வர். உள்ளம்-ஊக்கம்.

வேலோடு நின்ருன் இடுவென் றதுபோலும்
கோலொடு நின்ருன் இரவு. (552)

தாராவிடில், கொல்வேன் என்பது குறிப்பாதலால், கொற்றவனது இரவு கொடுங்கோலாகும். அரசனின் அருளுக்கோ குடிகளது அன்புக்கோ குறைவு வரும் வகையில் வேந்தன் பொருள் தேடக்கூடாது (755). முறையாகப் பெறும் பொருளால், அறமும் இன்பமும் எய்துவான் அரசன்:

அறன்ஈனும், இன்பமும் ஈனும்; திறனறிந்து,
தீதுஇன்றி வந்த பொருள்.* (754)

அரசுக்குப் பொருள் பெருகிஞல், படையும் பெருகும், நட்பும் கூடும். எனவே பகைவரின் செருக்கை அறுப்பதற்கு அதனினும் கூரிய படைக்காலம் இல்லை:

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்.
எஃகுஅதனின் கூரியது இல்.**

பொருளால் ஆவது*** படை. யமனே வெகுண்டு வந்தாலும், ஒருமனப்பட்டு எதிர்நிற்கும் ஆற்றலை உடையதே படையாம் (765). வீரம், மானம், கருணைவீர மரபு, தெளிவு என்பன படைக்கு அரணுகும் பண்புகளாம். அஞ்சாமை என்னும் வீரத்தைப் பேராண்மை என்பர்; எதிரி தாழ்வுற்ருல், அவனுக்குக் கருணை செய்யும் வீரத்தைப் பேராண்மையின் கூர்மை என்பர்:

பேராண்மை என்ப, தறுகண்; ஒன்று உற்றக்கால்,
ஊராண்மை மற்றுஅதன் எஃகு.@* (773)

---

* ஈனும்-கொடுக்கும். திறன்-செய்யும் திறன். தீது இன்றி-முறைதவருது, பிறர்க்குத் தீமை செய்யாது.

** செறுநர்-பகைவர். எஃகு-ஆயுதம்.

*** யானை, குதிரை, தேர், காலாள் என்ற நான்கு வகையானது படைஎன்றே ஆரியமும் தமிழும் கூறும்.

@* தறுகண்-அஞ்சாமை என்ற வீரம். ஒன்று-(இங்குத்) தாழ்வு. ஊராண்மை-கருணை வீரம். அதன் எஃகு-வீரத்தின் கூர்மை. முதல் நாள் போரில், தானையும் தேரும் இழந்து, தனியனுய் தரையில் நின்ற தசமுகனை 'இன்றுபோய்ப் போர்க்குநாளை வா' என்ருன் இராமன். அது கருணை வீரம்.

# 9. நாட்டுக்கு இலக்கணம்

பிரபுசக்தியான பொருள்படைகளை ஆக்கும் இடம் நாடு. எனவே அதனை ஆட்சியின் ஏழு உறுப்பில் ஒன்று என்பர். ஆயினும், நாடு வாழ் குடிகளுக்காகவே நல்லாட்சி தோன்றியதால், ஆட்சிக்கு ஆதாரம் நாடே ஆம். இதனைத் தெள்ளிதின் உணர்ந்து, நாட்டுக்கு இலக்கணம் வகைந்து கூறுவது வள்ளுவம்.

நாட்டுக்கு முதற்தேவை உழவரே. அவர் 'உலகத்தார்க்கு ஆணி' *(1032)*. உழவர் ஓய்ந்தால் துறவிக்கும் துன்பம். வேந்தனுக்கு வெற்றி தருவதும் அவரே.*

செயற்கரிய செய்தும் *(26)* மறைமொழி வழங்கியும் *(28)*, எவ்வுயிர்க்கும் அருள் சுரந்தும் *(30)* உலகை உய்விக்கும் முனிவரும் நாட்டுக்குத்தேவை. செல்வரும் வேண்டும்தான்; ஆனால் அவர்கள், நிலத்துக்குச் சுமையான உலோபிகளாயிராது *(1003)*, ஈத்துவக்கும் சீருடைச் செல்வராயிருத்தல் வேண்டும். எனவே உழவரும் தக்காரும் தாழ்விலாச் செல்வரும் ஒருங்குவாழ்வதே நாடு என்பார் வள்ளுவர் :

---

* பலகுடை நீழலும் தம்குடைக்கீழ்க் காண்பர்
அலகுஉடை நீழ லவர். *(1034)*

(பலகுடை-பலவேந்தர்குடை. தம்குடை-தம் அரசன் குடை.அலகுஉடை நிழல்அவர்-(தானியக்) கதிர் உடைய அருளாளர்-உழவர்]

பொருபடை தருஉங் கொற்றமும் உழுபடை
ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே,

என்றார் புறநானூற்றுப் புலவரும் *(35)*. (பொருபடை-போர்ப்படை. தருஉம்-தரும். கொற்றம்-வெற்றி. உழுபடை-கலப்பை. ஊன்றுசால் மருங்கின்-உழுதஇடத்தில். ஈன்ற-விளைந்த) இளங்கோ அடிகளும், ''இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும், உழவிடை விளைப்போர்'' என்றார் (நாடுகாண். *149-150*)

தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு.* *(731)*

எதிர்பாரா நெருக்கடியால் ஏறும் சுமையைத் தாங்கி, இறையும் செலுத்தி, அரசோடு இசைந்து வாழும் குடிகளை உடையது நாடு *(733)*. மேலும்,

உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேரா(து) இயல்வது நாடு.** *(734)*

பகைத்து நிற்கும் பல குழுவும், உறவாக நடிக்கும் உட்பகையும், கொல்வினைக் குறும்பரும் இல்லாதது நாடு *(735)*. நீர் நிலமலை வளங்களும் அரணும் நாட்டுக்கு உறுப்பு *(737)*. அமைதியும் வளமும் உழைப்பும் குணமும் விளக்கம் பெறும் நாட்டின் மக்கள் நோயற்ற வாழ்வும் குறைவற்ற செல்வமும் அளவற்ற இன்பமும் துய்ப்பர் *(738)*. ஆனால் அனைத்து நலங்களும் பல்கிப் பெருகியிருந்தாலும், அரசனுக்கும் குடிகளுக்கும் இடையே அன்பு இல்லையென்றால், அந்நாடு ஒரு பயனும் எய்தாது:

ஆங்குஅமைவு எய்தியக் கண்ணும் பயம்இன்றே—
வேந்துஅமைவு இல்லாத நாடு.*** *(740)*

## 10. தல ஆட்சி முறை

குடிமக்களின் தலைவர்கட்குத் தல ஆட்சியில் பங்கு தந்தது இந்திய அரசியல். பாடலிபுரத்தில் முப்பதுபேரைக் கொண்ட நகராட்சிக் குழு இருந்ததென்றும், அது ஆறு உட்குழுக்களாகப் பிரிந்து வெவ்வேறு பணிகளைப் புரிந்த

---

* தள்ளா விளையுள்-எல்லா உணவுகளும் நிறைய விளைதல்.
இங்கு, விளைவிக்கும் உழவரைக் குறிக்கும். தக்கார் - அறவோர். தாழ்வு-இரக்கமில்லா உலோபம்.

** உறுபசி-மிக்க பசி. ஓவா-நீங்காத. செறுபகை - அழிவுசூழும் அயலரசுப்பகை.

*** ஆங்கு அமைவு எய்தியக் கண்ணும்-மேற்சொன்ன குணங்கள் யாவும் நிறைந்திருந்தாலும், பயம் இன்றே- பயனுடையதன்று; வேந்து அமைவு-வேந்தனோடு

தென்றும் மெகஸ்தனிஸ் மொழிவான்.* முக்கியமான சாதிகளின் அல்லது தொழில் அணிகளின் (guilds) தலைவர்களைக் கொண்ட குழுவிடம் கலந்தே, மாவட்ட அதிகாரி முடிவு எடுத்தார் என்று குப்தர்காலக் கல்வெட்டுக்களிலிருந்து அறியப்படும். தலஆட்சியில், மாவட்ட அளவில் அமைந்த ஜனபதமும் நகர அளவில் அமைந்த பௌரமும் அதிகாரிகளோடு பங்கு கொண்டன என்று இவையனைய விவரங்களிலிருந்து ஊகிக்க இடமுண்டு. மேலும், பௌரஜனபதங்களால் அரசை ஆக்கவும் கெடுக்கவும் முடியுமென்பதால் அவற்றின் ஆதரவைப் பெற்றுப் போற்ற வேண்டுமென்று அரசனுக்கு அறிவுறுத்துவார் வாமதேவர்**. அவற்றின் நம்பிக்கையைத் தரும வழியில் அடைந்தவனே மந்திரியாக

---

மேவுதல், அதாவது, வேந்தனைக் குடிகள் நேசித்தல். அரசன் குடிகளைத் தழுவிக் கோல் செலுத்தும்போதே, அவர்கள் அவனை நேசிப்பர். எனவே,

''கொடியன்எம் இறைஎனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக (புறநா. 72)

என்று வஞ்சினம் புகன்றான் நெடுஞ்செழியன். அருளும் அன்பும் நீக்கியோர் நீங்கா நரகத்தில் துன்புறுவர் என்றும், அவரோடு சேராது, குழந்தையை வளர்ப்பாரைப் போலக் குடிகளைப் பேணுவாயாக என்றும் சேரனுக்கு அறிவு கூறினார் நரிவெரூஉத்தலையார்:

அருளும் அன்பும் நீக்கி நீங்கா
நிரயம் கொள்பவரொ(டு) ஒன்றாது காவல்
குழவி கொள்பவரின் ஓம்புமதி. [புறநா. 5)

நிரயம்-நரகம். ஒன்றாது-பொருந்தாது. காவல்-உன் காவலுக்குரிய நாட்டை.

* மெகஸ்தனிஸ் : கி. மு. 300 அளவில் சந்திரகுப்த மௌரியனது அரசவைக்கு வந்து சிலகாலம் தங்கிய கிரேக்க தூதன்.

** சாந்தி. அத். 94.

வேண்டுமென்பார் பீஷ்மர்.* இராமனுக்கு முடி சூடுவதைப் பற்றி முடிவு செய்வதற்காகத் தயரதன் கூட்டிய அவையில் பௌரஜனபதங்களின் தலைவர்களும் கலந்துகொண்டு கருத்துத் தெரிவித்தனர் என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கது**

தமிழகத்தில், விஜயாலய சோழர் காலத்தில் தலஆட்சி சிறப்பு எய்தியது. வணிகர்கள் அதிகமாக வாழ்ந்த பேரூர்களில், அவர்தம் பேரவையான நகரம், தலஆட்சியை நடத்தியது. பிரதேச அளவில் அமைந்த மக்கள் மன்றத்தை நாடு என்று குறிப்பிடும் சோழர் காலச் சாசனம். நிலங்களைத் தரவாரியாக வகை செய்தல், கடமை என்ற நிலவரியின் விகிதங்களைக் கணித்தல், விளைச்சல் குன்றிய ஆண்டில் கடமையைக் குறைக்க வேண்டுமென்று அரசோடு மன்றுடுதல் முதலியன நாடு ஆற்றிய பணிகள் என்றும், கிராம சபைகளின் பிரதிநிதிகளே நாடாகக் கூடினராகலாம் என்றும் ஊகிப்பார் பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரி.௬*

## 11. தென்புலத்தின் ஊராட்சிச் சிறப்பு

ஊராட்சியைப் பற்றித் திருக்குறள் யாதும் கூறவில்லை. கிராமத் தலைவன் என்ற அதிகாரியைப் பற்றியே சாணக்கியரும் மனுவும் பீஷ்மரும் பேசுவர், ஆயினும் ஊராட்சிக் கழகமே இந்திய ஆட்சி முறைக்கு அடிப்படையாக விளங்கியதென்பது தெளிவு. ஓயாப் போர்களுக்கும் அரசவமிச மாறுதல்களுக்கும் இடையில், சமுதாய வாழ்வைக் குலையாது பேணியது கிராம சபையே.

வடபுலத்தில் பண்டைய நாளில் கிராம சபை எவ்வாறு அமைந்ததென்பதை நாம் அறிவதற்கில்லை. பின்னாளில் அது ஐவரின் குழுவான பஞ்சாயத்தாகச் சிறந்தது என்பது உறுதி. தமிழகத்தில், கிராம மக்கள் மன்றத்தில் கூடிச் சமுதாய,

---

* சாந்தி. அத். 83.

** வான்மீகி ராமாயணம். அயோத்தியா காண்டம் 2ஆம் சருக்கம்.

௬* The Colas, pages, 504, 505.

அலுவல்களைக் கவனித்தனரென்று சங்க நூல்களிலிருந்து உய்த்துணர்கிறோம். எட்டாம் நூற்றாண்டின் இறுதியில் ஏற்பட்ட பாண்டியர், பல்லவர் கல்வெட்டுக்கள் கிராம சபைகளைப் பற்றிச் சிறப்பாகச் செப்புகின்றன. விஜயாலய சோழர்காலத்துக் கல்வெட்டுக்கள், ஊர், சபை என்ற கிராம ஆட்சிக் கழகங்களைப் பற்றித் தெளிவாகவும் விரிவாகவும் பேசுகின்றன. உத்தரமேரூர் சபையில் முப்பது உறுப்பினர் இருந்தனரென்றும், அவர்கள் வட்டத்துக்கு ஒருவராகக் குடவோலை முறையில்* தேர்ந்தெடுக்கப்பட்டனரென்றும் அறிகிறோம். அச்சபை ஐந்து உட்குழுக்களாகப் பிரிந்து வெவ்வேறு பணிகளை நிறைவேற்றியது. வீடும் கொஞ்சமேனும் நிலமும் உடையவர்களே சபை உறுப்பினராவதற்குத் தகுதி உள்ளவராகக்கருதப்பட்டனர். ஓராண்டுச் சபையில் அங்கம் வகித்தவர் அடுத்த மூன்றாண்டுக்குச் சபையில் இடம் பெறமுடியாது. ஒழுங்கீனத்தையும் ஊழலையும் தவிர்க்க, வேறுசில முறைகளும் வகுத்திருந்தனர்.

ஊர், சபை என்ற கிராம மன்றங்கள், நீர்ப்பாசனம், சாலை அமைப்பு முதலிய பணிகளை நிறைவேற்றின; வழக்குகளை தீர்த்தும், குற்றங்களுக்குத் தண்டனை விதித்தும் நீதி பரிபாலனம் செய்தன; அரசனின் பிரதிநிதியோடு கிராமம் செலுத்த வேண்டிய வரியினைப் பற்றிப் பேச்சுவார்த்தை நடத்தியதும் கிராம சபையே. கிராம நிலச்சுவான்தார்களிடமிருந்து நிலவரியைக் கணித்துவசூல் செய்ததும் அதுவே. நிலங்களின் விற்பனை வாங்கல்களை அதுவே கண்காணித்தது. தரிசு நிலங்கள் அதன் ஆதீனத்திலேயே இருந்தன. கிராம வாழ்வின் மையமாக விளங்கிய கோயிலின் நிர்வாகத்தில் கிராமசபை வகித்த பாத்திரம் சிறப்பானது. இராமாயணம், மகாபாரதம், புராணங்கள் ஆகியவற்றைக் கதை சொல்வோருக்கு இறையிலி நிலம் ஒதுக்கியது கிராமசபை. ஓதுவார் முதலியோரும் கிராமசபையின் உதவியினைப் பெற்றனர்.

---

* பெயர்களை எழுதிய ஓலைத் துண்டுகளை ஒரு குடத்தில் இட்டுச் சிறு குழந்தையைக் கொண்டு எடுக்கச் செய்யும் தேர்தல் முறை.

ஆடல், பாடல் விளையாட்டுக்கள் முதலானவற்றுக்கு ஊக்கம் தந்தும், சமுதாய விவகாரங்கள் அனைத்தையும் மேற்பார்வை செய்தும் கிராமத்தில் ஒற்றுமைக்கும் பண்பாட்டுக்கும் நிலைக் களமாகத் திகழ்ந்தது ஊராட்சிக்கழகம். ஆக, இந்திய அரசியலுக்குப் பெருமைதரும் சிறப்புக்களில் சோழர் கால ஊராட்சிமுறை ஒன்று என்பது உறுதி.

## 12. முடிவுரை

வேதமும் தவமும்போல், மழையும் கற்பும்போல், செங் கோலும் இறைமைக்கு உரியது என்ற தத்துவத்தை, விஞ்ஞான அறிவு ஏற்காது என்பது மெய்யே. ஆயினும், அது நாட்டுக்கு நன்மையே செய்த கோட்பாடு என்பதை மறுக்க முடியாது. அரசனுக்குத் தெய்விக உரிமை கற்பித்து, அவன் நாட்டு மாந்தரை ஆட்டு மந்தையாக நடத்துவதற்கு வழிசெய்த மேனாட்டுக் கொள்கை* போலல்லாது, குடி யோம்பும் தருமத்துக்கே தெய்விகம் கற்பித்து, அதனைச் செய்து இறைப்பொருளைக் கூலியாகப் பெறும் பணியாளனா கவே அரசனைக் கருதியது இந்திய அரசியல். அந்தத் தொண் டினை இயற்றுவதன் மூலமே அவனுக்குத் தெய்விகம் உண்டா கும். "அறவேந்தன் தேவர்களோடு சேர்கிறான்; அல்லா தவன் அரக்கரோடு சேர்கிறான்" என்று காமாந்தகர்** கூறு வதில் அனைத்து நூலோர்க்கும் உடன்பாடே.

---

* கடவுளுக்கு அடுத்த நிலையிலுள்ள பிரதிநிதியே அரசர் என்பதும், அதனால் குடிகள் அவருக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டுமென்பதும் தெய்விக உரிமையின் கருத் தாகும். அரசர் கடவுளுக்கே பொறுப்பாளர், குடிகளுக்கு அல்லர் என்பது இதன் உட்கருத்து.

** இவர் இயற்றிய நூல் 'நீதி சாரம்'. அது சாணக்கியரது அர்த்த சாத்திரத்தின் பெரும்பகுதியைச் சுருக்கித் தரும் வழிநூலாகும். காமாந்தகர் குப்தர் காலத்தில் வாழ்ந்தனராகலாம் என்பர்.

அரசனைச் சட்டத்தின் கர்த்தாவாக அல்லாமல் அனாதியான அறத்தின் காவலனாகவே முன்னோர் கருதியதால், கொள்ளுவன கொண்டும், தள்ளுவன தள்ளியும், புதியன படைத்தும் நாட்டை முன்னேற்ற முடியாமல் போனது என்பார் உளர். ஆனால் தொன்மைத் தொடர்பைப் பேணும் போதே, காலத்துக்கேற்ற மாற்றம் கண்டு பன்னூறு ஆண்டு வளர்ந்த வரலாறே அந்தக் கருத்துக்குத் தக்க மறுப்பாகும். பின்னாளில் ஏற்பட்ட தேக்கத்துக்கு அரசின் அதிகார வரம்பு காரணமாகாது. பார்க்கப் போனால், ''வேந்தனே காலத்துக்குக் காரணன்'' என்பார் பீஷ்மர். கிருத, திரேதா, துவாபர, கலியுகங்களைக் காலமுறைப் பிரிவுகளாகக் கருதாது அரசின் கொள்கைகளைப் பொறுத்தவையாகக் கொள்வார் பீஷ்மர்.* மனுவுக்கும் அது உடன்பாடே.

அறிவின்மையாலும், சோம்பலாலும், அரசன் நீதியை நிலைநாட்டாதபோது கலியுகமும்,

அவன் நியாயமறிந்தும் நீதி செய்யாதபோது துவாபர யுகமும்,

நீதியை நிறுத்துவதில் ஊக்க முடையானாயின் திரேதா யுகமும்,

அறம் பிழையாதுத் தானும் ஒழுகி மக்களையும் ஒழுகச் செய்யின் கிருதயுகமும்

தோன்றுகின்றன என்று விளக்கம் தருவார் மனு.** காலங்கடந்த பழக்க வழக்கங்களை நீக்குவதற்கும், பழைய நூல்களைப் போற்றும் போதே அவற்றுக்குக் காலத்துக்கு ஏற்ற விளக்கம் தந்து மாற்றம் காண்பதற்கும் சான்றோர் உதவினர். எனவே, அறநூலோடும் மரபோடும் ஆன்றோர் கருத்தும் சட்டத்தின் தோற்றுவாய் ஆயிற்று. இவ்வழியிலேயே, ஏற்றம் உடைய காலங்களைக் கண்டது இந்திய வரலாறு.

---

* சாந்தி. அத். 69.

** அத். 9; சுலோகம் 302. யுகங்களுக்குப் பீஷ்மர் தரும் விளக்கம் சிறிது மாறுபட்டது.

சமுதாய வாழ்வு முழுவதையும் தழுவும் தன்மையதாக அரசு திகழவேண்டுமென்றே சாற்றும் தண்ட நீதி. மக்கள் மனநலமும் பொருள் நலமும் பெற்று வாழ்வதற்கு வழி செய்வதே அரசின் பணி என்பர் நூலோர். ஏரிகுளங்களை அமைத்தும், சாகுபடியாகும் நிலத்தை அதிகரித்தும், விதைக்குத் தானியம் கடனாகக் கொடுத்தும், அரசு உழவருக்கு உதவ வேண்டுமென்பார் பீஷ்மர். புன்செய் நிலம் அகன்றதாயினும் பயன் குறைவு என்றும், நீர்ப்பாசனத்துக்கு வசதி செய்து நன்செய் வளத்தைப் பெருக்க வேண்டுமென்றும் நெடுஞ்செழியனுக்கு அறிவுரை கூறுவார் குடபுலவியனார்.* கரிகாற்சோழன்,

காடுகொன்று நாடாக்கிக்
குளந்தொட்டு வளம் பெருக்கி**

நலம் புரிந்தானென்பார் உருத்திரங்கண்ணனார். எனவே, அமைதி காத்தலோடு (பாலனம்) நில்லாது, ஆக்கநலத்தை (யோக க்ஷேமம்) உறுதி செய்யவும் அயராது உழைத்தல் அரசின் பணி என்றார் சாணக்கியர். தரிசு நிலத்தில் புதிய குடியிருப்புக்களை அமைத்தும், அணைக்கட்டு, ஏரி முதலிய நீர்ப்பாசன வசதிகளை நிறுவியும், கால்நடைகளுக்கு மேய்ச்சல் நிலம் ஏற்படுத்தியும், வணிகத்துக்கு வசதியான போக்குவரத்துப் பாதைகளைப் படைத்து அவற்றில் உயிருக்கும் உடைமைக்கும் பாதுகாப்பு அளித்தும், சுனியங்களை வெட்டி எடுத்து உலோகங்களைப் பிரித்தெடுக்கும் தொழிலை மேற்கொண்டும், ஆதரவு இல்லாத சிறுவர் முதியோர் ஏழைகள் முதலானோரைக் காப்பாற்றியும், நாட்டு நலம் நாட வேண்டுமென்பது சாணக்கியம்.௭* இறைப் பொருளைப் பெற்றுப் படை திரட்டுவதோடு ஒடுங்காது, நம் காலத்தில் நயத்தக்க

---

* புறநானூறு 18.

** பட்டினப்பாலை 283—284. கொன்று—அழித்து. வெட்டி. நாடுஆக்கி-விளைவயல் உடையதாகச் செய்து, தொட்டு-தோண்டி.

௭* அதி. 2—அத்தியாயம் 22.

நாகரிகமாகக் கருதப்பெறும் ஆக்கநல அரசுக்* கொள்கையைப் பண்டைய பாரதம பயின்றது என்று புகன்றல் அது மிகையாகாது. மேலும், அதிகாரமெல்லாம் ஒரு மையத்தில் குவியாது, பரவலாக அமைவதற்கு ஊர், தொழில், சாதி முதலியவற்றின் அடிப்படையில் தன்னுட்சிக் கருவிகள் அமைந்தன என்பதும் குறிப்பிடத்தக்கது.

அறப்போரே சிறந்தது என்பதில் முன்னோர்க்கிடையே கருத்து வேற்றுமையில்லை. இன்ன இடத்தில் இன்ன காலத்தில் போர் செய்வோமென்று வரையறுத்துக் கொண்டு அமர் நிகழ்த்துவதே அறத்தின்பாற்பட்டது என்பார் சாணக்கியர்.** மேலும், களத்தில் போர் செய்யும்போதும் கோட்டையைத் தாக்கும்போதும், கீழே விழுந்தவன், புறங்காட்டி ஓடுவோன், தஞ்சம் புகுந்தவன், போர் செய்யாதவன், படைக்கலத்தைத் துறந்தவன், அச்சத்தால் தோற்றம் மாறியவன் முதலியோரைத் தாக்கலாகாது என்றும் அவர் மொழிவார்.*@ கருணை வீரத்துக்கு ஏற்ற இத்தகைய விதிகளையே மனுவும் வகுப்பார்.@* இந்தக் கொள்கையினை ஊராண்மை என்று போற்றுவார் வள்ளுவர் (773).

எதிரியின் வலிமை மிகுந்தும், காலமும் இடமும் பாதகமாயும் உள்ள நிலையில், கூட யுத்தம் (வஞ்சனைப் போர்) செய்வதைச் சாணக்கியம் ஆதரிக்கும். பின்வாங்குவதாக நடித்து, துரத்திவரும் படைகளை வாய்ப்பான இடத்தில் தாக்குதல்; அணிவகுத்த எதிரிப்படையை யானைகளால் சிதறச் செய்தல்; பகைவர் நாட்டுப் பசுக்களைக் கவர்ந்தும் விலங்குகளைக் கொன்றும் பகைவரை அவற்றுக்கு மாற்றம் புரியுமாறு இழுத்துக் காட்டில் மறைந்து தாக்குதல்; அங்குமிங்கும் உறங்கியவரைக் கவர்தலால் உண்டாகும் அச்சங் காரணமாக இரவில் விழித்திருக்கச் செய்து, அதனல் களைத்தவர்களைப் பகலில் தாக்குதல்; இரவில் யானைகளோடு எதிர்பாராத் தாக்குதல் தொடுத்தல்; இந்தத் தந்திரங்

---

* Welfare state.

** அதி. 10; அத். 131.

*@ அதி. 13; அத். 144.

@* அத். 7; சுலோகங்கள் 91, 95.

களையும் யுத்தத்துக்கு உரியன என்பார் சாணக்கியர் * இவை யெல்லாம் அன்றும் இன்றும் போர் முறைக்கு உரியனவாகப் பயிலப் பெறுவனவே; ஆயினும், அரசின் நலன்கருதி, நஞ்சாலும் நெருப்பாலும் சூனியத்தாலும் அறமிலாரைவருத்தித் தொலைப்பதும் அறவேந்தனுக்கு ஏற்புடைத்தே என்பார் சாணக்கியர்.** மறமே ஆயினும், நோக்கத்தின் நன்மையைக் கருதி இந்தப் போக்கினைத் தழுவலாமென்பது அவர் காட்டும் அமைதி. குறிக்கோளின் உயர்வைக் கருதிக் குறுநெறியிலும் படரலாம் என்ற கொள்கையின் வல்லியல் வெளியீடே இது.

அரசின் தலைமையான நலனுக்குக் கேடு நேரும் நிலையில், இவ்வாறு அறம் அல்லன சில செய்யும் அவலம் நேர்கிறது என்பது உண்மையே. அர்த்த சாத்திரம் தோன்றிய காலத்தில், அன்னிய நாடுகளில் அலெக்சாந்தர் முதலானவர்கள், நகரங்களை முழுமையாகப் பாழாக்கியும், ஆடவர் அனைவரையும் கொன்றும், பெண்களையும் குழந்தைகளையும் அடிமை கொண்டும் இழைத்த கொடுமைகளோடு ஒப்பு நோக்கும் போது, சாணக்கியத்தின் மேன்மை புலனாகுமென்பதும் மெய்யே. ஆயினும், நம்நாட்டு அரசநீதியிலிருந்து சாணக்கியம் வேறுபடுவதையே இந்தப் புன்னெறிப் பரிந்துரைகளில் காண்கிறோம். அலெக்சாந்தர் படையெழுச்சியைத் தொடர்ந்து ஏற்பட்ட கிரேக்கத் தொடர்பின் எதிரொலியே இது என்பாரும் உளர். எவ்வாறு ஆயினும், போர் முறையில் எதிரி வஞ்சனை பயின்றாலேயே அறவேந்தன் வஞ்சனை புரியலாமென்பார் பீஷ்மர்.ஒ* மறைத்துவைத்த ஆயுதம், நஞ்சு தோய்ந்த அம்பு, நெருப்பில் காய்ச்சிய படைக்கலம் முதலிய

---

* அதி. 10—அதி. 131.

** அதி. 14.

ஒ* சாந்தி அத். 100. பாரதப் போரில் கௌரவர் வஞ்சனை புரிந்தமைக்கு எதிராகப் பாண்டவர் வஞ்சனை புரிந்தனர் என்பது இதற்கு எடுத்துக்காட்டு.

வற்ருல் பகைவரைக் கோறலாகாது என்பார் மனு,* இந்த நன்னெறியே குறள் நயந்த கொள்கையுமாகும்.

பகைவரது ஊர்களை எரித்தும், பொருள்களைக் கொள்ளையடித்தும், விளைவயல்களை அழித்தும் வெறிக் கூத்தாடிய வேந்தர்களைச் சங்க நூல்களில் காண்கிருேம்.** அவர்களும் கொடுங்கோலர்கள் அல்லர்: அறம் நாடி, அல்லன நீக்கி, யாகம் செய்து, இசை கொண்டவர்கள்; அவர்களையே வழியலாவழிமேல் உந்தித் தள்ளியது போர்வெறி. ஆனுல் அற நூலோரும் அரசநீதி ஆசிரியர்களும் இவற்றை ஆதரித்தாரல்லர்; வள்ளுவர் இவற்றைக் கனவிலும் கருதார். தன்னலம் மறுத்துப் பொதுநலம் பேணும் மன்னன், இன்றியமையாத போது எந்தக் கொடுமையும் எதிரிக்கு இழைக்கலாம் என்று சாதிக்கும் சாணக்கியரும், பகைவர் நாட்டைப் பாழாக்கிப் பழி தீர்க்கும் புன்மைக்கு இடம் கொடார். மாருக, வென்ற நாட்டு மக்களின் நல்லெண்ணத்தையும் நம்பிக்கையையும் பெறுவதற்கு ஆவன செய்ய வேண்டுமென்பார். அதன் பொருட்டு, அந்த நாட்டு மக்களின் நடைஉடை மொழிகளையும் தழுவ வேண்டுமெனவும், அந்நாட்டுத் திருவிழா விளையாட்டுக்களிலும் பங்குபெற வேண்டுமெனவும் கூறுவார் அவர்.*௭

அயலரசுகளைப் பகையாகக் கருதும் கொள்கையே இந்திய அரசியலுக்கு வாய்த்த சாபக்கேடு என்போம்.

---

* அத். 7; சுலோகம் 90.

** நெடுஞ்சேரலாதன்: பதிற்றுப்பத்து 13 (அடிகள் 10—19); 15 (அடிகள் 1—15)
பல்யானைச் செல்குழுக் குட்டுவன்: பதிற்றுப்பத்து 22 (28-38); 25 (1-9).
கரிகாலன்: புறம் 7.
பெருநற்கிள்ளி: புறம் 16.
நெடுஞ்செழியன்: புறம் 23.
முதுகுடுமிப் பெருவழுதி: புறம் 6, 17.

*௭ அதி. 13. அத். 145.

பகைமையின் கொடுமையை உணர்ந்தோரும் இந்தக் கொள்கையைத் தழுவினர்.

இன்பத்துள் இன்பம் பயக்கும், இகல் என்னும்
துன்பத்துள் துன்பம் கெடின்.* (854)

என்றுரைத்த வள்ளுவரும், வலியாரைப் பகைக்காது, எளியாரைப் பகை கொள்க என்றார்:

வலியார்க்கு மாறேற்றல் ஓம்புக: ஓம்பா
மெலியார்மேல் மேக பகை.** (861)

சாமதானங்களால் தன் துணைவலியைப் பெருக்கியும் மித்திரபேதத்தால் அயலரசர் வலியைச் சிதைத்தும் (633), வலிமையும் காலமும் இடமும் வெற்றிக்கு வாய்ப்புத் தரும் போது போர்புரிந்தும், @* கடமையாற்றுமாறு அறிவுறுத்தினார் அவர். ஏனைய அரசநீதி ஆசிரியர்களும் இவ்வாறே மொழிவர். இந்திய அரசுகள் தமக்குள்ளே ஓயாது இகலி நிற்பதற்கு உதவிய கொள்கை இது. இதனால் நாட்டுக்கு நேர்ந்த கேட்டைச் சென்ற அத்தியாயத்தில் கண்டோம்.



---

* இன்பத்துள் இன்பம்-இன்பங்களில் சிறந்த இன்பம். பயக்கும்-தரும். இகல்-போருக்கு ஏதுவாகிய மாறுபாடு. கெடின்-கெடுமாயின்; இல்லாது ஒழியுமாயின்.

** மாறுஏற்றல்-பகையாகக் கொள்ளுதல்.
ஓம்புக-தவிர்க்க; ஒழிக.
ஓம்பாமேக-ஒழியாது விரும்புக.

@* 471-74; 488-90; 497

# IV. சமுதாய வாழ்வு

சமூக அமைப்பு, மக்களின் பலவகைத் தொடர்புகளால் வரலாற்று வழியில் உருவாகிறது. அந்த உறவுகளில் குறிப்பிடத்தக்கது பொருளாதாரத் தொடர்பாம்.

தொல்கால மக்கள், உறவுமுறைக் குலங்களில் பொதுவுடைமை நெறியில் வாழ்ந்தனர். அந்நாளில் மனிதனை மனிதன் சுரண்டுவதற்கு வாய்ப்பில்லாததால், போரில் வென்ற குலங்கள் தோற்றவர்களை அடிமைகொள்ளாது கொன்று குவித்தன. மனிதனின் உழைப்பு, அவனது குறைந்த பட்சத் தேவையை நிறைவு செய்தபின் மிகையை அளிக்கும் திறன் பெற்றபோதே, சிறப்பாக விவசாயத் தொழில் பரவிய பின்பே, அடிமைமுறை எழுந்தது. அப்போதே, போரில் பிடிபட்ட கைதிகளை அடிமைகளாகக் கொண்டு வேலைவாங்குவதால், வென்றவர்கள் வருவாய் அடைந்தனர். இவ்வாறு சிலர் பலரைச் சுரண்டுவதற்கு ஏற்ற நிலைமை உருவான பின்பு, நகர வாழ்வு தோன்றியது. ஏற்றத் தாழ்வும் சுரண்டலுமே நாகரிகத்தைத் தோற்றுவித்தன என்பதை ஒவ்வொரு நாட்டின் வரலாறும் மெய்ப்பிக்கும்.

தற்காலத்தில்தான், விஞ்ஞானமும் எந்திர நுட்ப இயலும் அடைந்துள்ள மகத்தான வளர்ச்சியின் விளைவாக, அனைத்து மக்களையும் சரிநிகர் சமானமாகப் போற்றும் சமதர்ம நாகரிகம் அமைவதற்கான சந்தர்ப்பம்வாய்த்திருக்கிறது. இந்தப் பொறி இயல் வளர்ச்சியே, சுரண்டல்முறைச் சமுதாய வரலாற்றில்தான் உருவானது.

இந்த வரலாற்றுப்பார்வை, இந்திய சமுதாய இயலின் நிறைகுறைகளை முறையாகக் கணிப்பதற்கு இன்றியமையாத்

தேவையாகும். முன்னுளைய சமுதாய மரபுகளையும் நெறிகளையும் கண்மூடித்தனமாகப் போற்றுவதையோ தூற்றுவதையோ தவிர்க்கவும், உண்மையை உள்ளபடி உணர்வதற்கு முயலவும், வரலாற்று விஞ்ஞானமே உறுதுணையாக அமையும்.

## 1. சிந்து வெளியில்

சிந்து வெளியில் நாகரிகம் அமைத்த தொல்லோர்கள், சமதர்மத்தைப் பேணியிருக்க முடியாது என்பது தெளிவு. அவர்களுடைய சமுதாய அமைப்பின் இயல்புகளை உணர்த்தும் எழுத்துரை எதுமில்லை என்ற போதிலும், அங்கு ஏற்றத் தாழ்வு மலிந்திருந்ததை விதவிதமான வீடுகளே நமக்கு ஓதுகின்றன. மொகஞ்சதாரோவில் அரசமாளிகை என்று மக்கை (Mackay) குறிப்பிட்ட இல்லம்—180 அடி நீளமும் 70 அடி அகலமும் உடையது—அதனை அடுக்குள்ள வணிகர் வீடுகளை விட சிறிதே பெரிது. இந்தப் பெரிய இல்லங்களோடு, 20 அடி நீளம் 12 அடி அகலம் உடைய இரண்டறை வீடுகளின் வரிசைகளும் அந்நகரக்கில் இருந்தன. அவை இக்காலத் தேயிலைத் தோட்டங்களின் தொழிலாளர் குடியிருப்புக்களை ஒத்திருந்தன. சிந்துவெளித் தொழிலாளர்கள் அடிமைகளாகவோ தொண்டூழியம் செய்வதற்குக் கட்டுப்பட்டவர்களாகவோ இருந்தனர் என்பர்.

சிந்துவெளி நாகரிகம் அழகும் பயனும் ஒருங்கே சேரப் பெற்ற இந்தியக் கம்மியத்தின் தொன்மைச் சிறப்புக்குச் சான்று பகரும். அங்கு மட்பாண்டம் வனைந்தோர் பலர். மேலும், கல் ஊசி, எலும்பு ஊசி, கற்கோடரி, செம்பு அரிவாள், மரக்கட்டில், நாற்காலி, நாணற்பாய், கோரைப் பாய் முதலான பொருட்களும், அழகான விளையாட்டுச் சாமான்களும், விதவிதமான அணிகலன்களும் அங்கு உற்பத்தியாயின. நெசவு, தையல், பின்னல், தச்ச வேலை, சங்குத் தொழில் முதலான கம்மியங்களில் சிறந்தது சிந்துவெளி. கற்செதுக்குத் திறமை மிக்க வல்லுநர் இருந்ததை முத்திரைகளே நமக்கு உணர்த்துவன. பலவகையான கருவிகளிலிருந்து உலோக வேலைக்கலையில் நிபுணர் இருந்ததை ஊகிக்கிறோம்.

சிந்துவெளிக் கம்மியர் செம்பு, வெண்கல வார்ப்பட வேலை களைச் செய்தனர்; தகடுகளாகத் தட்டி ஆணிகொண்டு பொருத்தினர்; பொன், வெள்ளிப் பொருள்களுக்கும் பொடி வைத்துப் பற்றவைக்கும் முறையைக் கையாண்டனர். இவற்று லெல்லாம், சிந்து வெளியில் நுட்பமான வேலைப் பிரிவினை அமைந்திருந்தது என்பதும், கம்மியர் பலரும் தத்தம் வேலையில் தகுந்த தேர்ச்சி அடைந்திருந்தனர் என்பதும் தெளிவாகும். இந்தக் கைத்தொழில் வளர்ச்சியின் அடிப்படையில் உள்நாட்டிலும் மேற்கு ஆசியாவுடனும் வணிகம் பெருகியிருந்ததற்குச் சான்றுகள் உள.

உழைப்பாளிகள் உண்டாக்கிய மிகைமதிப்பை வணிகத்தின் மூலம் உரிமையாக்கிக் கொண்ட செல்வந்தர்கள், தமது ஆதிக்கத்தை எவ்வாறு கட்டிக் காத்துக்கொண்டார்கள்? சிலர் பலரைச் சுரண்டுவதற்கு, இறுதியாகப் பார்த்தால், அரசின் வன்முறைக் கருவிகளே அரணாக அமைகின்றன என்பது வரலாறு விளம்பும் பேருண்மை. சிந்துவெளியின் அரசு எவ்வாறு அமைந்து செயலாற்றியது என்பதை நாம் அறியோம். ஆயினும், அங்கு வன்முறைக் கருவிகள் நொய்ம்மையாக இருந்தன என்பதை ஆய்வாளர் எடுத்துக் காட்டுவர். உற்பத்திக் கருவிகளைத் திண்மையாகச் செய்த சிந்துவெளி மக்கள், படைக்கலங்களை உறுதியற்றவையாகச் செய்தனர் என்பது குறிப்பிடத்தக்கது. இதிலிருந்து, சிந்துவெளியில் வன்முறைக்கு அதிகம் தேவையில்லை என்று ஊகிக்கப்பெறும்.

செல்வத்தின் ஏற்றதாழ்வான பங்கீட்டுக்குப் பலாத்காரம் பாதுகாப்பு அளிக்கவில்லை என்பதால், உழைப்பாளி மக்கள் அடங்கியிருப்பதற்குச் சமய நம்பிக்கைகளே காரணமாயிருந்திருக்கலாம் என்பர். கிராம விவசாயிகளிடம் உபரி தானியத்தைப் பெறுவதற்கும், வணிகத்துடன் சமயமும் பயன் பட்டிருக்கவேண்டும். இவற்றையெல்லாம் கருதுங்கால், சிந்துவெளி நாகரிகத்தில் புரோகிதர்கள் செல்வாக்கு மிக்கவர்களாக விளங்கினர் என்று எண்ணுவதற்கு இடமிருக்கிறது. ஆனால் புரோகிதமும், கைத்தொழில்களும் குலத் தொழில்களாக அமைந்திருந்தன என்றோ, அவ்வாறு அமையவில்லை என்றோ, திட்டமாகச் சொல்வதற்கில்லை.

சிந்துவெளிப் பண்பாடு உருவானபின்பு, அதன் நீண்ட நாள் வாழ்வில், நகர அமைப்பு, எழுத்து வர்க்கம், தொழிற் கருவிகள் முதலானவற்றில் முக்கிய மாற்றம் ஏதும் ஏற்பட வில்லை என்பதை முன்பே கண்டோம்*. பழமையை இழையும் வழுவாது தழுவும் இப்பண்பும் சமயத்தின் தலைமை நிலையைச் சுட்டுவதாம் முன்னோர் கண்ட முறைமையை இவ்வாறு போற்றியதால், தொழில் நுட்ப வளர்ச்சிக்குத் தடை ஏற்பட்டது. சூமரின் வளர்ச்சியை வணிகத்தொடர்பால் அறிந்தும், அதனைப் பயன்படுத்தத் தவறியது சிந்துவெளி. ஈட்டிக்கும் கத்திக்கும் வலிமை கூட்டும் வகையில் நடுநரம்பு அமைத்துக்கொண்டது சூமர். சிந்துவெளியிலோ, தட்டை யாகவும் எளிதில் வளையத்தக்கதாகவும் அவற்றின் வெட்டு வாய்ப்பகுதி அமைந்தது. கோடரியைத் திருத்தமாகப் பயன் படுத்துவதற்காக, அதில் துளையிட்டுக் காம்பு அடித்தது சூமர். ஒரு புறம் கோடரியாகவும் எதிர்ப்புறம் வாய்ச்சியாகவும் பயன்படும் கருவியையும் காம்புத் தொளையுடன் அமைத்தது சூமர். ஆனால் சிந்துவெளிக்கோடரியில் கைப்பிடியாகப் பயன் படும் காம்பை அடிப்பதற்குத் தொளை இல்லை.

சிந்துவெளியில் எவ்வாறு விவசாயம் செய்தனர் என்பதைப் பற்றிப் புதை பொருளிலிருந்து அறிய முடியவில்லை; எனினும், கலப்பையோ கால்வாய்ப் பாசனமோ அங்கு ஆட்சி யில் இருந்ததில்லை என்று ஊகிப்பார் கோசம்பி. அங்குக் கரைகடந்து ஓடிய ஆற்றுவெள்ளம் வயலில் பாய்ந்து வடிந்த பின்னர், வயலில் படிந்த வண்டலைப் பல்லி**யால் கொத்திக் கிளறிச் சாகுபடி செய்தனர் என்பது அவர் அனுமானம். கிளை நதிகளில் களிமண்ணால் அணையிட்டுத் தண்ணீரைத் தடுத் தனர் என்றும், அதனால் பெருகிய வெள்ளம் கரைபுரண்டோடி வயலை நிரப்பியது என்றும் கருதுவார் அவர். வயலுக்கு உர

---

* I. 21.

**பல்லி: கீழ்நோக்கியுள்ள கூரிய பலமுனைகளை உடைய பலகை. உழுது பண்படுத்துவதற்குப் பயன் படுவது (புறநானூறு 120, குறிப்பு). இதனைப் பலகுக்கட்டை அல்லது தாளியடிக்கும் கட்டை என்றும் கூறுவர்.

மாக வண்டல் படிவதால், அத்தகைய வெள்ளப் பாசன நிலங்கள், பஞ்சாப் சிந்து மாநிலங்களில், வளமார்ந்த வயல்களாக இன்றுவரை இருந்து வந்திருக்கின்றன. சிந்துவெளியில், நதி வெள்ளம் கரைகடந்து சமவெளியைத் தண்ணீர்க் காடாக்கியதையும், அப்போது மேடுகளில் அமைந்த ஊர்கள் தீவுகளாகக் காட்சியளித்ததையும், வெள்ளம் வடிந்ததும் உழைப்பாளி வயலில் வரி வரியாகக் கீறிச் சாகுபடி செய்ததையும் அலெக்சாந்தருடன் வந்த சேனைத் தலைவர்கள் நேரில் கண்டு வருணித்துள்ளனர். 'வரிவரியாகக் கீறினர்' என்று அவர்கள் கூறுவதால், கலப்பையால் உழுதார் அல்லர் என்பது பெறப்படும். மேலும், சிந்து எழுத்துகளில், பலுகுக்கட்டையைக் குறிக்கும் உருவம் உள்ளது. ஆனல் கலப்பையென்றோ கலப்பைக் கூர் (கொழு, உழுமுனை) என்றோ கொள்ளத்தக்க சித்திரம் எதுவும் இடம்பெறவில்லை என்பர் கோசம்பி. தவிர, நிலம் வளமாகவிருந்தும், கால்வாய்ப் பாசனமும் ஆழஉழும் கலப்பையும் பயன்படாததால், விவசாய உற்பத்தி அதிகமாயில்லை; எனவே, கிராமப்புறத்தின் உபரிச் செல்வத்தைப் பயன் படுத்தும் நகரங்கள் பெருகவில்லை. சுமிரியாவில் தொல் பழங்காலத்திலேயே ஏழு நகரங்கள் அமைந்தன; ஆனல் அதனைவிட அதிகமான பரப்பளவு உடைய சிந்து வெளியில் ஹரப்பா, மொகஞ்சதாரோ என்ற இரு பெருநகரங்களே உருவாயின.

காம்புத் தொளைக் கோடரி, நடுநரம்புடைய ஈட்டி, கால்வாய், கலப்பை, வணிகரிடையே ஒப்பந்தம் முதலிய பதிவேடுகளை நீண்ட காலத்துக்குப் பாதுகாக்கும் ஓட்டோலை* ஆகியவற்றைச் சிந்துவெளி சுமரிலிருந்து கற்றுப் பயன்படுத்த

* முத்திரைக் குறிப்புக்களும் மட்பாண்டக் கீறல்களுமே சிந்துவெளியில் கிடைத்துள்ளன. வணிகர்கள் பனை ஓலை அனைய அழிபொருள்களில் எழுதியிருக்கலாம். ஆனல் ஓட்டோலை போன்ற நிரந்தரப் பதிவேடுகள் தேவை என்று அவர்கள் கருதவில்லை. மாரு மரபு அவர்களின் ஆதிக்கத்துக்கு அரணாக அமைந்ததே அதற்குக் காரணம் எனலாம்.

வில்லை என்றால், சிந்துவெளியின் ஆளும் வர்க்கத்துக்கு உற்பத்திப் பெருக்கத்தில் அக்கறை இருந்ததில்லை என்றே கருத வேண்டும். உழைப்பாளிகள் உண்டாக்கிய உபரிச் செல்வத்தில் நிறை உரிமை உடையவர்களாகவும், போட்டியோ பகையோ இல்லாதவர்களாகவும் ஆட்சியாளர் விளங்கினர் போலும். புரோகிதர் தலைமையில், பொருட்படுத்த வேண்டிய போட்டிக்கு உட்படாத வணிகர் கூட்டத்தை உடைய சமுதாயமே இவ்வாறு செயலாற்றியிருக்க முடியும் என்பார் கோசம்பி.[1]

விவரங்களில் எத்தகைய கருத்து வேற்றுமை இருந்தாலும், சிந்துவெளி நாகரிகம் தேக்கமுற்றது என்பதிலும், அங்குப் புரோகிதர் ஆதிக்கம் செலுத்தினர் என்பதிலும், அறிஞர் பலரும் கோசம்பியுடன் உடன்படுவர்.

## 2. ஆரியர் வருகையின் விளைவு

உழவும் பயின்ற ஆயராக ஆரியர் பாரதம் வந்தனர். ஆயினும், அணையிட்டு வெள்ளப் பாசனம் செய்வதை அவர்கள் அறிந்தாரல்லர். எனவே, சிந்துவெளிச் சிற்றூறுகளின் அணைகளை அவர்கள் அழித்தனர் என்று தோன்றுகிறது. இந்திரன் செயற்கை அணைகளை அகற்றினான் என்றும், கரைகடந்த வெள்ளத்தை நதியிலேயே ஓடச்செய்தான் என்றும் ரிக்வேதம் மொழிவதின்[2] பொருள் இதுவே என்பார் கோசம்பி. அணைகள் அழிந்ததால் விவசாயம் பாழாகவே, ஆரியரால் நாசமுற்ற நகரங்கள் விரைவில் புத்துயிர் பெறுவதற்கு வாய்ப்பில்லாது போனது. ஆனால் அழிக்கும் வெள்ளமே வளம் தரும் வண்டலும் வழங்குவதைப் போல், அழிவுக்கூத்து நிகழ்த்திய ஆரியர் வரவே புதுவாழ்வு தழைப்பதற்கும் அடிகோலியது. சிந்துவெளி வாழ்வின் தேக்கத்துக்கு இறுதி சூழ்ந்த ஆரியரது கலப்பால், புது வலுப்பெற்ற சமுதாயம்

---

1. An Introduction to the Study of Indian History.
2. மண்டலம் 2, சூக்தம் 15, கீதம் 8; மண்டலம் 5, சூக்தம் 32, கீதம் 2.

மலர்ந்தது. எருது பூட்டிய கலப்பையால் நிலத்தை உழுது பயிரிட்டு, உணவுப் பொருட்களின் உற்பத்தியைப் பெருக்கிய தால், விரைவான ஜனப் பெருக்கத்தைக் கண்ட குலங்களின் சமுதாயம் அது. அதன் துணிவுமிக்க உறுப்பினர்கள் காடு களை எரித்துக் கீழ்ப்பகுதியில் பரவினர். காண்டவன தகனக் கதை இதனை உணர்த்துகிறது. அக்கினி பகவான் எரித்துக் கொண்டு முன்செல்ல, விதேக மாதவன் அவரைப் பின் தொடர்ந்து சதாநீரா[1] நதியின் மேல்கரையை அடைந்தா னென்றும், அக்கினி பகவான் ஆணையிட்டதற்கு இணங்க, அவரோடு நதியைக் கடந்து கீழைய பிரதேசத்தில் குடியேறி னானென்றும் சதபத பிராமணம் கூறும். விதேக மாதவன் பெயரால் அந்த நாடு விதேகம் எனப்பெயர் பெற்றதென்றும், மாதவன் குடியேறிய பின்பே அந்தணர் பலர் வாழும் நாடாக விதேகம் ஆயிற்றென்றும் அந்நூல் மேலும் கூறும். ஆரியர் எவ்வாறு பரவினர் என்பதை இந்தப் பழமரபுக்கதை யிலிருந்தும் ஊகிக்கலாம். இவ்வாறு பரவிய ஆரியர், எதிர்ப் பட்ட பூர்வகுடிகளைத் தம் சமுதாயத்தில் இணைத்துக் கொண் டனர். இரும்பும் ஆட்சிக்கு வந்த பின்னர், இரும்புக் கோடரி யால் காடுகளை அழிப்பதும், இரும்புக் கொழுவுடைய கலப் பையால் கங்கைச் சமவெளியில் ஆழ உழுவதும் சாத்திய மாயிற்று. விற்பனைப்பண்ட உற்பத்தி பெருகி வாணிகம் தழைத்தது. இவ்வாறு குலத்தனிமையை நீக்கி, உழவும் கைத் தொழிலும் வணிகமும் தழைப்பதற்கு வழிசெய்த கலப்புச் சமுதாயத்தை உருவாக்கி இயக்கும் வகையில், நால்வருணக் கொள்கையும் சாதி முறையும் அமைந்தன. இவ்வாறு

---

1. "எப்போதும் நீர் உடையது" என்பது பெயரின் பொருள். கண்டகி நதியே இது என்பர். கண்டகி நேபாளத்தில் தோன்றிக் காசிக்கருகே கங்கையில் கலப்பது. திருமால் உருவமாகப் பூசிக்கத்தக்கதும், மரபிறந்து போன புதைவடிவ நத்தை வகையின் தோடுமான சாளக்கிராமம் உண்டாவதற்கான இடம் கண்டகியே. எனவே, சாளக்கிராமத்தைக் 'கண்ட கிச்சிலை' என்பர்.

மலர்ந்த ஆரியச்சமுதாயத்தின் கருவிகளும் பொருட்களும் சமூக உறவுகளும் மந்திரங்களும் பூர்வ குடிகளுக்குப் புதியன; அவர்களின் மொழி வழக்குகளால் இவற்றை உணர்த்த முடியவில்லை. எனவே, ஆரிய சமுதாயத்தில் இணைந்த பூர்வ குடிகள் பையப் பைய ஆரிய மொழியினராயினர். சிந்து வெளியில் போர்க்கள வெற்றிப் பெருமையால் ஏற்றம் பெற்ற ஆரியம், கங்கை வெளியில் பெரும்பாலும் அமைதி யான சமுதாய மாற்றம் மூலம் நிலைமைநிலை மேவியது.

செம்பு இரும்புக் கனியங்களை உடைய மகதத்தின் தலைமையில் மலர்ந்து, வணிகப் பெருக்கத்தால் வீறு கொண்ட ஆரியச் சமுதாயம், அந்தணர் வணிகர் மூலம் தென்புலத் தொடர்பு கொண்டபோது, இங்கு ஆற்றோரங் களில் திராவிட நாகரிகம் கால்கொண்டு பரவிக்கொண்டிருந் தது என்று ஊகிக்கலாம். சிந்துவெளி நாகரிகத்தை சௌராஷ்டிரத்தில் கட்டிக்காத்த திராவிடர்களே, மத்திய இந்தியா வழியே தென்னகம் வந்தனர் என்பதற்குப் புதை பொருள் சான்று உண்டு. சௌராஷ்டிரத்திலேயே அவர்கள் நெற்பயிர் செய்தனர்* என்று அனுமானிப்பதற்கும் இட முண்டு. அவர்கள் தென்னகம் வந்த பெருங் கற்படை யினரிடம் இரும்பைக் காய்ச்சி உருக்கிப் பயன்படுத்திக் கருவி கள் செய்வதற்குக் கற்றுக்கொண்டிருக்கலாம். இரும்புக் கொழு உடைய கலப்பையால் உழுது விவசாயம் செய்வ தில் பெருங்கற்படையினர் உதவியிருக்கலாம். ஆரியர் வரவைத் தொடர்ந்து அனைத்திந்திய சந்தை அமைந்ததால் வணிகம் பெருகியது. இமயம் சார்ந்த (வடக்குப்) பாதையே சிறந்ததென்று தம் ஆசிரியர் கூறினர். எனினும், முத்து, இரத்தினம், வைரம், தங்கம், சங்கு முதலிய விலைப்பண்டங் கள் நிறைய உடைய தட்சிண பாதையே அதிகமான ஆதா யம் தரவல்லது என்பார் சாணக்கியர்**. பூர்வாசிரியர் காலத்தில் குறைவாகவிருந்த தென்புல வணிகம் சாணக்கியர்

---

* சிந்துவெளியில் கோதுமையைப் பயிர் செய்தனர்: நெற்பயிர் செய்தாரில்லை.

** அதி. 7—அத். 110

காலத்தில் (மௌரியர் பேரரசு அமைந்த காலையில்) சிறப்பு எய்தியதை இதிலிருந்து உணரலாம்*.

இயல்பாகவே, திராவிடர் உருவாக்கிய மருதநிலச் சமுதாயம், நால்வருண ஐதிகத்தை ஏற்ற மாற்றத்துடன் போற்றியது; சாதிமுறையே தென்புலத்திலும் சமுதாய அமைப்புக்கு அடிப்படை ஆயிற்று. ஆனால் கங்கை வெளிப் பூர்வகுடிகளைப்போல் ஆரிய மொழியைத் தழுவும் தேவை திராவிடர்கட்கு ஏற்படவில்லை. திராவிடர்களின் மொழி புதிய சமுதாயத்தின் தேவைகளை நிறைவு செய்யும் உள்ளாற்றல் பெற்றிருந்தது. எனவே. புதிய சூழலில் திராவிடம் தன்னியல்பு குன்றாத வகையில் வளம்பெற்றது. சங்க இலக்கியம் இதற்குச் சான்று.

இன்னொன்று; அந்தணரின் வேள்விப் பண்பாடும் க்ஷத்தி ரியரின் வீரத்துணிவும், உழவால் சிறந்த பெருநிலச் சமுதா யத்தை வடபுலம் தழுவியதாக உருவாக்கின என்றோம். ஆனால் பின்னாளில் அந்த இரண்டுமே பெருநிலச் சமுதாயத் தில் பேரரசும் பொருளாக்கமும் வணிகமும் சிறப்பதற்குத் தடை ஆயின. ஏராளமான கால்நடைகளைக் கொன்றுகுவிக் கும் பொருள் அழிவாக வளர்ந்தது வேத வேள்வி. குலப் பெருமை பேசிப் போருக்கு அலையும் வெறியாக க்ஷத்திரியரின் வீரத்துணிவு வளர்ந்தது. எனவே வேத வேள்விக்கும் போர் வெறிக்கும் எதிர்ப்பாகப் பௌத்தமும், சமணமும் தோன்றின. போரில்லாப் பேரரசில் பொருட்செல்வம் பெருகி வணிகம் விளக்கம் பெறுவதற்கு வாய்ப்பாக அமைந்த பௌத்தம், அசோகன் பேரரசில் உயர்நிலை எய்தியதில் வியப் பில்லை. அசோகன் நாளிலேயே தமிழகத்துக்குப் பௌத்தத்

---

* சிந்துவெளி நாகரிகம் தக்கண தீபகற்பத்திலிருந்து தங்கமும் சங்கமும் பெற்றது என்று ஊகிக்க இட முண்டு. ஆனால் அந்நாளில் தக்கணத்தில் புதிய கற்காலக் குடிகளே வாழ்ந்தனர். அப்பொருட்கள் தலைச்சுமையாகவே சிந்துவெளியை அடைந்தன எனலாம்.

தொடர்பு ஏற்பட்டது. சமணரும் பௌத்தரும் இந்தியப் பண்பாட்டுத் தூதுவராகச் சங்க காலத் தமிழகத்தில் பணியாற்றினர். சங்கம் மருவிய காலத்தில் அவர்கள் ஏற்றம் பெற்றிருந்தனர்; தமிழ் இலக்கியத்துக்கு வளம் கூட்டினர்.

ஆக, ஆரியர் வரவைத் தொடர்ந்து நாட்டில் ஏற்பட்ட கிளர்ச்சியின் வரலாற்றுச் சிறப்புப் பெரிது. சிந்துவெளியின் தேக்கமும் பூர்வகுடிகளின் தனிமையும் அந்தக் கிளர்ச்சியால் நீங்கின. திராவிடர் வந்து நாகரிகம் கண்ட தென்னகத்தில், இரும்புயுகப் பெருங்கற்படையினர் வரவோடு குறிப்பிடத் தக்க முக்கிய நிகழ்ச்சி ஆரியர் உறவு. இவற்றின் விளைவாக, உழவும் கைத்தொழிலும் வணிகமும் வலிவும் பொலிவும் பெறச் செய்யும் அகில பாரத சமுதாயம் உருவாயிற்று. இந்தப் பின் புலத்திலேயே வருணம், சாதி முதலானவற்றை நாம் ஆராயவேண்டும்.

## 3. நால்வருணக் கொள்கை

நகர நாகரிகம் அறியாத குலங்களாகவே ஆரியர்கள் பாரதம் வந்தனர் என்பதையும் அவர்கள் சிந்துவெளி நகரங்களை அழித்தனர் என்பதையும் முன்பே கண்டோம்*. ரிக்வேத காலத்தில் ஆரியர் நகரம் எதனையும் அமைத்தாரல்லர். செங்கல்லைக் குறிக்கும் ஆரியச் சொல், ரிக்வேதத்தில் இடம்பெறவில்லை; பிற்பட்ட வேதங்களிலேயே பயிலப் பெறுகிறது.

ஆனால் அவர்களைக் காட்டாட்களாகக் கருதுவதற்கு இடமில்லை. கால்நடை மேய்ப்போராகவும், விவசாயம் அறிந்தோராகவும், செம்பும் வெண்கலமும் கொண்டு கருவிகளையும் படைக்கலங்களையும் செய்வோராகவும், போர்க்கலை வல்லுநராகவும், யாகம் செய்வதை நுண்கலையாகப் பயின்றவராகவும் ஆரியர் இந்நாட்டுக்கு வந்தனர். அவர்கட்கு எழுத்தறிவு இல்லை; ஆயினும் விரிவான மரபுகளை உடைய கவிதைக் கலையில் புலமை எய்தியிருந்தனர். அவர்களது குல அமைப்பில்

---

* I-22.

வர்க்கவேற்றுமைகள் தோன்றிவிட்டன. ரிக்வேதத்தின் முற்பட்ட சூக்தங்களிலேயே மேன்மக்களைப் பற்றியும்(க்ஷத்ர), குடிமக்களைப் பற்றியும் (விஸ்) படிக்கிறோம். மேன்மக்கள் குதிரைகள் பூட்டிய தேரில் ஏறிச் சென்றனர்.

எனினும், பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்ற நான்கு வருணங்கள் ரிக்வேதகாலத்தில் அமைந்திருந்தன என்பதற்குச் சான்று இல்லை. நிறம் என்ற பொருளில் வருணம் என்ற சொல்லை ரிக்வேதம் ஆள்கிறது; ஆரிய வருணத்தையும் தஸ்யு வருணத்தையும் பற்றிப் பேசுகின்றது. ரிக்வேதத்தின் பத்தாம் மண்டலத்திலுள்ள புருஷ சூக்தம் மாத்திரம், பிராமணர், ராஜன்யர் (க்ஷத்திரியர்), வைசியர், சூத்திரர் ஆகியோரைக் குறிப்பிடுகிறது:

''அவர்கள் (சாத்தியர் என்ற தேவர்கள்) புருஷனைக் கூறுபடுத்தியபோது அவனை எத்தனை பகுதிகளாகப் பிரித்தார்கள்? அவனுடைய வாய் யாது? அவனுடைய புயங்கள் எவை? அவனுடைய தொடைகளும் பாதங்களும் யாவை?

''பிராமணன் அவனுடைய வாய். அவனுடைய புயங்களால் அமைந்தான் ராஜன்யன். அவனுடைய தொடைகள் வைசியன் ஆயின. அவனுடைய பாதங்களிலிருந்து சூத்திரன் பிறந்தான்.''

ஆனால் இந்தச் சூக்தத்தை உடைய பத்தாம் மண்டலம், ரிக்வேதத்தின் ஏனைய மண்டலங்களது காலத்துக்குப் பின்னர்த் தோன்றியது என்பதில் அனைத்து அறிஞர்க்கும் உடன்பாடே. மேலும், சூத்திரன் என்ற சொல் ரிக்வேதத்தில் வேறு ஓரிடத்திலும் பயிலப் பெறவில்லை.

புருஷ சூக்தம், படைப்புக் கடவுளான பிரஜாபதியையே (இவரது பின்னைய பெயரே பிரமன்). பிரபஞ்சம் தோன்றுவதற்குமுன் இருந்த புருஷனாக (ஆதி மனிதனாக) வருணிக்கிறது. ஆனால் முதல் ஒன்பது மண்டலங்களில், படைப்புக் கடவுளைப் பற்றித் தெளிந்த கருத்து எதுவும் ஓதப்படவில்லை. சிந்துவெளி நாகரிகத்திடமிருந்து அடையப்பெற்றோ, அதற்கும் ஆரியர்களுக்கும் ஏற்பட்ட தொடர்பின் விளைவாகத் தோன்றியோ, ரிக்வேதகால இறுதியில் பிரஜாபதியைப்

பற்றிய கருத்துச் செல்வாக்குப் பெற்றிருக்கவேண்டும்*.

நிறம், இனம், மொழி ஆகியவற்றின் அடிப்படையில், இந்நாட்டு மக்களுக்கும் புதிதாக வந்த ஆரியருக்கும் இடையில் வேறுபாடு இருந்தது வெளிப்படை. ஆனல் அதுவே வருணக் கொள்கைக்கு அடிப்படை ஆயிற்று எனில், இரண்டு வருணங்களே அமைந்திருக்கமுடியும். தவிர, நான்கு வருணமும் ஒரே பிரமனிடமிருந்து தோன்றியதாகவே புருஷ சூக்தம் ஓதுகிறது. அர்த்த சாத்திரமும் நான்கு வருணத்தினரையும் ஆரியர் என்றே குறிப்பிடும். ''வயது வராத ஆரியனை—அவன் உதரதாசன்** அல்லன் எனின்–அவனுடைய உறவினன் விற்ருல் அல்லது ஈடுவைத்தால், அவனுக்குச் சூத்திரனுயின் 12 பணம் அபராதம்; வைசியனுயின் இருமடங்கும் (24 பணம்), க்ஷத்திரியனுயின் மும்மடங்கும் (36 பணம்), பிராமணனுயின் நான்கு மடங்கும் (48 பணம்) (அபராதம்) ஆகும்***'', என்று சாணக்கியர் விதிக்கும்போது, ஆரியரைப் பற்றிய விதியில் நால்வருணத்தாரையும் குறிப்பிடுவதால், சூத்திரரும் ஆரியராகக் கருதப் பெற்றனரென்பது தெளிவாம். பண்டைநாளில் உலகமெலாம் பிராமணர்களே இருந்தனரென்றும், அவர்கள் தமது செயல்களாலேயே நால்

*. புருஷனைப் பலிகொடுத்தவர்கள் (பகுதிகளாகப் பிரித்தவர்கள்) சாத்தியர் என்று கூறுகிறது புருஷ சூக்தம். சாத்தியர் வேதத்தில் அருமையாகவே குறிப்பிடப் பெறுவதால், அவர்கள் சிந்துவெளித் தெய்வங்களாயிருக்கலாம் என்பர் கோசம்பி.

** உதரதாசன் (உதரம்—வயிறு); வயிற்றுப் பிழைப்புக்கு வழியில்லாதபோது, ஒருவனுக்கு ஊழியம் புரிந்து ஊணும் உடையும் பெறுவோன். வயது வராத ஆரியருக்கு இத்தகைய பராமரிப்பு ஏற்பாடு செய்யலாம். இது அடிமையாக விற்பதோ ஒற்றிவைப்பதோ ஆகாது.

*** அதி. 3—அத். 70

வருணங்களாகப் பிரிந்தனரென்றும் பாரதம் மொழிவதும் இங்குக் குறிப்பிடத்தக்கது*.

ரிக்வேத காலத்தில் ஆரியர்கள் சிந்துவெளி மக்களோடு முதலில் இகலியும் பிறகு இணங்கியும் உருவான சமுதாயத்தைக் குறிப்பதே, ரிக்வேதகால முடிவில் தோன்றிய நால் வருண ஐதிகம் என்றும், யஜுர் வேதகாலத்தில் அவர்கள் கீழ்த்திசையில் பரவிப் படர்ந்து பூர்வகுடிகளோடு ஏற்பட்ட தொடர்பால், இந்தக் கொள்கை உறுதிப்பட்டது என்றும் கருதுவதே ஏற்புடைத்து.

போரிலும் பொருளுற்பத்தியிலும் யாகத்திலும் யாவரும் பங்கு பற்றிய குலவழி அமைப்புடன் வந்தனர் ஆரியர்கள். ஆனால் யஜுர் வேதகாலத்தில் உறவுமுறைக்குல அமைப்பு அழிந்து குறுநில அரசுகள் அமைவதைக் காண்கிறோம். இவற்றில், பல்கிப்பெருகிய யாகச் சடங்குகளைச் செய்வோர், ஆட்சிக்கலையும் போர்க்கலையுமே பயில்வோர், பொருளுற்பத்தியாளர்கள், அந்த மூன்று பகுதியினருக்கும் கட்டுப்பட்ட உழைப்பாளிகள் என்ற நால்வகையினர் உருவானதை நால் வருணக் கொள்கை குறித்தது என்னலாம்.

சிந்துவெளிச் சமுதாயத்தில் மக்களுக்கு அமைந்த படிநிலைகள், புதிய சூழலில் அவர்கள் அடைந்த இடத்தைப் பெரிதும் தீர்மானித்திருக்க வேண்டும். அங்குக் கோயில் அடிமைகளாகவோ, தொண்டூழியம் செய்வதற்குக் கட்டுப்பட்டவர்களாகவோ இருந்த உழைப்பாளிகள், இங்குச் சூத்திர வருணத்தில் இடம் பெற்றிருப்பர். அங்கு வணிகராகச் செல்வங்கொழித்த பாவிகளும்** ,வசதி படைத்தவிவசாயிகளும் இங்கு வைசியர்

---

* சாந்தி அத். 186

**. செல்வம் மிகுந்தவர்கள், யாகம் செய்யாதவர்கள், பேராசைக்காரர்கள், விரோதிகள் என்றெல்லாம் ரிக்வேதத்தில் பானிகள் வருணிக்கப் பெறுகின்றனர். எனவே அவர்கள் சிந்துவெளியினரில் ஒரு கூட்டமே என்பது தெளிவு. வணிகன் என்ற சொல்லைப் 'பானி' என்பதிலிருந்தே இந்திய மொழிகள் அடைந்தன.

வருணத்தில் ஐக்கியமாகியிருப்பர். அங்கு ஆட்சிக்கலை பயின்ற மேன்மக்கள் இங்கு க்ஷத்திரிய வருணத்தில் இணைந் திருப்பர். சிந்துவெளிப் புரோகிதர்கள் புதிய சமுதாயத்தின் பிராமணர் வருணத்தை உருவாக்குவதில் உறுதுணையாயிருந் திருப்பர்.

தாஸன், தஸ்யு என்பனபோல் சூத்திரர் என்ற சொல் லும் பண்டைய இந்திய குலப்பெயராயிருந்திருக்கலாமென்பர் அறிஞர். தாஸன் என்ற சொல் அடிமை, ஊழியம் செய் வோன் என்ற பொருள்களைப் பெற்றதுபோல், சூத்திரர் என்ற சொல் நான்காவது வருணத்தோரின் பெயராயிற்று. குடிமக்கள் என்ற பொருள்தந்த 'விஸ்' என்ற ஆரியச் சொல் லின் அடியாகப் பிறந்ததே வைசியர் என்ற சொல். மேன் மக்களைக் குறித்த க்ஷத்ர என்ற ஆரியச் சொல்லை முதலாகக் கொண்டது க்ஷத்திரியர் என்பது. பிராமணன் என்ற சொல் லின் ஆதிவரலாறே புரியாத புதிராக உள்ளது.

பிராமணன் என்ற சொல்லோடு தொடர்புடைய சொல் எதனையும், இந்திய ஆரியரின் நெருங்கிய உறவினரானப் பண்டைய ஈரானியர்[1] கூடப் பயின்றுரல்லர். முதலில், அக்கினி வழிபாட்டுப் புரோகிதனுக விளங்கியவன் அதர்வன் ஆவான். அவனை ஈரானியர் அத்ரவன் என்றனர். ஹோதா முதலிய வேத வேள்விப் புரோகிதர்களுக்கு ஒப்பான அக்கினி வழிபாட்டுப் புரோகிதர்களும் ஈரானில் இருந்தனர். ஆனுல் பிராமணர் என்ற சொல்லோடு தொடர்புடைய புரோகிதப் பெயரைப் பண்டைய ஈரான் அறிந்திருக்கவில்லை. ரிக்வேதத் திலேயே புரோகிதர்களைப் பிராமணர் என்று குறிப்பிடும் இடங்களைவிடக் கவி, காரு, விப்ர முதலிய சொற்களால் குறிப்பிடும் இடங்களே அதிகம். பிரமன் என்ற இயற்கை கடந்த ஆற்றலை உடையவன் என்ற பொருளிலே, பிராமணன்

---

1. ரிக்வேத மொழிக்கும் பண்டைய ஈரானியரது மொழிக் கும் நெருங்கிய தொடர்பு உளது என்பதை முன்பே கூறினேம் (I:20). சமய வழக்கங்களிலும் பல ஒற்று மைகள் இருந்தன.

என்ற சொல் முதலில் பயிலப் பெற்றது. யாகத்தின் மேற்பார்வையாளனாக இருந்து, மந்திர தந்திர வழுக்களால் ஏற்படக்கூடிய தீமையைத் தன் மாய மந்திரத்தால் மாறு செய்து தடுக்கும் தனிப்பயிற்சி பெற்ற புரோகிதரே (மந்திர சாதகரே) முதலில் பிராமணர் என்று குறிப்பிடப்பட்டனர். ரிக்வேதகால இறுதியிலேயே, அனைத்துப் புரோகிதருக்கும் பிராமணர் என்று பெயர் வழங்கியது. எனவே சிந்துவெளிப் புரோகிதரின் தொடர்பாலும், யாகச் சடங்குகளின் பெருக்கத்தாலும், புரோகிதத்தையே தொழிலாகக் கொண்ட பிராமணவருணம் உருவானதென்று ஊகிக்கலாம்.

## 4. அந்தணரின் பூர்வீகம்

அந்தணரின் சிந்துவெளித் தொடர்பைச் சில பழமரபுக் கதைகளிலிருந்து உய்த்துணரலாம். இந்திரனைச் சிறப்பாகப் போற்றும் ரிக்வேதம், அவன் விருத்திரனை வதம் செய்ததைச் செயற்கரிய செயலாகப் போற்றுகிறது. ஆனால் விருத்திரனைப் பிராமணனாகப் போற்றும் இதிகாச மரபு. விருத்திரனிடம் தோற்றோடிய இந்திரன், விஷ்ணுவின் யோசனைக்கு இணங்க, அவனிடம் உடன்பாடு செய்துகொண்டு பின்னர் வஞ்சகமாகக் கொன்றான் என்றும், பிரமகதத்தி* க்குப் பயந்து தண்ணீரில் ஒளிந்தான் என்றும், அசுவமேத யாகம் செய்து பார்ப்பனக் கொலைப் பாவத்திலிருந்து விடுபட்டான் என்றும் பாரதம் கூறும்**. தேவர்களும் முனிவர்களும், கங்காதி தீர்த்தங்களைக் குடம் குடமாக மந்திரம் ஓதி இந்திரன் தலையில் ஊற்றி, அவன் பிரமகத்திப் பாவத்தைக் கழித்தார்கள் என்று விசுவாமித்திரர் இராமனிடம் மொழிவார்***.

ரிக் வேத சூக்தம் புதையுரையாகக் குறிப்பிடும் பழமரபுக் கதையே இதிகாசங்களில் இடம் பெறுகிறதா, அல்லது வேத

---

* பிரமகத்தி-கொன்றவனைத் தொடரும் பார்ப்பனக் கொலைப்பாவம்.

** உத்தியோகபர்வம் அத்தியாயம் 9-18.

*** வான்மீகி ராமாயணம் பாலகாண்டம் சருக்கம் 24.

காலத்துக்குப்பின் வளர்ந்த கதையா இது என்பதை நாம் அறிவதற்கில்லை. ரிக்வேத சூக்தத்தை ஆராய்ந்த அறிஞர் அதன் உட்பொருளைப் பலவாறு கூறுவர். மார்டுக் என்ற கடவுள், தியமத் என்ற அராஜக அரக்கனை வதம் செய்து, முறைப்பட இயங்கும் பிரபஞ்சத்தைப் படைத்தாரென்று பண்டைய மெசப்பொட்டேமியா ஓதிய படைப்புக் கதையின் வளர்ச்சியாக இருக்கலாம் என்பார் உளர்*. மேகத்தில் சிறைப்பட்ட தண்ணீரை மழையாகப் பொழியச் செய்யும் இந்திரன் செயலை ஓதும் கதை என்பர் வேறுசிலர். சிற்றாறு களில் வெள்ளப்பாசனத்திற்குப் பயன்பட்ட அணைகளை ஆரியர் கள் அழித்ததையே விருத்திராசுரவதம் குறிக்குமென்று நிறுவு வார் டாக்டர் கோசம்பி**. விருத்திரன் வதத்தின் உண்மை யான உட்பொருள் யாதாயினும் ஆகுக; அந்தணன் விருத் திரனை இந்திரன் கொன்றான் என்ற இதிகாசக் கதை, முன்னாளைய அந்தணர்—ஆரியர் பகையைப் பற்றிய நினைவி லிருந்தே தோன்றியிருக்க வேண்டும் என்பது ஒருதலை.

துவட்டன் மகனும் தேவர்களின் புரோகிதனுமான திரிசிரஸின் மூன்று தலைகளையும் இந்திரன் துண்டித்தான் என்று ரிக் வேதம் (10-8) கூறும். துவட்டனுக்கும் அசுரர் களின் தங்கைக்கும் பிறந்த திரிசிரஸ் என்ற பிராமணனைக் கொன்றான் இந்திரன் என்று யஜுர் வேதமும் (2-5) பழிக்கும். இந்திரன் கடவுள் என்பதால் அவனுக்குப் பாவமில்லை என்று செப்பும் சதபத பிராமணம். ஐதரேய பிராமணமோ, இந்தி திரன் பிரமகத்திக்கு அஞ்சித் தண்ணீரில் ஒளிந்தான் என்று கூறும். திரிசிரஸுக்குத் தந்தை துவட்டன் ஆயினும், தாய் அசுரகுல மங்கையென்றும், தாய்வழிமக்களின் நலம் நாடியே தேவர்க்கு அழிவு சூழவே—திரிசிரஸ் தேவர்க்குப் புரோகிதன்

---

* **BASHAM :** The Wonder that was India.
மழைக்குக் காரணன் இந்திரன் என்ற கருத்தையும் உட்கொண்டதாக மெசப்பொட்டேமியக் கதை மாறி யுள்ளது என்பார் பாஷம்.

** An Introduction to the study of Indian History.

ஆனுன் என்றும், உட்பகையாக வந்தான் முனிவன் (திரிசிரஸ்) என்பதை உணர்ந்தே, இந்திரன் அவன் சிரங்களை சீவி எறிந்தான் என்றும் நியாயம் கூறும், பிரகத் தேவதா*. ஆனுல் அந்நூலும், பார்ப்பனக் கொலைபுரிந்த பாவி என்று இந்திரனை ஏசினுள் வாக்கு** என்றும், அதன்பின் இந்திரன் முனிவரின் உதவியுடன் கழுவாய் தேடினுன் என்றும் சொல்லும். திரிசிரஸ் தன்னேரில்லாத் தவம் செய்தானென்றும், அவன் தனது பதவியை அடைந்து விடுவானே என்று அஞ்சி அவனைக் கொன்ருன் இந்திரன் என்றும் பாரதம் கூறும்***. ஆக, சிந்து வெளி அந்தணர்கட்கும் ஆரியருக்கும் முன்னுளில் இருந்த பகையைத் திரிசிரஸ் கதை வெளியிடுகிறது எனலாம்.

நமுசி வதக்கதையிலும் இதே உட்பொருளை ஊகிப்ப தற்கு இடமுண்டு. நமுசியை இந்திரன் நயவஞ்சகமாகக் கொன்ருன் என்பதை ரிக் வேதத்திலிருந்து அறியலாம் ஒ*. நமுசி பிராமணன் என்றும், அவனைக் கொன்றதால் நேர்ந்த பிரமகத்தியைக் கழிப்பதற்காக, அருணை ஆறும் சரஸ்வதி நதியும் கூடுமிடத்தில் இந்திரன் குளித்து வேள்வி செய்தான் என்றும் பாரதம் கூறும் ஒ**.

நமுசியின் சகோதரனே அசுரத்தச்சனுன மயன் என்பதும் இதிகாச மரபு. காண்டவ வன தகனத்தின்போது, அர்ஜு

---

* கி. மு. 400 அளவில் எழுந்த இந்நூல், ரிக்வேதத் தெய்வங்களையும் கதைகளையும்பற்றி விளக்கம் தருகிறது. இதனைச் சௌனகர் இயற்றினுர் என்பது வழிவழிச் செய்தி.

** வாக்கு: நாமகள் (சரஸ்வதி).

*** உத்தியோகபர்வம் அத்தியாயம் 9.

ஒ* மண்டலம் 5, சூக்தம் 30. பாண்டவரைச் சூதாடி வஞ்சிப்பது சரியே என்று தந்தையிடம் சாதித்த துரியோதனன், 'விரகின்றி வேந்தில்லை' என்ற கொள்கைக்கு முன்மாதிரியாக, இந்திரன் நமுசியை வஞ்சித்ததைக் குறிப்பிடுவான் (சபாபர்வம் அத். 81).

ஒ** சல்ய பர்வம் அத். 44.

ணன் மயனைக் காப்பாற்றினான். அதற்குக் கைம்மாருக, மயன் பாண்டவர்கட்கு இந்திரப்பிரஸ்த நகரில் சபா மண்டபத்தைக் கட்டிக் கொடுத்தான்*. மயன் மகளாகிய மண்டோதரி இராவணன் மனைவி என்பது இராமாயணம். இந்திரனை வென்றதால் இந்திரசித்து என்று பெயர் பெற்ற மேகநாதன், மண்டோதரியின் மைந்தனே. தசமுக அசுரனான இராவணன் பிராமணன் என்பதில் அனைத்து மரபுக்கும் உடன்பாடே. வசிட்டர். வமிச கோத்திரங்களை வகைந்து கூறும் ஏடுகள் சிலவற்றில், இராவண கோத்திரமும் இடம் பெற்றிருப்பதாகக் கூறுவார் கோசம்பி. பத்துத் தலையும் பத்து வாயும் உடைய பிராமணனே முதலில் சோமரசம் பருகினானென்றும் அதர்வவேதம்** கூறும். பின்னாளைய இராவணன் கதைக்கும் அதர்வவேதம் குறிப்பிடும் அதீத வடிவினனுக்கும் தொடர்பு இருக்கலாமென்று தோன்றுகிறது.

இந்திரனோடு இகலிய மற்றொரு அசுரனாகக் கிருஷ்ணனைக் குறிப்பிடும் ரிக்வேதம்***. கருநிறத்தவன் என்று பொருள் படும் பெயரே, கிருஷ்ணன் ஆரியனல்லன் என்பதை உணர்த்தும். ரிக் வேதத்தில் பெரும்பாலும் இந்திரனுக்குத் தோழனாகவே காட்சி தரும் விஷ்ணுவின் அவதாரமாகக் கிருஷ்ணனைப் போற்றிய பின்னாளிலும், கிருஷ்ண—இந்திர விரோதக் கதைகள் பெருகின. காண்டவவன தகனத்தைத் தடுக்க இந்திரன் முயன்று, கிருஷ்ணார்ஜுனரிடம் தோல்வி கண்டான் என்று பாரதம் சொல்லும் ௪*. தன்னை வழிபடாத யாதவர்களிடம் வெகுண்ட இந்திரன் காளமேகங்களால் கல்மாரி பெய்வித்தபோது, கிருஷ்ணன் குன்றைக் குடையாகப் பிடித்து

---

* காவிரிப்பூம்பட்டினத்தில், உவவனப் பளிக்கறையிலுள்ள புத்த பீடிகையையும், சக்கரவாளக் கோட்டத்தையும், கந்திற்பாவையையும் மயன் இயற்றினானென்று மணிமேகலை கூறும்.

** காண்டம் 4, சூக்தம் 6.

*** மண்டலம் 8, சூக்தம் 96.

௪* ஆதிபர்வம் அத்தியாயம் 252-254.

ஆயரையும் ஆநிரைகளையும் காத்தான் என்னும் பாகவதம்*.

பிணங்கி நின்ற பண்டைய இந்தியர்களும் ஆரியரும் இணக்கம் கண்ட பிறகு, சிந்துவெளித் தொடர்பினர் ரிக்வேத சூக்தங்களை இயற்றுவதில் பங்குபற்றினர் என்று கருதவும் இடமுண்டு. இத்துறையில் நுட்பமாக ஆராய்ந்துள்ள டாக்டர் கோசம்பி கொண்ட முடிவுகள் சிந்தனைக்கு உரியன:

○ ஆரியர் தந்தைவழி சமூகத்தினராயினும் சில ரிக்வேத முனிவர்கள் 'இவள் மகன் இவர்' என்று தாய்வழி மைந்தராகக் குறிப்பிடப் பெறுகின்றனர்.

○ தீர்க்கதமஸ் (நீண்ட இருள் என்று பொருள்படும் பெயர் இது) என்ற முனிவர், தாசர் குலத்தினளான மமதாவின் மகனுவார். இவரது தந்தை உஸின் என்பர்; உசத்யர் என்றும் அவரைக் குறிப்பிடுவர்.

○ கவச ஐலூஷர் என்ற முனிவர் தாசர்குலப் பெண்ணின் மகனுகக் குறிப்பிடப்பெறுகிறுர்.

○ ரிக்வேத எட்டாம் மண்டல கிதங்களை ஆக்கியோர் கண்வர்கள்**. ஆனுல் கண்வரைக் கேடுசூழும் கொடியவராகக் காட்டி. அவர்களை ஒட்டுவதற்கான சில மந்திரங்களை ஓதும் அதர்வவேதம்*௦.ஆரியரல்லாத கண்வர்களில் ஒருபகுதியினர் ஆரிய சமுதாயத்தில் இணையாது விலகியிருந்தனர் என்ற ஊகமே இந்த முரண்பாட்டுக்கு விளக்கமாகும்.

○ பிராமண கோத்திரங்களில் முதல்வராகப் போற்றப் பெறுவோரில் இருவரான வசிட்டரும் அகத்தியரும் குடத்திலிருந்து பிறந்தனர் என்பது அவர்கள் சிந்துவெளித் தாய்த்

---

* ஸ்கந்தம் 10; பசுவதையை மாபெரும் பாவமாகக் கருதும் நாட்டில், இந்திரனைக் கொடுமை செய்வோனுகக் காட்டுவதற்கு, இதற்குமேல் ஒன்றும் சொல்லத் தேவையில்லை.

** கண்வர் கருநிறத்தவர் என்று 10-ஆம் மண்டலம் குறிப்பிடும் (சூக்தம் 31 கிதம் 11).

*௦ காண்டம் 2, சூக்தம் 25.

தெய்வ மக்கள் என்பதைக் குறிக்கலாம்.*

பரதர்குல வேந்தனுன சுதாஸ், தலைமைப் புரோகிதர் பதவியிலிருந்து விசுவாமித்திரரை நீக்கிவிட்டு அப்பொறுப்

* கடவுளரான வருணனும் மித்திரனும் ஊர்வசி என்ற அப்சரஸைக் கண்டவுடன் காமம் கொண்டனரென்றும், அப்போது அவர் வீரியம் குடநீரில்விழ, அதிலிருந்து வசிட்டர் பிறந்தாரென்றும் ரிக்வேதம் கூறும் (7: 33, 10—13). அகத்தியரும் அவருடன் பிறந்தாரென்று பொருள்கொள்வதற்கு இடமுண்டு; எனினும் அகத்தியரைப் பற்றிய குறிப்பின் பொருள் தெளிவாகவில்லை என்பர். ஆனல் கும்பத்திலிருந்து பிறந்தவர் அகத்தியர் என்பதே வைதிக இலக்கியத்தின் வழிவழிக்கொள்கை. அகத்தியர் ‘இருவருணங்களையும் பேணினர்’ என்று ரிக்வேதம் கூறும்போது (1. 179, 6), அது ஆரியரையும் ஆரியரல்லாதாரையுமே குறிப்பிடுகிறது என்பது தெளிவு. இதிலிருந்தும் அவர் இருவருணங்கட்கும் உரியவர் என்று ஊகிக்கலாம்.

பிரமன் திலோத்தமை என்ற அப்சரஸை கண்டபோது, வசிட்டரும் அகத்தியரும் கும்பத்திலிருந்து பிறந்தனர் என்பது தமிழ்நாட்டுக் கதை (மணிமேகலை 13; 93—97; நீலகேசி விருத்தி சமயதிவாகரம்). வசிட்டரையும் அகத்தியரையும் அப்சரஸோடும் கும்பத்தோடும் தொடர்பு காண்பதில் தமிழ்க்கதை வேறுபடவில்லை. மேலும், ரிக்வேதக்கதை, ‘‘ஊர்வசி மனத்தில் பிறந்து, குடத்தில் விழுந்த வருணமித்திரர் வீரியத்தில் வடிவெடுத்து, மின்னல் தரித்தவராகப் புஷ்கரத்தில் (தாமரைக் குளத்தில்) தோன்றினர்’’ என்று பொருள் தருவதாக உள்ளது என்பர் கோசம்பி.

அப்சரஸுகள் நீராடுவதைப் பெரிதும் விரும்பும் தெய்வமகளிராக வேத சூக்தங்களில் குறிப்பிடப் பெறுவர். பின்னுளிலேயே அவர்கள் தேவலோகத்தில் வாழ்வோராயினர். ஆடல் பாடலில் வல்ல அப்சரஸுகள் தாய்த் தெய்வ வழிபாட்டுக்குத் தம்மை அர்ப்

பில் வசிட்டரை நியமித்தான்* என்று ரிக்வேதத்திலிருந்து

பணித்துக் கொண்டவரென்றும், அவர்கட்கு இல்லறம் பொருந்தாது என்றும், கருவளப்பெருக்கம் கருதி நடைபெறும் சமயவினையின் கூறாக அவர்கட்குப் புனிதப் புணர்ச்சி உண்டென்றும், அதன் மூலம் அவர்கட்குப் பிறக்கும் மக்களைத் தாய்த்தெய்வ மக்கள் என்பது பொருந்துமென்றும், கும்பம் தாய்த்தெய்வத்தைக் குறிப்பதே என்றும் கோசம்பி கூறுவார். மொகஞ்சதாரோவில் திருக்குளத்தைச் சார்ந்த அறைகள் இந்த புனித மகளிர் பயன்படுத்தியதாகலாம் என்பது அவர் ஊகம். கருவளப் பெருக்கச் சடங்கில் புனிதப் புணர்ச்சி இடம் பெற்றது என்பதை எடுத்துக் காட்டுவார் அவர். அத்தகைய புனிதக் கூட்டத்தில் பிறந்தவர் வசிட்டர் என்பது ஏற்றமாற்றத்துடன் ரிக்வேதத்தில் இடம் பெறுகிறதாம். கோயிலுக்கு உரிமையாக்கப் பெற்ற புனித மகளிரின் சமயப் புணர்ச்சியில் பிறந்தவர் அகத்திய வசிட்டர்களின் முன்னோர் ஆவர் என்னும் கொள்கை ஒரு வகையில் ரிக்வேதக் கதையை விளக்குகிறது என்பது உண்மையே. எவ்வாறாயினும் அவர்களின் சிந்துவெளித் தொடர்பைக் கதையிலிருந்து உய்த்துணரலாம்.

கிருபர், துரோணர், சகுந்தலை ஆகியோரைப்பற்றிய கதைகளிலும் (ஆதிபர்வம்) அப்சரஸுகள் இடம் பெறுவர். நாட்டு வளப்பெருக்கத்துக்கான புனிதப் புணர்ச்சி உரிமையை மட்டும் உடையராக விளங்கிய கோயிற் கணிகையரின் ஏற்பாடே பின்னுளில் பரத்தமை முறையாகச் சீரழிந்தது என்றும், அதேபோதில், காம நோயை உண்டாக்கி வருத்தும் தெய்வமகளிர் (அணங்கு: குறள் 918, 1082) பற்றிய ஐதிகம் எழுந்ததென்றும் கருதலாம். (சிலப்பதிகாரத்தில் வயந்தமாலை வடிவுக் கொண்ட வனதெய்வம் தாமரைக்குளக்கரையிலேயே கோவலன் முன் தோன்றினுள் என்பதும் இங்கு கருதத்தக்கது (11—ம் காதை).

* விசுவாமித்திரர் பத்து குலங்களைச் சுதாசுக்கு எதிரா

ஊகிக்கிறோம். விசுவாமித்திரர் வசிட்டருக்குக் கொடுத்த சாபமாகச் சில ரிக்வேத கீதங்களைக் கருதுவர். அவற்றைப் படித்தாலும் வசிட்ட வமிசத்தினனுக்கு விபரீதம் நேருமென் பர். வசிட்டருக்கும் விசுவாமித்திரருக்கும் இடையே இருந்த பகை பிற்கால மரபிலும் இடம்பெறும்.

○ வசிட்டர் வமிச அந்தணர்களில் ஒரு கிளையினர் வாலசிக கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள். வாலசிக என்ற சொல், 'ஹரி-யூபிய'வில் இந்திரனிடம் தோற்ற மக்களின் பெயரான 'வரசிக' என்பதிலிருந்து உண்டானது.

○ ரிக்வேத குல அமைப்பு, புரோகிதராயினும் பிறராயி னும், அனைத்து உறுப்பினர்க்கும் பாதுகாப்பு அளித்தது. தனிப்பட்டவர்களைத் தரித்திரம் பிடுங்கித் தின்னும் நிலைக்கு அதில் இடமிருந்ததில்லை. ஆனால் வறுமை மிகுதியால் நாயின் குடலைச் சமைத்துப் புசித்தேன் என்பார் வாமதேவர் (4:19:13). வேறு வழியில்லாததால் உளுத்த (புழு அரித்த) விறகே வழங்குவதாகவும், அதை அருள்கூர்ந்து ஏற்க வேண்டுமென் றும் ஒரு புரோகிதர் அக்கினி பகவானை இறைஞ்சுவார் (8, 102, 19—21). ஆரியகுல அமைப்பின் கூட்டுவாழ்வில் பாதுகாப்புப் பெறாது அல்லலுற்ற புரோகிதர்கள் இருந்தனர் என்பதை இவற்றிலிருந்து ஊகிக்கலாம். அவர்கள் சிந்து வெளித் தொடர்பினராகலாம்*.

எனவே. புதிதாக வந்த ஆரிய கவிகளோடு பண்டைய இந்தியப் புரோகிதரும் ரிக்வேத கர்த்தாக்களாக விளங்கின

---

கத் திரட்டினார். அவ்வாறு மூண்டதே ரிக்வேதத்தில் குறிப்பிடப்பெறும் 'பத்து அரசர் யுத்தம்'. அப்போரில் சுதாசும் வசிட்டரும் வெற்றி கண்டனர். ஆனால் சுதா சின் மக்களே வசிட்டரின் மக்களைக் கொல்வித்தனர் என்று யஜுர் வேதம் கூறும்!

சிந்துவெளித் தொடர்பான புரோகிதர் ஆரிய சமூகத் தில் இணைந்ததால் நேர்ந்த கெடுபிடியை வசிட்டர்— விசுவாமித்திரர் பகை குறிக்கிறது என்பது கோசம்பி யின் ஊகம்.

* An Introduction to the study of Indian History.

ரென்றும், இருபகுதியினரும் சேர்ந்தே யஜுர் அதர்வ வேதங்களின் காலத்தில் பிராமணவருணத்தை உருவாக்கினர் என்றும் கொள்வது பிழையாகாது. இச்சூழலில், பிராமணர்களில் வெண்ணிறமேனியரோடு மாநிறத்தாரையும் கருநிறத்தாரையும் கூடப் பிரகதாரண்ய உபநிடதம் குறிப்பிடுவதில் வியப்பில்லை*. வியப்பு யாதெனில், ஒரு வேதம் பயிலும் வெண்ணிற மைந்தன், இருவேதம் பயிலும் மாநிற மகன், மூன்று வேதம் பயிலும் கருநிறப் புதல்வன் ஆகியோரை அடைவதற்கான கர்ப்பாதானச்** சடங்குகளை விவரிப்பதன் மூலம், கருநிற மகனே மூன்று வேதமும் பயின்ற புலவனாவான் என்ற கருத்து அந்த உபநிடதத்தில் இடம் பெறுவதே.

ஆக, ஆரியர் வரவைத் தொடர்ந்து உருவான கலப்புச் சமுதாயத்தின் நால்வருணக் கொள்கைக்கு, இனமொழி நிறப்பிரிவுகள் அடிப்படையாகவில்லை என்பது தெளிவு.

## 5. நால்வருணக் கொள்கையும் நடைமுறையும்

முற்பட்ட உபநிடதங்களின் காலத்திலும் (கி. மு. 600-க்கு முன்) வருணக் கட்டுப்பாடு இறுகவில்லை என்பதைச் சாந்தோக்கிய உபநிடதம் சாற்றும் சத்தியகாமன் கதையிலிருந்து புரியலாம். ஜபாலா என்ற பணிப்பெண்ணின் மகன் சத்தியகாமன். விரதம் காத்து வேதம் ஓதும் பிரமசரிய ஒழுக்கத்தைத் தழுவ விழைந்த அவன், தன் கோத்திரம் யாதென்று தாயை உசாவினன். "பல இல்லங்களில் பணியாற்றியபோது, நீ பிறந்தாய். உன் தந்தை யார் என்பதை அறியேன். என் பெயர் ஜபாலா; உன் பெயர் சத்தியகாமன்.

---

* கருநிறத்தானைக் கண்டவுடனேயே அவன் பிராமணன் அல்லன் என்று விசாரிக்காது முடிவு செய்யலாமென்று பதஞ்சலி முனிவர் பாணினி இலக்கண விளக்கத்தில் கூறுவது உண்மையே. அது வடமேற்கு இந்தியாவின் நிலைமையையே வெளியிடுவதாம்.

** கர்ப்பாதானம்: கருத்தரித்தற்காகச் செய்யும் சடங்கு.

எனவே சத்தியகாம ஜாபாலன்* என்று சொல்லிக் கொள்'' என்று மகனிடம் மொழிந்தாள் அன்னை. அவன் ஹாரித் துருமத கௌதமரை நண்ணித் தன்னை மாணுக்கனுக ஏற்கு மாறு வேண்டிய போது, 'உன் கோத்திரம் யாது?' என்று அவர் வினவ, அவன் தன் தாய் கூறியதை அப்படியே மொழிந் தான். அது கேட்டு மகிழ்ந்த கௌதமர், 'நீ சத்தியத்தி லிருந்து பிறழவில்லை. அந்தணன் அல்லாதானுக்கு இது இய லாது. நீ போய் சமிதை கொண்டுவா. உனக்கு உபநயனம் செய்விக்கிறேன்' என்ருர். இவ்வாறு சத்தியகாமன் பிராம ணனின் சீடனுனன். வருணத்தைக் காட்டிலும் வாய்மைக்கு அதிக மதிப்பு இருந்ததால்தான், நெறி தவறிய ஜபாலாவுக் குப் பிறந்தவன் வேதியனுனன்.

மறுபுறத்தில், வேதியரோடு பிறரும் ஞானிகளாக விளங் கினரென்பதை உபநிடதங்களிலிருந்து அறிகிருேம். விதேக நாட்டு வேந்தனுன ஜனகனிடம் ஞானம் பெற்ற அந்தணர் பலர் ஆவர். அஜாத சத்துரு என்ற அரசன் பாலாகி என்ற பிராமணனுக்கு மெய்யறிவு புகட்டியதைப் பிரகதாரண்ய உபநிடதம் ஓதும். க்ஷத்திரியனுன பிரவாகனன் அந்தண ருக்கு ஞானேபதேசம் செய்ததைச் சாந்தோக்கியம் உணர்த் தும். வண்டிக்காரன் ரைக்வன், வேந்தன் ஜானுசுருதிக்கு ஆத்ம ஞானம் கற்பித்ததையும் சாந்தோக்கியம் புலப் படுத்தும்.

கல்வித்துறையிலும் சமயத்துறையிலும் தலைமையான பங்கு ஆற்றிய அந்தணர்கள், அரசியலிலும் சமுதாயத்திலும் ஏற்றம் பெற்றனர் என்பது மெய்யே.பிராமணர் எல்லை நீத்த உரிமை கொண்டாடுவதை எதிர்த்த பௌத்த நூல்களும், அந்தணரைவிட உயர்ந்தவராக க்ஷத்திரியரைச் சித்திரித்த போதே, பக்தி சிரத்தைமிக்கபார்ப்பனரைப் பாராட்டின. பௌத்தனுன அசோக சக்கரவர்த்தி, தனது கல்வெட்டுக்களில் புத்தசமயத் துறவிகளுக்கு நிகராகப் பிராமணரைப் போற்று கிருன். ஆசிரியர், மந்திரத்துணைவரான புரோகிதர் ஆகி யோரோடு ஏனைய சுரோத்திரியருக்கும் வேந்தன் மானியம்

---

* 'ஜாபாலன்' தந்தைவழிப் பெயர்போலத் தோன்றும்.

வழங்க வேண்டுமென்பார் சாணக்கியர்*. அந்த நிலத்தில் சாகுபடி செய்த விவசாயிகள், அரசனுக்குச் செலுத்தவேண்டிய இறையை அம் மானியத்துக்குரிய அந்தணருக்குக் கொடுத்தனர். காளிதாசன் சாகுந்தலத்தில் சித்திரிக்கும் கண்வர் ஆசிரமம் போன்ற ஆசிரமங்களில் சமய வாழ்வு நடாத்திய அந்தணர்கள், அவ்வாறு மானியம் பெற்றோ, அக்கம்பக்கத்து விவசாயிகளின் ஆதரவு பெற்றோ, வாழ்ந்தனர். மேலும் வேதம் ஓதுவித்தும் பிறகலைகளைக் கற்பித்தும் அந்தணர்கள் வாழ்ந்தனர்**.

ஆயினும் இத்துறைகளில் வாய்ப்புப் பெற்ற அந்தணர் போக, வேறு பல அந்தணர்கள் பிற தொழில்களில் ஈடுபட்டனர். வைத்தியம், மாயமந்திரம், குறிசொல்லுதல், கதை கூறுதல், உழவு, கால்நடை வளர்ப்பு, வணிகம், வில்வித்தை உலோக வேலை, தச்சுவேலை, வண்டி ஓட்டுதல் முதலிய தொழில்களில் ஈடுபட்ட அந்தணர்களைப்பற்றி ஜாதகக் கதைகளிலும் பிற பௌத்த நூல்களிலும் படிக்கிறோம். அமைச்சராகவும் தூதராகவும் அந்தணர் தொழில் புரிந்தனர் என்பது அர்த்தசாத்திரத்திலிருந்து ஊகிக்கப்பெறும். மனவெழுச்சி உடையவர் என்பதால் பிராமணர் படையே சிறந்தது என்று ஆசிரியர்கள் கூறுவரென்றும், அக்கருத்துத் தவறென்றும், பகைவன் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து வணங்கினால், பிராமண வீரர்கள் மனம்மாறி எதிர்ப்பை விடுப்பரென்றும் சாணக்கியர் செப்புவதால்***, பிராமணர் படையும் இருந்ததென்று ஊகிக்கலாம். துரோணன், கிருபன் போன்ற பிராமண சேனாதிபதிகளும் இருந்தனர். மௌரியர் ஆட்சியை அகற்றிச் சுங்கர் ஆட்சியை நிறுவிய புஷ்யமித்திரன், கடைசி மௌரியனுக்குச் சேனாதிபதியாகவிருந்த அந்தணன் ஆவான்.

---

* அதிகாரம் 2, அத்தியாயம் 22. சுரோத்திரியர் வேதம் வல்ல பார்ப்பனர்.

** ஹியூன்சாங், இட்சிங் என்ற சீன யாத்திரிகர்கள், இந்தியாமுழுவதிலும் பிராமணர்கள் மிருந்த நன்மதிப்புக்குப் பாத்திரர்களாக விளங்கினர் என்பர்.

*** அதிகாரம் 9, அத்தியாயம் 123.

சுங்க வமிசத்திடமிருந்து அரியணையைக் கைப்பற்றிய கண்வரும் அந்தணரே. கண்வர் சுங்கர்களைப்போல் வேறுசில அந்தண வமிசங்களும் அரசுகட்டில் ஏறின. சாதவாகன குல வேந்தன் கௌதமி புத்திர சாதகர்ணி ஏகப்பிராமணன் என்று சாசனங்களில் வருணிக்கப்படுகின்றான்*. பேராரிலும் மத்தியப் பிரதேசத்திலும் பேரரசு கண்டு பெருமை எய்திய வாகாடகர் அந்தணரே. தக்கணத்தின் தென்மேற்குப் பாகத்தில், வனவாசியைத் தலைநகராகக் கொண்டு அரசு புரிந்த கதம்பரும் பிராமணரே. வேதம் ஓதுவதற்காகக் காஞ்சிக்கு வந்த மயூர சர்மன், அங்கு நேர்ந்த ஒரு நிகழ்ச்சியால் தூண்டப்பட்டு க்ஷத்திரியன் தொழிலை மேற்கொண்டு, கதம்பர் வமிச ஆட்சியை நிறுவினான். பார்ப்பன முனிவரான இந்திர விஷ்ணுவின் மகனுக்குப் பேரன், கி. பி. 5ஆம் நூற்றாண்டில் மத்தியப் பிரதேசத்தில் கோலோச்சிய மகாராஜா மாத்திரி விஷ்ணு** ஆவான். கி. பி. ஆறாம் நூற்றாண்டில், ஜோத்பூர் பிரதேசத்தில் கூர்ஜர அரசை நிறுவிய அரிச்சந்திரன் வேத சாத்திரங்களைக் கற்றுத் தேர்ந்த அந்தணன் ஆவான். உஜ்ஜயினி, மகேசுவரபுரம் முதலிய இடங்களில் அந்தண அரசர்கள் இருந்ததை ஹியூன் சாங் குறிப்பிடுவான்.

வேதகாலத்தில் இராஜன்யர் என்றும் பின்னாளில் க்ஷத்திரியர் என்றும் குறிப்பிடப்பெற்ற இரண்டாம் வருணத்தினருக்குப் படைக்கலம் பயின்று போர்செய்வதும் அரியணை ஏறி உயிர்களைக் காப்பதும் சிறப்புத் தொழில்களாம். படைக்கலக் கலையில் தேர்ந்த க்ஷத்திரியர் சேனையின் சிறப்பைப் போற்றும் சாணக்கியம். ஆயினும் பிறவருணத்தினர் சேனைகளும் இருந்

---

* சாதவாகனர் அந்தணரா அல்லரா என்பது விளங்கவில்லை. பிராமணனுக்கும் நாககன்னிகைக்கும் உண்டான வமிசத்தார் என்று பழைய கதைகள் கூறுகின்றன. ஏகப்பிராமணன்—தனிப் (தன்னேரில்லாப்) பிராமணன்.

** இவன் குப்தரின் தலைமையை ஏற்றுக்கொண்ட சிற்றரசனே.

தன என்பது அந்நூலிலிருந்தே தெரியவரும்*. அவ்வாறே, முடியுடை வேந்தரில் க்ஷத்திரியரோடு பிறவருணத்தினரும் இருந்தனர்.

ஏனைய வருணங்களைப் போலவே, க்ஷத்திரிய வருணமும் பல்வேறு இனங்களும் குலங்களும் இணைந்து உருவானதே. கி. மு. 200-க்குப்பின் இந்நாட்டின்மீது படையெடுத்த பரதேசப் பொருநர்களான யவனர் (கிரேக்கர்), சகர் (சித்தியர்), பஹ்லவர் (பாலவர் என்ற பார்த்தியர்) முதலியோர் இங்குத் தங்கி இந்நாட்டுப் பண்பாட்டைத் தழுவ, அவர்களையும் க்ஷத்திரியராகக் கொள்வதற்குச் சமுதாயம் தயங்கவில்லை. அவர்கள் தருமத்தைப் புறக்கணித்ததால் தாழ்வுற்ற க்ஷத்திரியர்களே என்பார் மனு**. தகுந்த பிராயச்சித்தம் (பாவசாந்தி) செய்தும், வைதிக நெறியைக் கடைப்பிடித்தும், அன்னியர் சமுதாயத்தில் ஒன்றுவதற்கு உதவிய கொள்கை இது. பின்னாளில், ஹூணர் கலப்பில் தோன்றிய ராஜபுத்திரர்கள், இலட்சிய க்ஷத்திரியர்களாகப் புகழ் அடைந்தனர்.

ஆனால் க்ஷத்திரியரிலும் பலர் பிற தொழில்களில் ஈடு பட்டனர். விவசாயம் செய்த க்ஷத்திரியர்களைப் பௌத்தத் திருநூல்களில் சந்திக்கிறோம். மட்பாண்டம் வனைதல், கூடை முடைதல், மாலை கட்டுதல், சமையல் முதலிய தொழில்களை ஒன்றன்பின் ஒன்றாக மேற்கொண்ட க்ஷத்திரியனைப் பற்றிய ஜாதகக் கதை***யிலிருந்தும் க்ஷத்திரியர் பல்வேறு தொழில்களில் ஈடுபட்டதை ஊகிக்கலாம். க்ஷத்திரியர் வணிகர்களாக விருந்ததைக் குப்தர் காலக் கல்வெட்டிலிருந்து அறிகிறோம்.

---

* அதிகரணம் 9. அத்தியாயம் 123. (ஆள்) பலம் மிகுந்த வைசியர் அல்லது சூத்திரர் படையே பயிற்சிபெற்ற க்ஷத்திரியர் படைக்கு ஒப்பாகும் என்பார். அடிபணிவோனுக்கு அருள்வது பார்ப்பனப் படையின் பலவீனம் என்று அவர் கருதுவதை முன்பே குறிப்பிட்டேன்.

** மனுநீதி x. 44.

*** ஜாதகக் கதைகள் 290.

உழவு, பசுக்காவல், வணிகம் ஆகியவை வைசியரின் தொழில்களென்று அறநூல்களும் அர்த்த சாத்திரமும் கூறுகின்றன. ஆனால் வைசியரிலும் படைவீரரோடு அரச வமிசங்களும் இருந்தன. கி. பி. 7-ஆம் நூற்றாண்டில் வடபுலத்தில் பேரரசு கண்ட ஹர்ஷன் வைசியனே என்பான் ஹியூன்சாங். வைசியப் பொருநரை அர்த்தசாத்திரம் குறிப்பிடுவதைக் கண்டோம். ஆனால் இலட்சிய வைசியன் வணிகனாகவே வாழ்ந்தான். சமுதாய வளர்ச்சியோடு வணிகரின் செல்வமும் செல்வாக்கும் பெருகின. புத்தர் காலத்தில், மகதத்திலும் கோசலத்திலுமாயினும், கோடி கோடியாகப் பணம் தொகுத்த வணிகர் வர்க்கம் உருவாகி வேந்தரின் நன்மதிப்புக்கும் நம்பிக்கைக்கும் பாத்திரமாகியிருந்தது. சமண பௌத்தப் புரவலர்களில் வைசியரே முதவிடம் பெறுவர். புத்தரின் உபதேசத்தில் ஈடுபட்டு, அவருடைய பிட்சு சங்கத்துக்காக ஜேதவதனம் என்ற விகாரையைக் கட்டிக்கொடுத்த அநாதபிண்டிகன் அந்தப் பெருவணிகரில் ஒருவனாவான்*. வைசிய வருணத்தினராக வணிகரும் கம்மியரும் பெருவாழ்வு வாழ்ந்தனரென்பதும், சமய காரியங்களுக்காக,—சிறப்பாகப் பௌத்தமத ஆக்கத்துக்காக—நன்கொடை வழங்கினரென்பதும், சுங்கர்காலக் கல்வெட்டுக்களிலும் விளக்கம் பெறுவன.

சூத்திரர்க்கு வேதம் ஓதும் உரிமையை மறுத்ததோடு, இரு பிறப்பாளர் மூவர்க்கும்—சிறப்பாக அந்தணருக்கு—ஊழியம் செய்வதே அவரின் முதற்பெரும் பணி என்று தரும நூல்கள் விதித்தன**. ஆனால் அந்த அடவாதக்கொள்கையை, உலக நடைக்கு ஒத்த நெறிகண்ட சாணக்கியர் ஏற்றாரல்லர்.

---

* விகாரை—விகாரம் (விஹாரம்): துறவிகள் ஒய்வுறும் இடம். இங்குப் பின்னாளில் ஆலயமும் அமைந்தது. அநாதபிண்டிகன்: அநாதைகளுக்கு உணவு (பிண்டம்) அளித்ததால் இப்பெயர் பெற்ற இவனுடைய இயற்பெயர் சுதத்தன் என்பதாகும்.

** மனு 9. 334—335. இருபிறப்பாளர் மூவர்-அந்தணர், க்ஷத்திரியர், வைசியர் ஆகிய மூவர். இவர்கள் பிரம

இரு பிறப்பாளர் மூவர்க்கும் தொண்டு செய்வதற்கு நிகராகவே, வார்த்தை, கம்மியம், ஆடல்பாடல் என்பனவற்றையும் சூத்திரரின் தொழில்களாக விதிப்பார் சாணக்கியர்*. மௌரியர் காலத்திலேயே, அனேக சூத்திரர்கள் நிறைவான உரிமையோடு உழுது உண்ணும் விவசாயிகளாக விளங்கினரென்பதும் சாணக்கியத்திலிருந்து புலனாகிறது**.

உழவர் கம்மியர் கலைஞரோடு, படை வீரரிலும் சூத்திரர் இருந்தனர். சூத்திர அரசர்களையும் வரலாறு கண்டது. புத்தர் காலத்தில் கோசலத்தில் கோலோச்சிய பிரசேனஜித், மாதங்கர் என்ற 'இழிந்த குலத்தினன்' என்று லலிதவிஸ்தரத்தி***லிருந்து அறிகிறோம். அவனது குலத்தாழ்வை உன்னியே, க்ஷத்திரியரான சாக்கியர் தம் குலப்பெண்ணை அவனுக்கு மணம் செய்விக்க விரும்பாது, அடிமைப் பெண்ணுக்குப் பிறந்தவளைக் கொடுத்தனர் என்றுதம்மபத அட்டகதை ௮* யில் விடேபன் கதை விளம்பும் **௮. வரலாற்றுக் காலத்தில் முதற் சக்கரவர்த்தியாகத் திகழ்ந்த மகாபத்ம நந்தனை நாவிதன் என்று குறிப்பிடுவான் கர்ட்டியஸ் என்ற கிரேக்கன். அந்த நந்தனை நாவிதன் மகன் என்றும் நாவிததாசன் என்றும் சமண நூல்கள் குறிப்பிடும். அவன் குலம், புரியாத ஒன்று

---

சரியத்தை (வேதப்பயிற்சியை) மேற்கொள்ளும் உபநயனத்தின்போது (பூணூல் தரிக்கும் சடங்கின்போது) இரண்டாம் பிறப்பு எடுப்பதால், இரு பிறப்பாளர் ஆயினர் என்பர்.

* அதி 1— அத். 3. வார்த்தை—உழவு, பசுக்காவல், வாணிகம் என்பன (பார்க்க: திருக்குறள் 512-பரிமேலழகர் உரை).

** அதி 2—அத். 22.

*** லலித விஸ்தரம்: கிறிஸ்து பிறப்புக்குச் சற்று முன்போ பின்போ எழுந்த இந்நூல் புத்தரின் வாழ்க்கை வரலாற்றைக் கூறும்.

௮* அட்டகதை—பொருளோடு கூடிய கதை.

**௮ இந்தக் கதையை முன்பே (I:7) கண்டோம்.

என்று பௌத்த நூல்கள் கூறும்*. க்ஷத்திரிய வமிசங்களை வேரறுத்த இரண்டாம் பரசுராமனாகவே மகாபத்ம நந்தனைப் புராணங்கள் சித்திரிக்கின்றன. ஆம், அந்தணர் தலைமையில் அமைந்த வேதவேள்வி நெறிக்கு எதிராக க்ஷத்திரியர்கள் பௌத்த ஜைன சமயங்களை நிறுவிய காலத்திலேயே (கி. மு. 6—ஆம், 5—ஆம் நூற்றாண்டு), க்ஷத்திரிய அரசுகளை அழித்துச் சாம்ராஜ்யம் கண்டனர் சூத்திரத் தலைவர்கள்.

நந்தராட்சிக்கு இறுதி சூழ்ந்து, முன்பின் கண்டறியாத பேரரசை அமைத்துக் காத்த சந்திரகுப்த மௌரியனும் க்ஷத்திரியனல்லன். அவன் 'இழிகுலத்தோன்' என்பான் ஜஸ்ட்டின் என்ற கிரேக்கன். சமணர் மரபும், மயில்களை அடக்கிப் பழக்கிய குலத்தலைவனது மகள் வயிற்றுப் பேரன் என்றே அவனைக் குறிப்பிடும். குப்தர் காலத்திலெழுந்த முத்திரா ராட்சஸம் என்ற நாடகம், அவனை விருஷலன் (சூத்திரன்) என்றும் 'குல ஹீனன்' (ஈனகுலத்தோன்) என்றும் குறிப்பிடும். பொற்காலம் கண்டவராகப் போற்றப்பெறும் குப்தரும், மௌரியரைப் போலவே, க்ஷத்திரியல்லாதாரே. முற்பட்ட குப்தர் நாளில் இறுதி உருவம் பெற்ற புராணங்களும் குப்தர்களை அதர்ம, அநாகரிக, அயோக்கிய, உலோப மிகு முன்கோபிகளென்றே வருணிக்கின்றன. ஒவ்வொரு வேந்தனின் சொந்தப் பெயரும் குப்தன் என்று முடிவதிலிருந்து குப்தர் என்ற வமிசப் பெயர் அமைந்ததால், அவர்களுக்கு மதிப்புக்குரிய குடிப்பெயரோ குலப்பெயரோ இல்லாததை ஊகிக்கலாம். முதலாம் சந்திரகுப்தன் லிச்சவிகளின்** அரசியான குமாரதேவியை மணந்து கொண்டான். சில நாணயங்களில், ஒருபுறம் சந்திரகுப்தன் குமாரதேவியை அன்போடு நோக்க, மறுபுறம் சிங்கத்தின்மீது அமர்ந்த தேவியும் 'லிச்சவயஹ' என்ற எழுத்துக்களும் காணப்படுகின்றன.

---

* History and Culture of the Indian people Volume 2, page 31.

** முன்னாளில் வைசாலியில் வாழ்ந்தனர். பார்க்க: III—5.

எனவே, அத்திருமணத் தொடர்பின் பெருமை விளங்கும். அவர்களின் மைந்தன் சமுத்திர குப்தனும் தன்னை லிச்சவி தௌகித்திரன் (மகளுக்கு மகன்) என்று பெருமை பாராட்டிக் கொள்கிறான். ஆனால் அந்த லிச்சவிகளையும் விராத்திய* க்ஷத்திரியர் என்றே மனுநீதி குறிப்பிடும். ஆக, அரசர் குலங்கள் பலவும்—வரலாறு படைத்த பேரரசர் குலங்களும்—சூத்திரர் என்றோ அவர்களுக்கு ஒப்பானவர் என்றோ கொள்வதில் தடையில்லை.

அறிஞரிலும் சூத்திரர் இருந்தனர். உயர் வருணத்தினருக்குத் தொண்டு புரிவதே சூத்திரன் பணி என்று பேசும் மனுகூட, "மேலான அறிவை நாலாம் வருணத்தானிடமிருந்தும்" கொள்ளலாம் என்றும், "அறம், ஒழுக்கம், நன்மொழி, பற்பல கலைகள் முதலியவற்றை எவ்விடத்திலிருந்தும் அடையலாம்" என்றும் கூறுவதிலிருந்தே**, நான்காம் வருணத்தில் அறிஞரும் கலைஞரும் இருந்தனரென்று அறியலாம். தொழிற் கலைகளும் லலித கலைகளும் சூத்திரர் தொழில்களென்றே சாணக்கியம் செப்புவதையும் முன்பே குறிப்பிட்டோம்.

எனினும், பெரும்பாலான சூத்திரர்கள், பிறவருண ஏழைகளைக் காட்டிலும் அதிகமாக இடர்ப்பட்டனர் எனலாம். தவிர, ஆசார நியமங்கள் பெருகப் பெருக, இறுக இறுக, அவற்றுக்கு உட்படாதவர்களைச் சூத்திரராகத் தாழ்த்தும் கொள்கை செல்வாக்குப் பெற்றது. மதுகுடித்தல், மாமிசம் உண்ணல், விதவைக்கு மறுமணம் செய்வித்தல் முதலான வழக்கங்கள் இழிவானவை என்று கருதப் பெற்ற புதிய சூழலில், அந்த வழக்கங்களை விடாது தழுவிய சாதிகள் தம்மை க்ஷத்திரியர் என்று கூறிக் கொண்டபோதிலும், நாலாம் வருணத்தினராகவே பிராமணரால் கருதப்பட்டன.

வேதமும் வேள்வியும் சூத்திரர்க்கு ஆகாதென்றும் இதிகாச புராணங்களைக் கேட்டலே அவர்கட்கு ஏற்புடைத்து

---

* விராத்தியர் — வருண தருமத்தை விட்டதனால், வருணத்துக்குப் புறம்பானவர். அதாவது தாழ்வுற்றவர்.

** அத்தியாயம் 2; சுலோகம் 238, 240.

என்றும் தரும நூல்கள் இயம்பின என்பது உண்மை. ஆனால் சூத்திரர்க்கு வாய்ப்புத் தந்த பக்திநெறி நாளாவட்டத்தில் வேத வேள்வி நெறியையே மங்கச் செய்தது. தன்னைத் தஞ்சம் அடைந்தவன் சூத்திரனாயினும், வேறு எவனாயினும், அவனுக்கு விமோசனம் நிச்சயம் என்று புகன்றான் கண்ணன், பகவத் கீதையில். எல்லா உயிர்களிலும் இறைமையின் கூறு களையே காணும் உபநிடத தத்துவத்தில் வேரோடி வளர்ந்த பக்திநெறி, சாதிவருணங்களை உடலுக்கே உரியனவென்று உதாசீனம் செய்தது.

ஆக, நெகிழ்ச்சியும் நீக்குப்போக்கும் உடையதாகவே வருணக்கொள்கை வாழ்வில் விளக்கம் பெற முயன்றது என்ப தும், அப்போதும் பிறப்பு அடிப்படையில் தொழிலைத் தீர்மா னிப்பதில் அது குறிப்பிடத்தக்க வெற்றி பெறவில்லை என்ப தும் தெளிவாம். மேலும், சமுதாய வளர்ச்சியில் தோன்றிய நூற்றுக்கணக்கான சாதிகளோடு தொடர்புகாண்பதற்கு முடியாத நிலையில், நால்வருணக் கொள்கை ஓர் ஐதிக மாகவே நிலவியது. அன்றியும், பொதுமக்களின் அன்றாட வாழ்வைப் பெரிதும் தீர்மானித்தது வருணமல்ல, சாதியே.

## 6. சாதிமுறை

சாதிப் பெருக்கத்துக்கு வருணக் கொள்கை வழியில் விளக்கம் தருவதற்கு தரும நூல்களும் சாணக்கியமும் முயல் கின்றன என்பது மெய்யே. வருணக் கலப்பு என்ற கொள் கையைப் புனைந்தே அவை இந்த முயற்சியைச் செய்கின்றன. பார்ப்பனத் தந்தைக்கும் க்ஷத்திரியத் தாய்க்கும் பிறந்தவன் பிராமணனே என்றும், க்ஷத்திரியத் தந்தைக்கும் வைசியத் தாய்க்கும் பிறந்தவன் க்ஷத்திரியனே என்றும், ஆனால், வைசியனுக்குச் சூத்திர மனைவியிடம் பிறந்தவன் சூத்திரனே என்றும், வேறு வகையான வருணக் கலப்பில் பிறந்தவர் புதிய சாதிகளாயினர் என்றும், மனுவும் சாணக்கியரும் மொழிவர். அந்தப் புதிய சாதிகளை அவர்கள் பின்வருமாறு வகைந்து கூறுவர் :

அந்தணனுக்கு வைசிய மனைவியிடம் உண்டானவன் அம்பட்டன்; சூத்திர தாரத்திடம் பிறந்தவன் நிஷாதன் அல்லது பாரசவன்.

க்ஷத்திரியனுக்குச் சூத்திர மனைவியிடம் பிறந்தவன் உக்கிரன்; பிராமண மனைவியிடம் பிறந்தவன் சூதன்.

வைசியனுக்கு க்ஷத்திரிய தாரத்திடம் உண்டானவன் மாகதன்: பிராமண மனைவியிடம் பிறந்தவன் வைதேகன்.

சூத்திரனுக்கு வைசிய மனைவியிடம் தோன்றியவன் ஆயோகவன்; க்ஷத்திரிய தாரத்திடம் தோன்றியவன் க்ஷத்தன்; பிராமண மனைவியிடம் பிறந்தவன் சண்டாளன்.

இந்தக் கலப்புச் சாதிகளின் கலப்பால் புதிய சாதிகள் தோன்றினவாம். உக்கிரனுக்கு நிசாதப் பெண்ணிடம் பிறந்தவன் குக்குடகன். நிசாதனுக்கு உக்கிரப் பெண்ணிடம் உண்டானவன் புற்கசன். அம்பட்டனுக்கும் வைதேகப் பெண்ணுக்கும் பிறந்தவன் வைணன். வைதேகனுக்கு அம்பட்ட மனைவியிடம் தோன்றியவன் குசிலவன். க்ஷத்தன் மகளிடத்தில் உக்கிரனுக்கு உண்டானவன் சுகபாகன். இவ்வாறே, வேறு வேறு கலப்புக்களால் வேறு வேறு சாதிகள் தோன்றின என்று மனுவும் சாணக்கியரும் கூறுவர்*.

சாதிகளின் தோற்றத்தைப் பற்றிய இந்த விளக்கம் புனைந்துரையே என்பது எளிதில் விளங்கும். வருணக் கலப்பை தருமநூல்கள் எதிர்த்தபோதிலும், அவையே சிலவகை அனுலோமத்** திருமணங்களை அனுமதித்தன என்பதும், அவை அனுமதிக்காத அனுலோமத் திருமணங்களும், பிரதிலோமத் திருமணங்களும்கூட நாட்டில் நிகழ்ந்தன என்பதும் மெய்யே. சாதகர்ணி ஒருவன் சக அரசனான ருத்திரதாமன் மகளை மணந்ததும், இரண்டாம் சந்திர குப்தன் (விக்கிரமாதித்தியன்) குபேரநாகாவை மனைவியாகக் கொண்டதும், அவர்களுக்குப் பிறந்த பிரபாவதியை வாகாடக வேந்தனான ருத்திர

---

* மனு: அத்தியாயம் 10, அர்த்தசாத்திரம் அதி. 3-அத். 64.

** ஒருவன் தன்னைவிடத் தாழ்ந்த குலத்தில் பெண் எடுப்பது அனுலோமம்.

சேனன் என்ற அந்தணன் இல்லறத் துணைவியாக அடைந்ததும், பார்ப்பனக் கவிஞனான பாணனின் (கி.பி. 7ஆம் நூற்றாண்டு) தந்தை சூத்திர வருணப் பெண்ணை இரண்டாம் மனைவியாகக் கொண்டதும் அனுலோமத்துக்குச் சான்றுகள். உதயணன்* பார்ப்பனப் பெண்ணை மணந்ததும், அந்தணனான கதம்பர் வமிசத்துக் காகுத்தவர்மன் என்ற மன்னனின் மகளிர் குப்த, கங்க வமிசத்து அரசகுமாரரை மணந்ததும், வல்லபி வேந்தன் பாலாதித்தியன் (க்ஷத்திரியன்) வைசியனான ஹர்ஷ சக்கரவர்த்தியின் மகளை மணந்ததும் பிரதிலோமத்துக்கு உதாரணங்கள். அரசியல் நோக்கம் கருதியோ, வேறு காரணத்தாலோ, செல்வாக்குள்ள வட்டாரங்களில் கலப்புத் திருமணங்கள் நிகழ்ந்தன என்பதே இதிலிருந்து விளங்கும். பொதுவாகப் புறமணத்தடை அமலில் இருந்ததைப் பிராமணர் நூல்களோடு பௌத்த ஜைன நூல்களும் புலப்படுத்துகின்றன. பெருங்கூட்டங்களானப் பல்வேறு சாதிகளைத் தோற்றுவிக்கும் அளவுக்கு அனுலோமமும் பிரதிலோமமும் பரவியிருந்தன என்று கொள்வதற்கு இறையும் இடமில்லை.

மேலும், நிசாதர், சண்டாளர் முதலான சாதிகள் பூர்வ குடிகளே என்பது தெளிவு. உக்கிரர், க்ஷத்தர் முதலியோர் பொருநர் குடிகளிலிருந்து எழுந்த சாதிகளாகலாம். மகத நாட்டு மக்கட் கூட்டத்திலிருந்து மாகதரும், வைதேகநாட்டுக் குடிகளிலிருந்து வைதேகரும் தோன்றினரென்பது அந்தப் பெயர்களிலிருந்தே தெரியவரும். வைணன், குசீலவன், சூதன் முதலிய சாதிப் பெயர்கள் அந்தந்த மக்களுடைய பரம்பரைத் தொழில்களின் பெயர்களிலிருந்து எழுந்தனவாகலாம். எனவே, வருணக் கலப்பால் புதிய சாதிகள் எழுந்தன என்ற கொள்கை ஏற்புடைத்தன்று என்பது தெளிவு. வருண முறையே தருமநியாயமானது என்று கருதப்பெற்ற சூழலில், பல்வேறு சாதிகளுக்கு வருணமுறையில்

---

* புத்தர் காலத்தில் வத்ச நாட்டை ஆண்டான். குருப் பிராமணன் மகள் ஒருத்தி உள்பட பல மனைவியர் இவனுக்கு.
பெருங்கதை என்ற காவியத்தின் தலைவன் உதயணனே.

இடம் காணும் நோக்கில் எழுந்த கற்பனேயே கலப்புச்சாதிக் கொள்கை. சண்டாளர் தவிர, ஏனைய கலப்புச் சாதிகள் சூத்திரர்க்கு ஒப்பாவர் (சூத்திரர் தருமங்களேக் கடைப்பிடிப் பர்) என்று சாணக்கியம் செப்புவதிலிருந்தும் இதனே ஊகிக்க லாம்*.

சாதிகள் வருணங்களிலிருந்து தோன்றினவன்று என்று திட்டமாகக் கூறலாம். ஆனல் சாதிகள் எவ்வாறு எழுந்தன என்று அறுதியிட்டு உரைக்க முடியாது. பல்வேறு காரணங்களின் அலாதியான சேர்க்கையால் சாதிமுறை உருவாயிற்று என்பர் ஆராய்ச்சியாளர்.

சாதிமுறையை உருவாக்கி நிலேபெறச் செய்ததில் பரம்பரைத் தொழில் முறைக்கு முக்கியமான பங்கு உண்டு. ஒரு பிரதேசத்தில், வழிவழியாக ஒரு தொழிலேச் செய்து வந்த கூட்டத்தினர், தம் தொழில் ரகசியங்களேப் பாதுகாப்பதற்காகத் தம் குடும்பங்களுக்கிடையே பெண் எடுத்தும் கொடுத்தும் வந்தனரென்றும், அவ்வாறு தொழிற் கூட்டம் சாதியாக வடிவெடுத்தது என்றும் அனுமானிப்பர் அறிஞர். சுக்கில யஜுர் வேதம், புருஷ மேதம் பற்றிய பகுதியில் குறிப்பிடும் தொழிற் கூட்டப் பெயர்களில் பல, சாதிப்பெயர்களாகத் தோன்றுகின்றன. அந்தணர், குயவர், கொல்லர், வேடர் முதலானேர் வெவ்வேறு கிராமங்களில் வாழ்ந்தனரென்றும், பல்வேறு தொழிற் கூட்டங்கள் நகரங்களின் தனித்தனிப் பகுதிகளில் குடியிருந்தன என்றும் பௌத்த இலக்கியம் உணர்த்தும்.

அரசுக்குத் தேவையான தொழில் நுட்ப விற்பன்னர்களேக் குறிப்பிடும்போது, அவர்கள் அந்தந்தத் தொழிலுக்குப் பிறந்தவர்களாக இருக்கவேண்டுமென்று அர்த்தசாத்திரம் கூறுவதால், ஒவ்வொன்றும் ஒரு பரம்பரைத் தொழிலேச் செய்வதாய் பல்வேறு சாதிகள் இருந்தன என்று அனுமானிக்கலாம். மேலும், சாதிகள் உள்மணக் கொள்கையைக் கடைப்பிடிக்க வேண்டுமென்றும், பரம்பரைத் தொழில்களேச் செய்ய வேண்டுமென்றும் சாணக்கியம் செப்புவதும் குறிப்

* அதி. 3, அத். 64.

பிடத்தக்கது. தவிர, நாயபாகத்தைப் பகுக்கும்போது, பிரதேசம், கிராமம் முதலியவற்றின் வழக்க ஒழுக்கங்களோடு, குறிப்பிட்ட சாதியில் தொன்றுதொட்டு வழங்கும் நெறியையும் கணக்கிலெடுக்கவேண்டுமென்றும் மொழியும் சாணக்கியம். ஆக, மௌரியர் காலத்திலேயே, பரம்பரைத் தொழிலும் உள்மணக்கொள்கையும் உடைய கூட்டங்கள் உருவாகியிருந்தன என்பதும், அவை சாதிகள் என்றே குறிப்பிடப்பட்டன என்பதும் தெளிவு. எனவே, வண்ணான், தச்சன், கொல்லன், பொற்கொல்லன் முதலியோரைச் சாணக்கியர் குறிப்பிடும்போது, அவர் தொழில் வழியே எழுந்த சாதிகளையே கருதுகிறார் என்று ஊகிக்கலாம்.

மௌரியர் அரசவையில் தூதனாயிருந்த மெகஸ்தனீஸ் ஏழு சாதியினரைக் குறிப்பிடுவான்: 1) தத்துவஞானிகள் 2) உழவர் 3) ஆயர் 4) கம்மியர் 5) பொருநர் 6) அதிகாரிகள் 7) மந்திரத்துணைவர். எவரும் அன்னிய சாதியில் திருமணம் செய்து கொள்ள முடியாதென்றும், ஒருவனும் தன் தொழிலை விடுத்து வேறு தொழிலைச் செய்யமுடியாதென்றும் அவன் கூறுவதால், பரம்பரைத் தொழிலும் உள்மணக்கொள்கையும் உடைய சாதிகளையே அவன் குறிப்பிடுகிறான் என்பது விளங்கும். இந்த இரு அமிசங்களும் இந்நாட்டுக்கே உரிய சிறப்பியல்புகள் என்பதால், எகிப்திலோ ஈரானிலோ கண்டதை அவன் இந்தியாமீது ஏற்றிக்கூறுவதாக வாதிக்க முடியாது. அதிகாரிகளும் மந்திரத்துணைவரும் சாதிகளாக இறுகியிருக்க முடியுமா என்று அயிர்ப்பது இயற்கையே. ஆனால், படிஎடுத்தல் முதலிய பணிகளைப் புரிந்த சிப்பந்திகளான காயஸ்தர்கள் தனிச்சாதியாக உருப்பெற்றதைப்போல், மந்திரத்துணைவர் முதலிய ஏனைய ஆட்சிக்கலைக் கூட்டங்களும் சாதிகளாக வடிவெடுத்திருக்கலாம். உழவர், ஆயர், கம்மியர், பொருநர் என்ற நால்வகையைப் பொறுத்தமட்டில், அவை ஒவ்வொன்றிலும் பல சாதிகள் அமைந்திருந்தன என்பது தெளிவு. தத்துவ ஞானிகளைப் பிராமணர், சிரமணர் என்ற இருவகையாகப் பிரிப்பார் மெகஸ்தனீஸ். சிரமணர் என்பார் பௌத்தத் துறவிகளாகலாம்; அல்லது அனைத்துக் துறவிகளையும் குறிப்பதாகலாம். சிரமணர் ஒரு சாதியினராகார். எனினும்

அவர்களை அந்தணரோடு சேர்த்து ஒரு சாதியாக மெகஸ்தனீஸ் கணிப்பதற்குக் காரணம் உண்டு. அந்தணரோடு சிரமணரும் தத்துவத் துறையில் ஈடுபட்டிருந்தனர் என்பதே அது. தத்துவஞானி என்பது மட்டுமல்ல, ஏழு பெயர்களுமே தொழில்வழிப் பெயர்களென்பது கருதத்தக்கது. குலத் தொழில் வழியே சாதிகள் நிலைகொண்டதையே மெகஸ்தனீஸ் உரை உணர்த்துகின்றது.

சாதிமுறையை உருவாக்குவதில் ஆதிக்குடிகளின் நம்பிக்கைகள் பெரும்பங்கு வகித்தன. பிறநாடுகளுக்கு மாறாக, இந்தியாவில் நாகரிகச் சமுதாயம் ஆதிக்குடிகளோடு இகலியே நின்று அழிவுக்கூத்து நிகழ்த்தவில்லை. இங்குப் பழங்குடிகள் பொதுச் சமுதாயத்தில் இணைந்துவாழ்வதற்கும், அதே போதில் தமது வழக்க ஒழுக்கங்களைப் பெருமளவுப் பாதுகாப்பதற்கும் வாய்ப்பு ஏற்பட்டது. இந்தச் சாத்விகப் புரட்சியில் வடிவெடுத்த ஏற்பாடே சாதிமுறை எனலாம்.

இந்துச் சமயத்தோடும் சாதிமுறையோடும் ஒட்டோ உறவோ இல்லாத மணிப்பூர் நாகரிடையே தொழில்வழி அமைந்த சுயாட்சிக் கிராமங்களைக் கண்டார் ஹட்டன். சில கிராமங்கள் மட்பாண்டங்களை வனைந்தன; வேறு சில ஆடை நெய்தன; மற்றும் சில, கொல்லன் தொழிலைத் தலைமையாகப் பேணின. அவை தமக்குள் சண்டையில்லாதபோது, பண்டமாற்று செய்துகொண்டன. கொல்லர் கிராமம் போரில் தோற்றதால், கொல்லர்கள் குயவர் கிராமத்தில் குடியேறினால், அவர்கள் அங்கு விவசாயம் செய்வர்; பரம்பரைத் தொழிலைச் செய்வதற்குக் குயவர் அவர்களை அனுமதியார். ஒரு தொழிலைச் செய்யும் கிராமத்தில் இன்னொரு புதிய தொழிலைச் செய்தால், கிராமத்துக்குக் கேடு நேரும் என்று அவர்கள் நம்பியதே அதற்குக் காரணம். இயற்கை கடந்த ஆற்றலாலேயே தொழிலும் விவசாயமும் செவ்வனே நடைபெறுவதாகப் பழங்குடிகள் நம்பியதால், புதுமை நிகழ்த்தி அந்த ஆற்றலை அவமதிக்க அவர்கள் தயங்கினர். இவ்வாறு, பழங்குடிகளின் கொள்கையும் நம்பிக்கையும் பரம்பரைத் தொழிலைப் பேணுவதற்கு அரணாயின என்பார் ஹட்டன். ஒருங்கிருந்து உண்ணுவதற்குப் பழங்குடிகள் தடை விதிக்க

வில்லை என்றாலும், சில உணவுகளை உண்ணக்கூடாது என்ற டாபூவும், உணவால் உண்டாகும் மாயமான பயனைப்பற்றிய நம்பிக்கையும், அன்னியரின் உணவு மாயமாகக் கேடு சூழு மென்ற அச்சமும், பழங்குடிகளிடம் நிலவுவதை அவர் குறிப் பிடுவார். மேலும், புதுமையான தொழிலைப் பயிலும் அன்னியகுலம் அடுத்து வாழ்ந்தபோது, அந்தத் தொழிலிடம் உள்ள அச்சத்தால் அவர்களோடு நெருங்கிய உறவு கொள் வதைத் தவிர்க்க முனைந்தனர் என்றும், இவ்வாறு, அன்னிய ரோடு சேர்ந்துண்பதைத் தடுக்கும் டாபூ தோன்றியிருக்கலா மென்றும் ஹட்டன் ஊகிப்பார். புதிய தொழில் புதிரான தாக விருந்தால், அதனை அஞ்சத்தக்க மாயவித்தையாகக் கருதி, அதனைப் பயில்வோரிடம் இன்றியமையாத் தொடர்பே கொள்வது இயற்கையே. இவற்றுக்கெல்லாம் அடிப்படை யாது எனில், ஒவ்வொரு குலத்துக்கும் ஓர் உயிர்ப்பொருள் உள்ளது என்றும், அயலாரின் உயிர்ப்பொருளால் ஆபத்து நேரும் என்றும் பழங்குடிகள் நம்பியதே ஆகும். உணவைச் சமைக்கும்போது, சமையற்காரனின் உயிர்ப்பொருள் அதில் பங்கு பெறுவதால், அன்னியன் சமைக்கும் உணவு ஆபத்தான தாகுமென்று அவர்கள் நம்பினர். இவ்வாறே, உணவு விலக் குக் கொள்கையைத் தழுவியதாகச் சாதி தோன்றியது என்று உய்த்துணரலாம். உணவு விலக்குக் கொள்கையே கலப்புத் திருமணத் தடைக்குக் காரணமாகலாம் என்பார் ஹட்டன். எவ்வாறு எனில், ஒருங்கு உண்ணுவதற்கு உரிமை இல்லாத வீட்டில் பெண் எடுத்தால், அவள் அவனுக்குச் சமைத்துப் போட முடியாது.

பழங்குடிகள் பொதுச்சமுதாயத்தில் இணைந்து வாழ்வ தற்கு இணங்க நேர்ந்தபோது, வெவ்வேறு தொழிலாளர்கள் தத்தம் தொழிலுக்குரிய சாதியினரோடு சேர்ந்திருப்பர். க்ஷத்திரியராக ஏற்றம் பெற்ற குலத்தலைவர்களும் இருந் தனர்; அவர்களுக்கு அந்தணர்கள் போற்றத்தக்க வமிசாவளி களைப் படைத்துக் கொடுத்தனர்.

மௌரியர் காலத்துக்கு முன்பே, சில பிற்பட்ட பழங் குடிகள் புறச்சாதியினராக ஒதுக்கப்பட்டனர் என்று அறி கிறோம். புறச்சாதியினரில் முதலிடம் பெறுவோர் சண்டாளர்

ஆவர். "சண்டாளர்க்கு உரிய கேணி அந்தச் சண்டாளர்க்கே அன்றிப் பிறர்க்குப் பயன்படாதவாறுபோல"* என்ற எடுத்துக்காட்டு அந்நூலில் வருவதால், சண்டாளர் தாழ்த்தப்பட்டிருந்த நிலை விளங்கும். கற்பழித்தல் முதலிய குற்றங்களுக்குத் தண்டனைகளை வரையறுக்கும் இடத்தில், ஆரிய நால்வருணச் சமூகத்துக்கு அப்பாற்பட்டவராகச் சுவபாகரைக் குறிப்பிடுவார் சாணக்கியர்**. பழிப்புரைக்கான தண்டவிதியைக் கூறும்போது நால்வருணங்களோடு 'எல்லையில் வாழ்நர்' என்ற வகையினரைக் குறிப்பிடுவதால்*-ூ 'எல்லையில் வாழ்நர்' என்பது சண்டாளர், சுவபாகர் முதலிய புறச்சாதிகளையே குறிக்குமெனலாம். சண்டாளர் சுடலையின் அருகில் வசிக்க வேண்டுமென்பார் சாணக்கியர். அவர்கள் அருவருக்கத் தக்கவர்களாகக் கருதப்பட்டனர் என்பது ஜாதகக் கதைகளிலிருந்து புலனாகும். இழிந்தவையாகக் கருதப்பெற்ற தொழில்களைச் சண்டாளர் செய்தனர். இறந்தவரின் இறுதிக்கிரியைகளுக்கு உதவுவதும், இடுகாட்டைக் காப்பதும், மரண தண்டனை பெற்றவரின் உயிரை வாங்குவதும் அவர்களது பணிகளே.

மாட்டிறைச்சி உண்பது முதலிய பழக்கங்களால் சிலர் புறச்சாதியினராக ஒதுக்கப்பட்டனர். அஹிம்சை நெறியின் செல்வாக்கு அதிகரித்ததால், வேடரான நிசாதரும், மீன்பிடிப்பவரும், தோலைப் பதனிட்டும் பயன்படுத்தியும் தொழில் செய்வோரும் புறச்சாதிகளாயினர். நாளாவட்டத்தில், மது வகைகளைத் தயாரித்து விற்போரும் ஈன சாதியினராகக் கருதப்பட்டனர் என்று ஊகிக்கலாம், வேதகாலத்தில் நன் மதிப்புக்கு உரியவராக விளங்கிய இரதகாரரும் (இரதம் அமைப்போரும்), எக்காரணத்தாலோ, தாழ்த்தப்பட்டவராயினர். புறச்சாதிகளிலும் உயர்வுதாழ்வுப் படிநிலைகள் அமைந்தன.

பரதேசிகளான மிலேச்சரும் தீண்டத்தகாதவரே. ஆனால் இந்தியப் பண்பாட்டைத் தழுவிய மிலேச்சர், காலப்போக்

---

* அதி. 1 அத் 14.
** அதி 4. அத் 90.
*-ூ அதி 3. அத் 75.

கில், பொதுச் சமுதாயத்தில் இடம் பெற்றனர். சகர், பஹ்லவர் முதலியோர் இவ்வாறே தாழ்வுற்ற க்ஷத்திரியராகக் கருதப்பெற்றனர் என்பதை முன்பே கண்டோம். பார்க்கப் போனால், தனிநபர் எவரும் சமுதாயப் படிநிலையில் உயர முடியாதென்றாலும், ஒருசாதி வைதிக ஒழுக்கத்தைத் தழுவி வாழ்வதன் மூலம் உயர முடிந்தது.சாதிகள் உயர்வதும் தாழ்வதும் ஒழுக்கத்தைப் பொறுத்தது என்பது பெரும்பாலும் உண்மையே.

ஆகக்கூடி, பழங்குடிகளை இணைத்துக்கொண்டு பரவியதாலும், பரம்பரைத் தொழிலைப் பயின்ற கூட்டங்களின் வளர்ச்சியாலும், புதிய புதிய பரதேசிக் கூட்டங்கள் வந்து கலந்ததாலும், புதிய புதிய தொழில்கள் உதயமானதாலும், மொழிகளும் அரசுகளும் சமயப் பிரிவுகளும் பலவாக இருந்ததாலும்*, இன்னோரன்ன பிற காரணங்களாலும், சிக்க

---

* பொதுவான தாய்மொழி, சாதியின் அடிப்படைகளில் ஒன்றாக விளங்குவது பெரும்பாலும் உண்மை. எடுத்துக்காட்டு: தெலுங்கு மொழியினரான தேவாங்கர், கன்னட மொழியினரான தேவாங்கரிடையில் பெண் எடுப்பதுமில்லை, கொடுப்பதுமில்லை; அதுபோலவே, தமிழ் ஸ்மார்த்த பிராமணரும் பிறமொழி ஸ்மார்த்த பிராமணரும் திருமண உறவு கொள்வதற்கு விலக்கு உண்டு.

சமய வேறுபாடும் சாதிப் பன்மைக்குக் காரணமாயிற்று. உதாரணம்: தமிழ் பிராமணரில் ஸ்மார்த்தரும் வைணவரும் திருமண உறவு கொள்வதற்குத் தடை உண்டு.

பூர்வீக வரலாற்று வேற்றுமையும் சாதிப் பிரிவுக்குக் காரணமாகலாம். உதாரணம்: தமிழ் பேசும் ஸ்மார்த்தரே ஆயினும், வடமன், பிருகச்சரணம் என்னும் பிரிவினரிடையே மணவிலக்கு இருந்து வந்தது.

விவசாயம் செய்யும் குடிகளிடையே பிரதேச வேற்றுமை (அல்லது முன்னைய அரசு வேற்றுமை) சாதி வேற்றுமைக்குக் காரணமாயிற்று. உதாரணமாகத் தொண்டை மண்டல வேளாளர், கொங்கு நாட்டு வேளாளர், சோழிய வேளாளர் என்னும் பிரிவினரிடை மணவிலக்கு இருந்தது.

லான சாதிமுறைப் பொதுச் சமுதாயம் உருவாயிற்று என்று கூறலாம்.

## 7. அடிமைகள்

இந்தியாவில் அடிமைகள் இருந்தனர் என்பது உண்மையே. ஆனால் கிரேக்க, ரோமானிய நாகரிகங்களில், அடிமைகளை விருப்பம்போல் ஒறுப்பதற்கும் முதுமையில் நிராதரவாக விடுவதற்கும் எஜமானருக்கு இருந்த உரிமை இந்தியாவில் இருந்ததில்லை. தானும் தன்மனைவி மக்களும் பற்றாக்குறையால் பரிதவித்தாலும், தனக்குக் குற்றேவல் புரியும் அடிமைக்குக் குறைவுநேரக்கூடாது என்று ஆபஸ்தம்ப தரும சூத்திரம் விதிப்பதைப் பாஷம் எடுத்துக்காட்டுவார். குற்றம் புரிந்த அடிமையையும் குடும்பத்தினரையும் ஒன்றுபோல் கருதுவார் மனு; தண்டனைக்கு வரையறையும் விதிப்பார் :—

"மனைவி, மகன், அடிமை, பணியாள், தம்பி ஆகியோர் குற்றம் புரிந்தால் கயிற்றாலோ பிரம்பாலோ அடிக்கவும். உடம்பின் பின்புறத்தில்தான் அடிக்கலாம்; தலையில் அடிக்கக் கூடாது. இவ்விதியை மீறுவோர்க்குத் திருடனுக்குரிய தண்டனை வழங்கவேண்டும்*.

சுதந்திரத் தொழிலாளிக்கு நிகராக அடிமைக்கு உணவும், பணக்கூலியும் கொடுக்கவேண்டும் என்பார் சாணக்கியர்**. பணக் கூலியைச் சேமிக்கவும், தந்தைவழித்தாயத்தை அடையவும், ஓய்வு நேரத்தில் சம்பாதிக்கவும், அடிமைக்கு உரிமை உண்டு என்றும், விடுதலைத் தொகையைக் கொடுத்து அவன் சுதந்திரம் பெறலாம் என்றும், ஆரியரான நால் வருணத்து அடிமைகளை மலஜல எச்சில்களை எடுக்கச் செய்யக் கூடாதென்றும், அடிமைப்பெண்ணின் கற்புக்குக் களங்கம் நேரக்கூடாதென்றும் விதிப்பார் சாணக்கியர்***.

---

* மனு: VIII—300, 301.

** அதி 25, அத் 45.

*** அதி 35. அத் 70.

இந்த அடிமைகளும் சிலரே. அவர்கள் பெரும்பாலும் வீட்டுப்பணியே புரிந்தனர். அரசாங்கத்தின் அடிமைகளும் சிலராகவே இருந்ததால்தான், பொதுத்துறைத் தொழிலில் அடிமைகளோடு சுதந்திரத் தொழிலாளரும் பணியாற்றினர் என்பது அர்த்த சாத்திரத்தில் புலனாகும். இந்தியாவில் பொருளுற்பத்தி செய்த தொழிலாளரும் கம்மியரும் விவசாயிகளும் சுதந்திரர்களாகவே இருந்தனர். கிரேக்க, ரோமானிய நாகரிகங்களில் அடிமைகளைக்கொண்டு பொருளுற்பத்தி செய்த மாதிரிப் பண்டைய இந்தியாவில் நடைபெறவில்லை. இந்த மாறுபாட்டை உன்னியே, ''அனைத்து இந்தியர்களும் சுதந்திரமானவர்களே. அவர்களில் ஒருவர் கூட அடிமையில்லை'', என்று கூறினான் மௌரியர் அவைக்கு வந்த கிரேக்க தூதன் மெகஸ்தனீஸ்.

## 8. நானிலக்குடிகளும் நால்வருணச் சமுதாயமும்

தொல்காலத் தமிழகத்தில் பல்வேறு குடிகள் நாகரிகச் சமுதாயத்தில் ஒருங்கிணைந்த வரலாற்றைத் துலங்கச் செய்யும் கைவிளக்கு ஏதுமில்லை. இரண்டாயிரம் ஆண்டுக்கு முன் எழுந்த சங்க இலக்கியமே, சமுதாய நிலைகளை ஓரளவுக்குப் புலப்படுத்தும் தொன்மையான கருவூலமாகும். சங்ககாலத் தமிழகத்தின் சமுதாய, பொருளாதார நிலைகளை அவ்விலக்கியத்தின் துணைகொண்டு அறிவது பயனுடைத்து.

நிலத்தை நான்கு வகையாகப் பிரித்து, நானிலம் என்று பெயரிட்டனர் சங்கச்சான்றோர். அவை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் எனப்பெறும். மலையும் மலைசார்ந்த இடமும் குறிஞ்சி என்பர். காடும் காட்டை அடுத்த இடமும் முல்லையாம். வயலும் வயல் சூழ்ந்த இடமும் மருதம் என்றனர். கடலும் கடலைச் சார்ந்த இடமும் நெய்தல் நிலமாகும். குறிஞ்சியும் முல்லையும் கோடையின் வெப்பத்தால் நீரும் நிழலும் இன்றி நலியும்போது, அவை பாலையாகும் என்பர். ஆகவே, பாலையையும் சேர்த்து ஐவகை நிலமாகவும் கூறுவர்.

குறிஞ்சி நில மக்கள், கானவர், வேட்டுவர், குறவர் எனப்பெறுவர். ஐவனம் என்ற ஒருவகை மலை நெல், தினை

மூங்கிலரிசி, மொச்சை, விலங்குகளின் இறைச்சி, தேன், கிழங்கு முதலியன இவர்களது உணவுக்குரிய பொருள்கள். வேட்டையாடுதல், தேன் எடுத்தல், கிழங்கு அகழ்தல், மரங் களை வெட்டி எரித்துவிட்டு, அந்நிலத்தில் தினை, ஐவனம் முதலியவற்றை அருவி நீரால் சாகுபடி செய்தல் முதலியன குறிஞ்சி நிலக் குடிகளின் தொழில்களாம். குறிஞ்சிநில ஊர் கள் சிறுகுடி என்றும் குறிஞ்சி என்றும் வழங்கப்பட்டன. மூவேந்தர்க்கோ குறுநில மன்னர்க்கோ உட்படாது, நிறை உரிமையோடு வாழ்ந்த குறவர் குடிகள் பலவாம். ஆயர் குலங் களின் ஆநிரைகளைக் கவர்ந்து வருதல் அவர்கட்கு இயல் பாம். ஒற்றர் மூலம் உளவறிந்து, பசுக்கள் நின்ற குறுங் காட்டு வாயிற் காவலர்களைக் கொன்று, அங்கிருந்து கொணர்ந்த நிரையை தம் குறிச்சியின் மன்றத்தில் நிறுத் திப் பங்கிட்டுக் கொள்வர். வாட்போர் செய்தோர், ஒற்றர், பறவைகள் வலமாதலையும் இடமாதலையும் பார்த்து நற் சொல்* நவின்றோர் ஆகியோருக்குப் பங்கிட்டுக் கொடுப் பதைப் 'பாதிடு' என்றனர். கிணையன், துடியன், விறலி, பாணன் முதலியோருக்குப் பசுக்களை விரும்பிக் கொடுப்ப தைக் 'கொடை' என்றனர். இவ்வாறு மலைவாணர் ஆநிரை யைக் கவர்ந்துவந்து பங்கிட்ட செய்திகளை வெட்சித் திணைக் குரிய புறப்பாட்டுக்களிலிருந்து அறிகிறோம். குறிஞ்சி நில வாழ்விலேயே தொழில் பிரிவினைக்கு வாய்ப்பு இருந்ததையும், துடியன், கிணையன், பாணன் என்ற தொழில்வழிக் குடிகள் வேடர் ஆதரவில் வாழ்ந்ததையும் கொடைத்துறை விளக்கம் புலப்படுத்துகிறது**.

---

* நற்சொல்—நன்னிமித்த (நற்சகுன) மொழி.

** இவ்வாறு ஆநிரையைக் கவர்ந்து வந்து பங்கிட்டுக் கொள்வதை வெட்சித்திணை என்பர் (தொல். பொருள் 57, 58; புறப்பொருள் வெண்பாமாலை, வெட்சிப் படலம்). வேந்தரின் எல்லைக் காவலரும் வெட்சித் திணை பயில்வர் என்பது இலக்கணம்.

முல்லைநில மக்கள் இடையர் ஆவர். அவர்களை ஆயர், கோவலர், பொதுவர் என்றும் வழங்குவர். ஆடுமாடுகளை மேய்த்தலும் வரகு, சாமை, கொள் முதலியவற்றை முல்லை நிலக்கொல்லைகளில் பயிரிடுதலும் இவர்களின் தொழில்களாம். வரகு, சாமை, முதிரை, பால் முதலியன இவர்களது உணவுக்குரிய பொருள்களாம். முல்லைநிலப் பெண்கள் மோரும் நெய்யும் கொண்டு சென்று விற்று, நெல் முதலியவற்றைப் பெறுவர். குறிஞ்சி நிலத்தில் நெய்யை விற்று, அதற்கு விலையாக மலைவாணர் கவர்ந்திருந்த எருமை, பசு முதலியவற்றைப் பெற்று வரும் சமர்த்து அவர்களுக்கு உண்டு. முல்லைநில ஊர்களைப் பாடி, சேரி, பள்ளி என்பர். கோவலர் குடிகளில் பல, முழு உரிமையோடு வாழ்ந்ததைச் சங்க நூல்கள் புலப்படுத்துகின்றன. மலைவாணர் தம் பசு நிரையைக் கவர்ந்து சென்ற செய்திகேட்டு, இடையர்கள் வில்லேந்தி விரைந்து பகைவரைப் போரில் வென்று நிரையை மீட்டதைக் கரந்தைத்திணைக்குரிய புறப்பாட்டுக்கள்* எடுத்துரைக்கின்றன. வேட்டுவரை எதிர்த்து விந்தை நிகழ்த்தி உயிர் நீத்த வீரனுக்குக் கோவலர் கல் எடுத்து வழிபட்டனர் என்பதையும், நடுகல் வணக்கம் இவ்வாறே தோன்றியது என்பதையும் கரந்தைத் திணைப்பாட்டுக்களிலிருந்து ஊகிக்கமுடியும். துடியன், பாணன் முதலிய குடிகள் ஆயருக்குத் தொண்டு புரிந்து அவர்தம் ஆதரவைப் பெற்றனர். முல்லைநில வாழ்வே அனைத்திலும் மேம்பட்டது என்பார் மாங்குடி கிழார்**.—

---

கவர்ந்து கொணர்ந்த ஆநிரைகளை வேடர் பங்கிட்டுக் கொண்டதை விளக்குவது சிலப்பதிகார வேட்டுவ வரி. புறநானூற்றில் வெட்சிப்போர் பற்றிய செய்யுட்கள் உள (257—8, 262, 269, 297).

* புறநானூறு: (259—61, 263—65, 290). வேந்தன் ஆணையால் சென்ற கரந்தை வீரர் பற்றியும் புறநானூறு பேசும் (270, 287, 291, 298).

** மாங்குடிகிழார், மருதன் என்ற இயற்பெயரை உடையர்; எனவே மாங்குடி மருதனுர் என்றும் குறிப்பிடப் பெறுவர். தலையாலங்கானப் போரில் வெற்றி பெற்ற நெடுஞ்செழியனின் அவைப்புலவரில் சிறந்தவர். மதுரைக்காஞ்சி பாடியவர்.

அடல் அருந்துப்பின்.........
......குருந்தே முல்லை என்று
இந்நான்கு அல்லது பூவும் இல்லை;
கருங்கால் வரகே, இருங்கதிர்த் தினையே,
சிறுகொடிக் கொள்ளே, பொறிகிளர் அவரையொடு
இந்நான்கு அல்லது உணவும் இல்லை;
துடியன், பாணன், பறையன், கடம்பன், என்று
இந்நான்கு அல்லது குடியும் இல்லை;
ஒன்னாத் தெவ்வர் முன்நின்று விலங்கி,
ஒளிறுஏந்து மருப்பின் களிறுஎறிந்து வீழ்ந்தென,
கல்லே பரவின் அல்லது
நெல் உகுத்துப் பரவும் கடவுளும் இலவே*.

(புறநானூறு 335)

குறிஞ்சியும் முல்லையும் நல்லியல்பு இழந்தவுடன், நற்குடிகள் வேறுபகுதிக்குப் போய்விடுவர். வழிப்போக்கரை வருத்திப் பொருள்களைப் பறித்துக்கொள்வோரே அங்கு வாழ்வர். அவர்களை எயினர் என்பர். வணிகர் கூட்டத்தை எதிர்த்து, அவரது பொருளைக் கவர்தல் எயினர்க்கு இயல்பாம். ஊர்களிற் சென்று கொள்ளையடிக்கவும் அவர்கள்

---

* அடல் அருந்துப்பின்—வெல்வதற்கு அரிய வலிமை உடைய; பொறி—வரிகள்: கிளர்—விளங்கும்: ஒன்னா-பொருந்தாத. தெவ்வர்—பகைவர்; முன்நின்று-எதிர்த்து நின்று. விலங்கி—தடுத்து; அழிந்து. ஒளிறு—பிரகாசம்; மருப்பு—யானைக்கொம்பு; எறிந்து-அழித்து, வீழ்ந்தென—தாமும் வீழ்ந்து (நடுகல்லானவரின்) பரவின் அல்லது—வழிபடுவதன்று; நெல் உகுத்து—நெல் சொரிந்து; பரவும் கடவுளும்—வழிபடுவதற்குரிய வேறுகடவுளும்.

குருந்து முல்லை முதலிய மலர்களும், வரகு, தினை, கொள், அவரை என்னும் உணவுப் பொருள்களுமே சிறந்தனவாகக் குறிப்பிடப் பெறுகின்றன; எனவே இது முல்லைநிலம் பற்றிய பாட்டு என்பது விளங்கும்.

தயங்கார். எயினரின் குடியிருப்பு, பறந்தலே, குறும்பு எனப் பெறும்.

நெய்தல் நிலக்குடிகளான பரதவர், மீன் பிடித்தும் உப்பு விளேத்தும், உப்பும் மீனும் விற்றுத் தம் தேவைகளேப் பண்ட மாற்ருகப் பெற்றும் வாழ்ந்தனர். அவர்களது சிற்றூர், பாக்கம்; பேரூர், பட்டினம்.

வேளாண்மையே மருதநிலத்தின் தலேமையான தொழில். கழனியில் உழவருக்கு உறுதுணேயாக நடவு நட்டும் களே எடுத்தும் ஏவிய பணி புரிந்த பெண்களேக் கடைசியர்* என்பர். கழனிவள மிகுதியே நகரங்களின் தோற்றத்துக்கும் அரசுகளின் ஏற்றத்துக்கும் அடிப்படை ஆயிற்று. கி. மு. 3-ஆம் நூற்ருண்டில், அசோக சக்கரவர்த்தி சேர சோழ பாண்டியருடன் நட்பாயினுன் என்பதால், அந்நாளில் மருதநில நாகரிகம் மேவிய மேன்மையை ஊகிக்கலாம். அது நெய்தல் நிலத்தையும் தழுவிக் கடல் வாணிகத்தால் பெருமை எய்தியதைக் கி. மு. 2ஆம் நூற்ருண்டிலேயே பூம்புகார் அடைந்த புகழிலிருந்து ஊகிக்கலாம்**. ஆட்சிப் பரப்பை விரிவாக்கியும், காடு அழித்து நாடு ஆக்கியும், குளம் வெட்டி வளம்

---

* புறநானூறு 61. கடைசியர் என்ற பெயரே அவரகளின் இழி நிலேயைக் குறிக்கும். கடை-இழிந்தோர். 'கல்லாத சொல்லும் கடை எல்லாம்' என்பது நாலடி (255). கடை+சி (பெண்பாற் விகுதி)=கடைசி.

** காவிரி ஆற்றுமுகத்தில் அமைந்ததால் பூம்புகார் என்ற பெயர்வந்தது (புகார்-ஆற்றுமுகம். 'புகா அர்ப் புகுந்த பெருங்கலம்' என்னும் புறநானூறு 30). அரசர் குலத்தை அழிக்கவந்த பரசுராமரை எதிர்த்தல் தகாதென்று, காந்தன் என்ற சோழமன்னன், தனக்குத் தன் காவற் கணிகையிடம் பிறந்த ககந்தனிடம் நாட்டை ஒப்படைத்தான் என்பதும், ககந்தன் ஆண்டதால் புகாருக்குக் காகந்தி என்ற பெயர் வந்தது என்பதும் பழமரபுக்கதை(மணிமேகலே 22; 25-39). வடபுலத்தில் அலகாபாத்துக்குத் தென்மேற்கே 120 மைல் தொலே

பெருக்கியும், கரிகாலன் முதலிய சங்ககால வேந்தர் ஆற்றிப் பணி பெரிது. மருதநில நாகரிகத்தில், தொழில்கள் பல்கிய பெருகின; வாணிகம் செழித்தது; ஆடல் பாடல் முதலிய பல கலைகள் பொலிவு எய்தின; வேத வேள்வி விழுமிய நிலையினை மேவியது. இது வேடர், ஆயர், எயினர், பரதவர், உழவர் என்னும் ஐவகை நிலவழி மக்கள், முறையே வெற்பன், அண்ணல், விடலை, துறைவன், ஊரன் என்ற தலைவரை உடைய குலம் பல கண்ட நிலையன்று; மருதமும் நெய்தலும் மயங்கிய பேரரசு கண்டு, பிறநிலங்களிலும் கால்கொண்டு, தனித்து வாழ்ந்த பல குடிகளையும் தன் உட்கூறுகளாக்கி, உழவரோடு உழுவித்துண்ணும் நிலக்கிழாரையும் தோற்று வித்து, வணிகர், வேதியர், வேந்தர், பல்வகைத் தொழி லாளர்கள், பல்வேறு கலைஞர் ஆகியோரையும் தன்னகத்தே கொண்டு, நகர் பல நிறுவி, வளர்ச்சியடைந்த சமுதாயம் இது. நிலவகையால் பகுத்துரைக்கும் நெறியில் இச்சமுதாயத் துக்கு விளக்கம் காணமுடியாது*. எனவே, இச் சமுதாயத்

---

விலுள்ள பாருத் என்னும் இடத்தில், கி. மு. 150 அள வில் தோன்றிய பௌத்தச் சிற்பங்களில் ஒரு கற்றூணி லுள்ள கல்வெட்டு, அத்தூண் 'காகந்தியைச் சேர்ந்த சோமா என்னும் பிக்குணியின் கொடை' என்று குறிப் பிடுகிறது. கி. மு. 2ஆம் நூற்றுண்டிலேயே பூம்புகார் எய்திய பெருமையை இதிலிருந்து ஊகிக்கலாம்.

* நெய்தல் நிலத்தில் வாழ்வார் பரதவர் என்ற வாய் பாட்டைக்கொண்டு, நெய்தலில் அமைந்த புகார் நகர் மக்களைப் புரிய முடியாது. புகாரில் வேந்தர், வணிகர், வேதியர், மேல்வார வேளாளர், பல்வகைக் கலையும் தொழிலும் பேணியோர் முதலானோர் வாழ்ந்தனர். இதேபோல், மருதநிலக்குடிகள் உழவராவர் என்ற வாய்பாட்டைக்கொண்டு, மருதநில ஊர்களைப் புரிய முடியாது. அவற்றில் வணிகர், வேதியர், மேல்வார வேளாளர், தொழிலாளர் முதலானோர் வாழ்ந்தனர். நாட்டு வளர்ச்சி, வாய்பாட்டைக் கடந்துவிட்டது என்பதே இதன் பொருள்.

துக்கு விளக்கமாக, வடபுலம் கண்ட நால்வருணக் கொள் கையை ஏற்ற மாற்றத்துடன் போற்றுவாராயினர் தொல் லோர். வடபுலத்தைப் போலவே இங்கும், வருணக் கொள்கை ஐதிகமாகவே அமைந்தது என்பதும், அங்குப் போல் இங்கும் சாதியே சமுதாயத்தின் அடிப்படை யாயிற்று என்பதும் மெய்யே. ஆனால் நால்வருணக் கொள்கை யைத் தமக்கேற்ற திருத்தத்துடன் முன்னோர் தழுவினர் என் பதை மறுத்தற்கில்லை. கல்வி கற்றுத் தேர்ந்த கீழ்க்குலத் தானுக்கு மேற்குலத்தானும் ஆட்படுவான் என்று உரைத்துக் கல்வியின் பெருமையை ஓதும் பாண்டியன் நெடுஞ்செழிய னும், வருணம் நான்கு உள்ளது என்பான்:—

> வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்,
> கீழ்ப்பால் ஒருவன் கற்பின்,
> மேற்பால் ஒருவனும் அவன்கண் படுமே.
>
> (புறநானூறு 183)

அந்தணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்று நான்கு வருணங்களை வடநூல்கள் கூறுவதை முன்பே கண்டோம். ஆனால் பண்டைய தமிழகம் அந்த வகையீட்டைத் திருத்தம் செய்து, அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்று அமைத்துக்கொண்டது. போர்த்தொழில் வீரரையும் அரச ரையும் சேர்த்து க்ஷத்திரியர் என்று வடநூல்கள் குறிப்பிட, அரசர் என்பாரைத் தனி வருணமாக்கும் தொல்காப்பியம். அரசர் என்பதும் மூவேந்தர் குடிகளுக்கே பொருந்தும் என்பது அதன் கொள்கை. சூத்திரர் என்ற வருணத்தைக் கொள்ளாது விடுத்தது தொல்காப்பியம்; அதற்குப் பதிலாக வேளாளர் என்ற வருணத்தைக் கொண்டது அது.

> அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்
> ஐவகை மரபின் அரசர் பக்கமும்
> இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்
>
> (பொருள் 75)

என்ற தொல்காப்பிய சூத்திரம், அந்தணர்க்கு ஆறு. அரசர்க்கு ஐந்து, வணிகர், வேளாளர் என்னும் ஏனைய இரு வருணங்களுக்கும் அவ்வாறு (ஆறு, ஆறு) தொழில்கள்

விதிக்கப்பட்டிருப்பதாகக் கூறும். நால்வருணத்தினர் மரபுகளைப் பேசும் சூத்திரங்கள் (பொருள் 625-39) பிற்சேர்வு என்பார், இங்கு அரசரும் பார்ப்பனரும் குறிப்பிடப்பெறுவதை மறுப்பார் அல்லர்; எனினும், ஏனோர் என்பது வணிக வேளாளரைக் குறிக்குமென்று உரையாசிரியர் கூறுவதைத் தவறென்பார். ஆனால்,

மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணம்
கீழோர்க்கு ஆகிய காலமும் உண்டே*
(பொருள் 144)

எனவும்,

பரத்தை வாயில் நால்வர்க்கும் உரித்தே**
(பொருள் 224)

எனவும் தொல்காப்பியம் மொழிவதைக் கருதினால், நால் வருணக் கொள்கையைத் தமிழர் தழுவிய ஒன்றாக அந்நூல் உரைப்பது விளங்கும். பிறப்பால் வேற்றுமை பாராட்டுவது ஆரியர் மரபே என்றும், பிறப்பைக் கருதாச் சிறப்புக்குரியர் தமிழர் என்றும் வாதிப்பதெல்லாம் வம்பே. காதல் கொள்வதற்குரிய தலைவனும் தலைவியும் பத்து வகைகளில் ஒத்திருத்தல் வேண்டும் என்பதைக் கூறுங்கால், முதற்கண் பிறப்பையும் அடுத்துக் குடிமையையும் குறிப்பிடுவர் தொல்காப்பியர் (பொருள் 273)***. இங்கு பிறப்பு என்பது வருணம் அல்லது

---

* மேலோர் மூவர்: அந்தணர், அரசர், வணிகர். கரணம்-(திருமணச்) சடங்கு. கீழோர்: வேளாளர். முற்காலத்தில் நான்கு வருணங்களுக்கும் வேள்விச் சடங்கோடு திருமணம் செய்யும் முறை உரியதாயிருந்தது என்பது கருத்து.

** பரத்தை வாயில்—தலைவன் பரத்தமையால் தலைவிக்குத் தோன்றிய ஊடல் தீர்த்தற்குரிய தூதர். நால்வர்—நான்கு வருணத்தினர்.

*** மேலும், ''நாடும் ஊரும் இல்லும் குடியும்
பிறப்பும் சிறப்பும்'' (பொருள் 114)
என்று இல்லினும் குடியினும் வேறாகப் பிறப்பைக் குறிப்பிடுவார்.

சாதியையும், குடிமை என்பது உயர்குலத்தார் ஒழுக்கத்தையும் குறிக்கும். சாதி என்பதை அதன் தனித்தமிழ் மொழிபெயர்ப்பான பிறப்பு என்ற சொல்லால் வள்ளுவரும் ஆள்வார்:—

மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கம் குன்றக் கெடும். *(134)*

''பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும்'' *(972)* என்று அவர் கருதினர் என்பது மெய்யே. ஆயினும், பிறப்பால் வேற்றுமை பாராட்டும் தன்மையிலேயே சமுதாயம் அமைந்திருந்தது. எனவே, பார்ப்பான் பிறப்பு-ஒழுக்கத்தை அவர் குறிப்பிட வேண்டியதாயிற்று. மறையை மறந்தாலும் மீண்டும் கற்கலாம்: ஆனல் பார்ப்பானின் பிறப்புக்குரிய ஒழுக்கம் குன்றிஞல் குலமே கெடும் என்று எச்சரித்தார். ''சிறப்புடை வருணத்திற்கு மொழிந்தமையின், இஃது ஏனைய வருணங்கட்கும் கொள்ளப்படும்'' என்று பரிமேலழகர் இதற்கு வழங்கிய குறிப்புரையும் இங்குக் கருதத்தக்கது. கல்வியின் பெருமையைக் கூறும்போதும், வள்ளுவ்ர், நெடுஞ்செழியனைப் போலவே,

மேற்பிறந்தார் ஆயினும், கல்லாதார், கீழ்ப்பிறந்தும்
கற்ருர் அனைத்திலர் பாடு* *(409)*

என்று கூறுவர். தமிழகத்தில் மேற்பிறந்தார் என்றும் கீழ்ப் பிறந்தார் என்றும் கருதப்பெற்றவர் இருந்தமை இக்குறளிலும் விளக்கம் பெறும். குடிமை அதிகாரத்தின் குறள் பத்தில் ஏழு பாக்கள் உயர்குடிப்பிறப்பின் பெருமையையும் பொறுப்பையும் வலியுறுத்துவன. உதாரணம்:—

அடுக்கிய கோடி பெறினும் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்தல் இலர்** *(954)*

---

* அனைத்து இலர் பாடு—அனைத்துப்பாடு இலர்—ஒத்த பெருமை இலர்.

** அடுக்கிய கோடி—பலகோடிப் பொருளை. குடிப்பிறந்தார்-உயர்குடியில் பிறந்தார். குன்றுவ-தாழ்வாயின.

நலத்தின்கண் நாரின்மை தோன்றின் அவனைக்
குலத்தின்கண் ஐயப் படும்*. (958)

நிலத்திற் கிடந்தமை கால்காட்டும்: காட்டும்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்**. (959)

இதுகாறும் கூறியவாற்றால், பிறப்புக்குச் சிறப்புத்தரும் நெறி தமிழகத்தில் விளக்கம் பெற்றது விளங்கும். "குல விச்சைக் கல்லாமற் பாகம்படும்"*** என்ற பழமொழி எழுந்ததும் தமிழ் மண்ணில்தான். "புலையன்" "இழிசினன்", "இழிபிறப்பாளன்" என்னும் சொற்கள் புறநானூற்றில்*-௪ பயிலப் பெறுவதையும் கற்றோர் அறிவர். தூய தமிழ்க் காப்பியமாம் சிலப்பதிகாரமும்,

பால்வேறு தெரிந்த நால்வேறு தெரு (22: 110)

என்றுரைத்து மதுரையில் நால்வருணத்தினரும் வேறு வேறு தெருவில் வாழ்ந்தனர் என்று மொழியும். இந்திர விழா முடிவில் புகார் நகர மக்கள் கடலாடச் சென்றபோது கடற்கரையில்எழுந்த ஆரவாரத்தை "நால்வகை வருணத்து அடங்காக் கம்பலை ௫*" என்பார் இளங்கோ அடிகள். பூம்புகாரின் சுடுகாட்டில் அமைந்த கல்லறைக் கோயில்கள்கூட,

நால்வேறு வருணப் பால்வேறு காட்டி (6:54)

நின்றன என்று மொழியும் மணிமேகலை. ஒவ்வொரு வருணத்தையும் காப்பதற்கு ஓர் அதிதேவதை (பூதம்) இருந்ததென்றும் அவற்றைப் புகார் மக்கள் பாடிப்பரவினர் என்றும் உரைப்பார் இளங்கோ ௫**. கண்ணகி ஏவலால் மதுரையில் தீ மண்டியபோது, வருண பூதங்கள் நான்கும் நகரைவிட்டு நீங்கின என்றும் அவர் உரைப்பார். அதனைக்] கூறும்போது, நால்வகை வருணப்பூதரின் இயல்புகளை விரித்துரைப்பார் (22:16; 34—36; 51—66; 85—88: 97;108).

---

* நாரின்மை-ஈரமின்மை, கருணையின்மை.

** நிலத்திற் கிடந்தமை-நில இயல்புகளை; கால்-முளை.

*** பழமொழி; 21

*-௪ 82, 170, 287, 360, 363.

௫* சிலப்பதிகாரம் 6:164-5. (கம்பலை–ஆரவாரம்)

௫** சிலப்பதிகாரம் 6:35-36.

இவ்வாறு நால்வருணக் கொள்கை ஏற்றம் பெற்றதில் வியப்பில்லை. முன்னாளில் காட்டாட்களே கிடைத்ததைப் பகிர்ந்து சமதர்ம நெறியில் வாழ்ந்தனர். இந்நாளிலேயே, அனைவரும் நாகரிக வாழ்வைத் துய்ப்பதற்கான வாய்ப்பைத் தந்திருக்கிறது விஞ்ஞானம். முன்னாளைய நாகரிகமெல்லாம் ஏற்றத்தாழ்வு அடிப்படையில் உருவானவைதான். மேலும், முழு உரிமையோடு தனித்தனியே வாழ்ந்து, ஓயாப் போராலும் ஒழியா வறுமையாலும் வருந்திய குலங்களை, உழவும் தொழிலும் வாணிகமும் ஆக்கம் பெறுவதற்கேற்ற பொதுச் சமுதாயத்தில் ஒருங்கிணைப்பதற்கு உதவிய வகையில், நால் வருணக் கொள்கையும் சாதிமுறையும் முற்போக்கான வரலாற்றுப் பாத்திரமே முதலில் வகித்தன என்பதும் உண்மை. இந்தத் தெளிவோடு, சங்ககால மக்களைப் பற்றி மேலும் ஆராய்வோம்.

## 9. சங்ககால அந்தணர்

சங்ககாலச் சமுதாயத்தில் சிறப்பிடம் பெற்ற பார்ப்பனரின் வடபுலத் தொடர்பை அவர்தம் கோத்திரப் பெயர்களே புலப்படுத்துகின்றன. காசிபன், கௌதமன், கௌசிகன், வாதுளி, ஆத்திரேயன் கௌணியன் முதலிய கோத்திரப் பெயர்களை உடைய புலவர்களின் பாடல்கள் சங்கநூல்களில் உள*. நெடும்பாரதாயனார் (பாரத்துவாஜன்**) ஒரு சேரனுக்கு ஆசானாக இருந்தாரென்று பதிற்றுப்பத்தின் பதிகம் (3) கூறும். காப்பியக்குடிப் பார்ப்பனரும் தமிழகத்தில் வாழ்ந்தனர்***. எல்லாக் கோத்திரங்களுக்கும் முதல்வர் இருவரே என்பது சங்ககால ஐதீகம்.

---

* காசிபன் (கசியபர்), கோதமன், காசிகன், அத்திரி ஆகியோர் பார்ப்பன கோத்திர முதல்வரான எண்மரில் நால்வர். அத்திரி முனிவர் வழியினர் ஆத்திரேயர் ஆவர்.

** பாரத்துவாஜரும் கோத்திர முதல்வரான எண்மரில் ஒருவரே.

*** உசநஸ் என்னும் முனிவரைக் கவி வழியினரான

இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி (திருமுருகு 178) என்பது நக்கீரர் வாக்கு. அந்த இருவர் தெய்வக் கணிகை யிடம் பிரமனுக்குப் பிறந்தனர் என்று மொழியும் மணி மேகலை.

---

காவியக் (காப்பியக்) குலத்தினராக ரிக்வேதம் குறிப் பிடும். பின்னுளில் கவியைப் பிருகு முனிவரின் மரபினராகக் கொண்டனர். கவிவழியினர் காப்பியர் (காவியர்) ஆவர். கவி என்று சுக்கிரனைக் (வெள்ளி யைக்) குறிப்பிடுவர். சுக்கிரன் என்னும் ஆசிரியனைக் கவிமகன் (காவியன்) என்பர். காப்பியர் சுக்கிரன் மரபினர் என்று கருதப்பெற்றனரென்று இவற்றி லிருந்து அறியலாம். சுக்கிரன் என்னும் கிரகத்தைச் சிந்துவெளியினர் வழிபட்டதையும், சுக்கிராசாரியர் அசுரர்களின் குரு என்ற மரபுரையையும் கருதினுல், சுக்கிரன் மரபினரின் சிந்துவெளித் தொடர்பு விளங்கும்.

பார்ப்பன மகனுக வந்த கடவுளாம் சாத்தன் 'காப்பியத் தொல் குடியில்' வளர்ந்தானென்று சிலப் பதிகாரம் செப்பும் (30:83). காப்பியக்குடி என்ற ஊரே குறிப்பிடப் பெறுகிறதென்பர் சிலர்.. ஆனுல் "காப்பியக்குடி என்னுது, காப்பியத் தொல்குடி என்றதே அஃது ஊரன்மையும் பழையதோர் குலமாதலும் காட்டும் என்க" என்று பேரறிஞர் ரா. ராகவ ஐயங்கார் கூறுவது சரியே. காப்பியக்குடி என்பதும் காப்பியப் பார்ப்பனர் ஊர் என்றே பொருள் படும். காப்பியக்குடியின் தொன்மையைக் கருதியே தொல்காப்பியர் என்ற பெயர் வந்ததென்பர் ரா. ராகவ ஐயங்கார். தமிழ்ப்பார்ப்பனர் அன்னியரே என்றும், ஏனையோரெல்லாம் தூயதனிச் செந்தமிழர் என்றும் முற்சாய்வுக் கருத்துடையோர், தொல் காப்பியர் பார்ப்பனரல்லர் என்று நிறுவப் பலவாறும் முயல்வர்.

மாமறை மாக்கள் வரும்குலம் கேண்மோ;
முதுமறை முதல்வன் முன்னர்த் தோன்றிய
கடவுட் கணிகை காதலர் சிறுவர்
அருமறை முதல்வர் அந்தணர் இருவரும்;
புரிநூல் மார்பீர்! பொய்யுரை ஆமோ?

என்று தன்னை இகழ்ந்த அந்தணரை ஆபுத்திரன் எள்ளி நகையாடியதாக மணிமேகலை பேசும் (13: 93—97). முதுமறை முதல்வன் (பிரமன்) கண்ட தேவகணிகை திலோத்தமை ஆவாள் என்றும், அப்போது (கலசத்தில்) பிறந்த அருமறை முதல்வர் வசிட்டரும் அகத்தியரும் ஆவர் என்றும், டாக்டர் சாமிநாத ஐயர் அவர்கள் இந்த அடிகளுக்கு விளக்கம் தருவர். நீலகேசி விருத்தி சமயதிவாகரம்* இந்த மரபுரையைக் குறிப்பிடுவதையும் அவர் எடுத்துக் காட்டுவார். எனவே, ''இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி'' என்று நக்கீரர் அந்தணரைக் குறிப்பிடுங்கால், அவர் வசிட்ட அகத்தியர்களையே கருதுகிறுர் எனல் தகும்.

பார்ப்பனர் கோத்திரங்களின் முதல்வர் எண்மர் என்பது வடநூல் மரபாக, அம்முதல்வர் இருவரே என்ற சங்ககால ஐதிகத்தைத் திருமுருகாற்றுப்படையும் மணிமேகலையும் கூறுவது சிந்தனைக்குரிய விவரமாகும். அந்த இருவரும் அகத்திய வசிட்டர்களே என்ற தமிழக மரபினையும், அவர்கள் சிந்துவெளித் தாய்த் தெய்வத்தின் மக்கள் என்ற கொள்கையினையும் (VI : 4) கருதும்போது, தென்னகம் வந்த சிந்துவெளியினரான திராவிடரோடு வந்த புரோகிதர்களும், பின்னுளில் ஆரியராக வந்த பிராமணர்களும் கலந்ததால் உருவான தமிழக அந்தணர் கூட்டம், சிந்துவெளி மரபைச் சிறப்பாகப் போற்றியதென்றும், அதனுல் அகத்திய வசிட்டர்களை மட்டும் குலமுதல்வர்களாகக் கொண்டாடியது என்றும் ஊகிக்கலாம். வேதம் நான்கும் சிவபெருமான் வாய்

---

* இது நீலகேசி என்னும் சைனநூலின் உரை. இதனை ஆக்கியவர் சமயதிவாகர வாமன முனிவர். இவர் காலம் 16-ஆம் நூற்றுண்டு என்பர்.

மொழியே என்ற சங்ககாலக் கருத்தும் இந்த உவகத்துக்கு அரண் செய்வதாகும்.

வேத வேள்வி இயற்றிய பூஞ்சாற்றூர்ப் பார்ப்பானைப் பாடும்போது,

> நன்றுஆய்ந்த நீள்நிமிர்சடை
> முதுமுதல்வன் வாய்போகாது,
> ஒன்றுபுரிந்த ஈர்—இரண்டின்
> ஆறுஉயர்ந்த ஒருமுதுநூல்* (புறநா. 166)

என்று வேதத்தைக் குறிப்பிடுவார் ஆவூர் மூலங் கிழார்.

> ஞாலம் நாறும் நலங்கெழு நல்லிசை
> நான்மறை முதுநூல் முக்கண் செல்வன்**
> (புறநா. 166)

என்பர் பரணரும். இந்த மரபே 'முத்தமிழும் நான்மறையும் ஆனான் கண்டாய்***' என்றும் 'வடமொழியும் தென்தமிழும் மறைகள் நான்கும் ஆனவன்காண்''**** என்றும் அப்பர் அடிகள் திருவாய் மலர்ந்ததில் வெளியாகும். ''வேதம், ஆகமம் என்னும் இரண்டும் உண்மையே. இரண்டும்

---

* முதுமுதல்வன்-சிவபெருமான்;வாய்போகாது-வாக்கை விட்டு நீங்காது. ஒன்று புரிந்த-அறம் ஒன்றையே மேவிய. ஈர்-இரண்டின்-நான்கு பகுதி (ரிக், சாம, யஜுர், அதர்வ மறைகள்) உடையதாய். ஆறு-வேதாங்கம் ஆறு; வியாகரணம், சோதிடம், நிருத்தம், சந்தம் சிங்கை, கற்பம் என்பன. முதுநூல்-பழைய நூலாகிய வேதம்

** ஞாலம் நாறும்-உலகம் எங்கும் பரவிய. நான்மறை முதுநூல்-நான்கு வேதங்களை உடைய பழைய நூலை (அருளிய).

*** 6. 25. 9.

**** 6. 87. 1.

இறைவன் செய்தனவே. வேதம் பொது: ஆகமம்* சிறப்பு இரண்டிற்கும் வேற்றுமை இல்லை'' என்று திருமூலர்** அருளியதும், ''வேதங்கள் மட்டுமல்ல, உபநிடதங்களும் சைவ ஆகமங்களின் முடிவையே உடையன'' என்று ஸ்ரீகண்டர்*** கூறுவதும் சங்ககாலத் தமிழ் மரபுரையைப் போற்றுவன. ரிக் வேதத்தில் ருத்திரன் அச்சுறுத்தும் தெய்வமாகக் காட்சி தருவதும், மங்கல வழக்காகவே ருத்திரனைச் சிவன் என்று புகழ்ந்த பழைய ஆரிய மரபும், பரமசிவன் வேதம் அருளினார் என்ற கருத்து முன்னைய வடநூல்களில் இடம் பெறுமையும் கருதினால், சிந்துவெளியில் சிறப்பெய்திய சிவபெருமானின் திருவாய்மொழியாகத் தமிழகத்தில் நான்மறை கருதப் பெற்றதின் தனித்தன்மை விளங்கும். தமிழக அந்தணர்களிடைச் சிந்துவெளி மரபின் உரம் மிகுந்திருந்ததென்பதை அது உணர்த்தும்.

வடபுல அந்தணரின் தென்புல வருகையின் தொன்மையைப் புலப்படுத்தும் நேரான இலக்கியச் சான்று பௌத்தத்

---

* ஆகமம்; தொன்றுதொட்டுவரும் அறிவு என்ற பொருளுடைய வடசொல். அது சிறப்பாக இறைவன் வழிபாட்டை இரகசியம், மந்திரம், மூர்த்தி, ஆலயம் ஆகிய முறைகளில் விரித்துக் கூறும் நூல்களின் பெயரே. சிவாகமங்களைச் சிவன் அருளினார் என்பர். வைணவர்கட்கும் சக்தியை வழிபடுவோருக்கும் தனித்தனி ஆகமங்கள் உள.

** திருமந்திரம்; 2358.

*** இராமானுஜர் காலத்துக்குச் சற்றுமுன்போபின்போ வாழ்ந்தவர் என்பர். வேதாந்த சூத்திரங்களுக்கு வடமொழியில் உரைகண்ட இப்பெரியாரை நீலகண்ட சிவாசாரியார் என்றே தமிழ் நூல்கள் அழைக்கின்றன. சிவனே வேதத்தை அருளினார் என்று அவரும் கூறுவார்.

திருநூல்களில்* ஒன்றுன ஸுத்த நிபாதம்** என்பதே. பாவரி என்ற கோசல நாட்டு அந்தணன் தன் பதினுறு மாணுக்கருடன் கோதாவரிக் கரையிலுள்ள அஸ்ஸக நாட்டுக்கு வந்து பிட்சை எடுத்தும் கனிகளை உண்டும் வாழ்ந்தான் என்று அது கூறும். பாவரி வேதத்தில் புலமை எய்தியவனுகவும் வேள்விகள் செய்தோனுகவும் கூறப்பெறுகிறுன். அவன் புத்தர் பெருமானைப் பற்றிக் கேள்வியுற்றுத் தன் சீடர்களை அவரிடம் அனுப்பினுன் என்றும், அவர்கள் மகதம் சென்று பெருமானைத் தரிசித்தனர் என்றும் அத்திருநூல்கூறும். எனவே, புத்தர்காலத்தில் வடபுல அந்தணர்கள் தென்னகத்தில் ஆசிரமம் அமைத்து வேத வாழ்வு நடத்தினர் என்று பாவரி வரலாற்றிலிருந்து ஊகிக்கலாம். பாவரி அஸ்ஸகம் வந்து ஆசிரமம் கண்டதைப் புதுமையாகவோ அருஞ்சாதனையாகவோ குறிப்பிடாது, வழக்கமாக நிகழ்ந்த ஒன்றைக் கூறுவதுபோல் பேசுகிறது ஸுத்த நிபாதம். அதனுலும், போதாயனரின்*** தரும சூத்திரம் (சுமார் கி. மு. 600) தென்னுட்டினரின் தனி வழக்கங்

---

* பௌத்தத் திருநூல்களில் முக்கியமானவை திரிபிடகம் (திரி-மூன்று; பிடகம்-கூடை). அவை ஸுத்த(ஸுத்திர) பிடகம், விநய பிடகம், அபிதர்ம பிடகம் என்னும் மூன்றும். ஸுத்த பிடகத்தில் புத்தரும் அவருடைய தலைமையான சீடர்களும் ஆற்றிய அறிவுரைகளைச் சிறப்பாகத் தொகுத்துள்ளனர். அதில் தீர்க்க நிகாயம், மத்தியம நிகாயம், ஸம்யுக்த நிகாயம், அங்குத்தர நிகாயம், குத்தக நிகாயம் என்னும் ஐந்து பகுதிகள் உள (நிகாயம்- கட்டம்). விநயபிடகம் புத்த பிட்சுக்கள் கைக்கொள்ள வேண்டிய நியமங்களை வகுத்து விளக்குகிறது. ஏழு பகுதிகளை உடைய அபிதர்ம] பிடகத்தில் புத்தர் உபதேசங்களைப் பற்றிய ஆராய்ச்சிகளைக் காணலாம்.

** ஸுத்த (ஸுத்திர) நிபாதம் குத்தக நிகாயத்தில் உள்ளது.

*** போதாயனர் தென்னுட்டினரே என்பது அவர் நூலை ஆராய்ந்த அறிஞர் பலரின் கொள்கை.

களைச்* சரி நுட்பமாக வகைத்துரைப்பதாலும், கி.மு. ஏழாம் நூற்றுண்டிலாயினும் வேதமும் வேள்வியும் தென்னகத்தில் வருகை தந்திருக்க வேண்டும். வடபுலத்தில் புதிய இடங்களில் குடியேறுவதில்-காடு மலைகளில் வாழ்ந்த பழங்குடிகளுடன் தொடர்பு கொள்வதில்கூட-அந்தணரே முன்னணியில் நின்றனர் என்பதாலும், வணிகத் தொடர்புக்கும் முன்னோடியாக வேதவேள்வி விளங்கியது என்பது பொருந்தும். தாமிரபரணி (பொருநையாறு), பாண்டிய கபாடம்**. சூரணியாறு*** என்னும் இடங்களின் முத்தையும் மதுரையின் பருத்தி நூலாடையையும் சாணக்கியர் விதந்தோதுவதிலிருந்து (அதிகாரம் 2, அத்தியாயம் 32), கி. மு. நான்காம் நூற்றுண்டிலேயே வேதியரின் ஓமத்தீ தமிழகத்தின் அனைத்துப் பேராறுகளின் கரைகளிலும் ஒளிர்ந்தது என்று கருதலாகும். தமிழ் வேந்தரைப்பற்றிக் காத்தியாயனர் அறிந்து பேசுவதும் இந்தக் கருத்துக்கு வலுத்தரும். அது எவ்வாறு ஆயினும், தமிழகம் வந்து திராவிடப் பார்ப்பனருடன் கலந்த வடபுல வேதியர், சங்க காலத்துக்கு முன்பே தமிழே தாய் மொழியாக உடையவராக மாறிவிட்டனர் என்பது உறுதி. தொன்றுதொட்டுத்தமிழராக வாழ்ந்தவரிலிருந்து வேதியரை மொழிவழியில் வேறுபடுத்திக் காட்டும் குறிப்பு எதனையும்

---

* கல்வி கற்கத் தொடங்காதவருடன் (சிறுவருடன்) சேர்ந்து உண்பது; பெண்களுடன் சேர்ந்து உண்பது: பழஞ்சோறு உண்பது; அத்தை அல்லது அம்மான் மகளை மணத்தல் என்பன.

** பாண்டிய கபாடம்-பாண்டிய நாட்டுக்கு வாயில் போன்ற பொதிய மலைப்பகுதி என்பர். இலங்கைக்குச் செல்வதற்குக் கப்பலேறும் இடம் என்றும் கூறுவர் (பம்பாய்ப் பல்கலைக் கழகத்தின் அர்த்த சாத்திரப் பதிப்பு); எனவே திருவணைக்கரை (தனுஷ்கோடி) ஆகலாம். அகநாநூறு (70) இதனைக் குறிப்பிடும்.

*** சூரணியாறு: கேரளத்தில் முரசிநகர் அருகே ஓடுகிறது.

சங்க நூல்களில் காணமுடியாது*. அவர்களில் பலர் ஆரியம் பயின்று** வேதம் ஓதினர் என்பது உண்மை; அதற்காக அவர்களைத் தமிழ்ச் சான்றோரும் வேந்தரும் போற்றியதையும் அடுத்துக் காண்போம். அதேபோதில் அவர்கள் தமிழராகவே வாழ்ந்தனர் என்பது தெளிவு. பார்க்கப்போனால் சங்க இலக்கியத்தைப் படைப்பதில் பார்ப்பனர் வகித்த பாத்திரம் பெரிது. சங்கப் புலவர்களில், இயற்பெயரோடு சாராது இலக்கியத்தால் அமைந்த சிறப்புப் பெயரே உடையவரும்*** இயற்பெயரோடு குடிப்பெயரைக் குறிப்பிடாதவரும் @* பலர் என்பது மெய்யே. ஆயினும், வேந்தர், வணிகர், வேளாளர் (கிழார், வேள் முதலியோர்), வேதியர், இடையர் என்றெல்லாம் இனம் காணப்பெறும் புலவர்களிடையிலும் பார்ப்பனர் சிறப்பிடம் பெறுவர். செய்யுட்களின் அளவாலும் @**, கவித்துவச் சிறப்பாலும், மக்கட் பண்பாலும் முதலிடம் பெறும் சங்கப் புலவரான கபிலர் 'புலன் அழுக்கற்ற அந்தணாளன்' (புறநானூறு 126) என்று பாராட்டப் பெறுவர்.

---

* ''வடமொழியாளர்'' (5:40) என்று தீர்த்த யாத்திரை வந்த வடபுல வேதியரையும், ''வடமொழியாட்டி'' (13:73) என்று காசி நகரப் பார்ப்பனியான சாலியையுமே மணிமேகலை குறிப்பிடுகிறது.

** பிற மரபினரிலும் ஆரியம் பயின்றவர் இருந்தனர். வள்ளுவர் முதலிய புலவர் பெருமக்களும் வடநூல்களில் தேர்ந்தவர் என்பது உண்மை.

*** இவர்களின் இயற்பெயர்கள் நாளடைவில் மறைந்தன.

@* பாணர், அம்மூவனார், பேயனார், இளங்கீரனார் முதலிய அனேகர்.

@** கபிலர் கவிதைகள் 206, நற். 20: குறுந். 29; ஐங்குறு. 100; பதிற்றுப். 10; அகநானூறு 16; புறநானூறு 10; குறிஞ்சிப்பாட்டு. கலித்தொகையிலுள்ள குறிஞ்சிக் கலியும் (29 செய்யுள்), இன்னாநாற்பது என்னும் நூலும் அவர் இயற்றினார் என்பதில் ஐயம் உள்ளதால் அவை இந்தக் கணக்கில் சேரவில்லை.

உலகுடன் திரிதரும் பலர்புகழ் நல்லிசை
வாய்மொழிக் கபிலன்* (அகநா. 78)

என்று மதுரை நக்கீரனுரும்,

பொய்யா நாவிற் கபிலன் (புறநா. 174)

என்று மாறோக்கத்து நப்பசலையாரும்,

செறுத்த செய்யுட் செய்செந் நாவின்
வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்**
(புறநா. 53)

என்று பொருந்தில் இளங்கீரனுரும், "வயங்கு*** செந்நா" உடைய "நல்லிசைக் கபிலன்" (பதிற்று. 85) என்று பெருங்குன்றூர் கிழாரும், கபிலரைப் புகழ்ந்து மகிழ்ந்தனர். பாரிக்கு ஆசானுகவும் அமைச்சனுகவும் தோழனுகவும் திகழ்ந்த பார்ப்பனக் கபிலர், தமிழின் சுவையையும் தமிழ்ப் புலவர் பெரிதும் போற்றிய அகவொழுக்கத்தின் சிறப்பையும் ஆரிய அரசன் பிரகத்தனுக்கு உணர்த்துவதற்காகக் குறிஞ்சிப் பாட்டு என்னும் கவிதையை இயற்றினுர் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. கபில-பரணரோடு வைத்து எண்ணத்தக்க நக்கீரர் சங்கறுக்கும் தொழிலைச் செய்த வேளாப் பார்ப்பார் ஆவர்****. பரணர் போலவே வரலாற்றுச் செய்திகளை வழங்கும் மாமூலனுரும், பாரிக்குக் கபிலர்போல் ஆய் அண்டிரனுக்குத் தோழராக விளங்கிய

---

* உலகுடன் திரிதரும்-உலகெலாம் பரவிய. வாய்மொழி-மெய்ம்மொழி.

** செறுத்த-பல பொருளையும் அடக்கிய. வெறுத்த கேள்வி-மிகுந்த கேள்வி அறிவு.

*** வயங்கு-விளங்குகின்ற.

**** வேளாப்பார்ப்பார்-வேள்வி செய்யாத பார்ப்பார். அவர்களுடைய தொழில்களில் ஒன்று சங்கு அறுத்து வளை செய்வதாம் [அகநா. 24]. நக்கீரர் இயற்றியவை: நானூற்றுத் தொகைகளில் 34 செய்யுட்கள்: பத்துப்பாட்டில் 2 பாட்டு.

முடமோசியாரும் பார்ப்பனரே*. நெடுஞ்சேரலாதனை பாடிய (பதிற்று. முதல்பத்து) குமட்டூர் கண்ணனாரும், பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் பாடிய பாலைக் கௌதமனாரும் (பதிற்று. 3ஆம் பத்து), கரிகாற்பெருவளத்தானையும் (பட்டினப்பாலை) தொண்டைமான் இளந்திரையனையும் (பெரும் பாணாற்றுப்படை)பாடிய உருத்திரங்கண்ணனாரும்,நன்னனைப் பாடிய (மலைபடுகடாம்) பெருங்கௌசிகனாரும் அந்தணர் மரபினரே. மேலும் பல பார்ப்பனப் புலவர்களையும் இனம் காண்கிறோம்**.

அந்தணர் தொழில்கள் ஆறு என்பர் சங்கப் புலவர்:—

ஓதல், வேட்டல், அவைபிறர்ச் செய்தல்,
ஈதல், ஏற்றல்என்று ஆறுபுரிந்து ஒழுகும்
அறம்புரி அந்தணர்.***

என்று அவற்றை வகைந்துகூறும் பதிற்றுப்பத்து (24). ''அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்'' (பொருள் 75)

---

* நானூற்றுத் தொகைகளில் மாமூலனார் யாத்தவை; 30 செய்யுட்கள். முடமோசியாரின் செய்யுட்கள் 13.

** தங்கால் ஆத்திரேயன் கண்ணனார், செல்லூர்க் கோசிகன் கண்ணனார், பெருங்கௌசிகனார், இளங் கௌசிகனார், ஆமூர்க் கோதமன் சாதேவனார் [சகா தேவனார்], கோடிமங்கலம் வாதுளி [வாதூல கோத்திர] நற்சேந்தன், மதுரைக் கவுணியன் பூதத்தனார், எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார் முதலியோர் அந்தணர் என்பது தெளிவு. பிரமனார், பிரமசாரி, கார்க்கியார், மதுரை வேளாசான் (வேள் [யாகம்]+ ஆசான்), முதலிய வேறு சிலரையும் அந்தணர் என்று கொள்வதற்கு இடமுண்டு.

*** ஓதல்-வேதம் ஓதுதல்; வேட்டல்-வேள்வி செய்தல்; அவை பிறர்ச் செய்தல்-பிறர்க்கு வேதம் ஓதுவித்தலும் வேள்வி செய்வித்தலும்.

என்றார் தொல்காப்பியரும். வடநூற்கருத்தும் இதுவே*. பார்ப்பனர் நாற்பத்தியெட்டு ஆண்டு பிரமசரியம் காத்தும் முத்தீ ஓம்பியும் வேதநெறியில் நின்றனர் என்பார் நக்கீரர்**. அதிகாலையில் ஆலவாய் அந்தணர் அருமறை இசைப்பர் என்று மொழியும் மதுரைக்காஞ்சி (654-56). கோழி கூவலால் அல்ல, வேத ஒலியாலேயே மதுரை மக்கள் இன்துயில் எழுவர் என்று பகரும் பரிபாடல் (27). சங்கம் சார்ந்த காலத்து எழுந்த சிலப்பதிகாரமும், பாண்டியன் ''மறைநா ஓசை அல்லது யாவதும் மணிநா ஓசை கேட்டதும் இலனே***'' என்று பாண்டிய குலமுதல் கிழத்தியான மதுராபதி தெய்வத்தின் வாக்காகக் குறிப்பிடும். வேதம் ஓதலால் மாமழை பொழிந்து விளைபொருள் பெருகி இல்லறம் சிறக்குமென்றே, சங்ககாலத் தாய்மார்கள், ''பார்ப்பார் ஓதுக'' என்று விரும்புவாராயினர் (ஐங்குறுநூறு 4). பொற்கோட்டு *@ இமயம் போலவே, பொதியமலையும் அந்தணரின் முத்தீயால் மேன்மை எய்தியதைக் குறிப்பிடுவார் முடிநாகராயர் (புறநானூறு 2). சோழ நாட்டுப் பூஞ்சாற்றூரில்

---

* அர்த்தசாத்திரம் அதி. 1–அத். 3; மனு: அத். 1, சுலோகம் 88.

** திருமுருகாற்றுப்படை: 177-180. அந்தணர் 37ஆண்டு பிரமசரியம் காத்தனர் என்று மெகஸ்தனீஸ் கூறுவது இங்குக் குறிப்பிடத்தக்கது. முப்பத்தாறு ஆண்டு குருகுலவாசம் செய்யலாமென்று செப்பும்போதே, பதினெட்டு ஆண்டு, அல்லது ஒன்பது ஆண்டு, அல்லது ஒரு வேதத்தை பழுதறக் கற்றுத்தேரும் வரையில், குருகுலவாசம் செய்துப்பின் இல்லறத்தை மேற்கொள்வதற்குத் தடையில்லை என்பார் மனு (3:1, 2).

*** கட்டுரை காதை 31-32. மறைநா ஓசை–அந்தணர் நாவில் ஓதும் வேதத்தின் ஒலி. மணிநா ஓசை-குறையுற்றார்அறிவிப்பதற்கு அரசன் கட்டிய மணியின் நாக்கு எழுப்பும் ஓசை.

*@ கோடு-மலைச்சிகரம்.

வாழ்ந்த விண்ணந்தாயன் என்னும் கௌணிய கோத்திரப் பார்ப்பான், நால்வேதத்தையும், வேதாங்கம் ஆறையும் கற்றுத் தேர்ந்தும், இருபத்தொரு வேள்விகளையும் குறை யின்றிச் செய்தும் புகழமைந்த மரபுக்குரியன் என்று கூறி, அவன் வேள்விப் பணியையும் வள்ளன்மையையும் பாராட்டு வார் ஆவூர் மூலங்கிழார். இத்தகைய வேள்விச் சிறப்பினை உன்னியே,

அறுதொழில் அந்தணர் அறம் புரிந்து எடுத்த
தீயொடு விளங்கும் நாடன். (புறநா. 397)

என்று ஒரு சோழனைப் பாராட்டுவார் தாயங்கண்ணனார்.

அரசர் யாகம் செய்வதற்கு ஆவன செய்தனர் அந்தணர். வெற்றிவேந்தன் இயற்றும் இராசசூய யாகத்தைச் செய்த காரணத்தால், இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்று பெயர் பெற்றான் ஒரு சோழன். கரிகாற்பெருவளத்தான் வேள்வி செய்ததைச் சிறப்பாகப் பாராட்டுவார் கருங்குழ லாதனார் (புறநா. 224). முதுகுடுமிப் பெருவழுதி அனேக யாகசாலைகளை அமைத்து வேள்வி இயற்றியதைப் போற்று வார் நெட்டிமையார் (புறநா. 15). அதனாலேயே அவன் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதி என்று பெயர் பெற்றான்.

ஆன்ற கேள்வி, அடங்கிய கொள்கை
நான்மறை முதல்வர் சுற்றம் ஆக,
மன்னர் ஏவல் செய்ய, மன்னிய
வேள்வி முற்றிய வாய்வாள் வேந்தே!*

(புறநா. 26)

என்று தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை மாங்குடிகிழார் பாடுவதால், அந்தப் பாண்டியனும், வேள்வி செய்து விழுப்பம் எய்தியதை உணரலாம்.

---

* ஆன்ற-அமைந்த: அடங்கிய-ஐம்புலனும் அடக்கிய, கொள்கை-விரதம்; மன்னிய-நிலைபெற்ற; முற்றிய-செய்து முடித்த; வாய்வாள்-வாய்த்தவாள்.

'அமரர்ப் பேணியும் ஆவுதி அருத்தியும்'* (புறநா. 99) புகழ் எய்திய குலத்தில் பிறந்தவன் என்று அஞ்சியைப் பாடுவார் ஔவையார்.

வேள்வியில் கடவுள் அருத்தினை; கேள்வி
உயர்நிலை உலகத்து ஐயர்இன் புறுத்தினை**

என்று சேரன் செல்வக்கடுங்கோவைக் கபிலரும்,

கேள்வி கேட்டுப் படிவம் ஒடியாது,
வேள்வி வேட்டனை உயர்ந்தோர் உவப்ப***
[பதிற்று. 74]

என்று சேரன் இரும்பொறையை அரிசில்கிழாரும் புகழ்வர்.

''யானும் என்பார்ப்பனியும் சுவர்க்கம் புகல்வேண்டும்'' என்று தன்னைப்பாடிய பாலைக் கௌதமனார் வேண்ட, பல்யானைச் செல்கெழுக் குட்டுவன் பார்ப்பனப் பெரியோரைக் கொண்டு பத்து வேள்வி செய்தானாக, பத்தாம் வேள்வியின்போது பார்ப்பன தம்பதி காணாராயினர். என்பது பதிற்றுப்பத்தில் மூன்றும் பத்தின் பதிகம் செப்பும் சேதி *௪. சிலப்பதிகாரமும்,

---

* ஆவுதி-ஆகுதி (ஆஹுதி)-மந்திரத்தோடு வேள்வித் தீயில் வழங்கப்பெறும் நெய் முதலியன. அருத்தி-உண்பித்து.

** பதிற்றுப்பத்து 70. கேள்வி-வேதம். எழுதப்பெறாது கேட்கப்பட்டதால் கேள்வி ஆயிற்று. 'எழுதாக்கற்பு' என்றார் பிறரும் (குறுந்தொகை 156). உயர்நிலை உலகத்து ஐயர்-தேவர்.

*** படிவம் ஒடியாது-விரதம் கெடாது; உயர்ந்தோர்-தேவர்.

*௪ பதிற்றுப்பத்தின் ஒவ்வொரு பத்துக்கு இறுதியிலும் ஒரு பதிகம் உண்டு. அப்பதிகங்கள் சங்க காலத்துக்குப் பின்பே தோன்றின என்பதில் அறிஞர்க்கு உடன்பாடே,

நான்மறை யாளன் செய்யுள் கொண்டு
மேல்நிலை உலகம் விடுத்தோன் ஆயினும் *
(28:37-38)

என்று மாடலன் வாக்காக இதனைக் குறிப்பிடும். மதுராபதி தெய்வமும் இதனைக் குறிப்பிடுவாள் (23:63-64).

ஆவுதி மண்ணி**, அவிர்துகில் முடித்து
மாவிசும்பு வழங்கும் பெரியோர் போல

என்ற மதுரைக்காஞ்சி அடிகள், வேள்வி செய்து சுவர்க்கம் புகலாமென்ற நம்பிக்கை சங்ககாலத்திலேயே நிலவியதற்குச் சான்ருகும். ஆக, இம்மைக்கும் மறுமைக்கும் ஏற்றதாய் வேதவேள்வி நெறியைப் பண்டைய தமிழகம் விரும்பித் தழுவியது என்பது வெள்ளிடைமலை.

வேதியரின் முருகவழிபாட்டை வருணிப்பார் நக்கீரர். ஒன்பது புரிகொண்ட மூன்ருகிய பூணூலை அணிந்த அந்தணர், காலையில் நீராடி, ஈரவுடை தானே உலருமாறு அரையில் உடுத்தியும், சிரம்மேல் கரம் குவித்தும், முருகனைத் துதிப்பர். அவர்கள் முருகனுக்குரிய ஆறு எழுத்து மந்திரத்தை (ந மோ கு மா ரா ய) நாப்பிறழும் அளவும் பன்முறை ஓதி, நறுமணப் புது மலர்களை அவன் திருவடியில் இட்டு வழிபடுவர் (திருமுருகாற்றுப்படை 183-189).

அந்தணரைத் துன்புறுத்துவதைப் பெரும்பாவமாகக் கருதினர் சங்கச் சான்ருேர். ''பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்'' என்பது ஆலத்தூர்கிழாரின் வாக்கு (புறநா. 34)

''பேணு தகு சிறப்பிற் பார்ப்பான்'' என்பது தொல் காப்பியம் (பொருள் 502). பொன்னும் பொருளும் வழங் கிப் பார்ப்பனரைப் பேணுவதைச் சான்ருேர் புகழ்ந்தனர். எனவே, ஒருங்கிருந்த மூவேந்தருக்கு, நல்வினையின் மேன்

---

* நான்மறையாளன் - பார்ப்பான். இங்குப் பாலைக் கௌதமனர். கொண்டு-ஏற்று; மேல்நிலை உலகம்-சுவர்க்கம்.

** மண்ணி-பண்ணி; அவிர்துகில்-விளக்கமான வெள்ளிய ஆடை; மாவிசும்பு-சுவர்க்கம்; பெரியோர் - யாகம் செய்யும் பார்ப்பனர்.

மையை ஓதிய ஔவையார், இரவலர்க்கு வரையாது வழங்க வேண்டுமென்று பொதுவாகப் புகன்றதோடு நில்லாது,

ஏற்ற பார்ப்பார்க்கு ஈர்ங்கை நிறையப்
பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்து*

வாழ்வீராக என்று சிறப்பாகவும் செப்பினர் (புறநா. 367). மலையமான் திருமுடிக்காரி, பார்ப்பனர் பலருக்கு நிலங்களை மானியமாகக் கொடுத்ததால், ''உன்நாடு முத்தீ ஓம்பும் மறையோர்க்கு உரியது'' என்று புகழ்வார் கபிலர் :-

கடல்கொளப் படாஅது, உடலுநர் ஊக்கார்,
கழல்புனை திருந்துஅடிக் காரி! நின் நாடே ;
அழல்புறந் தரூஉம் அந்தண ரதுவே** (புறநா. 122)

வேதியர் உறைபதி ஒன்றின் சித்திரத்தைத் தரும் பெரும் பாணாற்றுப்படை. நாயும் கோழியும் அங்குப் புகா. வீட்டுக்கு வீடு, பந்தற்கால்களில் பசுங்கன்றுகள் கட்டப்பட்டிருக்கும். சாணத்தால் மெழுகிய தூய இல்லங்களில் வழிபடு தெய்வப்படிவங்கள் இருக்கும். பார்ப்பார் ஓதும் வேதத்தைக் கிளிகளும் கேட்டுப் படிக்கும். அருந்ததியை ஒத்த கற்பரசிகளான பார்ப்பன மகளிர் கருடன்சம்பா நெல்லுச் சோற்றைப் பதமறிந்து சமைப்பர். கொம்மட்டி மாதுளங்காயை*** அன்று கடைந்தெடுத்த பசுவெண்ணெயில் வேகவைத்து, மிளகின் பொடி தூவிக் கறிவேப்பிலையைக் கூட்டிப் பொரியல் செய்வர். வழிப்போக்கருக்குச் சோறும் பொரியலும் மாங்காய் ஊறுகாயும் வழங்கி மகிழ்வர். ஆங்காங்கே வேள்விச் சாலைகள் மலிந்திருக்கும். (பெரும்பாண். 297-310; 315-16).

---

* ஏற்ற-யாசித்த; ஈர்ங்கை-குளிர்ந்தகை; புனல்-தாரை நீர்.

** உடலுநர்-பகைவர்; ஊக்கார்-அதனைக்கொள்வதற்கு முயலார்; திருந்துஅடி-செவ்விய அடி; அழல்-முத்தீ; புறந்தரூஉம்-(யாகத்தீயைப்) பாதுகாக்கும்; அந்தண ரதுவே-அந்தணரின் உடைமையே.

*** புளித்த கறி ஆக்குதற்குக் கொம்மட்டி மாதுளங்காய் சிறக்கும் என்பர் அரும்பத உரையாசிரியர் (சிலப்பதிகாரம் 16 : 25).

இவ்வாறு வேதம் ஓதியும் ஓதுவித்தும், வேள்வி செய்தும் செய்வித்தும், பொருளைப் பெற்றும் கொடுத்தும் வாழ்ந்த அந்தணர், அரசர் பொருட்டுத் தூதும் சென்றனர். வாடிய இடையும் வருந்திய நடையும் உடைய பார்ப்பன இளைஞன், தூது சென்று, செல்லும் சொல் சில உரைத்து, பகையரசன் மனத்தை மாற்றிப் போரைத் தவிர்த்தான் என்று பாடுவார் மதுரை வேளாசான் (புறநா. 305). வெம்மைமிகு பாறைகளின் வழியே ஓலைச்சுருளுடன் நடந்துவரும் பார்ப்பன தூதனைக் கண்ட ஆறலைக் கள்வர்,

உண்ணா மருங்குல் இன்னோன் கையது
பொன்ஆ குதலும் உண்டென*,

கந்தல் அணிந்த அத்தூதனைக் கொன்ற காட்சியை ஓர் அகப்பாட்டு கற்பனை செய்யும் (அகநா. 337). 'உண்ணாமருங்குல்' என்பது விரத உணவால் வாடிய இடையைக் குறிப்பதாம். 'படிவ உண்டிப் பார்ப்பன மகனே' என்ற விளியும் (குறுந். 156), 'படிவப்பார்ப்பான்' என்ற குறிப்பும் (முல்லைப்பாட்டு 37) கூடப் பார்ப்பனர் விரதம் காத்ததை உணர்த்தும். பார்ப்பனரின் முக்கோலை முல்லைப்பாட்டும் (38), அவரது கமண்டலத்தைக் குறுந்தொகையும் (156) குறிப்பிடும்.

நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயும் காலை அந்தணர்க்கு உரிய (பொருள் 625)

என்ற தொல்காப்பியச் சூத்திரமும் ஈண்டு கருதத்தக்கது.

நின் முன்னோர் எல்லாம்
பார்ப்பார் நோவன செய்யலர் (புறநா. 43)

என்று சோழனை நோக்கியும்,

இறைஞ்சுக, பெரும! நின்சென்னி-சிறந்த
நான்மறை முனிவர் ஏந்துகை எதிரே** (புறநா. 6)

என்று பாண்டியனை நோக்கியும்,

---

* இவன்கையில் உள்ளது பொன்ஆக இருக்கலாமென்று எண்ணி.

** சென்னி இறைஞ்சுக-தலைவணங்குக; ஏந்துகை - நீடு வாழ்க என்று உயர்த்திய கை; எதிரே-முன்னே.

பார்ப்பார்க்கு அல்லது பணிபு அறியலையே (பதிற்றுப். 63) என்று சேரனை நோக்கியும் முறையே தாமப்பல் கண்ணனாரும், காரிகிழாரும் கபிலரும் பாடுவதால், மூவேந்தரும் அந்தணரை உயர்ந்தோராகப் போற்றியதை அறியலாம். ஐம்பெருங்குழுவில் முடிமன்னர்க்கு ஆலோசகராகப் புரோகிதரும் விளங்கியதை முன்பே கண்டோம்.

சங்ககாலத்தில் சங்கறுப்பதுபோன்ற தொழில்களில் ஈடுபட்ட வேளாப்பார்ப்பாரும் இருந்தனர் என்றோம். வேத நெறியிலிருந்து வழுவி, இசைப்பாட்டே பயின்ற பார்ப்பனப் பாடகர் குடியிருப்பைக் குறிப்பிடும் சிலப்பதிகாரம் (13:38-39). இறையிலி (வரியில்லா) நிலம் பெற்ற பார்ப்பனரில் சிறுநிலக்காரர்களும் மேல்வாரத்தார்களும் இருந்தனர் என்று அறியலாம்.

உயர்குடித் தலைவர்களுக்கு நன்றும் தீதும் ஆய்ந்து உறுதி கூறும் உற்ற தோழராகப் பார்ப்பனர் விளங்கினரென்று தொல்காப்பியத்திலிருந்து ஊகிக்கலாம் (பொருள் 501). ‘அந்தணாளர்க்கு அரசுவரையின்றே’ என்ற தொல்காப்பிய சூத்திரம் (பொருள் 637), அமைச்சராகவும் புரோகிதராகவும் அந்தணர் பணிபுரிவதைக் குறிக்கும் என்பர் இளம்பூரணர். அரசர் இல்வழி அந்தணர் ஆள்வதற்குத் தடை இல்லை என்று அதற்கு உரைகாண்பார் பேராசிரியர். ஆனால் மௌலி புனைந்த மறையோரை வேறு மாநிலங்கள் கண்டபோதிலும், தமிழகம் கண்டதற்குச் சான்று இல்லை.

## 10. மூவேந்தர்

சங்ககாலத் தமிழகத்தில் வேதியருக்கு அடுத்த நிலையில் விழுப்பம் எய்தியவர் வேந்தரே ஆவர். குறுநில மன்னர் பலர் இருந்தபோதிலும், சேரர், சோழர், பாண்டியர் என்ற மூன்று குடியினரே தமிழகத்தை ஆள்வதற்கு உரிமை உடையோர் என்று போற்றப் பெற்றனர்.

மண்திணி கிடக்கைத் தண்தமிழ்க் கிழவர்
முரசுமுழங்கு தானை மூவர்* (புறநா. 35)

என்றும்,

தமிழ் கெழு மூவர்** (அகநா. 31)

என்றும்,

மலர்தலை உலகத்து மன்னுயிர் காக்கும்
முரசுமுழங்கு தானை மூவர்*** (பெரும்பாண். 32-33).

என்றும்,

வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு*ↄ (தொல். பொருள். 391)

என்றும் சங்கச் சான்றோர் கூறுவர்.

சங்க காலத்தில் மூவேந்தரோடு குறுநில மன்னரும் இருந்தனர் என்பது மெய்யே. ஆனால் குறுநில மன்னர்கள் முரசும் முடியும் உடையவர்கள் அல்லர் என்றும், முடியும் முரசும் மூவேந்தர்களுக்கே உரியன என்றும் உரையாசிரியர்கள் கூறுவர்.**ↄ

மூவேந்தர் குடிகள் என்று தோன்றின என்பதை நம்மால் உறுதியாக அறியமுடியவில்லை. திருக்குறளில் வரும் 'பழங்குடி' என்ற தொடருக்கு, உரையாசிரியர் பரிமேலழகர்

---

* மண்திணி கிடக்கை-மண்செறிந்த உலகத்தில், தண் தமிழ்க் கிழவர்-குளிர்ந்த தமிழகத்துக்கு உரியரான.

** தமிழ் கெழு மூவர்-தமிழ் நாட்டை ஆளும் மூவர்.

*** மலர்தலை உலகத்து-பரந்த இடத்தை உடைய உலகத்தில்.

*ↄ தண்பொழில் வரைப்பு-நிலத்துக்கு நிழல் செய்யும் நாவலம் பொழிலுள் (இந்தியாவினுள்) வரைந்து கொள்ளப்பட்ட தமிழகம்.

**ↄ தொல்காப்பியம் பொருளதிகாரம் 626, 638 சூத்திரங்களின் உரை. வள்ளல்களில் ஒருவனான காரி ஒருவனே, குறுநில மன்னனாயினும் திருமுடி சூடும் பெருமை பெற்றான். அதனால் திருமுடிக்காரி என்றே குறிப்பிடப் பெற்றான்.

'தொன்றுதொட்டு வருகின்ற குடி' என்ற பொருள் தந்து, அதற்கு விளக்கமாக எழுதுவார் : ''தொன்றுதொட்டு வருதல் எனின் சேர சோழ பாண்டியர் என்றாற்போலப் படைப்புக்காலந் தொடங்கி மேம்பட்டுவருதல்'' (குறள் 955 உரை). நம்மால் அறியக் கூடாத பழைமை என்பதுதான் இவ்வாக்கியத்தின் கருத்து.

## (அ) சேரர்

பதிற்றுப்பத்து என்னும் நூல் சேரர்குல வரலாற்றைத் தொடர்ச்சியாகக்கூறுகிறது. அந்நூலில் முதற்பத்தும் பத்தாம் பத்தும் இப்போது கிடைக்கவில்லை. ஏனைய எட்டுப்பத்துக்களும் சேரமன்னர் எண்மரைப்பற்றிப் பேசுகின்றன. புறநானூற்றில் பதினேழு சேர அரசர்களைப் பற்றிய பாடல்கள் உள. ஆனால் இவர்களில் சிலர் பதிற்றுப்பத்தில் காணப்படுவோரே. நாம் அறியும் சேரர்களில் முதல்வன் பெருஞ்சோற்று உதியன் சேரலாதன் ஆவான்.

மறப்படைக் குதிரை மாறா மைந்தின்
துறக்கம் எய்திய தொய்யா நல்லிசை
முதியர்ப் பேணிய உதியன் சேரல்
பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை இரும்பல்
கூளிச் சுற்றம் குழீஇயிருந் தாங்கு*

(அகநா. 233)

---

* மைந்தின்-வலிமை உடைய. தொய்யா-கெடாத நல்லிசை–நற்புகழ். முதியர்-காலமான முன்னோர், பிதிரர். பெருஞ்சோறு-பிண்டம், தென்புலம் வாழ்நரான பிதிரர்க்குச் செலுத்தும் அருங்கடன். இரும்பல்-கரிய, பல. கூளி-பேய். குழீஇயிருந்தாங்கு-கூடியிருந்தாற்போல. பெருஞ்சோறு படைத்த காலத்தே, கரிய பலவாய பேய்ச்சுற்றங்கள் உண்பதற்குக் கூடியிருந்தன என்று புலவன் பேசுவதாலேயே, பெருஞ்சோறு என்பது பிண்டம் என்ற நினைவு நாட்கடனையே, குறிக்குமென்பதை அறியலாம். பெருஞ்சோறு என்பது அளவில் அதிகமான சோறு என்று பொருள்படாது; பலி அல்லது பிண்டம் என்று பொருள்படும்.

என்று மாமூலனார் மொழிவதால், போர்க்களம் புகுந்து வீர சுவர்க்கம் எய்திய முன்னோர்க்கு உதியன் சேரல் சிறப்பாக அருங்கடன் ஆற்றினான் என்று அறிகிறோம். அந்தச் சிறப்பா லேயே அவன் 'பெருஞ்சோற்று' என்ற அடைமொழியும் அடைந்தான். இவ்வாறு களத்தில் மாண்ட முன்னோர் களாக, அவன் பாரதப்போரில் பங்குகொண்ட வீரர்களையே போற்றினான் என்பது முடிநாகராயர் பாட்டால் புலனாகும்.

அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ
நிலம்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
ஈரைம் பதின்மரும் பொருது, களத்து ஒழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்!*
(புறநா. 2)

என்று அவர் உதியன் சேரலை விளிப்பார்.

---

* அலங்குஉளை-அசையும் பிடரிமயிர்; ஐவர்-பாண்டவர்; சினைஇ-சினந்து, நிலம்தலைக்கொண்ட - நாட்டைத் தம்பாற்கொண்ட; பொலம்பூ-பொன்னால் செய்த பூ; ஈர்-ஐம்பதின்மர்-நூற்றுவர்: துரியோதனாதியர்;பெருஞ் சோறு-பிண்டம், மிகுபதம்-மிகுந்த உணவு. பாரதப் போரில் இருதிறப் படைகளுக்கும் உணவு அளித்தான் உதியன் என்பது பழைய உரை. ஆனால் கி. பி. 2-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த செங்குட்டுவனுக்குப் பாட்ட னான உதியன்சேரல், கி. மு. 900-ல் நிகழ்ந்ததாகக் கருதப்பெறும் பாரதப் போரில் வீரர்களுக்கு உணவு அளித்திருக்க முடியாது.மேலும், பெருஞ்சோறு என்பது பிண்டம் என்றே பொருள்படுவதை மாமூலனார் பாட் டில் கண்டோம். தவிர, பிதிரர்க்குக் கடன் ஆற்றி முன்னோரை வழிபடும் இல்லம் என்ற பொருளில் 'பெருஞ்சோற்று இல்லம்' என்ற தொடரைக் கயமனார் ஆள்வார் (அகநா. 275). ஏனைய சங்கப் பாட்டுக்களி லும் (புறநா, 220, 235, 261; நற்றிணை 281) பெருஞ் சோறு என்பதற்குப் பிண்டம் என்ற பொருளே ஏற்புடைத்து.

சேரர்க்கு வானவர் என்ற பெயரும் உண்டு. புறநானூற்றிலும் (39, 126), அகநானூற்றிலும் (33, 77, 143, 159, 213, 309, 381), வானவன் என்று சேரன் குறிப்பிடப் பெறுவான். உதியன் சேரலின் மகனுன நெடுஞ்சேரலாதன்,

இமயத்து
முன்னோர் மருள வணங்குவில் பொறித்து*
(அகநா. 127)

மேன்மை அடைந்தான் என்று மாமூலனுர் குறிப்பிடுவதாலும்,

இதனை அடியொற்றி,

இமயத்து
வானவர் மருள மலைவிற் பூட்டிய
வானவர் தோன்றல்** (சிலப். 38: 1—3)

என்று இளங்கோ அடிகள் செங்குட்டுவனைப் பாராட்டுவதாலும், இமய மலையில் வாழ்ந்த வானவருடன் சேரர் உறவு கொண்டாடினர் என்பார் உளர். "இந்தப் பிறப்புத் தொடர்பைக் குறிக்கும் முறையில் அவர்கள் வானவரம்பன் அல்லது இமயவரம்பன் என்ற பட்டத்தை மேற்கொண்டனர்" என்பர் அறிஞர் கனகசபை. இது உண்மையெனில், இமயத்து வானவர் பாரதப் போரில் பங்குகொண்டனர் என்ற நினைவைப் போற்றி அவர்தம் வழிமுறைத் தொடர்புள்ள உதியஞ்சேரல் அவர்கட்குப் பெருஞ்சோறு (பிண்டம்) அளித்தான் எனலாம்.

வானம் என்னும் சொல் மேகம் என்ற பொருளையும் உடையது என்பதால், மேகம் தவழும் மலைகளை உடையவன் என்ற பொருளில், சேரனுக்கு வானவன் என்ற பெயர் ஏற்பட்டதெனலாம். அவ்வாறு எனில், பாரதப் போரில் உயிர்நீத்த வீரர்களுடன் உறவு பாராட்டிய மரபினைச் சங்க காலத்தில் விளக்கம்பெற்ற தேசிய ஒருமைப்பாட்டு ஆர்வத்தின் வெளியீடாகவே கொள்ள வேண்டும்.

---

* மருள-வியக்க, வணங்குவில்-வளைந்த வில்.

** வானவர்-இமயத்து மக்கள், சேரர்; தோன்றல்-தலைவன்.

சங்ககாலத்தில் சிற்றரசர்களாய் வாழ்ந்த அதியர் கோமான்கள்* சேரரின் கிளைக்குடியினர் என்று கருதுவதற்கு இடமுண்டு. அதியர் மகன் என்பது திரிந்தோ, தலைமைச் சிறப்பு உணர்த்தும் 'மான்' விகுதியை அதியர் என்னும் குடிப் பெயர் பெற்றோ அமைந்த அதியமான் என்ற பெயரை உடைய இந்தக் குடிமன்னரில் பெரும்புகழ் எய்திய அதியமான் அஞ்சியைப் பனந்தார் அணிந்தவனாகக் குறிப்பிடுவார் ஔவையார் (புறநா. 99). ஆனால் பனம்பூமாலை சேரர்க்கே உரியது. எனவே, புறநானூற்றின் பழைய உரையாசிரியர், "இவனுக்குப் பனந்தார் கூறியது, சேரமாற்கு உறவாதலின்"** என்று எழுதினர். மேலும், ஏழரசரை வென்று அவர்தம் ஏழுமுடிகளை மாலையாக அணிந்தவரென்று சேரர் பாராட்டப்பெறுவதைப் போலவே (பதிற்றுப். 14, 45), அஞ்சியும் ஏழு அரசர்க்குரிய இலச்சினை உடையவன் என்று ஔவையால் போற்றப் பெறுகிறான் (புறநா. 99). தவிர, அதியமானுக்குரிய தகடூர்மீது பெருஞ்சேரல் இரும்பொறை என்ற சேரமான் படையெடுத்துச் சென்ற வரலாற்றைக் கூறும் தகடூர் யாத்திரை***, சேரமானுக்கு அதியமான் தம்பி முறையினன் என்று கூறும் (புறத்திரட்டு 176).

---

* அசோகன் காலத்தில் இவர்கள் நிறைவுரிமையோடு ஆண்டனர் போலும். அசோகன் கல்வெட்டு, சேர சோழ பாண்டியரோடு சாதீயபுத்திரர்களையும் (சத்திய புத்திரர்கள்) நேயத்துக்குரிய தமிழக அரசர்களாகக் குறிப்பிடுகிறது. சாதீய புத்திரர் என்பது அதியமான்களைக் குறிப்பதாக ஆய்வாளர் அனுமானிக்கின்றனர்.

** 'சேரமாற்கு உறவாதலின்' என்பதற்குப் பதிலாக, 'உதிய வேந்தாதலின்' என்ற பாடபேதமும் டாக்டர் சாமிநாதையர் பதிப்பில் காணப்படும். உதிய வேந்து என்பதும் சேர மன்னனையே குறிக்கும்.

*** தகடூர் யாத்திரை (யாத்திரை-படையெழுச்சி), சரித நிகழ்ச்சி பற்றிய நூலே ஆயினும், பிற்காலத்தே எழுந்தது. பழைய கதையைப் பொருளாக உடைய

மூவேந்தர் குடிகளைத் தனிநிலையில் போற்றும் மரபு நிலை கொண்டபின் எழுந்த கவிதைகளையே சங்க நூல்களில் காண்கிறோம். எனவே அவை எந்த மக்கட் கூட்டங்களிலிருந்து கிளைத்தன என்பதைத் திட்டமாக அறிய முடியவில்லை. எனினும், சேரர் மழவர் இனக்கிளையே என்று ஊகிப்பதற்கு இடமுள்ளது. சேரர் கிளையான அதியர் குடும்பத்தில் உதித்த அஞ்சியை 'மழவர் பெருமகன்' என்று குறிப்பிடுவார் ஔவையார் (புறநா 88). பல்யானைச் செல்கெழு குட்டுவனை 'மழவர் மெய்ம்மறை!' என்று விளிப்பார் பாலைக் கௌதமனார். (பதிற்று. 21). ஆடுகோட்பாட்டுச் சேரலாதனையும் அவ்வாறே விளிப்பார் நச்செள்ளையார் (பதிற்று. 55). பெருவீரனும் வள்ளலுமான வல்வில் ஓரி என்னும் கொல்லிமலைத் தலைவனை ''மழவர் பெருமகன் மாவள் ஓரி'' என்று பாலத்தனார் குறிப்பிடுவதால் (நற்றிணை 52), ஓரியும் மழவர் மரபினனே என்பது விளங்கும். ஓரி என்னும் சிறந்த குதிரையை ஓரி வைத்திருந்தான் (சிறுபாண். 111). மழவரே அரிய புரவிகளை உடையர்.

தெம்முனை சிதைத்த கடும்பரிப் புரவி
வார்கழல் பொலிந்த வன்கண் மழவர்* [அகநா. 187]

என்றும்,

---

தொன்மை என்னும் இலக்கணத்துக்கு இதனை இலக்கியமாகக் காட்டுவர் பேராசிரியர் (தொல்பொருள். 549). இது பெரும்பாலும் உரைநடையாலும் சிறுபான்மை செய்யுளாலும் அமைந்தது என்றும் அவர் கூறுவர் (தொல்பொருள் 485 உரை). பாரதம் போலவே, தாயத்தாரிடை நிகழ்ந்த போரைப் பொருளாக உடைய இந்நூலின் 48 செய்யுட்களே புறத்திரட்டு வாயிலாகவும் உரையாசிரியர்கள் தந்த மேற்கோள்கள் மூலமாகவும் கிடைத்துள்ளன.

* தெம்முனை-தெவ்முனை, பகைப்புலம்; கடும்பரிப்புரவி-மிகுந்த விரைவுடைய குதிரைகளை (உடைய). வார் கழல்-நீண்ட கழல்; வன்கண்-வீரம்.

உருவக் குதிரை மழவர்* (அகநா. 1)

என்றும் மாமூலனுர் அவர்களைக் குறிப்பிடுவார். அதே மாமூலனுர் உதியன் சேரலாதனின் முன்னேர் புரவி வீரராகச் சிறந்தனரென்று செப்புவதும் [அகநா. 233], அம்முன்னேர் பாரதப் போரில் பங்கு கொண்ட பெருமையினர் என்ற மரபுரையை மொழியும் முடிநாகராயரும் அவர்தம் குதிரைச் சிறப்பைக் கூறுவதும் (புறநா. 1) இங்குக் கருதத்தக்கவை. ஆக, வியத்தகு புரவி வீரத்தால் புகழ் எய்திய மழவர் இனத்திலிருந்து தொன்னுளில் கிளைத்து வேறுபட்ட குடியே சேரர்குடி என்று கொள்ளலாம்.

வேங்கடம் ஆண்ட புல்லி மழவர் வாழ்ந்த நிலத்தில் வெற்றி கண்டான் என்று மாமூலனுர் மொழிவதால்**, சங்க காலத்தில் வேங்கடத்துக்கு அருகே மழவர் நிலையாகக் குடியேறியிருந்த நிலம் இருந்ததை அறியப்படும். வேறு பல மழவர் கூட்டங்கள் ஆயர்தம் கால்நடைகளைக் கவர்ந்தனர் என்றும், பசுமாட்டு இறைச்சியைத் தின்றனர் என்றும், சுரத்திவிருந்து வழிப்போக்கரைத் துன்புறுத்தி அவர்தம் பொருளை பறித்தனர் என்றும் அறிகிறேம்***: மழவர் பலரை ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் அழித்தான் என்று பதிற்றுப்பத்தின் ஆரும் பதிகம் கூறும். அவனே மழவர் மரபினன் என்பதால்தான், "ஏனை மழவரைச் செருவில் சுருக்கி" என்று அப் பதிகம் பேசுவதாகக் கருதலாம்.*@

## (ஆ) சோழர்

ஏடறியாக் காலத்தில் தனிநிலை மேவிய மழவர் வழியினராகச் சேரரைக் கருதுவதற்கு இடமிருப்பதைப் போல்,

---

* உருவக்குதிரை-அஞ்சத்தக்க குதிரைகளை (உடைய)

** "மழபுலம் வணக்கிய மாவண் புல்லி" (அகநா. 61)

*** அகநா. 35, 91, 101, 119, 121, 127, 129, 269, 309 337; நற்றிணை: 387.

*@ பின்னுளில், மழவர் மரபினர் திருச்சிராப்பள்ளிக்கு மேற்கே, காவிரிக்கு வடபுறத்தில் குடியேறினர்; அப் பகுதி மழநாடு என்று பெயர் பெற்றது.

சோழரின் பூர்வீகப் பழங்குடித் தொடர்பை ஒருவாறு உய்த் துணர்வதற்கும் சான்று இல்லை. நலங்கிள்ளி தம்பியான மாவளத்தான் 'மறவர் பெரும!' என்றும் (புறநா. 43), சோழர் வழிமுறையினன இளந்திரையன்* 'மறவர் மறவ!' என்றும் (பெரும்பாண். 455) விளிக்கப்பெறுவது அவர் குலத் தொடர்பைச் சுட்டுமெனில், சோழர் தொன்னுளில் மறவர் இனத்திலிருந்து கிளைத்து வேறுபட்டனர் எனலாம்.

வழிப்போவாரைக் கொள்ளையடிப்போராகவும் கொல் வோராகவும் சங்க இலக்கியத்தில் மறவர்கள் சித்திரிக்கப் பெறுகின்றனர் என்பது மெய்யே**. ஆனுல் வேறு வகையின ரான மறவரையும் சங்க நூல்களில் காண்கிறோம். வேந்தருக் குப் பெண் கொடுக்க மறுத்து, அதனுல் வலுச்சண்டைக்கு வந்த அவ்வரசருடன் போர் புரிந்த குலப்பற்று மிக்க மறவ ரைக் காண்கிறோம்.*** மூவேந்தர் படைகளிலும் மறவர் பெரும்பங்கு வகித்தனர் *@. சோழனுக்குச் சேனுதிபதியாக விருந்த பழையன் போன்ற மறவர் தலைவர்களும் **@ இருந் தனர். ஊருக்காகவும் நாட்டுக்காகவும் போராடி உயிர் நீத்து நடுகல் வணக்கத்துக்கு உரியரான மறவரும் இருந்த னர் @*. மறக்குடி மகளிரின் வீரத்தையும் புறநானூறு போற்றும் @**. களத்தில் வெஞ்சமர் புரிந்து இன்னுயிர் நீத்த மைந்தரை எண்ணி அவர்கள் ஆனந்தக் கண்ணீர் சொரிந்தனர் என்பார் குடபுலவியனுர் (புறநா. 19). அவர்களை 'மூதில் பெண்டிர்' என்று குறிப்பிடுவர். முதல் நாள் போரில் தந்தையையும் இரண்டாம் நாள் போரில் கண

---

* இளந்திரையன் சோழர் மரபினன்: பெரும்பாண் 29-37.

** குறுந்தொகை 283, 297, 231; அகநா. 363.

*** புறநானூறு 336-56.

*@ புறநானூறு 31, 68, 369. மதுரைக். 595-96. பதிற் றுப். 22, 28, 30, 36 முதலியன.

**@ அகநானூறு 13, 326; மதுரைக். 725-26.

@* அகநானூறு 67, 131, 297; புறநானூறு 260, 263-65, 306, 314, 329; ஐங்குறு. 352.

@** புறநானூறு 19, 276-79, 306, 308, 312.

வனையும் பறிகொடுத்த பெண், தன் ஒரே மகனான பாலகனை மூன்றும் நாள் போருக்கு அனுப்பியதைக் கண்டு,

கெடுக சிந்தை; கடிதுஇவள் துணிவே;
மூதில் மகளிராதல் தகுமே* (புறநா. 279)

என்று பாடுவர் ஒக்கூர் மாசாத்தியார். பழமையான மறக்குடியில் பிறந்த மகளிர் என்பதால் மூதில் மகளிர் என்றனர் புலவர். இவ்வாறு மறவர் தொன்றுதொட்டு நின்று நிலைத்த வீரக்குடியாக விளங்கியதால்,

கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு
முன்தோன்றி மூத்த குடி** (35)

என்று போற்றும் புறப்பொருள் வெண்பாமாலை.

ஆதிநாளில் பயிர்த்தொழில் பெண்களின் பொறுப்பாக இருந்தநிலையில் தாய்வழிச் சமுதாயம் அமைந்திருந்தது என்பர்***. தென்னிந்தியாவில் தாய்வழிச் சமுதாயம் தனிச்சிறப்புற்றிருந்தது என்றும் அவர் கூறுவர். மாரியம்மன் காளியம்மன், கன்னியம்மன், ஊரம்மன், அங்காளம்மன் முதலிய (பெரும்பாலும் பெண்களாகவே உள்ள) கிராம தேவதைகளைக் கருதும்போதும், அந்த ஊகம் வலுப்பெறும் *௦. மறக்

---

* கெடுக-அழிக. கடிது-கொடிது. "என்னே, இவள் நெஞ்சுரம்! அது கெடுவதாக! இவள் துணிவு கொடிதே! பழைய மறக்குடி மகள் இவள் என்பதும் பொருத்தமானதே!" என்பது பொருள்.

** கல்-மலை: மண்-வயல், உழுது பயிரிடுவதற்கான நிலம். ('மண்மனை இல்லாதவன்' என்று உலகவழக்கில் கூறுவது இப்பொருளில்தான்.)

*** Science in History (Bernal) : Mother Right in India (Ehrenfels)

*௦ கிராமதேவதை வழிபாடு சிவன் திருமால் முதலிய தெய்வங்களை வழிபடுவதிலிருந்து வேறுபட்டது. சிவன் முதலிய தெய்வங்கள் பிரபஞ்சத் தத்துவங்களின் (Cosmic Principles) அடிப்படையில் எழுந்தவை. கிராம தேவதைகள் கிராம வாழ்வோடுமட்டும்

குடியின் பழமையையும் அக்குடிப் பிறந்த மகளிரின் வீரம் சங்க காலத்திலும் சிறப்பாகப் போற்றப் பெற்ற நிலையையும் கருதும்போது, மறவர் இனம் தாய்வழிக் குழுக்களில் வாழ்ந்தது என்று கற்பிதக் கொள்கையை வகுப்பதற்கு இடமுண்டு. ஆனால் அந்த தாய்வழிச் சமுதாயம் எப்போது, எவ்வாறு தந்தைவழிச் சமுதாயமாக மாறியது என்பதை அறியோம். அந்த மாற்றம் நேர்ந்தபோது, தந்தைவழி அரசர் குலங்களான வேந்தர் குடிகள் கிளைத்து உயர்ந்தனவாகலாம்.

சோழரைச் சிபி வழியினராகப் போற்றும் கொள்கை பண்டொழிந்த காலத்திலேயே தோன்றியது. அதனால்தான், சிபியின் வழிமுறையினர் என்று பொருள்படும் 'சைபிய' என்ற வடசொல்லின் திரிபான 'செம்பியர்' என்னும் சொல், சோழர்குடிக்குரிய வேறு பெயராகச் சங்க நூல்களில் பயிலப் பெறுகிறது.

சிபி என்பது ஒருவருக்கு இட்டுவழங்கிய பெயரன்று. அது ஒரு குலத்தின் பெயர். சிபிகுலத்தினர் எவரும் சிபியே. அதேபோதில், குலத்தலைவன் ஒருவனின் தியாகத்தைப் போற்றும் வகையில், அவனுடைய வழித்தோன்றல்களான சிபிகள் தம்மைச் சைபியர் அல்லது செம்பியர் என்று கூறிக் கொள்வதும் இயல்பே. அவ்வகையில் சிபியே செம்பியன் ஆவான். இதனை ஓர் எடுத்துக்காட்டால் மேலும் விளக்கலாம். சோழனைச் செம்பியன் என்றே அகநானூறும் (36) நற்றிணையும் (14) கூறும்; அதே போதில், குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைச் செம்பியன் என்னாது, 'செம்பியர் மருகன்' என்று முடவனார் குறிப்பிடுவார் (புறநானூறு 228). 'சோழர் மரபினன்', 'சோழன்' என்ற இரண்டும் ஒரு பொருளைத் தருவதுபோல், 'செம்பியர் மருகன்', 'செம்பியன்' என்னும் இரண்டும் ஒரு பொருளைத் தருவதுபோல், 'சிபி',

---

தொடர்புடையன. தெய்வங்கள் பெரும்பாலும் ஆண்கள்; கிராம தேவதைகள் பெரும்பாலும் பெண்கள். கிராம தேவதைக் கோயில்களில் பல்வேறு இனத்தவர்களும் பூசாரிகளாக உள்ளனர்.

'செம்பியன்' என்னும் இரண்டும் ஒரு பொருளேயே தருவன. எனவே, சோழ நாட்டைச் சிபிகளின் நாடு என்றே தசகுமார சரிதம் என்னும் வடமொழி நூலில் தண்டி* குறிப்பிடுவார். அவருக்கு நூறாண்டு முற்பட்டவரும் கணித மேதையும் வான இயல் விற்பன்னருமான வராகமிகிரரும் சிபி என்றால் சிபி களின் அரசன் என்றும், சிபிகள் என்பார் தென்னாட்டில் வாழும் ஒரு மக்கட்கூட்டம் என்றும் கூறுவர்.

சிபிகுலம் தொன்மையானது. சுதாஸைத் தலைவனாகக் கொண்ட பரதர்களோடு இகலிய பத்து குலங்களில் ஒன்று சிவிகுலம் என்று ரிக் வேதத்திலிருந்து அறிகிறோம்.** சிவிகள் ஆரியரல்லாதார் என்று அறிஞர் சிலர் ஊகிப்பர். சிபிகுலம் உசீநரர் என்னும் இனத்தின் கிளைக்குடி என்று தெரிகிறது. ரிக் வேதத்தில் பத்தாம் மண்டலப் பாசுரம் ஒன்றை இயற்றியவர், உசீநரர் குலத்தைச் சேர்ந்த சிபி ஆவர் என்று கூறும் அனுக்கிரமணி (பொருள் அட்டவணை). சிபிகளின்அரசன் ஒருவனை ஐதரேய பிராமணம் குறிப்பிடும். பஞ்சாபில் சினாப் நதிக்கு அருகில் சிபிபுரத்தைத் தலைநகராகக் கொண்டு சிபிகள் வாழ்ந்தனர். அதுவே பாணினி குறிப்பிடும் சிவபுரம் என்பர் ஆராய்ச்சியாளர். பஞ்சாப்மீது படையெடுத்த அலெக்சாந்தர் (கி. மு. 4-ஆம் நூ) சிபிகளின் படையையும் களத்தில் சந்தித்தான். கி. மு. 2-ஆம் நூற்றாண்டில் ராஜஸ்தானத்தில் சிபிகள் வாழ்ந்தனரென்பது அவர்கள் வெளியிட்ட நாணயத்திலிருந்து அறியப்படும்*** புத்தர்பெருமான் முற்பிறப்பொன்றில் சிபி அரசனாக அவதரித்தார் என்றும், அவரைச் சோதிப்பதற்காக இறைவன் கண்ணிழந்த வேதியனாக வந்து அவர்தம் கண்களை யாசித்தாரென்றும, சிபியும் மனமுவந்து இரு கண்களையும் வழங்கினாரென்றும், சிபி ஜாதக கதை

* முதலாம் நரசிம்ம பல்லவனின் (கி. பி. 7-ஆம் நூற்றாண்டு) அரசவைப் புலவன்.

** இந்தப் போரைப் 'பத்து அரசர் போர்' என்று வரலாற்று நூல்களில் குறிப்பிடுவர். (சிவியும் சிபியும் ஒன்றே.)

*** Bharatiya Vidya Bhavan : Vedie Age Page 258; Classical Age Page 160.

கூறும்*. மௌரியர் காலத்திலேயே, சிபியின் தியாகத்தைப் போற்றும் பழமரபுக் கதை புத்தரின் முற்பிறப்புக் கதையாக வடிவெடுத்துப் பெருவழக்கு எய்தியது என்று ஊகிக்கலாம். கி. மு. இரண்டாம் நூற்றாண்டில் அது சிற்ப வடிவும் எடுத்தது. ரண வைத்தியன் பெயர்த்தெடுத்துக் கொடுத்த கண்ணைச் சிபி குருட்டுப் பிராமணனுக்கு வழங்கும் காட்சியைப் பாருத் புடைப்புச் சிற்பத்தில் காணலாம். யயாதி மகள் மாதவியின் மகனாகப் பிறந்த சிபி, வேள்வி செய்தும் பொருளை வாரி வழங்கியும் பெருவாழ்வு வாழ்ந்து துறக்கம் சென்றான் என்று மகாபாரத ஆதிபர்வம் (அத்தியாயம் 87) கூறும். இவ்வாறு வீரத்தாலும் வள்ளன்மையாலும் விழுமிய புகழ் எய்திய சிபிகள், சிந்துவெளித் திராவிட மரபினராக வந்து காவிரி பாயும் நாட்டோடு தொடர்பு கொண்டனர் என்பது பொருந்தும்.

சங்ககாலத்திலேயே சிபியை வியத்தகு தியாகம் செய்த சோழர்குல முன்னோனாகப் பாராட்டும் பழமரபுக் கதை தோன்றிவிட்டது. பருந்திடமிருந்து புறாவைக் காப்பதற்காகத் தன்னழிவுக்கு அஞ்சாது தராசுத் தட்டில் ஏறிநின்ற தியாகியான செம்பியனின் மரபினராகச் சோழரைப் போற்றும் புறநானூறு (37, 39, 43, 46). புறநானூறு குறிப்பாகக் கூறுவதின் விரிவை மகாபாரத வனபர்வத்தில் (அத்தியாயம் 200) காணலாம் :

உசீநரர் தலைவனான சிபியைச் சோதிக்க இந்திரன் பருந்தாகவும், அக்கினி புறாவாகவும் வந்தனர். தன்னை உண்ண வரும் பருந்திடமிருந்து தன்னைக் காக்குமாறு வேண்டியது புறா. சிபியும் அதற்கு அடைக்கலம் அளித்தான். புறாவை இரையாகக் கொள்வது தனக்கு இயல்பு என்றது பருந்து. அடைக்கலப் பொருளை ஆதரிப்பது தன் கொள்கை என்றான் சிபி. புறாவுக்குப் பதிலாகத் தன் உடலிலிருந்து ஊனை அரிந்து தரவும் அவன் முன்வந்தான். பருந்து அதற்கு இணங்கவே புறாவை ஒரு தட்டில் அரிந்துவைத்து, இன்னொரு தட்டில் தன் ஊனை அரிந்துவைத்தான் சிபி. புறாவின் நிறைக்குத்

* Jatakas No 499 (Cowell's edition)

தன் ஊன் நிகராகாதது கண்டு, அவன் தானே தராசுத் தட்டில் ஏறி நின்ருன். அவ்வளவிலே தட்டு சமப்பட்டது. அது கண்டு, பருந்து பறந்துபோயிற்று. சிபியிடம் தானும் பருந்தும் அக்கினியும் இந்திரனும் ஆவோம் என்று உண்மையைக் கூறி, அவனைப் பாராட்டியது புரு. இதே கதையை சில மாற்றங்களோடு வேறு நூல்களில் காணலாம். சோதனை செய்தோர் எமனும் அக்கினியுமே என்பது ஒரு மாற்றம். துரத்தி வந்தது பருந்தன்று, வேடனே வந்தான் என்பது மற்ருெரு மாற்றம். சிபியைப்பற்றிய பழமரபுக் கதையே மகாபாரதத்திலும் பிற நூல்களிலும் இடம் பெற்றது எனலாம்*. சிபியைப் புகார் நகர அரசனுகக்கொண்டு, 'புள்உறு புன்கண்** தீர்த்தோன்' என்று கண்ணகி பேசுவதும் (சிலப்பதிகாரம் 20:52) இங்குக் குறிப்பிடத்தக்கது.

தென்னகப் பௌத்தரும் இந்தச் சிபியை போற்றினர். புத்தரே முற்பிறப்பொன்றில் சிபியாகத் தோன்றிப் புருவுக்கு அடைக்கலம் தந்தார் என்று கூறினர். இந்தப் புதுமையான சிபி ஜாதகம் ஏட்டில் இடம் பெறவில்லை என்பது மெய்யே; ஆனுல் அமராவதி, நாகார்ஜுன கோண்டா என்னும் ஆந்திர நகரங்களில் கி. பி. இரண்டாம் நூற்ருண்டில் எழுந்த சிற்பங்களில், அரசவையில் ஆண்களும் பெண்களும் பீதியுற்று நிற்க, புருவுக்காகத் தன் தசையை அரிவோனுகச் சிபி காட்சி தருகின்ருன்.

புருவுக்காக இன்னுயிரையும் வழங்கத் துணிந்த செம்பியன் என்னும் சிபியைப் போலவே, மற்ருெரு சிபியும் பழமரபுக் கதைத் தலைவனுகச் சங்க காலத்தில் ஏற்றம் பெற்ருன்; அவனைத் தொடித்தோட்***செம்பியன் என்பர்.அவனே அகத்திய முனிவரின் ஆணைக்கு ஏற்ப, ஆண்டுதோறும் இருபத்தி

---

* ஆதிபர்வக் கதையில் வரும் சிபி மாதவியின் மகன். புருவின் துன்பம் தீர்க்கும் சிபியைச் சுரதையின் புதல்வன் என்பது வனபர்வக் கதை.

** புன்கண்-மிக்கதுன்பம்.

*** தொடித்தோள்; வீரவளையை அணிந்த தோளை உடைய (செம்பியன்).

யெட்டு நாள் இந்திரவிழா நடத்துவதற்கு ஏற்பாடு செய் தான் என்னும் மரபுரையை மணிமேகலை மொழியும்* (1:1-10). அவன் அசுரரின் மூன்று ஆகாயக் கோட்டைகளை அழித்தான் என்ற கதையும் சங்க நூல்களில் இடம் பெறு கிறது. ''திறல்விளங்கு அவுணர் தூங்கெயில் எறிந்த விறல் மிகு முரசின் வெல்போர்ச் சோழன்**'' என்று நச்சினார்க் கினியர் தரும் மேற்கோள் செய்யுளும் (தொல் பொருள் 102),

தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன்
என்று மணிமேகலையும் (1:4),

தூங்கெயில் மூன்று எறிந்த சோழன்காண், அம்மானை
என்று சிலப்பதிகாரமும் (29:17),

தூங்கெயில் எறிந்த தொடிவிளங்கு தடக்கை
நாடா நல்லிசை நல்தேர்ச் செம்பியன்

என்று சிறுபாணாற்றுப்படையும் (81:82),

ஒன்னார் உட்கும் துன்னருங் கடுந்திறல்
தூங்கெயில் எறிந்தநின் ஊங்கணோர்***

என்று புறநானூறும் (39) அந்த பழமரபுக் கதையைக் குறிப் பிடுகின்றன.

ஆக, புருவின் துன்பத்தை நீக்கிய சிபியின் கதையும் அவுணரின் ஆகாயக் கோட்டைகளை அழித்த செம்பியன் கதை யும் தொன்மையானவையாகப் புறநானூறு முதலிய சங்க நூல்களில் இடம் பெறுவதையும், அக்கதைகளின் இயற்கை

---

* பூம்புகாரின் வளம் பெருக வேண்டுமென்று அகத்தியர் இவ்வாறு ஆணையிட்டார் என்றும், விழா நாட்களில் இந்திரனும் புகாரில் எழுந்தருளினன் என்றும் மணி மேகலை கூறும்.

** அவுணர்-அசுரர், தூங்குஎயில்-(ஆகாயத்தில்) தொங் கும் கோட்டை, எறிந்த-அழித்த.

*** ஒன்னார்-பகைவர், உட்கும்-அஞ்சும், துன்னரும்-நெருங்குவதற்கு அரிய, கடுந்திறல்-மிக்கவலிமை (உடைய), ஊங்கணோர்-முன்னோர்.

கடந்த தன்மையையும் கருதினல், அவற்றின் பழமை விளங்கும். சிந்து வெளித் தொடர்புடைய வடபுலச் சிபிகளின் வழியினரே சோழர்கள் என்ற ஊகத்தை ஏற்காதவரும், சிபிகளோடு சோழர் உறவுபாரட்டிய கதைகளைத் தேசிய ஒருமைப்பாட்டு ஆர்வத்தின் வெளியீடாகவேனும் கொள்வர். இந்த ஒருமைப்பாட்டு ஆர்வமே சோழரைச் சூரியகுலத்தினராகப் போற்றும் மரபிலும் புலனுகிறது.

மனுவே மனிதகுலத்தின் ஆதிபிதா என்று கூறும் ரிக் வேதம். பிரளய காலத்தில் மீன் ஒன்றின் அருளால் வைவஸ்வத மனு காப்பாற்றப்பட்டாரென்று சதபத பிராமணம் செப்பும். மச்சமாக அவதரித்தவர் திருமாலே என்றும், பிரளயம் வடிந்த பின், வைவஸ்வத மனுவே குடிகளைப் படைத்தாரென்றும் பாகவதம் பேசும். விவஸ்வான் என்ற சூரிய பகவானுக்கு மகனுகப் பிறந்ததால், வைவஸ்வத மனு என்ற பெயர் இவருக்கு வந்தது என்றும், இவரது மகன் இட்சுவாகுவின் வழியினரே சூரியகுல அரசர் என்றும், இவரது மகளான இளைக்குப் பிறந்த புரூரவன் சந்திரகுல மன்னரின் முதல்வன் என்றும் புராணங்கள் கூறும். அக்கினிதேவன் வழியினராக உரிமை கொண்டாடிய சில ராஜபுத்திர குலங்களைத் தவிர, அனேகமாக எல்லா இடைக்கால இந்திய அரசர்களும் தம்மைச் சூரிய குலத்தினராகவோ சந்திர குலத்தினராகவோ குறிப்பிட்டுக் கொண்டதும், அந்தப் புராணக் கூற்றின் செல்வாக்கைப் புலப்படுத்தும். ஐந்தாம் நூற்றுண்டிலேயே சோழரைச் சூரிய குலத்தினராகப் போற்றும் மரபு நிலைபெற்றுவிட்டது.

குமரியொடு வட இமயத்து
ஒரு மொழி வைத்து உலகு ஆண்ட
சேரலாதற்குத் திகழ் ஒளி ஞாயிற்றுச்
சோழன் மகள் ஈன்ற மைந்தன்*

என்று சேரலாதனுக்கும் அவன் மணந்த சோழன் மகளுக்கும் பிறந்த செங்குட்டுவனைச் சிலப்பதிகாரம் குறிப்பிடும் (29 : உரைப் பாட்டு மடை). இங்கு ஞாயிறு என்பது சோழன்

* ஒருமொழி-ஒரே ஆணை.

ஒருவனின் இயற்பெயரே ஆகலாம் என்பார் உளர். ஆனல் கானல்வரியில் மாதவி சோழனைப் பகல் வெய்யோன் (7:27) என்று குறிப்பிடுவது அவன் சூரிய வமிசத்தவன் என்பதைக் குறிக்கும். மேலும் சிலப்பதிகாரத்தொடு நெருங்கிய தொடர்பு கொண்டதும், அதன் சமகாலக் காவியமாகக் கருதப்பெறுவது மான மணிமேகலை, 'செங்கதிர்ச் செல்வன் திருக்குலம்' என்று அதன் பதிகத்தில் (அடி 9) சோழர்குலத்தைக் குறிப்பிடுகிறது. பதிகத்தைப் பிற்சேர்வு என்று புறக்கணித்தாலும், 24-ஆம் கதையில் ''இரவிகுலத்து ஒருவன்'' என்றே சோழன் குறிப் பிடப்பெறுவான். பூம்புகாரின் கடற்கரைச் சோலையில் ஒருத் தியைக் கண்டு காதல் கொண்டு கூடிய நெடுமுடிக்கிள்ளி, ஒரு மாதகாலம் அச்சோலையில் தன்னுடன் வாழ்ந்த அப்பூங்கொடி சொல்லாது மறைந்தபோது, மனம்மறுகிச் சாரணர் ஒருவரை வினவ, அப்பெண் நாகநாட்டு அரசகுமாரியான பீலிவளை ஆவாள் என்றும், அவள் பிறந்தநாளில்,

> ''இரவிகுலத்து ஒருவன் இணைமுலை தோயக்
> கருவொடு வரும்'' எனக் கணி எடுத்து உரைத்தனன்;
> ஆங்கு–அப் புதல்வன் வரூஉம் அல்லது
> பூங்கொடி வாராள்; புலம்பல்! (24:58–61)

என்றும் அச்சாரணர் கூறினரென்றும் பழங்கதை ஒன்றைக் கூறுவாள் சித்திராபதி*. மணிபல்லவத்தில் புத்தனது பாத

---

* சாரணர்: இயற்கை கடந்த ஆற்றலுடன் சஞ்சரிப் போர்; சித்திபெற்ற சமண, - பௌத்த முனிவர்கள். கணி-நிமித்திகன், வருவது உரைப்போன். புலம்பல்- புலம்பாதே. சித்திராபதி மாதவியின் தாய்.

பீலிவளையின் மகனே நாகநாட்டிலிருந்து கடல் வழி வந்ததால் திரையன் என்ற பெயர் பெற்றுத் தொண்டை நாட்டை ஆண்டானென்பது கதை. திரை யன் வழியினர் திரையர். திரையர் குடிப்பிறந்த இளந் திரையனைச் சோழர் வழித்தோன்றலாகப் பெரும் பாணாற்றுப்படை (32–37) கூறுவதற்கு இந்தக் கதை யையே காரணமாகக் காட்டுவார் நச்சினார்க்கினியர்.

பீடிகையைக் காத்துவந்த தெய்வமும் 'பனிப்பகை வானவன் வழி' (சூரிய குலம்) என்று சோழர்குலத்தைக்குறிப்பிடுவாள் (25:180). எனவே, சோழர் சூரிய குலத்தினர் என்ற ஐதிகம் சங்கம் சார்ந்த காலத்தில் செல்வாக்குப் பெற்றிருந்தது என்பது தெளிவு.

இந்திரன் தலைநகரான அமராவதியை அசுரரிடமிருந்து ஒரு சோழன் காத்தான் என்றும், அந்நன்றிக்குக் கைம்மாருக இந்திரன் அவனுடன் காவல் பூதமும் ஐவகை மன்றங்களும்* அனுப்பிவைத்தான் என்றும் சிலப்பதிகாரம் கூறும் (5:65-67; 6:7-17). இக்கதை முசுகுந்தன் என்ற சோழனைப் பற்றியது என்றே முன்னுளைய உரையாசிரியரும் இந்நாளைய திறனுய் வாளரும் ஒருமுகமாகக் கூறுவர். ஆனுல் முசுகுந்தன் என்பான் சூரிய குலத்தில் மாந்தாதாவின் மகனுகத் (திலீபன் மகன் என்பாரும் உளர்) தோன்றிப் புகழ் எய்தினுன் என்பது புராணங்களின் கூற்று. முசுகுந்தனைச் சோழர்குல முன்னேனுகப் போற்றுவதிலும் கதிரவன் மரபுக் கொள்கையே விளக்கம் பெறுகிறது.

பார்க்கப் போனுல், சோழரை சூரியன் மரபினராகக் கருதும் கொள்கை, சங்க காலத்திலேயே தோன்றியதென்று

---

* காவல்பூதம்: அமராவதியில் அசுரர் விடுத்த இருளம் பினைப் போக்கிய இப்பூதம்,இந்திரன்ஏவலில் பூம்புகார் வந்து நாளங்காடியில் இருந்து பலியேற்றுவருவதா யிற்று (சிலப். 7–14).

ஐவகை மன்றம்: களவாடக் கருதியோரை நடுங்க வைத்த வெளியிட மன்றம்; நோயால் அழுகியவரைக் குளித்தவுடன் குணப்படுத்தும் பொய்கையை உடைய மன்றம்; நஞ்சாலும் பேயாலும் துன்புற்ருரின் துயர் நீக்கும் ஒளியைச் சொரியும் கல்நாட்டி நிற்கும்மன்றம்; ஒழுக்கம் கெட்டவரை நிலத்தில் புடைத்து உண்ணும் பூதம் நிற்கும் சதுக்கம்; அரசன் கோல் கோடினும் அவையத்தார் நேர்மை திரியினும் கண்ணீர் உகுத்து அழும் பாவை நிற்கும் மன்றம் (சிலப். 5: 111-140).

லகிக்க இடமுண்டு. தொண்டைமான் இளந்திரையன் சோழர் குடியில் பிறந்தோனென்று கூறும்போது,

இருநிலம்* கடந்த திருமறு மார்பின்
முந்நீர் வண்ணன் பிறங்கடை (29-30)

என்று சோழனைக் குறிப்பிடும் பெரும்பாணாற்றுப்படை. ஆழியில் பள்ளிக்கொண்ட திருமால் ஆதவன் குலத்தில் இராமனாக அவதரித்தார் என்ற இதிகாசக் கதையைத் தழுவியே, திருமாலின் வழித்தோன்றல் என்ற கருத்துக்கு விளக்கம் காணமுடியும். எனவே, சங்க காலத்திலேயே சோழரைச் செங்கதிர்ச் செல்வனின் மரபினராகக் கருதினரென்று கொள்வதற்குத் தடையில்லை.

வடபுல மரபு சிபியை ஞாயிறுகுலத்தோன்றலாகக் கருதுவதில்லை. ஆனால் சிபிகுலத்தினராக உரிமை கொண்டாடிய சோழர் கதிரவன் கால்வழிக் குழுவினராகக் கருதப்பெற்ற சூழலில், சிபியையும் பகலவன் மரபில் உதித்த பெருந்தகையாகப் போற்றியது தமிழ் மரபு. எனவேதான், வான்மீகத்தில், இராமன் வம்சாவளி வருணனையில்** சிபி இடம்பெறுத போதிலும், சீதைமணாளனின் சிறந்த முன்னோர்களில் ஒருவனாகச் சிபியைப் போற்றுவான் கம்பன்***

---

* இருநிலம் கடந்த-பெரிய நிலத்தை (வாமனாவதாரத்தில்) அளந்த,திருமறுமார்பின்-திருமகளாகிய மறுவினை அணிந்தமார்பை உடைய, முந்நீர் வண்ணன்-கடலின் நிறத்தை உடையவன் (திருமால்); பிறங்கடை-வழித்தோன்றல்.

திருமாலின் வழித்தோன்றல் என்று பொருள்படும் இந்த அடிகள் திரையனைக் குறிக்கும் என்று பொருள் கொண்டாலும், திரையனே சோழர் குடித்தோன்றல் எனப்படுவதால் (32-37), சோழர்க்கும் முன்னோனான இராமனே குறிப்பிடப்பெறுகிறான் என்போம்.

** பாலகாண்டம், சருக்கம் 70.

*** பாலகாண்டம்: குலமுறை கிளத்து படலம்

பூம்புகாரின் பழைய பெயர் சம்பாபதி* என்பது மணிமேகலைப் பதிகம் தெரிவிக்கும் செய்தி. சம்புத் தீவின்** அதிதேவதையான சம்பாபதிக்கு இருப்பிடமாக

---

* (எட்டுத்) தொகையிலும் (பத்துப்) பாட்டிலும், சம்பாபதி என்ற பெயர் வரவில்லை என்பதால், மணிமேகலைக் கூற்றைப் புறக்கணித்தல் பொருந்தாது. பார்க்கப்போனால், காவிரிப்பூம்பட்டினம் என்ற பெயரும், செய்யுட்களின் அடிக்குறிப்புக்களில் சங்கப்புலவர் சிலரின் ஊர் பெயராக வருவது தவிர, தொகைச் செய்யுட்களிலோ பத்துப்பாட்டிலோ வரவில்லை; அந்நகரையே வருணிக்கும் பட்டினப்பாலையும் பட்டினம் என்றே அந்நகரைக் குறிப்பிடும். அகநானூறு ஓரிடத்தில்(205) காவிரிப் படப்பைப் பட்டினம் என்று கூறும். (புகார் என்ற பெயரும் மூன்றே இடத்தில் வருகிறது: அகநானூறு 110, 181; பதிற்றுப்பத்து 73.)

மணிமேகலை குறிப்பிடும் மரபுரைகள் நம்பத்தக்கனவே. புகாரின் பழைய பெயர்களில் ஒன்று காகந்தி என்று மணிமேகலை கூறுவதேபோல், பாரூத் கல்வெட்டில் (கி.மு.150) காகந்தி என்ற பெயர் வருகிறது என்பதை முன்பேகண்டோம் (IV:8)

புகாரின் பெயரால் ஒரு காண்டமே அமைத்த இளங்கோ அடிகள், சம்பாபதியைக் குறிப்பிடவில்லை என்பது மெய்யே. ஆனால் அவர் காகந்தியையும் குறிப்பிடவில்லை. காவிரிப்படப்பைப் பட்டினம் என்று ஓரிடத்தில் (15;151) வந்தபோதிலும், காவிரிப்பூம்பட்டினம் என்ற பெயர் வரவில்லை.

** சம்பு-நாவல்மரம். எனவே சம்புத் தீவை நாவலந்தீவு என்பர். முன்னாளில், சிறப்பாகப் பௌத்த இலக்கியத்தில், பாரத நாட்டையே சம்புத்தீவு என்றனர்: நாவல் மரங்கள் அதிகமாக இருந்ததே இப்பெயருக்குக் காரணம் எனலாம். 'நாவல் அம் தண் பொழில்' என்று மணிமேகலையும் கூறுவது காண்க (22:29). பாரதத்தாய் என்று இந்நாளில் கூறுவதுபோல் அந்நாளில் சம்பாபதி என்றனர்.

விளங்கியதால், புகாரைச் சம்பாபதி என்று ஆதியில் வழங்கினரென்று மொழியும் மணிமேகலை. தொன்னகரின் பழைய பெயரே சோழரின் இந்திய ஒருமைப்பாட்டு ஆர்வத்துக்குச் சான்ருகும்.

## (இ) பாண்டியர்

சங்க இலக்கியத்தில் பாண்டியரின் பூர்வீகத் தொடர்பை ஊகிப்பதற்கு உதவுவது ஒரே ஒரு பாட்டே (அகநா. 342). அது பாண்டியனைக் 'கள்வர்* பெருமகன்' என்று குறிப்பிடுகிறது. பண்டு ஒழிந்த நாளில் பாண்டியர்குடி கள்வர் இனத்திலிருந்து கிளைத்து வேறுபட்டு உயர்ந்தது என்று கொள்ளுவதற்கு இடம்தரும் குறிப்பு இது. சங்ககாலத்தில் கள்வர் இனம் பாண்டிய நாட்டைப் போலவே வேங்கடமலை வட்டாரத்திலும் வாழ்ந்தது. வேங்கடத்தின் தலைவனுன புல்லியைக் 'கள்வர் கோமான்' என்பர் மாமூலனுர் (அகநா. 61). அவன் கொடைப் பண்பையும் அவர் விதந்தோதுவார். கள்வன் என்ற சொல்லுக்குக் கருநிறத்தோன் என்ற பொருளைத் திவாகரமும் பிங்கலந்தையும் தருவதால், இந்தப் பெயர் அந்த இனத்துக்கு நிறம்பற்றி இட்டு வழங்கினர் என்று கருதலாம். தமிழக வரலாற்றில் சிறப்பிடம் பெற்ற கள்வர்

---

* 'கள்வர்' என்பதே பழைய பாடம். திவாகரம், பிங்கலந்தை என்னும் நிகண்டுகளும் கள்வர் என்றே கூறும். ஆனுல் களவரே சரியான பாடம் என்ருர் வரலாற்றுப் பேராசிரியர் டாக்டர் கிருஷ்ணசாமி ஐயங்கார். அறிஞர் குழுவால் பல பிரதிகளை ஒப்பு நோக்கிப் பரிசோதித்து வெளியிடப்பெற்ற மர்ரேப் பதிப்பு அகநானூறும் களவர் என்ற பாடத்தையே மேற்கொண்டிருக்கிறது. கள்வர் அல்லது களவர் எனப்படுவோரின் வழிமுறையினரை இந்நாளில் கள்ளர் என்பர்.

இனத்திலிருந்து* பாண்டிய குலம் எப்போது, எவ்வாறு கிளைத்தது என்பதை அறியோம். ஆனால், கருநிறக் கடவுளாகிய கண்ணனோடும், அவனுக்கு உற்ற துணைவரான பாண்டவரோடும் தொடர்புடைய குலமாகப் பாண்டிய குலம் சந்திரகுப்த மௌரியன் காலத்திலேயே** போற்றப்பெற்றது என்பது மெகஸ்தனீஸின் கூற்றாலும் காத்தியாயனர் உரையாலும் விளங்கும்.

---

* சங்ககால மூவேந்தர் ஆட்சிக்கு இறுதி சூழ்ந்து, ஏறத்தாழ இருநூறு ஆண்டு தமிழகத்தை ஆண்ட களப்பாளரும் (களப்பிரர்) கள்வர் எனப்பெறும் களவரே. பல்லவரும் பாண்டியரும் எழுச்சியுற்ற பின்பும், முத்தரையர் முதலிய கள்வர் குறுநில மன்னராக விளங்கினர். பல்லவர், களப்பாளர், சோழர், பாண்டியர் என்னும் அரசகுலங்கள் ஒன்றாய் இணைந்த பின்னாளில், சோழரைக் கள்ளராகவும் பாண்டியரை மறவராகவும் கருதும் கொள்கை தோன்றியது. நாயன்மார்களில் கூற்றுவரும் நரசிங்கமுனையரையரும் கள்ளர் மரபினராவர். சைவ சித்தாந்தப் பேராசிரியரான மெய்கண்டார் களப்பாளர் குலத்துதித்தவர். வைணவ ஞானிகளில் திருமங்கை ஆழ்வார் கள்ளர் மரபினர்.

** கி. மு. ஐந்தாம் நூற்றாண்டிலேயே, இலங்கையில் குடியேறிய ஆரிய மொழியினர் தலைவனான விஜயன், மதுரையிலிருந்து ஆண்ட பாண்டு அரசனின் குமாரியை மணந்தான் என்று இலங்கை வரலாற்று நூலான மகாவமிசம் கூறும். பாண்டியரின் தொன்மையையும் அவர்கள் பாண்டு வழியினராகக் கருதப்பட்டதையும் இதிலிருந்து அறியலாம். மகாவமிசம் பாண்டியரைப் பாண்டு அரசர் என்றே குறிப்பிடும்.

இந்தியாவின் தென்திசையில் கடல்வரை கிடந்த பகுதிக்கு, ஹெராக்கிளீஸ்* தன் மகளான பண்டையாவை அரசியாக்கினன் என்று மெகஸ்தனீஸ் மொழிவான். ஹெராக்கிளீஸ் என்று கண்ணனையே கிரேக்கர் குறிப்பிட்டனர். சூரசேனர் நாட்டில் (யமுனைக்கரை) மதுரையில் ஹெராக்கிளீஸை வழிபடுகின்றனர் என்று மெகஸ்தனீஸ் கூறுவது கண்ணன் வழிபாட்டையே குறிப்பதாலும், அவன் ஹெராக்கிளீஸ் என்று கண்ணனையே கூறுகிருன் என்பது தெளிவு. எனவே, கண்ணனின் மகளான பண்டையா, பாண்டிய குலத்தைத் தோற்றுவித்தாள் என்பது கி. மு. 300 அளவில் பாடலிபுத்திரத்தில் வழங்கிய பழமரபுக் கதை என்போம்.

ஆரியரல்லாதாரின் (சிந்துவெளியினரின்) கடவுளாகக் கண்ணன் (மாயோன்) விளங்கியதும் (VI. 4),

கண்ணன் வழிபாட்டின் தொன்மையைச் சங்க நூல்கள் புலப்படுத்துவதும்,

கண்ணனுக்குப் புனிதமான யமுனைக்கரை மதுரையின் பெயரைப் போற்றும் வகையில், பாண்டியர் வைகைக் கரைக் கூடலுக்கு மதுரை என்று பெயரிட்டதும்,

கண்ணனைக் குலதெய்வமாகப் போற்றிய பாண்டிய நாட்டு ஆயரின் மரபுரை, அவர்கள் பாண்டியகுல முதல்வர்

---

* இவனை ஹெர்க்குலீஸ் என்றும் கூறுவர். உடல் வலிமைக்கு எடுத்துக்காட்டாக உள்ள கிரேக்கப் புராண வீரன். பண்டைய கிரேக்க வீரர்கள் இவனைத் தெய்வமாக வழிபட்டனர். கண்ணன் காளிங்கத்தை அடக்கியதைப்போல், கொல்வதற்கு அரிய பல்தலைச் சர்ப்பம் ஒன்றைக் கொன்றவன் ஹெர்க்குலீஸ். வாழ்நாளெல்லாம் மாவீரச் செயல்கள் புரிந்ததிலும், மகளிர் பலரை மணந்ததிலும் இருவருக்கும் ஒற்றுமை உண்டு. தவிர, வெயிலில் கன்றியதால், ஹெராக்கிளீஸும் கண்ணனைப்போல் கருநிறத்தவனே.

களுடன் தோன்றினரென்று கூறுவதும்*,

வடபுல மதுரையில் இயக்கர் வழிபாடு பெருவழக்கா யிருந்ததென்று புத்தர் கூறுவதுபோல்**, தமிழக மதுரையில் வாழ்ந்த ஆயரும் இயக்கரை வழிபட்டதும் (சிலப். 15:126),

இங்குக் கருதத்தக்கவை. மேலும், மதுரையின் அதி தேவதையான மதுராபதியைப் பாண்டிய 'குலமுதல் கிழத்தி, யாகவே இளங்கோ அடிகள் அறிமுகம் செய்வதால்***, பாண் டிய மரபின் முதல்வியே மதுரைத் தெய்வமானுள் என்னும் பழமரபுக் கதை பண்டைய தமிழகத்தில் வழங்கியதை உய்த் துணரலாம். இக்கதையே, பின்னுளில், மதுரைத் தெய்வமான மீனுட்சி (உமையம்மை) மலயத்துவசப் பாண்டியன் மக ளாகத் தோன்றித் தடாதகைப் பிராட்டி என்ற திருப்பெய ருடன் மதுரையை ஆண்டாள் என்பதாக வடிவெடுத்தது*௪. இன்றும் அம்மை வழிபாட்டுக்கே தலைமையிடம் தருவது மதுரை.

---

* வாடாச்சீர்த் தென்னவன்
தொல்லிசை நட்ட குடியொடு தோன்றிய
நல்லினத்து ஆயர்: (கலித்தொகை 104: 4—6).

(தொல்லிசை-பழைய புகழ்) ஆயர், பாண்டியர் குலமுதல்வர்களுடன் தமிழகத்துக்கு வந்தனர் என்று இந்த அடிகளுக்குப் பொருள் கொள்வார் அறிஞர் கனகசபை (1800 ஆண்டுக்கு முற்பட்ட தமிழகம்).

** அங்குத்தர நிகாயம், பஞ்சக நிபாதம்.

*** சிலப் 28:11-13 குலமுதல் கிழத்தி; வமிசத்தைத் தோற்றுவித்த உரிமை (அல்லது உறவு) உடையவள். வமிச மூலவரைக் 'குலமுதல்' என்றே குறித்தார் நான் காம் காதையிலும் [அடி 22).

*௪ தடாதகை-தடுத்தற்கரிய தகை (வீரதீரம், வல்லமை) உடையாள்.

திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் என்னும் நூலே முதன்முதலில் தடாதகைப் பிராட்டி யாரைப் பற்றிப் பேசுகின்றது. அதனை ஆக்கிய பெரும்

பாண்டிய குலம் பற்றிய மற்றொரு மரபுரையும் பழமையானதே. மெகஸ்தனீஸ் வருகைக்கு ஏறத்தாழ ஐம்பதாண்டுகளுக்கு முன்பே, தென்னாட்டினராகக் கருதப்பெறும் காத்தியாயனர், பாண்டியர் என்ற பெயருக்கு விளக்கம் கூறினார். பாண்டு வமிசத்தினரின் வழித்தோன்றல் அல்லது அக்கால் வழிக் குழுவினரது நாட்டின் வேந்தன் பாண்டியன் எனப்படுவான் என்று அவர் கூறுவார் (வார்த்திகா IV, 1-168). சங்கச் சான்றோர் இந்த உறவைப் போற்றினரென்பது உறுதி. பஞ்சவர் என்ற சொல் பாண்டவர் ஐவரோடு (சிலப், 17:34) பாண்டவ மரபினராகக் கருதப்பெற்ற பாண்டியரையும் குறிப்பதாயிற்று; 'பஞ்சவர் ஏறே' என்று விளிக்கும் புறநானூறு (58). 'பஞ்சவர்' பாண்டியரின் குடிப்பெயரானதால், பஞ்சவன் என்ற ஒருமைப் பெயர் பாண்டியனைக் குறிப்பதாயிற்று. எனவே, "பஞ்சவன் கூடல்" என்று பேசும் பரிபாடல் (திரட்டு. 2:46).

"பழியொடு படராப் பஞ்சவ, வாழி!"(20-30) என்றும், "பஞ்சவன்தன் மீனக்கொடி" (29-27) என்றும் சிலப்பதிகாரம் குறிப்பிடும். பாண்டு மரபினர் குருகுலத்தோர் என்ப

---

பற்றப்புலியூர்நம்பி 13-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தார். ஆனால்பக்தி இயக்கம் வளம்பெற்ற 7-ம் 8-ம்நூற்றாண்டுகளிலேயே மதுராபதிக் கதை தடாதகைப் பிராட்டி கதையாக வளர்ந்திருக்கவேண்டும். தடாதகையை மணந்த சிவபெருமான், மதுரைக்கு எழுகடலை வரவழைத்தும், மலயத்துவசப் பாண்டியனைத் தேவலோகத்திலிருந்து தருவித்து எழுகடலில் நீராடச் செய்து வீடுபேறு அளித்தும், திருவிளையாடல் புரிந்ததை மாணிக்கவாசகர் (9-ஆம் நூற்.) புதையுரையாகக் குறிப்பிடுவார்.

பரகதி பாண்டியற்கு அருளினை, போற்றி! (4:214) என்பது அவர் திருவாக்கு.புதையுரையாகக் கதை அமைந்ததே, அக்கதையின் செல்வாக்கை உணர்த்தும்.

தால், பாண்டியரைக் கௌரியர் என்றனர்*. மேலும் பாண்டவரைப் போலவே பாண்டியரும் சந்திர குலத்தோராகப் போற்றப்பெறுவர். 'தென்னன் குலமுதல்' (4:22) என்றும், 'தென்னவன் குலமுதல் செல்வன்' (13:18) என்றும் சந்திரனையும், திங்கட் செல்வன் திருக்குலம் என்று (11-23) பாண்டியர் குலத்தையும் 'மாலைத்திங்கள் வழியோன்' (27:138).என்று பாண்டியனையும் சிலப்பதிகாரம் குறிப்பிடும்.

பாண்டிய மரபுக்கும் பார்த்தனுக்கும் உள்ள தொடர்பைக் குறித்துப் பாரதம் பேசும். தீர்த்த யாத்திரை சென்ற அர்ஜுனன், மணலூர் மன்னன் சித்திரவாகனனின் மகளான சித்திராங்கதையைக் கண்டு காதல் கொண்டான். அந்த மன்னனுக்கு மகளைத் தவிர வேறு மக்கட்பேறு இல்லாத காரணத்தால், அவளுக்குப் பிறக்கும் மகனைக் கன்னியாசுல்கமாகத்** தனக்குத் தரவேண்டுமென்று அவன் நிபந்தனை விதித்தான். அருச்சுனனும் அதற்கு உடன்பட்டு அவளை மணந்தான். பப்புருவாகனன் என்னும் புதல்வனை அவளிடம் பெற்றுத் தன் மாமனுக்கே அம்மகனைப் புத்திரிகா புத்திரனாக*** அளித்துச் சென்றான். இவ்வாறு ஆதிபர்வம் (அத். 235, 237) கூறும். எனவே, பாண்டவ மரபினனான பப்புருவாகனனிலிருந்தே பாண்டியன் என்னும் பெயர் தென்னவர்க்கு வழங்கியதாகலாம் என்பார் பேரறிஞர் மு. இராகவையங்கார் ௪*.

---

* புறநா, 3; அகநா, 70, 342: சிலப். 15-2. வடமொழியில் குருமரபினரைக் கௌரவர் அல்லது கௌரவ்யர் என்பர். அவற்றில் ஒன்றின் திரிபே கௌரியர் என்பது.

** கன்னியாசுல்கம்: மணமகளைச் சார்ந்தோர்க்கு மணமகன் கொடுக்கும் பொருள்.

*** புத்திரிகாபுத்திரன்: தன் மகள் வயிற்றுப் பிறந்தவனும், தனக்கே மகனாகக் கொள்ளப்பட்டவனுமாகிய பேரன்.

௪* ஆராய்ச்சித் தொகுதி: 'அருச்சுனனும் பாண்டிய மரபும்' என்னும் கட்டுரை.

பாரதத்தின் தென்புலப் படிகளே மணலூரைக் குறிப்பிடுகின்றன. வடபுலப் படிகள் அவ்வூரை மணிபுரம் என்று கூறும். எனினும், கலிங்கத்தையும் மகேந்திர மலை*யையும் கடந்து கடற்கரை வழியே நெடுந்தொலைவு சென்று மணிபுரம் அடைந்தானென்றும், அங்குத் திருமணம் செய்து பப்புருவாகனனைப் பெற்ற பின், தென்கடல் தீர்த்தங்களுக்குச் சென்றான் என்றும், பின்னர் மீண்டும் மணிபுரம் சென்று சித்திராங்கதையைக் கண்டான் என்றும்,வடநாட்டு ஏடுகளும் கூறுவதால், மணிபுரம் தென்கடலை அடுத்தே இருந்திருக்க வேண்டுமென்றும், அது மணலூருக்கே மறு பெயரென்றும், மு. இராகவையங்கார் வாதிப்பதில் வலுவுள்ளது. ஆயினும், அல்லி என்றும் வழங்கப்பெறும் சித்திராங்கதையை அருச்சுனன் மணம்புரிந்து பப்ருபுவாகனனைப் பெற்றுப் பாண்டிய** மரபைத் தோற்றுவித்தான் என்பதை வரலாற்று உண்மையாகக்கொள்வது பொருந்தாது. ஏடு அறியா நாட்களில், இனங்களும் பண்பாடுகளும் ஒருங்கிணைந்து பாரத சமுதாயம் உருவான பெரு நிகழ்ச்சியின் நினைவுகளே, அவற்றைப் போற்றிய பிற்கால மக்களின் மனோபாவனையில் வளர்ந்து மரபுரைகளையும் பழமரபுக் கதைகளையும் தோற்றுவித்தன. இதனை உணராது, உறுதிப்படுத்தும் சான்றில்லா மரபுரைகளையும், வழிவழியாக வளர்ந்த பழமரபுக் கதைகளையும் முழு மெய்ம்மைகளாக நிறுவ முயல்வதோ, அவற்றைப் பொருட்படுத்த வேண்டாத மூடக் கற்பனைகளாகப் புறக்கணிப்பதோ ஏற்புடைத்தாகாது. இரு நெறிகளும் தள்ளத்தக்கனவே,

---

* மகேந்திர மலை: கஞ்சம் மாவட்டத்திலுள்ளது. சிவாலயம் உடையது. ''மந்திர மாமலை மயேந்திர வெற்பன்'' என்னும் திருவாசகம் (2:100).

** அது பழமை என்று பொருள்படும் 'பண்டு' என்ற சொல்லிலிருந்து தோன்றியதென்பாரும், உழவு அல்லது உழைப்பு என்று பொருள்படும் பாண்டியம் (கலித். 136:20) என்ற சொல்லிலிருந்து அது பிறந்தது என்பாரும் உளர்.

கொள்ளத்தக்கன அன்று. எடுத்துக்காட்டாகப் பாண்டியர் என்ற குடிப்பெயரையே கருதுவோமெனில், அப்பெயர் எவ்வாறு தோன்றியது என்று எவரும் இன்று அறுதியிட்டு ரைக்க முடியாது. மெகஸ்தனீஸ் மொழிவதுபோல், கண்ணன் மகள் பண்டையா வழியினராக உரிமை பாராட்டிய பெண்ணரசிகள் ஆண்டதால் அப்பெயர் அமைந்ததா? தாய்வழிச் சமுதாயம் தந்தைவழிச் சமுதாயமாக மாறுவதற்கு ஒரு குலத்தின் வரவு காரணமாக இருந்து, அந்தக் குலம் பாண்டவ மரபுக்கு உரிமை கொண்டாடியதாலும், அதன் தலைவன் தென்னகப் பெண்ணரசியை மணம்புரிந்து தந்தை வழி ஆட்சி முறையை நிறுவியதாலும், பாண்டியர் என்ற பெயர் அமைந்ததா? பண்டையா மரபுப் பெண்ணுட்சியில் விளக்கம் பெற்ற தாய்வழிச் சமுதாயம், பாண்டவ குலத் தொடர்பினர் வரவால் தந்தைவழிச் சமுதாயமாக மாறியபோது, இரு மரபுகளுக்கும் ஒத்ததாகப் பாண்டியர் என்ற குலப் பெயர் சிறப்பு எய்தியதா? இந்த வினுக்களுக்கு விடை காண முடியாது. அதேபோதில் மெகஸ்தனீஸ் குறிப்பையும் காத்தியாயனர் கூற்றையும் பாரதக் கதையையும் மகாவமிசக் கருத்தையும்* ஒதுக்குவதும், புலமையின் பேராற்றலால் பஞ்சவர், கௌரியர் என்ற பெயர்களுக்கு விதவிதமாகப் பொருள் காண முயல்வதும், சந்திர மரபுச் செய்திகளை மறப்பதும் வழியலா வழிமேல் படர்வதாகும். ஏனெனில், ஏடறியா நாட்களில் பாரத சமுதாயத்தின் உயிர்ப்பொருள் கூறுகவே—ஒருயிர்போல் இயங்கும் இந்தியச் சமுதாய அமைப்பின் பகுதியாகவே—தமிழர் சமுதாயம் திரண்டெழுந்ததையும், ஒருமைப்பாட்டுணர்வு தமிழர்களின் உள்ளத்தைக் கிளர்ந்தெழச் செய்ததையும் பாண்டியரைப் பற்றிய மரபுரைகளும் பிற மரபுரைகளும் புலப்படுத்துகின்றன. இந்த உண்மையை மறுக்கமுடியாது: மறைக்கவும் முடியாது.

ஐவகை மரபின் அரசர் பக்கமும்* (பொருள் 75) என்று தொல்காப்பியர் கூறுவதால், அரசர்தம் இயல்பு ஐவகை

---

* ஈழநாட்டினரின் மகாவமிசம் பாண்டியரைப் பாண்டு அரசரென்றே கூறுவதை முன்பே குறிப்பிட்டோம்.

என்று சங்கச் சான்ேறோர் கருதியது விளங்கும். அவை ஓதல், வேட்டல், ஈதல், படைவழங்கல், குடியோம்பல் என்னும் ஐந்து என்பர் இளம்பூரணர். படைவழங்கலையும் குடியோம் பலையும் காத்தல் என்பதுள் அடக்கித் தண்டம் செய்தலை ஐந்தாம் தொழிலாகக் கூறுவார் நச்சினார்க்கினியர். அரசர் தொழில் ஐந்து என்பதே வடநூற் கருத்தும். அவை ஓதல், வேட்டல், ஈதல், படைக்கலம் பயிலுதல், உயிர்களைக் காத் தல் என்பனவாம் என்று ஸ்மிருதிகள் கூறுவதைத் தழுவியே சாணக்கியரும்** பேசுவார் (அதி. 1, அத். 3).

சொல்பெயர் நாட்டம் கேள்வி நெஞ்சம்என்று

ஐந்துடன் போற்றி அவை துணையாக*** (பதிற்று. 21)

சேரன் செயலாற்றினான் என்ற புலவர் கூற்று, அரசர் ஓத லுக்குச் சான்றாம். அறநூலும் நீதிநூலும் சொல்லும் நெறி யில் அரசன் ஆண்டதாகச் சங்க இலக்கியத்தில் வரும் செய்தி களிலிருந்து, வேந்தர் பலர் கல்வி கேள்விகளில் வல்லவரா யிருந்தனர் என்று ஊகிக்கலாம். அனேக வேந்தர் வேள்வி செய்ததை முன்பே கண்டோம். மூவேந்தர் இரவலர்க்குக் கள்ளும் உணவும் உடையும் பொற்றாமரையும் பொன்மாலை

---

* க்ஷத்திரியர் என்று வடநூல் குறிப்பிடும் இரண்டாம் வருணத்தை அரசர் என்றே தமிழ்நூல் வழங்கியது. உயர்நிலை மேவிய வேந்தரின் தனித்தன்மையைப் போற்றும் வகையில், மூவேந்தரே இரண்டாம் வருணம் என்று சங்கச் சான்றோர் கருதினர் போலும்.

**சாணக்கியர் குறிப்பிடும் ஐந்து தொழில்களோடு ‘பகைத்திறம் அழித்தல்’ என்பதையும் சேர்த்து அரசர் தொழில் ஆறு என்ற மரபுரையைக் குறிப்பிடுவார் பரிமேலழகர் (குறள் 384 உரை).

*** சொல்-சொல் இலக்கணம். பெயர்-பொருள் (இலக் கணம்). நாட்டம்-சோதிடம். கேள்வி-வேதம். நெஞ் சம்-ஐம்புலன்களை அடக்கிய தூய நெஞ்சம்.

யும் களிறும் குதிரையும் வழங்கிய செய்திகள் பல. அவர்கள் குற்றங்கடிந்தும் குறைநீக்கியும் பயிர்த்தொழில் பேணியும் பகைத்திறம் அழித்தும் ஆற்றிய பணியினைச் சென்ற அத்தியாயத்தில் குறிப்பிட்டோம். ஆக, அரசர்க்குரிய ஐவகை அறங்கள் மூவேந்தராட்சியில் விளக்கம் பெற்றன என்பது மிகையாகாது.

## 11. வட்டாரத் தலைவர்கள்

மூவேந்தரோடு குறுநில மன்னர்களையும் சங்ககாலம் கண்டது. அவர்களில் மூவேந்தரையும் விஞ்சும் உபகாரிகள் இருந்தனர் அவர்களை எண்ணில் விரல் முன்நிற்கும் வள்ளல் பாரியே. ''கொடுக்கிலாதானைப் பாரியேயென்று கூறினும் கொடுப்பாரில்லை'' என்று வள்ளன்மைக்கே எல்லையாக அவனைப் பின்னாளில் பாராட்டுவர் சுந்தரமூர்த்தி நாயனார். தன்னாட்டின் முந்நூறு ஊர்களையும் பாரி பரிசிலர்க்கு வழங்கினான் என்பர் அவனது உயிர்த்தோழரான கபிலர் (புறநானூறு, 110).

பாரி பாரி என்றுபல ஏத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்;
பாரி ஒருவனும் அல்லன்;
மாரியும் உண்டு ஈண்டு உலகுபுரப் பதுவே*

என்று கபிலர் அவனைப் பழிப்பதுபோல் புகழ்வர்.

பொதியமலைத் தலைவனான ஆய்அண்டிரன் இரவலர்க்கு அருகாது வழங்கியதால் மனைவியரின் ''ஈகை அரிய இழை''யே எஞ்சியிருந்ததென்பர் ஆயின் அருமை நண்பரான மூடமோசியார் (புறநானூறு 127). அவன் யானைக் கொடையின் மிகுதியை நோக்கி, அவர்

விளங்கு மணிக் கொடும்பூண் ஆஅய், நின்னாட்டு
இளம்பிடி ஒருசூல் பத்து ஈனும்மோ?** (புறநா. 130)

---

* புறநா. 107. பலஏத்தி-பலபுகழையும் வாழ்த்தி; புரப் பதுவே-பாதுகாத்தற்கு.

** கொடும்பூண்—வளைந்த அணி; ஆரம். சூல்—கருப்பம், ஈனும்மோ—பெறுமோ.

என்று நயம்படப் புனைந்துரைப்பார். காடுநிறைய யானைகளைக் கண்ணுற்ற மோசியார், ஆயின் யானைக் கொடையை நினைவு கூர்ந்து, அவனுடைய

குன்றம் பாடின கொல்லோ——
களிறுமிக உடைய இக் கவின்பெறு காடே?* (புறநா. 131)

என்று நாவினிக்க நெஞ்சினிக்கப் பாடினர். கைம்மாறு கருதாது, அதனால் வரும் பயன் அதுவே என்று தெளிவோடு அறம் பயில்கின்றான் ஆய் என்றும் அவர் இசைப்பார்:

'இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம்' எனும்
அறவிலை வ'ணிகன் ஆஅய் அல்லன்;
பிறரும் சான்றோர் சென்ற நெறிஎன
ஆங்குப் பட்டன்று அவன் கைவண்மையே** (புறநா. 134)

வடக்கே இமயம்போல் தெற்கே ஆய்குடி இருப்பதால் உலகம் நிலைகுலையாதிருப்பதாகவும் மொழிவார் அவர் (புறநா. 132). ''திருந்துமொழி மோசி பாடிய ஆயும்'' என்று (புறநா. 158) பெருஞ்சித்திரனார் பாராட்டியதில் வியப்பில்லை.

மற்றொரு வள்ளல் நள்ளி என்றும் கண்டீரக்கோப் பெருநள்ளி என்றும் கூறப்பெறுவான். வேளைக்குரிய பண்ணைஇசைக்கும் பாணர், காலைக்குரிய மருதப் பண்ணை மாலையிலும் மாலைக்குரிய செவ்வழிப் பண்ணை காலையிலும் பாடுகின்றனர் என்றும், அவ்வாறு அவர்களைக் கெடுத்தது நள்ளியின் வள்ளன்மையே என்றும் நகைச் சுவையோடு பாடுவார் வன்பரணர்;-

நள்ளி! வாழியோ; நள்ளி! நள்ளென்
மாலை மருதம் பண்ணிக் காலைக்
கைவழி மருங்கின் செவ்வழி பண்ணி,

---

* கவின்—அழகு.

** அறவிலை வணிகன்—பொருளை விலையாகக் கொடுத்து அறங் கொள்வோன். என—என்று கருத, ஆங்கு—அந். நற்செய்கையிலே, பட்டன்று-பட்டது; பொருந்தியது.

வரவுஎமர் மறந்தனர்—அதுநீ
புரவுக்கடன் பூண்ட வண்மை யானே*. (புறநா. 149)

பாரி, ஆய், நள்ளி ஆகியோருடன் எழினி அதியமான், மலையன் திருமுடிக்காரி, பேகன், ஓரி ஆகியோரும் வேண்டின வேண்டினர்க்கு அளித்த வள்ளல்களாகப் போற்றப்பெறுவர்.

சிற்றூர்த்தலைவர்களிலும் கொடையாளிகள் இருந்தனர் என்பதைச் சங்கநூல்களிலிருந்து அறியலாம். சோழமன்னன் ஒருவனே** சிறுகுடிகிழான்*** பண்ணனைப் பசிப்பிணி மருத்துவன் என்று புகழ்கின்றான். பரிசில் பெறப்போகும் பாணன், பரிசில் பெற்று வருவானைக்கண்டு,

யான்வாழும் நாளும் பண்ணன் வாழிய!*¬

என்று தொடங்கி, உடன்வருவோரின் வறுமையைக் காட்டி, உணவு உண்பாரின் ஆரவாரத்தைத் தான் கேட்பதையும் திரள்திரளாக சோறுடைக்கையினர் செல்வதைக் காண்பதையும் குறிப்பிட்டு.

---

* நள்ளென்மாலை—நள்ளென்னும் ஓசையையுடைய மாலை வேளையில், மருதம் பண்ணி—மருதம் என்ற பண்ணை வாசித்து, காலை-காலையில், கைவழி மருங்கில்-யாழில் (கையகத்து எப்போதும் இருத்தலால் யாழைக் கைவழி என்றார்.) வரவு- வரலாற்று முறைமை: மரபு. எமர்—எம்சுற்றத்தார் அல்லது எம்சாதியார்-பாணர். புரவு-கொடை, பாதுகாப்பு. கடன்-கடமை.

மாலையில்செவ்வழிப் பண்ணும் காலையில் மருதப் பண்ணும் வாசித்தல் இசைநூல் மரபு என்பது மதுரைக் காஞ்சியிலிருந்தும் (604, 658) அறியலாம்.

** சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்.

*** சிறுகுடிகிழான்—சிறுகுடி என்ற ஊருக்கு உரிமை உடையோன். இவனே 'தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்' என்று அகநானூற்றில் (54) போற்றப் பெறுவான்.

*¬ யான்வழும் நாளும்—யான்உயிர் வாழும் நாளையும் பெற்று.

பசிப்பிணி மருத்துவன் இல்லம்
அணித்தோ? சேய்த்தோ? கூறுமின் எமக்கே*

என்று பேசுவதாகப் பாட்டை அமைத்துப் பண்ணன் பண்ணைப் போற்றுகிறான் கிள்ளிவளவன்.

ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன் இறந்தபோது, அவனுடைய வீரத்தையும் வள்ளன்மையையும் எண்ணி எண்ணிக் கையறு நிலையில் கதறியவர் உள்ளத்தைப் புலப்படுத்தும் பாட்டு, சங்கக் கவிதைகளிடையே சிறப்பிடம் பெறும். "அனைவரும் ஆருத்துயரில் ஆழ்ந்திருக்கும்போது, மறுகிமாயாது மலர்ந்து மணம் வீசுவாயோ?" என்று முல்லையைவினவுவதாக அமைந்த இப்பாடலைப் பாடியவர் குடவாயிற் கீரத்தனார்:

இளையோர் சூடார்; வளையோர் கொய்யார்;
நல்லியாழ் மருப்பின் மெல்ல வாங்கிப்
பாணன் சூடான்; பாடினி அணியாள்;
ஆண்மை தோன்ற ஆடவர்க் கடந்த
வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை
முல்லையும் பூத்தியோ, ஒல்லையூர் நாட்டே?**

## 12. வேளிர் குலம்.

குறுநிலமன்னரில் பலர் வேள் என்றோ வேண்மான் என்றோ குறிப்பிடப் பெறுவர்: மகள், கேள் என்ற சொற்கள் முறையே மகளிர், கேளிர் என்று பன்மைபெறுதல்போல, வேள் என்பது

---

* புறநா. 173. அணித்தோ—அருகாமையிலோ? சேய்த்தோ-தூரத்திலோ?

** புறநானூறு 242. இளையோர்: இளைய வீரர்கள். வளையோர்: வளைஅணித்த மகளிர். நல்லியாழ் மருப்பு-நல்ல யாழின் கோடு (தண்டு.) மெல்லவாங்கி—மெல்ல வளைத்துப்பறித்து. பாடினி-பாணிச்சி;விறலி. ஆடவர்-வீரர். கடந்த—எதிர்த்துக்கொன்று வென்ற.

"நான்தான் அவனை இழந்து வாழ்கிறேன் கொடியனாய் என்றால், நீயும் கொடியையாய் பூக்கின்றாயோ?" என்ற பொருளில், 'முல்லையும்' என்றார் என்பர் பழைய உரையாசிரியர்.

பன்மையில் வேளிர் ஆயிற்றென்பதைச் சங்கநூல்களிலிருந்தே அறியலாம்*. வேள்மகன் என்பது திரிந்தோ, வேள் என்பது தலைமைச் சிறப்புணர்த்தும் 'மான்' விகுதி பெற்றோ, வேண்மான் ஆயிற்று**. எனவே, வேள் என்றும் வேண்மான் என்றும் குறிப்பிடப்பெறுவோர் யாவரும் வேளிர் குடியினர் என்பதில் அறிஞர்க்கு உடன்பாடே.

## (அ) வேளிர் கிளைகள்

பொதியமலைப் பகுதியை ஆண்ட ஆய்வமிசத்து அண்டிரனை 'மாவேள் ஆஅய்!' என்று முடமோசியார் விளிப்பதால் [புறநா. 135], ஆய்வமிசம் வேளிர்குலக் கிளையே ஆகும்.***

பொதினி [பழனி] மலைவட்டாரத்தை ஆண்ட 'நெடுவேள் ஆவி' மாமூலனாரால் குறிப்பிடப்பெறுகிறான் [அகநா. 1]. பதிற்றுப் பத்தின் நாலாம் எட்டாம் பதிகங்கள் வேள் ஆவிக் கோமான் பதுமனைக் குறிப்பிடுகின்றன. நெடுவேள் ஆவி என்று குறிப்பிடப் பெறுவோனும்*¬ பதுமனும் பேகனும் வேளிர் குலத்தின் ஆவியர் கிளையினர் எனபது விளங்கும்.

நீடுரைத் தலைநகராகக் கொண்டு காவிரி பாயும் மிழலைக் கூற்றத்தை ஆண்ட 'மாவேள் எவ்வி', [தலையாலங்கானத்துச் செருவென்ற] நெடுஞ்செழியனால் வெல்லப்பட்டான் என்பர் மாங்குடி மருதனார் (புறநா 34). அவன் முன்னோன் ஆன

---

* புறநானூறு 24, 201. அகநானூறு 135, 206, 246, 258, 331.

** சேரமான், அதியமான், மலையமான் என்பன போல.

*** அண்டிரனுக்குப்பின் பொதியிலை ஆண்ட திதியனை ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் புகழ்வான் (அகநா 25). பரணரும் மாமூலனாரும் (அகநா 322, 331) அவனைப் புகழ்வர். அவன் ஆய்குடித்தோன்றலாக இருக்கலாம். ஆனால் புலவர்கள் அவனை ஆய் என்றாரல்லர்.

*¬ இவன் இயற்பெயர் தெரியவில்லை.

ஓர் எவ்வி, அகுதை*யுடன் போராடி மாண்டான் என்பதை வெள்ளெருக்கிலையார் பாடல்களிலிருந்து அறிகிறோம் (புறநா 233, 234). எவ்வியின் குடி பழமையானது என்றும், அதில் பிறந்தவனே பாரி என்றும் கபிலர் மொழிவார் (புறநா 202). எனவே, எவ்வி குடியும் வேளிர்கிளை என்பதும் வேள்பாரி அக்கிளையினன் என்பதும் அறியப்படும்.

துவரை** நகரிலிருந்து ஆண்ட இருங்கோவேளை 'வேளிருள் வேளே!' என்று கபிலர்*** விளிப்பார் (புறநா 201). அவனுக்குப்பின்னோன் ஆன ஓர் இருங்கோவேளைக் கரிகாலன் வென்றான் என்னும் பட்டினப் பாலை (282). ஆலங்கானத்தில் நெடுஞ்செழியனிடம் தோற்றவர்களில் ஒருவனாக மதுரை நக்கீரர் குறிப்பிடும் (அகநா 36) இருங்கோவேண்மான், கரிகாலனிடம் தோற்றவனின் மகனாகலாம். ஆக, துவரையிலிருந்து ஆண்ட இருங்கோ குடியும் வேளிர்கிளையே என்பது தெளிவு.

வியலூரில் ஆண்ட நன்னனை வேண்மான் என்பர் மாமூலனார் (அகநா 97). நன்னன் உதியனின்*¬ பாழிநகரில்

---

* அகுதை(அல்லது அஃதை) ஒருகால் கூடல் நகரைஆண்டான் என்பர் கபிலர் (புறநா 347). கூடல் நகரை மீண்டும் பாண்டியர் வென்றதையே அகநானூறு 296 குறிப்பிடுகிறது எனலாம்.

** மைசூர் நாட்டில் உள்ளது. இந்நாளைய பெயர் ஹளெபீடு (பழையவீடு). ஹொய்சளர் என்ற அரச வமிசத்தின் தலைநகரான துவாரசமுத்திரம் இதுவே

*** இருங்கோவேளின் முன்னோருள் ஒருவன் கழாத்தலையார் என்னும் சங்ககாலப் புலவரை இகழ்ந்தமையால், அவனுடைய நகராகிய அரையம் என்பது அழிவுற்றது என்பார் கபிலர் (புறநா 202).

*¬ உதியன் என்பது சேரர்குடிப்பெயர். ஆனால் இங்கு நன்னன் ஒருவனது இயற்பெயராக வருகிறது. இதே போல் ஆய் என்ற குடிப்பெயரை இயற்பெயராகக் கொண்டவர் நன்னன் ஆயும் வெளியன்வேண்மான் ஆய்எயினன் என்பானும் ஆவர்.

'தொல் முதுவேளிர்' நிரம்பப் பொன்னைத் திரட்டிக் காத்தனர் என்பர் பரணர் (அகநா 258, 372), நன்னன் ஆய் என்ற ஒருவனையும் அவர் குறிப்பிடுவார் (அகநா 356). நன்னன் குடிப்பிறந்த மன்னர் பலர் ஆவர். பழையன் தலைமையில் வந்த சோழன் படையை அத்திமுதலியோருடன் சேர்ந்து எதிர்த்தவன் ஒருவன் (அகநா 44)*. அவன் பின் தோன்றலே, தனது கடிமரமான** வாகை விளங்கிய பெருந்துறையில் நார்முடிச் சேரலுடன் நடந்தபோரில் உயிர்நீத்தான் (அகநா 199). அப்போரில் சேரன் நன்னனின் கடிமாத்தையும் வெட்டினான் என்னும் பதிற்றுப்பத்து (40). மாமரத்தைக் காவல் மரமாகக் கொண்ட நன்னன் ஒருவனைப் பரணர் குறிப்பிடுவார் (குறுந்தொகை 73). இந்த நன்னனே தன் காவல் மரத்திலிருந்து ஆற்றில் விழுந்து மிதந்த மாங்காயை ஒரு பெண் எடுத்துத் தின்றாளென்று அவளுக்குக் கொலைத் தண்டம் விதித்தவன். பெண்ணின் தந்தை அவள் நிறைக்கேற்ற பொன்னாற் செய்த பாவையும் எண்பத்தொரு களிறும் தண்டமாக இறுப்பதாகக் கூறவும், நன்னன் அதற்கு உடன்படாமல் அவளைக் கொலை செய்வித்தான். எனவே 'பெண் கொலை புரிந்த நன்னன்' என்ற வசைக்குள்ளானான் அவன் என்பது பரணர் பாட்டால் (குறுந்தொகை 292) விளங்கும். அவனேதானோ அல்லது வேறு ஒரு நன்னனோ பகைவரைக் கொன்று, அவரின் உரிமை மகளிரைக் கவர்ந்து, அம்மகளிரின்

---

* பழையன் களத்தில் மாய்ந்தான் என்று அறிந்த சோழன் சினந்துவந்து கணையனை அகப்படுத்திக் கழுமலத்தைக் கைப்பற்றினான் என்றும் அப்பாட்டு கூறும். கழுமலம் சேரநாட்டு நகர். எனவே கணையன் சேரன் படை முதலி என்றும், நன்னன் முதலியோர் சேரன் சார்பாக விருந்த சிற்றரசர் என்றும் உரையாசிரியர்கள் ஊகிப்பர்.

** கடிமரம்: அரசர்க்கு உரியதாய்ப் பகைவர் அணுகாத வண்ணம் அவரால் வளர்த்துக் காக்கப்படும் காவல் மரம்.

கூந்தலை அறுத்துக் கயிருகத்திரித்து, அப்பகைவரின் களிறுகளைப் பிணித்துக் கொணர்ந்தான் என்பதைப் பரணரின் நற்றிணைப் பாட்டு (270) பேசுகிறது. இவனுக்கு நேர்மாருன பண்புகளை உடைய நன்னன், பெருங் கௌசிகனர் பாடிய மலை படுகடாம் (பத்துப் பாட்டில் ஒன்று) என்னும் பாட்டின் தலைவன். தொண்டை நாட்டின் பெரும் பிரிவான பல்குன்றக் கோட்டத்தை ஆண்ட அவன், சீலத்தால் சிறந்தவன் என்பர் புலவர். ஆக, நன்னன் என்பது வேளிர் குடியைச் சேர்ந்த ஓர் அரச குலத்தின் பெயர் என்பது விளங்கும்.

இளவிச்சிக்கோவை* நன்னன் மரபினன் என்று குறிப்பிடுவார் பெருந்தலைச் சாத்தனர் (புறநா. 151). எனவே விச்சிக்கோ வமிசமும் வேளிர் குலமே. பாரி மகளிரை மணந்து கொள்ளுமாறு விச்சிக்கோ ஒருவனை வேண்டினர் கபிலர் (புறநா. 200). "வில்கெழுதானை விச்சியர் பெருமகன்", வேந்தரோடு போராடியதைப் பரணர் குறிப்பிடுவார் (குறுந்தொகை 328). இளஞ்சேரல் இரும்பொறை என்னும் சேரன் விச்சியைமுறியடித்தான் என்று பதிற்றுப்பத்தின் ஒன்பதாம் பதிகம் பேசும்.

பாடுநர்க்கு யானை வழங்கி மகிழ்ந்தவனும் பாழி என்னுமிடத்தில் ஞிமிலியோடு அமர் நிகழ்த்தி உயிர்நீத்த வீரனுமான ஆய் எயினனை 'வெளியன் வேண்மான்' என்று குறிப்பிடுவார் பரணர் (அகநா. 208). மேலும் அவன் இறந்தபோது, பல்வேள் மகளிர்' கையறுநிலையில் கதறினர் என்றும் அவர் உரைப்பார். எனவே ஆய் எயினன் குடியும் வேளிர் கிளையே என்று ஊகிக்கலாம். வெளியன் என்பது குடிப் பெயரென்று தோன்றுகிறது. உதியஞ்சேரலின் மனைவி நல்லினியை 'வெளியன் வேண்மாள்' என்று பதிற்றுப்பத்து இரண்டாம் பதிகம் கூறுவதாலும், வீரை வேண்மான் வெளியன் தித்தன்** என்

---

* விச்சி—ஒருமலை; இதன் அரசன் விச்சிக்கோ. விச்சிக்கோவின் தம்பி இளவிச்சிக்கோ.

** இவன்வேறு, உறையூரை ஆண்ட தித்தன் வேறு என்று தோன்றுகிறது. உறையூர் அரசனைக் குறிப்பிடும் பாட்டுக்கள்: அகநானூறு 6, 122, : புறநானூறு 80,

பவனை நற்றிணை (58) குறிப்பிடுவதாலும், வீரை வெளியன் தித்தனார் (அகநானூறு 188) வீரை வெளியனார் (புறநா. 320) என்ற சங்கப் புலவர்கள் இருந்ததாலும், வெளியர் என்பது வேளிர் குடி ஒன்றின் பெயரென்பது வலுப் பெறுகிறது. வெளியர் தலைவன் வெளிமான் ஆவான். எனவே, பெருஞ்சித்திரனாரால் பாடப்பெறும் வெளிமான் (புறநா. 162, 237, 238) வெளியர்குல வேண்மான் ஆகலாம்.

மையூர்கிழானின் மகளை வேண்மாள்* அந்துவஞ்செள்ளை என்று பதிற்றுப்பத்தின் ஒன்பதாம் பதிகம் கூறுவதால், மையூர் கிழானும் வேண்மான் என்பது பெறப்படும். சோழநாட்டுப் பிடவூர் கிழார் மகன் பெருஞ்சாத்தனையும் வேண்மான் என்று குறிப்பிடுவார் நக்கீரர் (புறநா. 395). கிழான் அல்லது கிழார் என்பது வேளிர்களின் பட்டப்

---

352, 395. அவன் போர்வைக்கோப் பெருநற்கிள்ளியின் தந்தை என்று புறநானூற்று உரையாசிரியர் (80) கொள்வது தவறாயிருக்கலாம். பாண்டியன் கூடலை அகுதை கைப்பற்றியதைப்போல், சோழன் உறையூரைத் தித்தன் கைப்பற்றியிருக்கலாம். அதனாலேயே போர்வைக்கோப் பெருநற் கிள்ளி அகதியாக அயலூர் சென்று, ஆமூரில் ஒரு மல்லனோடு போராட நேர்ந்தது என்றும் கருதலாம். ஆனால் உறையூர் தித்தனை வெளியன்மரபு வேள் என்று கொள்வதற்குச் சான்று இல்லை.

அகநானூறு 152-ம், 226-ம் தித்தன் வெளியனைக் குறிப்பிடுகின்றன. குடிப்பெயர் முதலில் வருவதே மரபு. தித்தன் வெளியன் என்பதில் வெளியன் இயற்பெயரே. தித்தன் மகன் வெளியன் என்பதையே தித்தன் வெளியன் என்ற பெயர் குறிக்கும். இதே போல் சேந்தன் மகன் கண்ணன் சேந்தன் கண்ணனார் எனப்படுவர். சாத்தன் மகன் பூதனைச் சாத்தன் பூதனார் என்பர்.

* வேண்மாள்: வேளிர்குலப்பெண்.

பெயரே என்பதற்கு, இவையும் வேள்எவ்வி நீடூர் கிழவோன் என்று குறிப்பிடப்பெறுவதும் (அகநா. 266) சான்றுகளாம். சங்கப்புலவர் வரிசையில் அரிசில்கிழார் முதல் வடமோதங் கிழார் வரையில் முப்பதுக்குமேற்பட்ட புலவர்கள் ஏதாவ தொரு கிராமத்தின் கிழான் அல்லது கிழார் மகன் என்று குறிப்பிடப்பெறுகின்றனர். பாடப்பட்டோர் வரிசையில், அம்பர்கிழான் முதல் வல்லார்கிழான் வரையில் ஒன்பதுபேர் ஏதாவதொரு கிராமத்தின் கிழார் அல்லது கிழார்மகன் என்று குறிப்பிடப்பெறுகின்றனர். ஆனால் இவ்வாறு சீறூர்த் தலைவராகவும் குறுநில மன்னராகவும் இருந்த வேளிர் சிலரே. வேளிர் குலத்தின் பெரும்பாலான மக்கள் வயலில் உழுது பயிர் செய்வோராகவே இருந்தனர்.

வேளிர் என்பது குறுநில மன்னர்களையோ, அவர்களையும் சீறூர்த் தலைவர்களையுமோ மட்டும் குறித்தது என்பதுபொருந் தாது. கடற்கரை நகரமான வீரையில் வேளிர் நிறைந்திருந்த தால் 'அது வேளிர் வீரை' என்று குறிப்பிடப் பெறும் (அகநா, 206). நன்னன் பாழியில் பொன்னைச் சேமித்துப் பாதுகாத்து வேளிர்குல முதியோர் பலர் இருந்தனர் (அகநா. 258: 372). வேளிர்களின் பெருங்கூட்டத்தை எதிர்த்தத் திதியன் போர் புரிந்ததைப் பேசுவார் மாமூலனார் (அகநா. 331). நீர்நில வளங்கள் நிறைந்த முத்தூற்றுக் கூற்றத்தில் வேளிர் வாழ்ந் தனரென்றும், அவர்கள் நிறைய நெல்லை விளைவித்துக் குவித் தனரென்றும் மாங்குடி மருதனார் மொழிவார் (புறநா, 24). குன்றூரில் வேளிர் நிறைந்திருந்ததால் அதனைத் 'தொன்று முதுவேளிர் குன்றூர்' என்றார் பரணர் (நற்றிணை 280). பழைய நெல்லை நிறைய உடையதென்று சிறப்பிக்கப்படும் வேளூரும் (அகநா. 166) வேளிர் நகரமே. ஆக, வேளிர்களில் அரசரும் கிழாரும் சிலரே; அல்லாதவரே பலர். ஆய், ஆவியர், இருங்கோ, விச்சியர் முதலிய குடிகள், சேரசோழபாண்டியர் குடிகளைப்போன்ற அரசர் வமிசங்களல்ல. வேளிர் குடிகள் பொதுமக்களின் குடிகளே; அவற்றின் தலைவர்களே குடிமன்னர் களாக விளங்கினர். வேளிர்குலப் பொதுமக்கள் உழவர் களாகவே காட்சிதருகின்றனர். ஆனால் சங்க இலக்கியத்தில்

குயவனுக்கு வேட்கோ என்ற பெயர் அமைந்ததை நோக்கு ழுல், மட்பாண்டக்கலையை வேளிர்கிளை ஒன்று சிறப்பாகப் பேணியதென்று ஊகிக்கலாம்.

## (ஆ) வேளிர் பூர்வீகம்.

"தொன்முது வேளிர்" என்று மாங்குடி மருதனாரும் (புறநா. 24) பரணரும் (அகநா. 258) குறிப்பிடுவதாலும், 'எவ்விதொல்குடி' என்று கபிலர் கூறுவதாலும் (புறநா. 202), வேளிர் குலத்தின் பழமை விளங்கும். அவர்களின் பூர்வீகத் தைப் பற்றிக் கபிலர் பேசுவார். பாரி மகளிரை மணக்குமாறு கோரும்போது,

நீயே, வடபால் முனிவன் தடவினுள் தோன்றி,
செம்புபுனைந்து இயற்றிய சேண்நெடும் புரிசை,
உவரா ஈகைத் துவரை ஆண்டு
நாற்பத் தொன்பது வழிமுறை வந்த
வேளிருள் வேளே!* (புறநா. 201)

என்று இருங்கோவேளைக் குறிப்பிடுவார். வேளிர்குல முதல் வன் வடபுல முனிவன் ஒருவனின் வேள்வித் தீயில் தோன்றிய வன் என்று அவர் மொழிவதால், வேளிர்கள் அக்கினி குலத் தைச்** சேர்ந்தவராகக் கருதப்பெற்றனரென்பது தெளிவு,

---

* நீயே—நீதான், தடவு—வேள்வியின் ஓமகுண்டம். சேண்நெடும் புரிசை—நெடுந்தூரம் நீண்டும் மிகவும் உயர்ந்தும் உள்ள மதில் (உடைய துவரை). உவரா ஈகை-வெறுப்பில்லாத கொடை. துவரை-துவாரபதி, துவார சமுத்திரம். வேளிருள் வேளே—வேளிர் குல திலகனே,

** கி. பி. 5-ஆம், 6-ஆம் நூற்றுண்டுகளில் இந்தியாமீது படையெடுத்த ஹூணர்கள் இந்நாட்டில் தங்கி, இந் நாட்டவரோடு கலந்ததால் உருவான ராஜபுத்திரர் களில் சில குடும்பங்கள் வசிட்ட முனிவரின் வேள்வித் தியில் தோன்றியவரின் வழிமுறையினராகக் கருதப் படுவர். அவர்களை அக்கினி குலத்தினர் என்பர்.

மேலும், கபிலரால் பாடப்பெற்ற இருங்கோ, வேளிர் குலத்தின் ஐம்பதாம் தலைமுறையினன் என்பதும் தேற்றம். 'ஏழேழு தலைமுறை' என்றால் 'மிகப்பல தலைமுறை' என்று பொருள் கொள்ளும் தமிழ்வழக்கு உள்ளதைக் காட்டி, 'நாற்பத்தொன்பது வழிமுறை' என்பதற்கும் அவ்வாறே பொருள் கொள்ளலாம் என்பர் பேராசிரியர் டாக்டர் துரை அரங்கனார்*. ஆனால் நாற்பத்தொன்பது என்ற சொல்லை 'அனேகம்' என்ற பொருளில் எங்கும் எவரும் ஆண்டதாகத் தெரியவில்லை. எனவே, கபிலர் வாக்கில் நேர்பொருளையே கருதி, ஒரு தலைமுறை இத்தனை ஆண்டு ஆண்டது என்று சராசரியாகக் கொண்டு, வேளிர்குலம் தென்னிந்தியாவில் குடியேறிய காலத்தைக் கணக்கிடும் நெறியில் பேராசிரியர் மு. இராகவ ஐயங்கார் முற்படுவது நன்று**. ஆனால் பௌராணிகச் செய்திகளின் அடிப்படையில் பாரதப் போர்க் காலத்தைக் கணிக்க முயன்ற பார்ஜிட்டர்*** ஓர் அரசனின் ஆட்சிக்காலம் சராசரியாகப் பதினெட்டு ஆண்டு என்று கொண்டதுபோல், வேளிர்க்கும் கணிப்பதே முற்றிலும் ஏற்புடைத்து. சங்கப் புலவர்களின் காலமுறைச் சிக்கல்களில் புகாமல், கி. பி. 150 அளவில் கபிலர் இருங்கோவேளைச் சந்தித்தார் என்று கூறுவதற்குத் தடை இராது. எனவே, கழிந்த தலைமுறை நாற்பத்தொன்பதுக்கு 882 ஆண்டு என்றால் ஏறக்குறைய கி. மு. 700 அளவில் வேளிர்கள் தென்னாட்டில் குடியேறினர் என்போம்.

இருங்கோவேள் தலைநகரின் பெயரான துவரை துவாரகையின் திரிபே. இந்நாளைய குஜராத்திலுள்ள சௌராஷ்டிர தீபகற்பத்தின் கடற்கரை நகரமாக விளங்கியது துவாரகை*ூ. மகதம் ஆண்ட ஜராசந்தனின் ஆக்கிரமிப்புக்கு அஞ்சி,

* சங்க காலச் சிறப்புப் பெயர்கள்.

** வேளிர் வரலாறு.

*** பாரதீய வித்யா பவனின் 'வேதகாலம்' என்னும் நூலும் அந்தக் கொள்கையைத் தழுவுகிறது.

*ூ துவாரகையைக் கடல் கொண்டது என்பது பௌராணிக மரபு. இப்போதுள்ள ஜூனாகாத் என்பதே

யமுனைக் கரை மதுரையிலிருந்து யாதவர்கள் கண்ணன் தலைமையில் சென்று கடலோரத்தில் துவாரகையை நிறுவி வாழ்ந்தனர் என்பது பாரதமும் புராணங்களும் கூறும் பழமரபுக் கதை. வேளிர் துவரைக்கும் யாதவர் துவரைக்கும் உள்ள பெயர் ஒற்றுமை அடிப்படையில், வேளிர் யாதவ மரபினரே என்ற ஐதிகம் தமிழகத்தில் எழுந்தது என நச்சினார்க்கினியர் வாக்கிலிருந்து ஊகிக்கலாம். ''மலய மாதவன்* நிலங்கடந்த நெடுமுடி அண்ணலுழை நரபதியருடன் கொணர்ந்த பதினெண்வகைக் குடிப்பிறந்த வேளிர்'' என்று அவர் தொல்காப்பிய உரையில் (பொருள் 32) கூறுவார். பரமசிவன் பார்வதியை மணந்துகொள்ளும் காட்சியைக் காண அமரர் முதலானோர் கயிலையில் கூடியதால் இமயம் தாழ்ந்ததாக, நில உலக நிலையைச் சீர் செய்வதற்குத் தென்னகம் செல்லுமாறு இறைவன் அகத்தியரிடம் கூறினாரென்றும், தென்னகம் நோக்கி வருங்கால் அகத்தியர் ''துவாரபதிப் போந்து நிலங்கடந்த நெடுமுடி அண்ணல் வழிக்கண் அரசர் பதினெண்மரையும் பதினெண்குடி வேளிர் உள்ளிட்டாரையும் அருளாளரையும்'' அழைத்து வந்தனர் என்றும் தொல்காப்பியப் பாயிர உரையில் கூறுவார் நச்சினார்க்கினியர். திருமால் (கண்ணன்) வழியினரைத் தென்னகத்துக்கு அழைத்து வந்தார் அகத்தியர் என்று நச்சினார்க்கினியர் கூறுவதால், அவர் கூறும் துவாராபதி வடபுலத் துவாரகையே, தென்புலத் துவரை அல்ல என்பது விளங்கும். மேலும், யாதவர் குலம் பதினெட்டு என்று பாரதம்

---

துவாரகை என்பர் சிலர். காந்தி அடிகள் பிறந்த இடமான போர்பந்தருக்கு 74 மைல் தூரத்திலுள்ள துவாரகையே கண்ணன் ஆண்ட துவாரகை என்பது பலர் கொள்கை. இங்குக் கலியாண நாராயணன் (திருமால்) கோயில் உள்ளது.

* மலயமாதவன்-மலயத்தில் (பொதியமலையில்) தவம் செய்த அகஸ்தியர். நிலங்கடந்த நெடுமுடி அண்ணல்: வாமனாவதாரத்தில் ஓரடியால் உலகளந்த திருமால் என்று கண்ணனைக் குறிப்பிடுகிறார். நரபதி-அரசன்.

கண்ணன் கூற்ருகக் குறிப்பிடுவதால்*, அந்தப் பதினெண் குலத்தினரே பதினெண்குடி வேளிர் என்றும், அந்தக் குடிகளின் அரசர்களே பதினெண் அரசர் என்றும் பேராசிரியர் மு. இராகவ ஐயங்கார் கூறுவது, நச்சினுர்க்கினியர் கதைக்கு நல்ல விளக்கமே. ஆனுல் அந்தக் கதையை வரலாற்றுஉண்மையாகக் கொள்வதற்கில்லை. பார்க்கப்போனுல், வேளிரை அக்கினி குலமாகக் கருதிய சங்ககால மரபுரைக்கு மாருக, அவர்களைச் சந்திரகுலமான யாதவர் மரபில் உதித்த கண்ணனின் கால்வழிக் குழுக்களாகச் சித்திரிக்கிறது நச்சினுர்க்கினியர் கதை. எனவே இக்கதை பிற்காலத்தில் எழுந்ததென்றே கூறவேண்டும்.

எனினும், வடபுல முனிவன் வளர்த்த ஓமத்தீயில் உதித்தவனின் வழித்தோன்றல்களாக வேளிரை வருணிக்கும் சங்ககால மரபுரையும், வேளிர் நகரமான துவரைக்கும் கண்ணன் ஆண்ட துவாரகைக்கும் உள்ள பெயர் ஒற்றுமையும் வேளிரின் முன்னுேரைய வடபுலத் தொடர்பைச் சுட்டுகின்றன என்பதைப் புறக்கணிக்க முடியாது. அவர்கள் பண்டைக் காலத்தில் வடபுல வழியே தென்னகம் வந்து குடியேறினர் என்பதையே அக்கினிகுல ஐதிகமும் துவரைப் பெயரும் குறிப்பன எனலாம். மேலும், அவர்கள் கடல்வழியே வந்து துவாரகையில் இறங்கினுர்களென்றும், அங்கிருந்து தென்னகம் வந்தபின்னர், துவாரகையில் தமக்குக் கிடைத்த ஆதரவைப் போற்றும் வகையில் துவரை என்ற பெயரைத் தாம் நிறுவிய நகருக்குப் பெயரிட்டனர் என்றும் துணியலாம்.

---

* சபா பர்வம் அத்தியாயம் 14. பதினெட்டில் ஒரு சிறப்பைக் கண்டது இந்திய மரபு: புராணம் 18; பாரத பர்வங்கள் 18; பகவத் கீதை அத்தியாயங்கள் 18; யாதவர் குடிகள் 18. அதேபோல், தேவாசுரப்போர் 18 ஆண்டு; இராம இராவணயுத்தம் 18 மாதம்; பாரதப் போர் 18நாள். இந்த மரபை ஒட்டியே, செங்குட்டுவன் கனகவிசயரோடு நடத்திய போர் 18 நாழிகையில் முடிந்தது என்பர் இளங்கோ அடிகள் (சிலப்பதிகாரம் 20:215-26; 27: 5-13).

இந்தத் துணிவுக்கு வலுத் தருவது புதைபொருள் ஆராய்ச்சி. கி. மு. 700 அளவில் இரும்பை ஆண்ட பெருங் கற்படைப் பண்பாட்டினர் தென்னகம் வந்தனர் என்று முன்பே கண்டோம் (1:20). வேளிரும் கி. மு. 700 அளவில் தென்னாடு வந்தனரென்பது கபிலர் பாட்டிலிருந்து ஊகிக்கப் பெறுவதால், அவர்கள் வேளிரா என்ற வினா எழுகிறது. மேலும், பெருங்கற்படைகள் உள்ள இடங்களைக் கருதும் போது, அவற்றை அமைத்த மக்கள் மலையையோ வரை நிலத்தையோ அடுத்துள்ள இடத்தில் குடியிருப்பும் ஏரியும் பயிர் நிலமும் இடுகாடும் அமைத்துக் கொண்டனர் என்பது தெளிவாம். வேளிரும், சங்க காலத்தில்கூடப் பொதியமலை, பறம்புமலை, பழனிமலை, ஏழில்குன்றம், பல்குன்றக் கோட்டம், கொண்கானம் முதலிய மலைகளைச் சார்ந்த இடங்களிலேயே ஊர்களை அமைத்து வாழ்ந்தனர்*. மிழலைக்கூற்றம், முத்தூற்றுக் கூற்றம் முதலிய சில இடங்களே மலைத்தொடர் பில்லாதன. துவரையும் புஷ்பகிரி மலைக்குப் பக்கத்தில் அமைந்ததே. தவிர, மட்பாண்டக்கலை தொன்மையான தாயினும், பெருங்கற்படைகளில் காணப்பெறும் வழவழப்பான அழகிய மட்கலங்கள் தனிச் சிறப்பானவை என்று ஆய்வாளர் கூறுவதற்கு ஏற்ப, வேளிர்களில் ஒரு சாரார் மட்பாண்டத் தொழிலில் மேன்மை எய்தியிருந்தனர் என்பதைக் குயவனுக்கு வேட்கோ என்ற பெயரே சங்க காலத்தில் வழங்கியதி

---

* பூர்வீகப் பிறப்பகத்தில் மலைச் சரிவுகளில் பயிர்த் தொழில் செய்த மரபின் வலுவே இங்கும் அத்தகைய இடங்களைத் தேர்ந்தெடுக்கச் செய்தது எனலாம். தற்காப்புத் தேவை என்பதாலும், மலையின் இயற்கையான பாதுகாப்பை வேளிர் நாடியிருக்கலாம்.

இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணும் நாட்டிற்கு உறுப்பு (737)

என்ற குறள் வேளிர் ஆட்சியின் அனுபவத்தில் எழுந்த இலக்கணமே. (இருபுனல்-கீழ்நீர், மேல்நீர்-கேணி ஏரிகளால் பெறுவது. வருபுனல்-ஆற்றுநீர்.)

லிருந்து உணர்கிறோம். தென்னகத்தில் செயற்கைப் பாசனம் கண்டு இருப்புக் கொழுவை ஆண்டு நெற்பயிர் செய்வதில் சிறப்பு எய்தினோர் பெருங்கற்படையினராகலாம் என்ற தொல்கலையார் துணிவுக்குத் தக்கவாறு, வேள் என்ற சொல்லின் அடியாகப் பிறந்த வேளாளர் என்ற சொல் உழவரைக் குறிப்பதைக் காண்கிறோம். இரும்பை ஆண்டவ ராகப் பெருங்கற்படையினர் வந்தனர் என்பதற்கேற்ப, தெலுங்கில் கொல்லரைக் 'கொல்லவேளமர்' என்பர். எனவே வேளிர் கி. மு. 700 அளவில் தென்னாடு வந்த பெருங் கற்படையினரே என்று கருதலாம்.

6-ஆம் நூற்றாண்டிலிருந்து 600 ஆண்டுக்காலம் தக்க ணத்தில் பெரும்பங்காற்றிய சாளுக்கியரை வேளிர் என்று பிங்கலத்தையும், வேள்புல அரசர் என்று திவாகரமும், வேள் குலச் சளுக்கர் என்று சோழர் சாசனங்களும் கூறுவதும்,

சாளுக்கியருக்குப்பின் மைசூரில் எழுந்த ஹொய்சளர் அரசு புலிகடிமால் மரபைத் தனதாக்கிக் கொண்டதும்*,

அந்த ஹொய்சளருக்கு அமைந்த பெள்ளாளர்** என்ற பெயரும்,

---

* 'புலிகடிமால்' என்று இருங்கோவேளை விளிப்பார் கபிலர் (புறநானூறு 201). 'புலியைக் கொன்று முனிவரைக் காத்த வீரன்' என்று விளிக்குப் பொருள் கொள்வர். சளன் என்னும் வேந்தன் வேட்டையாட வந்தபோது, ''ஹொய், சள'' (சளனே, கொல்!) என்று தன்னைத் தாக்கவந்த புலியைக் காட்டி முனிவர் மொழிந்தாரென்றும், சளன் அவ்வாறே செய்தா னென்றும், அவ்வாறே ஹொய்சளர் என்ற வமிசப் பெயர் வந்ததென்றும் அவர்தம் மரபுரை கூறும். ஹொய்சளரின் சின்னமும் புலியே. அவர்களுக்கும் துவரையே தலைநகர். புலிகடிமால் என்பது போசல என மருஉ ஆனதால், போசளர் அல்லது ஹொய்சளர் என்று இருங்கோவேள் வழியினர் அழைக்கப்பட்டனர் என்று டாக்டர் துரை அரங்கனார் ஊகிப்பார்.

** பெள்ளாளர் (பேலாலர்) வேளாளர் என்பதின் திரிபே.

தொண்டைமண்டல வேளாளருக்கு அமைந்த துளுவ வேளாளர்* என்ற பெயரும்,

ஆந்திர சாதி ஒன்றுக்குள்ள வேளமர் என்ற பெயரும், தென்னாட்டின் பெரும்பகுதியில் வேளிர் முற்காலத்தில் பரவியிருந்த நினைவைப் போற்றுவனவே. வேளிரின் தனிச் சிறப்பாக உள்ள இந்தப் பரப்பும் அவர்கள் தென்னாட்டிற் பரவிய பெருங்கற்படையினரே என்ற கருத்தை வலியுறுத்தும்.

## (இ) வேளிரும் வேந்தரும்

மூவேந்தர் குலங்கள் வேளிரிடையிருந்து கிளைத்தனவென்று நிறுவுதற்குச் சான்று இல்லை. சங்க காலத்தில் வேந்தர் வேளிர் மகளிரை மணந்தனர் என்பதொன்றே நாம் அறிவது. உதியன் சேரலை மணந்து நெடுஞ்சேரலாதனை ஈன்ற நல்லினி, வெளியர்குல வேண்மாள் என்று பதிற்றுப் பத்தின் இரண்டாம் பதிகம் கூறும். வேளாவிக் கோமான் பதுமனது மகளிரில் ஒருத்தி நெடுஞ்சேரலாதனையும் (பதிகம் 4), மற்றொருத்தி செல்வக் கடுங்கோ வாழியாதனையும் (பதிகம் 8) மணந்தனர். இருவர் மக்களுமே முடியுடை வேந்தராகத் திகழ்ந்தனர். இளஞ்சேரல் இரும்பொறை என்ற சேரவேந்தன், குட்டுவன் இரும்பொறைக்கும் வேண்மாள் அந்துவஞ்செள்ளைக்கும் பிறந்தவன் என்று நவிலும் ஒன்பதாம் பதிகம். செங்குட்டுவனை மணந்தவள் வேண்மாள்** என்பது

---

* கரிகாற் பெருவளத்தான் காடு வெட்டித் திருத்தி நாடாக்கிய தொண்டை மண்டலப் பகுதியில் தாம் வந்து குடியேறியதாக இவர்கள் மரபுரை கூறும்.

** 25:5; 28:51; அவளைச் செங்குட்டுவனின் வேள்விக் கிழத்தி என்றே மாடலன் குறிப்பிடுவான் (28:183). (வேள்விக்கிழத்தி-யாகம் செய்வதில் உடனிருந்து உரிய பங்கை வகிக்கும் மனைவி.) அவள் இளங்கோ வேண்மாள் (25:5) என்று குறிப்பிடப் பெறுவதால், இளங்கோ என்னும் வேளிர் குடிப்பெண் என்றே அவளைக் கருதவேண்டும். ஏறத்தாழ கி. பி. எட்டாம்,

சிலப்பதிகாரக் கதை. கருவூரில் வேண்மாடம் இருந்த தென்று புறநானூற்று (13) அடிக்குறிப்பு ஓதும். அங்கு வேள்ஆவிக்கோ மாளிகை இருந்ததென்பார் இளங்கோ அடிகள்*. சேரரைப் போலவே சோழரும் பாண்டியரும் வேளிர் மகளிரை மணந்தனர் என்பது நச்சினர்க்கினியர் நவிலும் மரபுரையால் விளங்கும். மேல்வார வேளாளரைப் பற்றி அவர் கூறுவார்: ''அவருள் (வேளாளருள்) உழுவித்து உண் போர் மண்டில மாக்களும்** தண்டத் தலைவரு***மாய்ச் சோழ நாட்டுப் பிடவூரும் அழுந்தூரும் நாங்கூரும் நாவூரும் ஆலஞ்சேரியும் பெருஞ்சிக்கலும் வல்லமும் கிழாரும் முதலிய பதியில் தோன்றி வேள் எனவும் அரசு எனவும் உரிமை எய்தி

---

ஒன்பதாம் நூற்றுண்டுகளில் கொடும்பாளூரில் இருந்து ஆட்சி புரிந்த சிற்றரசர், இருங்கோவேள், இருக்கு வேள், இளங்கோவேள் என்ற பெயர்களை உடையவர் என்பது கல்வெட்டுகளால் புலனுகின்றது. இம்மர பினர் பலர் இளங்கோவேளார் என்ற சிறப்புப் பெய ருடன் பிற்காலச் சோழரின் அதிகாரிகளாக விளங் கினர் என்பதும் கல்வெட்டிலிருந்து தெரிவதாகக் கூறுவார் பேராசிரியர் மு. இராகவ ஐயங்கார். கொடும்பாளூர் வேளிரின் முன்னேன் ஒருவனின் மகளைச் செங்குட்டுவன் மணந்தான் போலும். கொடும்பாளூர் வேளிர் இருங்கோவேளிர் என்றும் குறிப்பிடப் பெறுவர் என்பதால், இவர்களுக்கும் சங்க காலத்தில் துவரை ஆண்ட இருங்கோவேளுக்கும் தொடர்பு உண்டா என்ற வினு எழும். துவரை இருங்கோ (இரு- பெரிய) வேளிரின் கிளையே இளங்கோ வேளிராகக் கொடும்பாளூரில் குடியேறின ராகலாம்.

* சிலப்பதிகாரம் 28:198. வேளாவிக்கோ மாளிகை வேள் ஆவிக்கோவின் பெயரால் கட்டப்பட்டது என்பர்.

** நாட்டுப் பகுதிகளின் அதிகாரிகள்.

*** படைத் தலைவர்கள்.

ஞரும், பாண்டியநாட்டுக் காவிதிப் பட்டம் எய்திஞேரும்*, குறுமுடிக்குடிப்பிறந்தோர்** முதலியோருமாய் முடியுடை வேந்தர்க்கு மகட்கொடைக்கு உரிய வேளாளர் ஆகுப..... உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னி அழுந்தூர் வேளிடை மகட்கோடலும் அவன் மகனுகிய கரிகாற் பெருவளத்தான் நாங்கூர் வேளிடை மகட்கோடலும் கூறுவர்'' (தொல். பொருள் 32 உரை). ஆனுல் வேளிர் வேந்தருக்குப் பெண் கொடுக்கும் உரிமை உடையர் என்றுரேயன்றி, வேந்தர் குடியில் பெண் எடுக்கும் உரிமை உடையர் என்றுரில்லே. சங்க காலத்தில் வேந்தன் மகளே வேள் மணந்த செய்தி எதுவும் நூலிலோ மரபுரையிலோ இடம் பெறவில்லே. அத்தகைய செய்தி ஏட்டிலோ வழிவழி வாய்மொழியிலோ நிலேபெறுவதற்கு வாய்ப்பு இல்லாது மறைந்திருக்கலாம். அல்லது. வேந்தர், வேளிரினும் தாம் உயர்ந்தவர் என்று கருதியதால், அவரிடம் பெண் எடுத்தபோதே அவருக்குப் பெண் கொடுப்பதை விலக்கியிருக்கலாம்***. அது எவ்வாறு ஆயினும்,

---

* காவிதிப்பட்டம் கட்டின அமைச்சர், அப்பட்டத்துடன் பொற்பூவும் பெறுவர். அதனேக் காவிதிப்பூ என்பர் (தொல். எழுத். 154, உரை). அரசன் குடி நலமே நாடுவதற்கு ஆவன செய்தும் அன்பும் அறனும் காத்தும் புகழ் அடைந்தனர் என்று காவிதிமாக்களேப் பாராட்டும் மதுரைக் காஞ்சி (496-99).

** சிற்றரசர் குடியினர்.

*** தந்தை குலமே மக்கள் குலம் என்று கருதியதால், தாழ்ந்த குலத்தில் பெண் எடுப்பதற்குத் தடையில்லே என்றும் ஒத்தக் குடியிலோ உயர்ந்த குடியிலோதான் பெண் புகவேண்டும் என்றும் ஒரு கொள்கை எழுந்தது. பிறப்பு, குடிமை முதலியவற்ருர் தலேவனும் தலேவியும் ஒத்திருப்பதே நலமென்ருலும் தலேவன் உயர்ந்திருப்பதால் தடையில்லே என்று தொல்காப்பியரும் (பொருள் 93, 273) கூறுவர்.

மூவேந்தர் குடிகள் மட்டும் ஒரு வருணம் என்று கருதப்பெற்ற சூழலில், பலதாரம் மணந்த வேந்தர்

வேந்தர் குடிகளை வேளிர் கிளைகளாகக் கருதுவதற்குச் சான்று இல்லை. சேரருக்குப் பாரதப் போர் வீரரோடும் இமயத்து வானவரோடும், சோழருக்குச் சிபிகளோடும் சூரிய குலத்தோடும், பாண்டியர்க்குக் கண்ணனோடும் பாண்டவரோடும் குலமுறை உறவுகாணும் குறிப்புக்களைக் கண்டோம். ஆனால் வேளிரை விரும்பிப்பாடும் புலவர் வாக்கிலோ, பழைய வரலாற்று நிகழ்ச்சிகளை உவமை வாயிலாகவோ புதையுரையாகவோ பேசும் பண்பினரான பரணர், மாமூலனூர் முதலியோர் பாட்டிலோ, வேறு செய்யுளிலோ, மரபுரையிலோ, வேளிர் வழியினராக எந்த வேந்தர் குடியும் மறைமுகமாகவும் குறிப்பிடப்பெறவில்லை. தொல்காப்பியரும் வேளிர் தலைவரான குறுநில மன்னரையும் விலக்கி மூவேந்தரையே இரண்டாம் வருணமாகக் குறிப்பிடுகிறார். ''சேர சோழ பாண்டியராகிய மூவரசர் மட்டும் ஒரு வகுப்பாக அமையப் போதியவரென்று அவர் கருதினர் போலும்''' என்று அறிஞர் கனகசபை கேலிசெய்வது பொருளுடைத்துப்போலத் தோன்றும்: ஆனால் அந்நாளைய சமுதாயக் கட்டுக்கோப்பின் அடிப்படையில் எழுந்த இலக்கிய நெறிகளைத் தொல்காப்பியர் வகைந்து கூறுகிறாரேயன்றி, அவராகச் சமுதாயத்துக்கு விதி ஏதும் வகுத்தாரல்லர். எனவே, குறுநில மன்னராக விளங்கிய வேளிர் தலைவர்களையும் வேளாளர் வருணத்தின் மேல்வாரக் குடிகளோடு சேர்த்து தொல்காப்பியர் கூறுவதிலிருந்தும், வேளிருக்கும் வேந்தர்க்கும் குலமுறைத் தொடர்பு இல்லையென்று கருதலாகும்.

---

குறுநில மன்னரான வேளிர் மகளிரை மணப்பது இன்றியமையா ஏற்பாடென்றே கூறலாம். அதே போதில், மனைவியரில் வேண்மாளுக்கும் வேந்தன் மகளுக்கும் இடையே வேற்றுமை பாராட்டினரல்லர். நெடுஞ்சேரலாதனின் வேண்மாள் மனைவி ஈன்ற மகனும், சோழர் குல மனைவி ஈன்ற மகனைப் போலவே, அரியணை ஏறி அரசு புரிந்தான்.

யாகம் செய்தலும் அரசர் இயல்பு என்ற தொல்காப்பிய நெறிக்கு ஏற்ப, மூவேந்தரும் யாகம் செய்தனரென்பதைக் கண்டோம். ஆனால் வேளிர் தலைவர் வேள்வி செய்த செய்தி ஒன்றும் சங்க நூல்களில் காண்கிலம். வேளிர் மரபினரான மாங்குடி கிழார் என்ற மாங்குடி மருதனாரும், அரிசில் கிழாரும், ஆவூர் மூலங்கிழாரும் வேள்வியை விதந்தோதினராயினும், எந்த வேளும் யாகம் செய்தாரல்லர். பார்ப்பனரான கபிலரும் முடமோசியாரும் முறையே பாரிக்கும் ஆய் அண்டிரனுக்கும் உயிர்த் தோழராக விளங்கினர்; ஆனால் பாரியும் ஆயும்கூட யாகம் செய்தாரல்லர்; செய்திருந்தால், அந்த அந்தணர் அவர்களைப் பாடிய பல பாடல்களில், அச் செய்தி சிறப்பிடம் பெற்றிருக்கும்; ஆனால் போகிற போக்கில்கூடக் குறிப்பிடப் பெறவில்லை. எனவே வேள்வி செய்யும் உரிமை வேளிருக்கு இல்லை என்று துணியலாம். இதுவும் அவர்களை வேந்தரிடமிருந்து வேறுபடுத்திக் காட்டும். ஆகவே, கி.மு, 700 அளவில் தென்னகம் வந்த வேளிர் மரபினராக வேந்தரைக் கொள்வதற்கு இடமில்லை. இரும்புயுகப் பெருங்கற்படையினரான வேளிர் வேறு: சிந்துவெளி நாகரிகச் சிற்பிகளின் வழித்தோன்றல்களாக இவண் வந்து ஆற்றோர நாகரிகம் கண்டு மூவேந்தர் ஆட்சி விளங்கச் செய்த திராவிடர் வேறு.

சங்க காலத்துக்குமுன் வேளிர்-வேந்தர் உறவு எவ்வாறு அமைந்திருந்தது? சங்க காலத்தில், வெண்ணியில் கரிகாலனையும்*, தலையாலங்கானத்தில் நெடுஞ்செழியனையும்**, பிற வேந்தருடன் கூட்டுச் சேர்ந்து வேளிர் எதிர்த்ததுபோல், சங்க காலத்துக்கு முன்பும் நடந்திருக்கலாம். ஏழு முடிகளை மாலையாக அணிந்தவன் என்று நெடுஞ்சேரலாதனும்*** செங்குட்டுவனும்*௪ பாராட்டப் பெறுவதால், முன்னாளில்

---

* அகநா. 246.

** அகநா. 36.

*** பதிற்று 14,

*௪ பதிற்று 45.

வேளிர் முடியுடை வேந்தராக இருந்தனர் என்றும், சேரன் ஒருவன் அவர்களை வென்று ஏழு முடிகளையும் மாலையாகத் தரித்ததால், அம்மாலை சேரர்க்கு உரியதாயிற்று என்றும் டாக்டர் துரை அரங்கனர் ஊகிப்பார்*. அது எவ்வாறு ஆயினும், வாய்ப்புத் தோன்றிய போதெல்லாம் வேளிர் எந்த வேந்தனையாகிலும் எதிர்த்தனர் என்பது சங்க இலக்கியத் தால் விளங்குவதால், அதற்கு முன்பும் அவர்கள் வேந்த ரோடு இகலினர் என்று கொள்வது சரியே ஆனல் வேந்தரே வாகை மாலை சூடினர்.

எனினும், இரும்பால் கருவியும் படைக்கலமும் செய்வோ ராக வந்த வேளிரின் பொருளியல் உயர்வைக் குறைத்து மதிப் பிடக்கூடாது. வேளாண்மைத் துறையில் அவர்கள் ஆற்றிய தொண்டு பெரிது. கரிகாலன் துளுவேளாளரைத் தொண்டை மண்டலத்தில் குடியேற்றியதைப்போல், அதற்கு முன்பும் மூவேந்தர் வேளிர் மரபினரைக் குடியேற்றியதே, சங்க காலத்தில் பல ஊர்களில் கிழார் முதலியோர் வாழ்ந்ததற் குக் காரணமாகும். வேளிர் வேற்று மொழியினராயின், வேதியரைப் போலவே, அவர்கள் திராவிட மொழியைத் தழுவினர் என்று கொள்வது ஏற்புடைத்தாகும்.

## (2) வேளாளர் நிலை.

பொருளுற்பத்தித் துறையின் வளர்ச்சியில் வேளிர் ஆற் றிய தொண்டு பெரிதே ஆயினும், வணிகர் தொல்காலத்தி லிருந்தே மேன்மை எய்தினர் என்பதால், வேதியர் வேந்த ரோடு வணிகர்க்கும் பின்னேராகவே வேளாளரைக் குறிப் பிடுவது வழக்காயிற்று. ஆனல் வடபுலம் கண்ட சூத்திரர் வேறு; தென்னகம் கண்ட வேளாளர் வேறு. வடபுலத்திலும் நீதிநூல் கூறியது யாதாயினும், உலக இயல் வாழ்வில் பெருமை எய்திய சூத்திரர் இருந்தனர் என்பதைக் கண் டோம். மேலும், ஏனைய மூன்று வருணங்கட்கும் பணிவிடை

* சங்ககாலச் சிறப்புப் பெயர்கள்.

புரிவதே சூத்திரரின் தலைமையான கடமை என்று மனு முதலானோர் மொழிந்தனராயினும், அத்துடன் உழவும் கால் நடைவளர்ப்பும் வாணிகமும் கம்மியமும் ஆடல் பாடலும் கூட அவர்தம் தொழில்களாம் என்று சாணக்கியர் கூறுவதே* நாட்டு நடைமுறைக்கு ஒத்திருந்தது எனலாம். பார்க்கப் போனால், தரிசு நிலங்களில் சூத்திரரைக் குடியேற்றிப் பயிர் செலவுக்கு ஊக்கம் தருவதை அரசனின் முதற்பெரும் பணியாகச் சாணக்கியர் விதிப்பதைக் கருதும்போது**, சூத்திரரின் சிறப்பான தொழில் உழவே என்று கருதலாகும். ஆயினும், நாலாம் வருணம் என்பதையும் உழவைத் தலைமைத் தொழிலாகக் கொண்டவர் என்பதையும் தவிர, சாணக்கியரின் சூத்திரர்க்கும் தென்னுட்டு வேளாளருக்கும் ஓர் ஒற்றுமையுமில்லை. வேளாளருக்கு ஆறுவகையான தொழில்கள் உளவென்று தொல்காப்பியர் கூறுவது (பொருள் 75) உண்மையே. ஆனுல் அவை எவை என்பதில் தமிழ் வழக்குச் சாணக்கியத்திலிருந்து பெரிதும் வேறுபடும். அவை வேதம் ஒழிந்தன ஓதல், ஈதல், உழவு, நிரையோம்பல், வாணிகம், வழிபாடு என்னும் ஆறு என்பர் நச்சினுர்க்கினியர். ஈதலுக்குப் பதிலாக விருந்தோம்பலையும் வாணிகத்துக்குப் பதிலாக உழவொழிந்த தொழிலையும் குறிப்பிடுவர் பேராசிரியர். அரசரால் சிறப்பெய்திய (மேல்வார) வேளாளர்க்கு வேட்டலும் ஏனையோர்க்கே வழிபாடும் உரித்தென்பார் உளர் என்றும் நச்சினுர்க்கினியர் கூறுவர். ஏனைய வருணங்கட்குத் தொண்டு புரிதல் என்பதை வேளாளர் தொழிலாக எவரும் கூறவில்லை என்பது கருதத்தக்கது. மேலும், ஈதல், கல்வி, வழிபாடு என்ற வேளாளர் அறங்களை வடபுலச் சூத்திரருக்கு உரித்தென்று சாணக்கியரோ பிறரோ செப்பினுரல்லர். எனவே, வடபுலச் சூத்திரர் பற்றிய நூல் வழக்கும் தென்னக வேளாளர் பற்றிய நூல் வழக்கும் அடிப்படையான வேற்றுமைகளை உடையவை என்பது தெளிவு. வேளாண்மை என்ற சொல் பயிர் செய்தலையும் பிறர்க்கு அன்போடு உதவி செய்யும் பண்பையும் குறிப்ப

* அதிகாரம் 1, அத்தியாயம் 3.
** அதிகாரம் 2, அத்தியாயம் 22.

திலிருந்தே வேளாளர் எய்திய பெருமையை உணரலாம். சங்ககால வேளிரின் கொடைச் சிறப்பு இப்பெருமையைத் தேடித்தந்தது என்று கருதுவதும் சரியே.

வேளாளரின் தலைமையான தொழில் உழவே. "உழுவார் உலகத்தார்க்கு ஆணி" (1032) என்பது குறள்.

வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது
இல்என மொழிப பிறவகை நிகழ்ச்சி* (பொருள் 635)

என்றார் தொல்காப்பியரும். 'குடிபுறந்தருநர் பாரம் ஓம்பி**, நலம் புரிந்தான் நெடுஞ்சேரலதான் என்று குறிப்பிடப் பெறுவதால், வாரத்திற்குப் பயிர் செய்த உழவரும் அவர்களுக்கு அதற்கு நிலம் கொடுத்த பெருநிலக்கிழார்களும் இருந்தனர் என்று பெறப்படும். எனவே, வேளாளரில் உழுதுண்ணும் கீழ் வாரத்தாரும் உழுவித்துண்ணும் மேல்வாரத்தாரும் இருந்தனர் என்பர் நச்சினார்க்கினியர். கிழார், காவிதி முதலிய பட்டங்களைப் பெற்றுப் பொறுப்புவகித்தவேளாளர் உழுவித்துண் போரே என்று அவர் கூறுவதை முன்பே கண்டோம். மேலும், புகார், மதுரை, வஞ்சி முதலிய நகரங்களில் அரசவீதிக்கு ஒப்பான வீதிகளில் வாழ்ந்த வேளாளர், மேல்வாரம் பெற்ற பெருநிலக்கிழார்களே என்பது உறுதி. அவர்களில் படைத் தலைவரானோர் வேந்தரிடம் படையும் கண்ணியும் பெறுவர் என்பர் தொல்காப்பியர் :

வேந்துவிடு தொழிலின் படையும் கண்ணியும்
வாய்ந்தனர் என்ப அவர்பெறும் பொருளே***
(பொருள் 636)

---

* உழுதூண் அல்லது-உழுது உண்ணும் வாழ்க்கையன்றி. பிறவகை நிகழ்ச்சி-வேறுவகையான காரியம். இல்என மொழிப-இல்லையென்று கூறுவர்.

** பதிற்று 13. குடி-(செல்வவளமில்லாத) குடிகளை. புறந்தருநர்-காத்துவரும் பெருநிலக்கிழவரின், பாரம்-துன்பம், ஓம்பி-போக்கி.

*** வேந்துவிடு தொழிலில்-வேந்தரால் ஏவப்பட்ட தொழிலால்: வேந்தரால் தண்டத்தலைவராக நியமிக் கப்பெறுவோர். படை-படைக்கலம். கண்ணி-சூடும் பூ. அவர்-முன்சூத்திரத்தில் கூறப்பெற்ற வேளாளர்.

## 12. வணிகர்

லோதல் துறைமுகம் மூலம் மேற்கு ஆசியாவுடன் வாணிகம் செய்த திராவிடர், தென்னகம் வந்த பின்பும், அத்தொடர்பைப் பேணினர் என்று ஊகிக்க இடமுண்டு. அகில், மயில், தந்தம் முதலிய பொருட்கள் இஸ்ரேல் வேந்தனான சாலமனுக்கு மரக்கலங்களில் வந்தன என்று விவிலிய நூல் பேசும். அந்நகரத்தின் சந்திரக் கடவுள் கோயிலில் கி. மு. 6ஆம் நூற்றாண்டுக்கு உரிய படிகளில் தேக்குமரத் தாலங்கள் உள்ளதைப் புதைபொருள் ஆய்வாளர் புலப்படுத்தியுள்ளனர். இந்த வாணிகத் தொடர்பு சங்க காலத்தில் பல்கிப் பெருகியது.

மத்தியதரைக்கடல் நாடுகளைத் தழுவிய ரோமானியர் பேரரசு, சங்ககாலத் தொடக்கத்தில் அகஸ்டஸ் சீசர் ஆட்சியில் பொற்காலத்தைக் கண்டது. அந்நாளில் எகிப்தில் வாழ்ந்த கிரேக்கர்களின் உதவியோடு ரோமானிய அரசு தமிழக வணிகத்தை விரும்பிப் பேணியது. மூன்றாம் நூற்றாண்டுத் தொடக்கம் வரையில் இந்த வாணிகம் நடைபெற்றதைத் தமிழகத்தில் கண்டெடுக்கப்பட்டுள்ள ரோமானிய நாணயக் குவியல்களிலிருந்து அறிகிறோம்.

கி. மு. 20-ல் பாண்டியன் அனுப்பிய தூதர்கள் அகஸ்ட்டஸ் சீசரை ஆதன்ஸ் நகரத்தில் சந்தித்தனரென்று ஸ்ட்ராபோ கூறுவார். அத்தூதர்களில் ஒருவரான சிராமணாசாரியர் உலக வாழ்வை வெறுத்து, ஆதன்ஸ் நகரில் தீப்பாய்ந்து உயிர் நீத்தாராம்.

கடலோடிகளுக்கு வழிகாட்டியாகக் கி. பி. 60-ல் எழுந்த 'பெரிப்ளூஸ்' என்ற நூலும் அடுத்த நூற்றாண்டில் டாலமி என்பார் எழுதிய பூகோள நூலும் எகிப்திய கிரேக்கர் தமிழகத்தோடு நடத்திய வாணிகத்தின் சிறப்பையும், சேரநாட்டு முசிறி, பாண்டிய நாட்டுக் கொற்கை, சோழநாட்டுப் புகார் முதலிய துறைமுகங்களின் பெருமையையும் எடுத்துரைக்கின்

றன. அச்செய்திகளைச் சங்க நூல்கள் உறுதிப்படுத்துகின்றன. கலங்கரை விளக்கம் அமைத்தும், கப்பலில் வந்த பண்டங்களை இறக்குவதற்குத் துறைகள் நிறுவியும், அவற்றுக்குச் சுங்கம் வாங்கி இலச்சினை பொறித்துப் பண்டகசாலைகளுக்கு அனுப்ப ஏற்பாடு செய்தும், பிறநாட்டு வணிகர் குடியேறுவதற்கு வசதி செய்தும் தமிழ் வேந்தர் கடல் வாணிகத்துக்கு ஆக்கம் தேடினர்.

மொழிபல பெருகிய பழிதீர் தேஎத்துப்
புலம்பெயர் மாக்கள் கலந்துஇனிது உறையும்
முட்டாச் சிறப்பின் பட்டினம்* (பட்டினப்பாலை 216-218)

என்று பூம்புகாரைப் போற்றுவர் உருத்திரங்கண்ணனார்.

வேந்தருக்கு மெய்காவலராகப் பணியாற்றிய யவனரும் இருந்தனர்.

மிளகு, ஏலக்காய், இலவங்கம் முதலிய வாசனைத் திரவியங்கள், முத்துக்கள், பருத்தி நூலாடை முதலியவற்றைத் தமிழ் வணிகர் யவனருக்கு விற்றனர். யவனரின் மதுவையும் விளக்குகளையும் தமிழர் விரும்பி வாங்கினர். யவனர்-இந்தியர் வாணிகத்தில், யவனர் விற்ற பொருள் குறைவு; வாங்கிய பொருள் அதிகம். எனவே ரோமானியர் ஆண்டுதோறும் இந்தியாவுக்கு ஏராளமாகத் தங்கமும் பொற்காசுகளும் அனுப்பினர். சங்ககாலத் தமிழகத்தில் ரோமானியக் காசுக்கள் நடப்பு நாணயமாகப் புழங்கின என்று தெரிகிறது.

கீழ் நாடுகளோடு நடைபெற்ற வாணிகத்துக்கு இத்தகைய விளக்கமான விவரங்கள் கிடைக்கவில்லை. சீனம் கடல் வழியே வாணிக உறவு கொண்ட நாடுகளில் ஒன்றாக ஹுவாங்சி என்பதைக் குறிப்பிடும் ஒரு சீன நூல் (கி. பி. முதல் நூற்றாண்டு). அது காஞ்சியே என்பது சில வரலாற்று

---

* பழிதீர் தேஎத்து—குற்றமற்ற பிரதேசங்களைச் சேர்ந்த பலமொழிபெருகிய-பல்வகை மொழிகள் நிறைந்த; புலம்பெயர் மாக்கள்-தத்தம் நிலத்தை விட்டு வந்த மக்கள். முட்டாச் சிறப்பின் பட்டினம்-முட்டுப்படாத (இடையூறுக்குள்ளாகாத) சிறப்பெல்லாம் உடைய பட்டினம்.

அறிஞர் முடிவு. கி.மு. இரண்டாம் நூற்றாண்டிலிருந்தே அந்த நாட்டுடன் சீனர் வாணிகம் செய்தனர் என்று அந்நூலிலிருந்து அறிகிறோம். இதை உறுதிப்படுத்தும் வகையில் கி. மு. 138-ஆம் ஆண்டுச் சீனக் காசு ஒன்று மைசூரில் (சந்திரவல்லியில்) கிடைத்திருக்கிறது.

தென்னிந்தியத் துறைமுகங்களும் ஈழத்துத் துறைமுகங்களும் பெருங்கப்பல்களைக் கொண்டு கீழ்நாடுகளுடன் சிறப்பான வாணிகம் நடத்தின என்று பெரிப்ளூஸ் கூறுவதும், கிறிஸ்து பிறப்புக்கு முன்பும் பின்பும் இந்தோ-சீனத்தில் தென்னிந்தியர் திரள்திரளாகக் குடியேறினர் என்பதும், சங்க காலத்தில் கீழ்நாடுகளுடன் விளங்கிய உறவுகளை உணர்த்தும் செய்திகள். இந்தோசீனத்தில் உள்ள கம்போடியாவில் கி. பி. முதல் நூற்றாண்டில் முதல் இந்து அரசைக் கண்டவன் கௌண்டின்னியன்* ஆவான். அவன் அங்கு நாகர் குலத்தலைவியை மணந்து அரியணை ஏறி, குடிகளை நாகரிக நிலையினராக உயர்த்தினான். இந்தோசீனத்திலேயே சம்பாவில் (அன்னாம்) முதல் இந்து அரசை அமைத்தவன் (கி. பி. 2 அல்லது 3-ஆம் நூற்றாண்டு) ஸ்ரீமாறன் என்பது அங்குள்ள வடமொழிக் கல்வெட்டால் அறியப்படும். வான்மீகி பகவானின் இராமாயணம் பயிலப்பெற்றதை புலப்படுத்தும் அதுவே, அங்குள்ள தொன்மையான வடமொழிக் கல்வெட்டு என்பர். அதில் குறிப்பிடப்பெறும் ஸ்ரீமாறன் பாண்டிய குலத்தோனே என்பது பெயரிலிருந்தே விளங்கும். கி.பி. மூன்றும், நான்காம், ஐந்தாம் நூற்றாண்டுகளின் சீன வரலாற்றுக் குறிப்புகள், சீன அரசவைக்கு இந்தோ-சீனத்தின் இந்து அரசர் அனுப்பிய பரிசுப் பொருள்களாக வைடூரியம், சந்தனம், முத்துக்கள் ஆகிய தென்னிந்தியப் பொருட்களைக் குறிப்பிடுவதால்,

* கௌண்டின்வியன் என்பது கோத்திரப் பெயர். கவுணியன் என்பது தமிழ் வழக்கு. புறநானூற்றில் பேசப்பெறும் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கவுணியனே. திருஞானசம்பந்தரைக் கவுணியர்கோன் என்பர் சேக்கிழார்.

இந்தோ-சீன-தென்னிந்திய வாணிகம் தொடர்ந்து செழித்ததை ஊகித்தறியலாம்.

வெளி நாடுகளோடும் நாட்டின் வடபுலத்தோடும் சங்க காலத்தில் நடைபெற்ற வாணிகத்தைப் பட்டினப்பாலை தரும் சித்திரத்திலிருந்து உணரலாம்.

செல்லா*நல்லிசை அமரர் காப்பின்,
நீரின் வந்த நிமிர் பரிப் புரவியும்,
காலின் வந்த கருங்கறி மூடையும்,
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்,
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்,
தென்கடல் முத்தும், குணகடல் துகிரும்,
கங்கை வாரியும், காவிரிப் பயனும்,
ஈழத்து உணவும், காழகத்து ஆக்கமும்,
அரியவும் பெரியவும்நெரிய ஈண்டி
வளம்தலை மயங்கிய நனந்தவு மறுகு. (184-193)

இவ்வாறு வாணிகம் செய்தோர் அரசும் விரும்பும் செல்வம் பெற்றுச் சிறந்தனர்**. இப்பெருங்குடி வணிகரைப்போல் பன்மடங்கு எண்ணிக்கையில் எளியநிலை வணிகர் இருந்

---

* செல்லா நல்இசை-கெடாத நற்புகழ் (உடைய), அமரர் காப்பின்-தேவர்களின் அருட்காவலினல், நீரின் காலின் வந்த-கடலில் காற்ருல் வந்த, பரி-நடை. புரவி-குதிரை. கருங்கறி-கரிய மிளகு. வடமலை-மகாமேரு. பொன்: இங்கு சாம்பூதம் என்னும் பொன் என்பர். அது மேருமலை நாவல் மரக்கனிச் சாற்றிலிருந்து உண்டானது என்பது நம்பிக்கை. குடமலை-பொதியமலை,ஆரம்-சந்தனம், தென்கடல்-கொற்கைத் துறை, குணகடல்-கீழ்த்திசைக் கடல். துகிர்-பவளம், வாரி-விளைவு. காழகம்-கடாரம் (பர்மா), ஆக்கம்-நுகர் பொருள், நெரிய-(நிலத்தின் முதுகு) நெளியும் படி. ஈண்டி-திரண்டு, வளம் தலைமயங்கிய-செல்வம் தலை தெரியாத, நனந்தலை-அகன்ற இடமுடைய, மறுகு-தெரு.

** சிலப்பதிகாரம் 2: 1-2.

திருப்பர். அவர்களில் ஒருசாரார் உமணர்* ஆவர். காஞ்சி புரம் செல்வதற்கான காட்டு வழியில் உப்பு வண்டிகளை உமணப் பெண்கள் ஓட்டிச் சென்றனரென்றும், அந்த வண்டி களில் கட்டப்பட்ட எருதுகள் திருகாமலும், அச்சு முறியாம லும் பக்கத்தில் காத்துச் சென்ற உமணர், இளைத்தால் பூட்டு தற்குப் பல எருதுகளை இட்டுச் சென்றனரென்றும் பெரும் பாணாற்றுப்படை (58-65) கூறும். அவர்களைவிட அதிக வசதி உடைய வணிகர்கள், மிளகுப் பொதிகள் சுமந்து செல்லும் கழுதைகளுடன் சென்றனரென்றும், முத்து, மாணிக்கம், சந்தனம் முதலியவற்றை எங்கும் கொண்டு சென்று விற்கும் புதியோர், அந்தக் கழுதைச் சாத்துடன்** சென்றனரென் றும் அந்நூல் கூறும் (66-86). மதுரையில் பல வகையான பொருள் விற்பாரைப்பற்றி மாங்குடி மருதனார் பேசுவார்***.

வணிகர்க்கு அறு வகைத் தொழில்கள் உரியன என்பது தொல்காப்பியம் (பொருள் 75). ஓதல், வேட்டல், ஈதல் உழவு, நிரைகாத்தல், வாணிகம் என்னும் ஆறே அவை என்பர் உரையாசிரியர்*௪. அரசர் போலவே வணிகரும்

---

* உமணர்-உப்பு வணிகர்.

** கழுதைச்சாத்து-பொதி சுமக்கும் கழுதைகளோடு சென்ற வணிகர் குழு, சாத்து-வணிகர் குழு.

*** ஆனால் சங்க காலத்தில் பண்டமாற்று பெருகியிருந் தது. உப்பைக் கொடுத்து நெல் பெறுவோரைப் பற்றிச் சங்க நூல்கள் குறிப்பிடும் (குறுந்தொகை 269; அகநானூறு 60, 140, 390: ஐங்குறுநூறு 48. பட்டினப், 29-30). வேட்டுவன் மான்தசையும் ஆய்மகள் தயிரும் கொடுத்து மாற்றாக வெண்ணெல் பெறுவர் என்பர் கோவூர் கிழார் (புறநானூறு 33). தேனும் கிழங்கும் கொடுத்து மீனும் கள்ளும் பெறு வோரும், கரும்பும் அவலும் கொடுத்து மான்தசையும் கள்ளும் பெறுவோரும் குறிப்பிடப் பெறுவர் (பொருநர், 214-17).

*௪ வடநூற் கருத்தும் இதுவே: அர்த்தசாத்திரம் அதி. 1. அத். 3.

வில்லும் வேலும் வாளும் போன்ற படைக்கலம் பெறும் உரிமை உடையவர் (பொருள் 631*). எண்வகை உணவு விளைத்தலும் அவர் கடனுயினும் [633], வாணிகமே அவருக்குத் தலைமையான தொழில் [633]. தலையில் சூடும் பூவும் குடிமரபுச் சின்னமாக அமையும் தாரும்** அவருக்கு உரியன [634].

அறுவகை அறங்களும் பயின்ற வணிகரின் வாழ்வை அருமையாகச் சித்திரிக்கும் பட்டினப்பாலை :

அமரர்ப் பேணியும், ஆவுதி அருத்தியும்,
நல்ஆனெடு பகடுஓம்பியும்,
நான்மறையோர் புகழ்பரப்பியும்,
பண்ணியம் அட்டியும், பசும்பதம் கொடுத்தும்,
புண்ணியம் முட்டாத் தண்ணிழல் வாழ்க்கை,
கொடுமேழி நசைஉழவர்
நெடுநுகத்துப் பகல்போல,
நடுவுநின்ற நன்னெஞ்சினேர்,
வடுஅஞ்சி வாய்மொழிந்து,
தமவும் பிறவும் ஒப்ப நாடிக்
கொள்வதூஉம் மிகைகொளாது கொடுப்பதூஉம்
குறைகொடாது,
பல்பண்டம் பகர்ந்து வீசும்
தொல்கொண்டித் துவன்று இருக்கை?*** (200-212)

வேள்வி செய்தும் வேதியரைப் போற்றியும் ஆநிரைகாத்தும்

---

* அந்தணர் வேளாளர் என்போரில் படைக்கலம் பெறுவோர் உளர் எனினும், அது அவர்கட்கு இயல்பன்று என்பர் பேராசிரியர்.

** ஒரு குடிக்கென்றே வரையறுக்கப்படும் மாலை.

*** ஆன்-பசு, பகடு-எருது, பண்ணியம்-சோறு, அட்டி-இட்டு, பசும்பதம்-உணவுக்குரிய பண்டம். முட்டா-குறையாத, தண்நிழல்-குளிர்ந்த அருள், கொடு-வளைந்த, மேழி-கலப்பை, நசை-(உழவின்பால்) விருப்பம் (உடைய). நுகம்-நுகத்தடி, பகல்-நுகத்தின் நடுவே தைத்த ஆணி. வடு-பழி, தொல்-பழைய, கொண்டி-மிகுதி, துவன்று-நெருங்கிய, இருக்கை-குடியிருப்பு. இவர்கள் வேதவணிகர் என்பார் நச்சினர்க்கினியர்.

அன்னதானம் செய்தும் அருள் வாழ்வு கண்ட வணிகர், கொள்வது மிகையும் கொடுப்பது குறையும் ஆகாமல் ஒப்ப நாடி வாணிகம் செய்தனரென்றும், அதனாலேயே அவர்களிடம் பொருட்செல்வம் பெருகியது என்றும் உருத்திரங்கண்ணனார் கூறுகிறார். வள்ளுவரும் பிறர் பொருளைப் போல் தம் பொருளைப் பேணும் வணிகர்க்கு நல்ல வாணிகம் உண்டு என்பார்; நடுவு நிலைமை அதிகாரத்திலேயே இந்த அறத்தைப் போற்றுவார்:

வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தமபோல் செயின்.* (120)

அரசர்க்கு அடுத்த படிநிலையினராக வணிகர் விளங்கியதால், அவரை 'மன்னர் பின்னோர்' (14:21) என்றும் 'அரைசர் பின்னோர்' (15:109) என்றும் சிலப்பதிகாரம் குறிப்பிடும்.

அறநெறியில் பெரும் பொருள் ஈட்டிய வணிகர்க்கு எட்டி என்னும் பட்டப்பெயரை அதற்குரிய பொற்பூவோடு வழங்குவர் வேந்தர். எட்டிப்பட்டம் பெற்றவராகச் சாயலனைச் சிலப்பதிகாரமும் (15:163), குமரனையும் (4:58) தருமதத்தனையும் (22:113) மணிமேகலையும் குறிப்பிடும். வணிகர் மரபினர் செட்டி என்ற பெயரைக் கொண்டனர். சிலப்பதிகாரம் அரட்டன் செட்டியையும் (30:49,129). மணிமேகலை சாதுவன் செட்டியையும் (16:107) குறிப்பிடும்; மேலும், மணிபல்லவத்தில் ஆபுத்திரன் இறந்துகிடந்ததைக் கண்டு உண்ணாநோன்பிருந்து உயிர்நீத்த வணிகரை 'ஒன்பது செட்டிகள்' (25:165) என்று குறிப்பிடும் மணிமேகலை. நெடுமுடிக்கிள்ளியைக் கூடிக் கருவுற்றுப் பிரிந்த பீலிவளை தான் ஈன்ற மகனை மணிபல்லவத்துக்கு வந்த கம்பளச் செட்டியிடம் ஒப்புவித்துச் சோழனிடம் சேர்க்கச்சொன்னாள் என்றும் கூறும் மணிமேகலை (25:178—186).

---

* வாணிகம் செய்வார்க்கு வாணிகம்-வணிகருக்கு நல்ல வாணிகம். பிறவும் தமபோல் பேணிச் செயின்-பிறர் பொருளையும் தம்பொருள்போல் பேணிச்செய்யின்.

## 13. தமிழகத்தில் சாதிமுறை

வடபுலத்தைப் போலவே தென்புலத்திலும் நால் வருணக் கொள்கை சமுதாய வாழ்வின் அடிப்படையாக அமையவில்லை. வேதம் ஓதி வேள்வி செய்தல் பார்ப்பனர் அறமாக, வேளாப் பார்ப்பாரும் சங்ககாலத்தில் இருந்தனர் என்றோம். அனைத்து வணிகருமே ஓதல், வேட்டல் முதலிய தொழில்களைப் பயின்றனர் என்று கருதுவதற்கில்லை. அதனாலேயே பட்டினப்பாலையில் வருணிக்கப்பெறும் புகார் வணிகரை வேதவணிகர் என்று சிறப்பித்தார் நச்சினார்க் கினியர். உமணர் முதலிய பல வணிகர் குடிகள் அந்த வகை யினராகார் என்று ஊகிக்கலாம். மறுபுறத்தில், வேளாண்மை செய்தோரில், வேளிர் மரபினரே வேளாளர் ஆயினர்; ஏனைய உழவரை வேளாளர் என்றாரில்லை. மேலும், மழவர், மறவர், கள்ளர், ஆயர், வேடர், மீனவர், பல்வகைக்கம்மியர், ஏவலர், வினைவலர் முதலிய பல குடிகள் எந்த வருணத்திலும் இடம் பெறவில்லை. உறவு முறையைத் தீர்மானிப்பது திருமணமே என்பதைக் கருதும்போது, ஒரு வருணமாகக் கருதப் பெற்றோரில் உள்மணநெறியில் நின்ற பல பிரிவுகள் இருந்தன என்பது விளங்கும். எனவே, வருணமல்ல, சாதியே சமுதாய வாழ்வைத் தீர்மானித்தது என்பது வடபுலத்தைப் போலவே தமிழகத்துக்கும் பொருந்தும். சாதியையே பிறப்பு என்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார் என்பதும் ஏற்புடைத்தே.

மறவர், கள்ளர், துடியர், பாணர், பறையர், வேட்டுவர் முதலிய குடிகள் சாதிகளாக நிலைகொண்டதோடு, வேறு தொழில்வழிச் சாதிகள் பலவும் அமைந்தன என்பதைச் சங்க நூல்களால் அறியலாம். குயவன், கொல்லன், தச்சன், கூத்தன் முதலிய சாதிப்பெயர்கள் புறநானூற்றில் வருவன. உமண ரோடு கூலவணிகர், பொன்வணிகர் முதலிய பலவகை வணிகர் களைச் சங்க இலக்கியம் குறிப்பிடும். பூம்புகாரில், பல்வேறு தொழில்களைப் புரிந்த வெவ்வேறு சாதியினர் தனித்தனித் தெருக்களில் வாழ்ந்தனர் என்பது சிலப்பதிகாரம் தரும் காட்சி (5:7-52). யவனர், ஆடை நெய்வோர், பொன்னும் அணி

மணிகளும் விற்போர், கூலவணிகர், உமணர், மீனும் கள்ளும் விற்போர், எண்ணெய் வணிகர், வெண்கலக்கன்னர், செப்புப் பாத்திரம் செய்வார், குயவர், தச்சர், பொற்கொல்லர், இரத்தினப் பணித்தட்டார், சித்திரகாரிகள், தையற்காரர், செம்மார், பெரும்பாணர், குற்றேவல் புரிவார் ஆகியோரின் குடியிருப்புக்கள் தனித்தனியே புகாரின் மருவூர்ப்பாக்கத்தில் அமைந்திருந்தன என்பர் இளங்கோ அடிகள். அரசர் வீதி; வணிகர் வீதி; மறையோர் இருக்கை; வீழ்குடி உழவர்*, மருத்துவர், சோதிடர், ஆகியோரின் "பால்வகைதெரிந்த பன்முறை இருக்கை"; முத்துக்கோப்பாரும் சங்கு அறுத்து வளை செய்வாரும் வாழும் அகன்ற வீதி; சூதர், மாகதர், வேதாளிகர், நாழிகைக் கணக்கர்,** சாந்திக் கூத்தர், காவற்கணிகையர், ஆடற்கூத்தியர், பூவிலை மடந்தையர், ஏவற்பெண்கள், இசைக்கருவி வாசிப்போர், விதூடகர் ஆகியோரின் அவரவர்

---

* வீழ்குடி உழவர்: யாவரும் விரும்பும் குடி அல்லது உழவை விரும்பும் குடி என்பர். பட்டினப்பாக்கத்தில் வாழ்ந்தவர் மேல்வார வேளாளராகவே இருந்திருப்பர். எனவே 'வேளாண் சாமந்தர் என்பாரும் உளர்' என்று அடியார்க்கு நல்லார் கூறுவது கருதத்தக்கது. (சாமந்தர்-சிற்றரசர்)

** சூதர் வாழ்த்த, மாகதர் நுவல
வேதா ளிகரொடு நாழிகை இசைப்ப (670-71)

என்று மதுரைக்காஞ்சி கூறும். "சூதர் ஏத்திய துயிலெடை நிலையும்" என்பது தொல்காப்பியம். ('சூதர்—அரசர் முன் நின்று அவர் புகழ் பாடுவார். மாகதர்:- அரசர்முன் அமர்ந்து அவரைப் போற்றிப் பாடுவார். வேதாளிகர்-வைதாளிகர்; பலவகைத்தாளத்தில் ஆடுவார். நாழிகை-நாழிகைக் கணக்கர்-அரசர்க்கு நாழிகையைப் பாடல் வாயிலாகக் கூறுவோர். துயிலெடை-துயிலெழுப்புகை, இவ்வகை சூதரும் மாகதரும் மகாபாரதத்திலும் வடமொழிக் காவியங்களிலும் குறிப்பிடப்பெறுவர். இதிகாச புராணங்களைக் காப்பதிலும் எடுத்துரைப்பதிலும் சூதர் ஆற்றிய பங்கு பெரிது.

இனத்தின் வகை தெரிந்த இருப்பிடங்கள்; நாற்படைத் தலைவர்களின் பரந்த இருப்புக்கள்;—இவையெல்லாம் பட்டினப் பாக்கத்தில் இருந்தன என்பர் இளங்கோ அடிகள். அவருடைய பூம்புகார் வருணனையைச் சாத்தனாரின் வஞ்சி நகர வருணனை பெரும்பாலும் ஒத்திருப்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கது (மணி. 28: 29—61).

வடபுலம்போலவே தென்னகத்திலும், பழைய குலஅமைப்பின் எச்சங்களும், தந்தை தொழிலை மகன் செய்யும் வழிமுறைத் தொழில் ஏற்பாடும், புறமணத் தடைக் கொள்கையும், சாதிகள் பலவாக நிலைகொள்வதற்குக் காரணங்களாயின. மேலும், தமிழகத்தில் புறமணத்தடைக் கொள்கையானது, சாதிக்குள் பெண் எடுக்கும் முறையாக அமைவதோடு முறைப்பெண்*ணையே மணப்பதாக அமைந்ததால், சாதி முறை இங்கு அதிக உரம் பெற்றது. முன்னாளில், ஒரு சாதி முழுமையாகவே சமுதாயப் படிநிலையில் உயர்வோ தாழ்வோ கண்டது என்பதும் உண்மையே. இதற்கு எடுத்துக் காட்டாகக் கோசரைக்** குறிப்பிடலாம். சங்ககாலத்தில் துளு நாட்டிலும்,*** சோழநாட்டுக் கடற்கரை சார்ந்த நியமம்*a என்னும் ஊரிலும், நாலூரிலும், **a கொங்கு நாட்டிலும்***a கோசர் வாழ்ந்தனர். கோசர் குடித்தலைவர்கள் குறுநில மன்ன

---

* முறைப்பெண்—அத்தை அல்லது அம்மான் மகள்போல் ஒருவனை மணம்புரியும் உரிமை உடைய பெண்.

** வேளிரைப்போல் கோசரும் வெளியிலிருந்து வந்தவர் என்பர். கோசரைப்பற்றிய அரிய ஆராய்ச்சி நூலை ரா. இராகவையங்கார் எழுதியுள்ளார்.

*** கோசர் துளு நாடன்ன (அகநா 15)

*a கோசர் நியமம் (அகநா. 90)

**a நாலூர்க்கோசர் (குறுந்தொகை 15)

***a கொங்கிளங்கோசர் (சிலப்பதிகாரம் 29) மௌரியர் காலத்தில், கோசர் பொதியத்தில் வாழ்ந்தனர் என்ற மரபுரையை மாமூலனார் குறிப்பிடுவார் (அகநா 251).

ராகவே விளங்கினர். வாய்மை,[1] நுண்ணறிவு,[2] வீரம்[3] என்னும் பண்புகளுக்கு எடுத்துக்காட்டாகக் கோசரைச் சங்கப்புலவர் போற்றுவர். பின்னுளில், அவர்கள் வேந்தர்க்குக் கைக்கோட் படை[4] யாயும் கைக்கோட் படைத்தலைவர்களாயும் அகப்பரிவாரத்துக்[5] காவல் துணைவராயும் விளங்கினர் என்பதும், அவர் படைவீரத்துக்கு இடமில்லாமல் போனபோது, நூல்நூற்றுத் துகில் செய்யும் தொழிலை மேற்கொண்டனர் என்பதும் சாசனக் குறிப்புக்களிலிருந்து தெரிய வரும். ''செங்குந்தப் படையர்[6] சேனைத்தலைவர், தந்துவாயர்.[7] ''காருகர்[8] கைக்கோளர்'' என்று திவாகரமும் கூறும்.

நாகரிகம் தோன்றிய காலந்தொட்டு மாருத நிலையில் இழிவுக்குள்ளானவர் புலையர் ஆவர். இழிவு என்று பொருள்படும் புலை என்ற சொல்லி[9] னடியாகப்பிறந்த பெயர் அவருக்கு இடப்பட்டதிலிருந்தே நாகரிகத் தமிழர் அவரை எவ்வாறு கருதினர் என்பதை அறியலாம். புலையர் ஆதிக்குடிகளாவர். இன்றும் ஆனைமலை முதலிய தென்னகக் குன்றுகளில் தொல் பழங்குடியாகப் புலையர் வாழ்கின்றனர். சங்ககாலத்தில், சமுதாயத்தின் புறச்சாதியாகப் புலையர் தாழ்வுற்றதைத்

---

[1] ''ஒன்றுமொழிக்கோசர்'' (அகநா 196): ''கோசர் நன்மொழி'' (குறுந்தொகை 15). வாய்மை காப்பவர் என்று நெடுந்தொலைவிலுள்ளாரும் போற்றும் அளவுக்குப் புகழ் எய்திய வளங்கெழு சோசர் என்பர் நக்கீரர்.

[2] அகநா 113.

[3] மதுரைக். 772-73; அகநா 90, 113 முதலியன.

[4] கைக்கோட் படை-அரசர்க்காக மரணத்தைத் திரணமென மதித்துச் செயல்படும் ஒழுக்கத்தைக் கொண்டவர் என்பர் ரா. இராகவையங்கார்.

[5] அகப்பரிவாரம்-உள் வீட்டுப் பணியாளர்.

[6] செந்நிறமான ஈட்டி உடையர்

[7] நூலால் நெய்வோர் (தந்து-நூல்).

[8] காருகர்-நெய்வோர்.

[9] 'கொலைவினையர் ஆகிய மாக்கள் புலைவினையர்' என்பது குறள் (329)

தொகை நூல்களிலிருந்து அறியலாம். சுடுகாட்டில் இறந்தார்க்குக் கள்ளும் சோறும் வைப்பான் புலையன் என்று புறநானூறு (360, 363) கூறும். அவன் 'இழி பிறப்பினேன்' என்றே குறிப்பிடப் பெறுவான் (புறநா 363). புலையன் துடி* கொட்டுவான் என்ற செய்தியிலிருந்து (நற்றிணை 77, புறநா. 287) துடியனும் புலையனாகக் கருதப்பெற்றான் என்று உணரலாம். மேலும் துடி எறியும் புலையன் 'இழிசின'** என்றும் விளிக்கப்பெறுவான் (புறநா. 287). துடி அடிப்போனை 'இழி பிறப்பாளன்' என்பர் மருத்துவன் தாமோதரனார். (புறநா. 170). தண்ணுமை***கொட்டுவோனையும் இழிசினன் என்பர் கழாத்தலையார் (புறநா. 289). கட்டில் பின்னிய இழிசினனைச் சாத்தந்தையார் குறிப்பிடுவர் (புறநா. 82). நாளாவட்டத்தில், புலையராக ஒதுக்கப்பெற்ற புறச்சாதிகள் பெருகின. அவர்கள் வடபுலத்தைக் காட்டிலும் அதிகமாகத் தென்னாட்டில் அல்லலுற்றனர். இழிந்தவை என்று கருதப்பெற்ற தொழில்களைப் புரிந்தும், பண்ணையாட்களாகப் பயிர்த்தொழில் புரிந்தும், ஊருக்கு அப்பால் உள்ள சேரிகளில் அவர்கள் காலந்தள்ளினர். ஆயினும் அவர்களை அடிமைகளாகக் கருதமுடியாது.****

---

* துடி-ஒருவகைப்பறை.

** இழிசினன்-இழிந்த பிறப்பாளன்.

*** தண்ணுமை—முழவு

**** மேனாடுகள் கண்ட அடிமைமுறை இந்தியாவில் தோன்றவில்லை என்பதை முன்பே கண்டோம் (IV : 7 ). மணம் முடிக்க விருந்த சுந்தரமூர்த்தி சுவாமிகளை மாறுவேடத்தில் வந்த சிவபெருமான் தம் அடிமை என்று ஓலை காட்டி உரிமை கொண்டாடினார் என்ற பெரிய புராணக் கதையும், கோயிலுக்குத் தொண்டுபுரிவதற்காகத் தம்மை அர்ப்பணித்துக் கொண்டவர் பற்றிய செய்திகளும், அடிமைகளைப்பற்றிய செய்திகளாம். 'அடியோர்' என்று தொல்காப்பியம் (பொருள் 23) குறிப்பிடுவது அடிமைகளைக் குறிக்கலாம். ஆனால் அடிமை முறை எந்நாளும் பெருவழக்காக இருந்ததில்லை; பொருளுற்பத்திமுறையில் குறிப்பிடத்தக்க பங்கு வகித்ததுமில்லை,

அவர்களை உடைமையாக விற்கவோ வாங்கவோ உரிமை பெற்றுர் எவரும் இலர். அவர்கள்மீது கட்டுப்பாடுகளை வகுக்கவும் நிறைவேற்றவும் அவர்களின் உறவுமுறைக் கூட்டங்களும் சாதித்தலைவர்களுமே அதிகாரம் பெற்றிருந்தனர்.

பெரும்பாலான சாதிகள் வலங்கை இடங்கை சாதிகளாகப் பிரிவுபட்டது, தென்னுட்டுச் சாதிமுறைக்கே உரியது. இது தஞ்சைச் சோழர் காலத்திலேயே (850-1267) தோன்றிவிட்டது. இவ்விரு திறத்தினருக்குள் போட்டியும் பகைமையும் இருந்துவந்தன. பின்னுளில் வலங்கை—இடங்கைப் பகையால் வன்முறைச் செயல்களும் நிகழ்ந்தன. இந்தப் பாகுபாடு எவ்வாறு தோன்றியது என்பது விளங்கவில்லை.

சமுதாய வாழ்வில் ஒவ்வொரு சாதியும் சுய ஆட்சி உரிமை பெற்றிருந்தது. சாதிக்கட்டுப்பாடுகளைச் சாதியின் கூட்டமும் பஞ்சாயத்தும் தலைவர்களுமே உருவாக்கி நிறைவேற்றினர். சாதிக்கட்டுப்பாட்டை மீறுவோர் தண்டனைக்குள்ளாயினர். சாதியிலிருந்து விலக்கப்பட்டவன், உற்றுர் உறவினர் அனைவராலும் கைவிடப்பட்டான். இந்தக் கட்டுப்பாடு சாதிமுறைக்கு அரணுக அமைந்தது என்பது உண்மையே. ஆனுல் பொதுவில் மக்கள் தத்தம் சாதியிடம் மெய்யான பற்றுள்ளவராக நடந்துகொண்டனர் என்பதையும் மறுக்க முடியாது. அவர்களுக்குச் சாதிமுறை பேணத்தக்கதாகவே தோன்றியது.

பல்வேறு அரசியல் மாறுதல்களுக்கிடையே, வழிவழி வந்த பண்பாட்டைப் பாதுகாத்தது சாதியே என்பதையும் மறுத்தற்கில்லை. அன்னிய ஆட்சியில் அடங்கவேண்டிய அவல நிலை ஏற்பட்டபோது, இந்தியப் பண்பாட்டை மாள்விலிருந்து காப்பாற்றியது சாதிமுறையின் உயிராற்றலே.

## 14. சாதியும் சமயமும்

பொருளாதாரத்திலும், உறவுமுறை வாழ்விலும், பண்பாட்டுப் பாதுகாப்பிலும் உயிர்நிலையாக அமைந்ததால் தொன்றுதொட்டு நின்று நிலைத்தது சாதி. எல்லா உயிர்களிலும், எங்கும், இறைமையைக் கண்டதே இந்துச்சமயம். துற

விக்குச் சாதியில்லை என்று பௌத்த ஜைன நெறிகளைப்போல் இந்து மதமும் கருதியது. மேலும், திருஞானசம்பந்தர் போன்ற அந்தணரையும் நம்மாழ்வார் போன்ற வேளாள மரபினரையும் வழிபடும்போதே, நந்தனார், திருப்பாணாழ்வார் முதலிய தீண்டா வகுப்புப் பெரியார்களையும் வணங்குவர் இந்துக்கள். உயர்குடிப் பிறப்பின் பெருமையே பேசுவோரை அனைத்துச் சமயச் சான்றோரும் கடிந்துரைப்பர் என்பதும் மெய்யே. குணமும் செய்கையுமே வருணவேற்றுமைக்கு அடிப்படை என்றும் கூறும் பகவத்கீதை.* அதேபோதில், சாதிப் பன்மையைச் சமயச் சான்றோரால் புறக்கணிக்க முடியவில்லை. எனவே, முற்பிறப்பில் செய்த வினையின் பயனை இப்பிறப்பில் துய்ப்போம் என்ற கொள்கையில் சாதிப் பன்மைக்குக் காரணம் கண்டனர். மறுபிறப்பில் மேன்மை எய்துவதற்கும், பிறவிப் பெருங்கடலிலிருந்து கரையேறி வீடு பேறு அடைவதற்கும், இப்பிறப்பில் உயர்குடிப் பெருமையே பேசும் புன்மையில் படராது, உயர்குடிப் பிறந்த பொறுப்புக்குரிய ஒழுக்கத்தைத்தழுவி வாழ்வீராக என்று அறிவுறுத்தினர் ஆன்றோர். மறுபிறப்புக் கொள்கையை வரித்த ஜைன, பௌத்த நெறிகளும் ஏறத்தாழ இதே வழியைத் தழுவிச் சாதிமுறையோடு ஒத்துப்போயின.

சாதிமுறைக்கு நேரான எதிர்ப்புப் பன்னிரண்டாம் நூற்றாண்டில் தோன்றியது. கன்னட நாட்டில் கலியாண அரசின் முதல் அமைச்சராகவிருந்த பசவண்ணர் என்னும் அந்தணர், சாதி வேற்றுமை பாராத இலிங்காயத (வீரசைவ) இயக்கத்தைக் கண்டார்**. ஆனால் நாளாவட்டத்தில் வீரசைவர் பல சிறு சாதிகளின் தொகுதி ஆயினர். பதின்மூன்றாம் நூற்றாண்

* அத்தியாயம் 4 சுலோகம் 13.

** பசவண்ணரின் சீடரில் ஒரு வேதியரின் மகளுக்கும் ஒரு தீண்டா வகுப்பினர் மகனுக்கும் திருமணம் நடந்தது. அரசன் அதுகண்டு ஆத்திரமடைந்தான். பக்தர் இருவரும் கொல்லப்பட்டனர். ஆருத்துயருற்ற பசவண்ணர் இறைவன் திருவடியில் தம் இன்னுயிரை அர்ப்பணித்தார்.

டில், பிரயாகை வேதியர் குடியில் பிறந்த இராமானந்தர் அனைத்து மாந்தரும் ஆண்டவன் கோத்திரத்தினரே என்றார். அவர் சீடர்களில் சிறந்தவரான கபீர்தாசர் அரியும் அல்லாவும் ஒன்று என்றே கூறினர். ஆனால் கங்கைவெளியில் கபீர்தாசரைப் பின்பற்றியோர் நாளடைவில் தனிச்சாதி ஆயினர். கபீரின் சீடரான குருநானக் சீக்கிய மதத்தைத் தோற்றுவித்தார். அனைத்து மாந்தரையும் ஒரு நிகராகப் போற்றுங்களென்று அறிவுறுத்தினர் குருநானக். ஆனால் சீக்கியரில் சர்தார்கள் உயர்ந்தவர் ; தோட்டிகள் தாழ்ந்தவர். சர்தார்களிலும் பல படிநிலைகள் உள.

வெளிநாட்டுச் சமயங்கள் இந்தியாவில் குடியேறிய போது, அவையும் சாதி முறையோடு ஒத்துப் போயின. யூதர்களில் பெனி இஸ்ரேல், கொச்சி யூதர், பின்னாளில் வந்த பாக்தாது யூதர் என்ற மூன்று பிரிவுகள் ; பெனி இஸ்ரேல் பிரிவில் வெள்ளையர், கறுப்பர் என்ற இருசாதிகள்: கொச்சி யூதரில் வெள்ளையர், கறுப்பர், கலப்பினத்தார் என்ற மூன்று சாதிகள். முஸ்லீம்களிலும் பலசாதிகள் உள. உதாரணமாக ஐக்கிய மாகாணத்தில், அரேபியர், ஈரானியர் ஆகியோரின் வழிமுறையினரான அஷ்ராபுகள் உயர்ந்தவர்; இந்து உயர் சாதிகளிலிருந்து மதம் மாறியவர் அடுத்த நிலையினர்; அடுத்த நிலையினர் மதம் மாறிய குயவர் போன்ற தொழிற் சாதியினர்; கடைநிலையினர் தோட்டிகள். மலையாள மாப்பிள்ளைகளில், நபிகள் நாயகத்தின் குமாரி பாத்திமாவின் வழியினர் (தங்கல்) மிக உயர்ந்தவர்; அடுத்த நிலையினர் அரேபியர் வழிமுறையினராகக் கருதப்பெறும் பிறர்; மீனவர் முதலியோர் தாழ்நிலையினர். தமிழ் முஸ்லீம்களிலும், மரக்காயர், லப்பை முதலிய பிரிவுகள் இருப்பதை நாம் அறிவோம். கிறிஸ்தவரான இந்தியர் தமது பழைய சாதி உணர்வைப் பேணி வருகின்றனர். ஒரு சாதியிலிருந்து கிறிஸ்தவரானவர் அவர்களுக்குள்ளேயே பெண் எடுப்பதும் கொடுப்பதுமே பெருவழக்காயுள்ளது. நாடார் வேளாளரில் சிலபிரிவினர் முதலியோரிடையில் இந்துக்களும் கிறிஸ்தவர்களும் கலப்புத் திருமணம் செய்வது உண்டு. ஆனால் ஒரு சாதிக் கிறிஸ்தவர் வேறு சாதிக் கிறிஸ்தவரோடு திருமண உறவு கொள்வது அரிது. பழைய

சாதி அடிப்படையில் தமக்குள்ளே உயர்வுதாழ்வு பாராட்டு வோராகவே கிறிஸ்தவர் உளர்.

கடந்த ஐம்பதாண்டுக் காலத்தில்தான் வழிவழிவந்த சாதிமுறைக்கு இறுதி சூழ்வதாகக் கிளர்ந்தெழுந்தது தேசிய மறுமலர்ச்சி. அதனைப்பற்றிப் பின்னர் ஆராய்வோம்.

## 15. கிராம அமைப்பு

சாதி முறையோடு இணைந்து சமுதாய வாழ்வை இயக்கியது கிராம அமைப்பு. குலங்களின் தொகுதி, சாதிகள் உடைய சமுதாயமாக மாறியதற்கு உழவு பயின்ற கிராம அமைப்பே அடிப்படையாயிற்று. புதிய நிலத்தில் மக்களைக் குடியேற்றிக் கிராமங்களைக்கண்டு உழவுத் தொழில் வளம் பெறுவதற்கு வாய்ப்புத் தருவதை அரசின் சிறப்பான பணிகளில் ஒன்றாக அர்த்த சாத்திரம் விதிப்பதைக் கண்டோம். மௌரியரையும் சங்ககால வேந்தரையும் போலவே, சாதவாகனரும் அப்பணியை நிறைவேற்றினர். பல்லவர் காடு அழித்து நாடாக்கியதாலேயே, காடுவெட்டி என்ற சிறப்புப் பெயரை அடைந்தனர். குப்தப் பேரரசர் காலத்தில், வங்கம் போன்ற பகுதிகளில் புதிய கிராமங்கள் அமைந்தன. பண்டைய இந்திய வரலாற்றின் சிறப்பான காலகட்டங்களில், வாணிகப் பெருக்கத்தோடு கிராம அமைப்பும் பரவிப் படர்ந்தது.

கிராம சமூகம் எல்லாவிடங்களிலும் எல்லாக் காலங்களிலும் ஒரே தன்மைத்தாக இருந்ததென்று கூறுவதற்கில்லை. மௌரியர் காலத்தில் அரசே தரிசுநிலங்களில் கிராமங்களைக் கண்டு அரசாங்கப் பண்ணைகளை நடத்தியது; அதேபோதில், தனியாருக்கு உடைமையான நிலங்களில் குடிகள் சாகுபடி செய்தனர். மௌரியர் காலத்துக்குப் பின்னர் அரசாங்கப் பண்ணைமுறை இருந்தது என்பதற்குச் சான்று இல்லை. தனியார் முயற்சியாலேயே காடுமேடாகவும் கரம்பாகவும் இருந்த நிலம் பயிர்செய்தலுக்கு ஏற்றதாகத் திருத்தம் பெற்றது. எனவே, நாகசேனர் மினண்டரிடம் கூறுவார்:–"ஒருவன் காட்டை அழித்து நிலத்தைத் திருத்தினால், அது அவன்

நிலம் என்று கூறுவர். ஆனால் அவன் நிலத்தை உண்டாக்கினான் அல்லன். அவன் அந்நிலத்தைப் பயன்படக் கூடியதாகச் சித்தம் செய்ததாலேயே, அவன் அந்நிலத்தின் உரிமையாளன் என்று கூறப்பெறுகிறான்.*'' எவன் அம்பால் ஒரு விலங்கு வீழ்த்தப்பெறுகிறதோ அவனுக்கே அந்த விலங்கு உரியதாவதைப்போல், முதல்முதலில் ஒரு நிலத்தைக் காடு களைந்து திருத்தியவனுக்கே அந்நிலம் உரியதென்று மனுவும் கூறுவார்.** அதனால்தான், நிலத்தை முதன்முதலாக எவன் பயன்படுத்துகிறானோ அவனுக்கே அது சொந்தம் என்பது இந்து வழக்குச் சட்டமாக உள்ளது.

ஆனால் தொல்காலத்தில், தனிஒருவன் காட்டுக்குள் சென்று கழனி கண்டு பயிர் செய்தான் என்று கொள்வதற்கு இடமில்லை. ஓர் உறவு முறைக் கூட்டத்தினர் ஒன்றுபட்டு முயன்றே காட்டை அழித்துக் கழனிகள் சூழ்ந்த கிராமத்தைக் கண்டனர் எனலாம். எனவே, மேய்ச்சல் நிலத்தோடு தோட்டம் துரவுகளும்*** கழனிகளும்கூட ஊரின் பொதுவுடைமையாக விருந்தன. ஊரார் அந்தக் கழனிகளில் பொதுவில் பயிர் செய்து விளை பொருளைப் பிரித்துக்கொண்டனர். இதனைச் சமுதாய முறை என்பர். இம்முறையிலும் வருக்க வேறுபாடுகள் தோன்றி விட்டன: ஊருக்குப் பண்ணையாட்களாகத் தாழ்ந்த பழங்குடிகள், ஊர் நிலத்தில் உரிமையோடு உழுதுண்ணும் ஊரார், பயிற்செலவை மேற்பார்வை செய்து. விளைபொருளில் அதிகப்பங்கு அடைந்த உழுவித்துண்போர், இந்த முறையில் உழுதுண்ணும் ஊராரின் ஊக்கம் குன்றியதே கரையீடு முறையின் தோற்றத்துக்குக் காரணமாயிருந்திருக்க வேண்டும். கரையீட்டு முறையில், நிலங்களையே குடும்பங்களிடைப் பிரித்துக்கொடுப்பப்பட்டது. இந்தப் பங்கீட்டில் கிராமகிழார் போன்றோர் அதிக நிலம் பெற்றனராகலாம். எனினும், ஒவ்வொரு குடும்பமும் தன் பங்கு நிலத்தின் விளைவைத் தானே அனுபவித்ததால், விவசாயம் செவ்வனே நடைபெறுவதற்கு வாய்ப்புத் தந்தது இம்முறை. கரையீட்டு

---

* மிலிந்தபன்ஹ 4.5.15

** 9 : 44

*** துரவு-பாசனத்துக்கு உதவும் பெருங்கிணறு.

முறையில், குறிப்பிட்ட காலமே, குடும்பங்கள் தத்தம் பங்கு நிலத்தை அனுபவித்தன. அதன்பின், குடும்பங்களின் பெருக்கம் அல்லது சுருக்கம் முதலானவற்றைக் கணக்கில் எடுத்து, நிலங்களைப் புதிதாகப் பங்கு பிரித்துக் கொடுத்தது ஊர். இவ்வாறு குறிப்பிட்ட காலகட்டத்துக்குப் பயிரிடுவதற்கென்று நிலத்தைப் பிரித்துக் கொடுப்பதே கரையீட்டு முறையின் சிறப்பு. கரையீட்டு முறை ஊரில், சமுதாயமுறை ஊரில் தோன்றிய வருக்க வேறுபாடுகள் விளக்கம் பெற்றன. உழுவித்துண்போர் தம் நிலத்தை வாரத்துக்குப் பயிரிடுவதற்குக் கொடுத்து மேல்வாரம் பெறும் முறை கரையீட்டு ஊர்களில் தோன்றியதா, மிராசு முறை மலர்ந்த பின்பே தோன்றியதா என்பதைப் பற்றி ஒன்றும் ஊகித்தற்கு இடமில்லை.

உழுவித்துண்போர், தமது பங்குகளை நிலையாக்கிக் கொள்ள விரும்பினர் போலும். உழுதுண்போரும் தாம் பாடுபட்டுத் தரத்தை உயர்த்தியபின், அந்த நிலங்கள் மறு பங்கீட்டில் பிறருக்குப் போய்விடுமோ என்ற அச்சத்துக்கு இடம் தராத நிலையை நாடினர் போலும். அந்தணருக்குத் தானமாக வழங்கப் பெற்ற பல பிரமதேய கிராமங்களில், அந்தணர் நிலத்தைத் தனி உடைமையாகக் கொண்டு வார முறையிலோ பண்ணையாட்களைக் கொண்டோ செவ்வனே சாகுபடி செய்ததும் பிற ஊர்களுக்குப் படிப்பினையாக யிருந்திருக்கலாம். எவ்வாறோ, கரையீடு கிராமங்களில் பலபோகம் தோன்றியது. அப்போது உண்டான நிலத்தொகுதிகள் மிராசுகள் எனப்பட்டன. மிராசுதார்கள் நில உடைமையாளர்களே. எனினும், நிலம் விற்பனைப் பொருளாகவில்லை. விதிவிலக்காக ஒரு மிராசுதார் தன் நிலத்தை விற்க விரும்பினால், அவர் கிராம சமுதாயத்திடம் தம்கருத்தைத் தெரிவிப்பார். கிராம சமுதாயம் அவர் நிலத்தை அதே கிராமத்திலுள்ள வேறு விவசாயிக்கு வாங்கிக் கொடுக்கலாம். மிராசு கிராமங்களிலும், கிராம சமுதாயத்துக்கு மேலதிகாரம் இருந்ததென்பதை இதிலிருந்து உய்த்துணரலாம்.

ஒவ்வொரு கிராமமும் தன் தேவைகளைத் தானே உற்பத்தி செய்து தன்னிறைவு கண்டது என்பர் காரல்மார்க்ஸ். ஆனால்

முக்கியத் தேவைகளான உப்பும் உலோகங்களும் அனேக கிராமங்களில் உற்பத்தியாகவில்லை. கடற்கரையில் முக்கிய மான இடங்களில் உப்பளங்களை அமைத்து உப்பை உண் டாக்கிக் கிராமங்களுக்குக் கிடைக்கச் செய்தது அரசு. இரும்பில் செய்த கருவிகளும் ஆயுதங்களும், செம்பிலும் வெண்கலத்திலும் செய்த கலங்களும் வாணிகத்தின் மூலமே கிராமங்கட்குக் கிடைத்திருக்கவேண்டும். மன்னார் குடாவில் முத்துக்குளித்துக் கிடைத்த முத்துக்களும் வணிகர் மூலமே பல ஊர்களில் விற்பனை ஆயின. மேலும், ஒவ்வோர் ஊரிலும் பருத்தி விளைந்ததென்றும் நூல்நூற்றுத் துகில் நெய்யப் பெற்றதென்றும் கூறுவதற்கில்லை. வணிகர் மூலமே பல வட்டாரங்களுக்குப்பஞ்சு கிடைத்ததெனலாம். பருத்தி நூலா டையைத் திருவிழாச் சந்தைகளிலோ நகரக் கடைகளிலோ உழவர் பலர் வாங்கினரென்றும் கருதலாகும். நேர்த்தியான துகில்களைத் தொலைவிலுள்ள பேரூர்களுக்கும் வணிகர் கொண்டு சென்றனர். மௌரியர் அரசு சுரங்கத்தொழிலிலும் ஆடை ஆயுத உற்பத்தியிலும், வாணிகத்திலும் தானே பங்கு கொண்ட வழியில் பின்னாளைய அரசுகள் படரவில்லை என்பது மெய்யே. அந்நாளையப் போக்குவரத்துச் சிரமங்களும் அரசியல் சச்சரவுகளும் தொழில் வாணிகங்களின் வளர்ச் சிக்குத் தடைகளாயிருந்தன என்பதும் உண்மையே. ஆயினும், பெரிய அளவில் வாணிகப் பண்டங்களை உற்பத்தி செய்யும் முறையினை*ப் பண்டைய இந்தியா அறிந்திருந்தது. ஒரே ஒரு இரும்புக்கட்டியை கொண்டு, 23 அடி உயரத்துக்கு ஐந்து டன் எடையுள்ள தூணை வார்த்தெடுத்த குப்தர்கால சாதனை

---

* அந்த முறையே வெவ்வேறு பிரதேசத் தொழிலாளர் ஓரிடத்தில் ஒருங்கு கூடித் தொழில் செய்வதற்கும் வாய்ப்புத் தந்தது. எடுத்துக்காட்டாகப் பூம்புகாரில்,

மகத வினைஞரும் மராட்டக் கம்மரும்
அவந்திக் கொல்லரும் யவனத் தச்சரும்
தண்தமிழ் வினைஞர் தம்மொடு கூடி (19:107-109)

வினையாற்றினர் என்று மணிமேகலை மொழிவதைக் குறிப்பிடலாம்.

யிலிருந்து முன்னுளைய உலோகக் கலை விளைஞரின் திறமையை ஊகிக்கலாம். அதேபோல், பாம்புச்சட்டைக்*கும் பாலாவிக்கும்** மூங்கிலின் மேல் தோலுக்கும்*** ஒப்பானவை என்று மதிக்கப் பெற்ற மெல்லாடைகள் வழி வழியாக உற்பத்தியானதிலிருந்தும் இந்தியத் தொழில் நுட்பத்தை உய்த்துணரலாம். இவற்றையெல்லாம் தன் னிறைவு கண்ட கிராமத்தின் சாதனைகளாகக் கருத முடியா தென்பது தெளிவு. பெருமளவு வாணிகமே இத்தகைய தொழிற்கலைகளைப் பேணின. அத்தகைய வாணிகம் இடைக் காலத்திலும் தழைத்ததைக் காஞ்சிபுரம், மாமல்லபுரம் முதலிய பேரூர்களில் நகரம் என்ற வணிகர் குழு விழுமிய நிலை எய்தியதிலிருந்தும், மணிக்கிராமம்,*௭ நானு தேசிகள்**௭ வளஞ்சியர்***௭ முதலிய வணிகர் குழுக் களைப் பற்றிய செய்திகளிலிருந்தும் அறியலாம். எனவே, கிராமப் பணியாளரோடு குயவன், கொல்லன், தச்சன் முதலிய கைத்தொழிலாளருக்கு மானியம் ஒதுக்கி இயன்ற அளவுத் தன்னிறைவு காண கிராம சமூகம் முயன்றது உண்மையே ஆயினும், தன்னிறைவுக் கிராமத்தின் தேக்கத் தால் இந்திய சமுதாயம் சாம்பியது என்பது பொருந்தாது. மேலும், கிராம ஆட்சி முறையின் உயிர்த்தளிர்ப்பான செயல்

---

* புறநா. 383; பொருநர். 82—3.

** புறநா. 398; பெரும்பாண். 469. திருமுருகு. 138.

*** புறநா. 383; சிறுபாண். 236.

*௭ மணிக் கிராமம் வணிக்கிராமம் (வணிகர்கூட்டம்) என்பதின் திரிபு என்பர். ஒன்பதாம் நூற்றுண்டிலேயே சயாமுடன் அவர்கள் வாணிகம் செய்தனர் என்பது அங்குள்ள கல்வெட்டிலிருந்து தெரிகிறது.

**௭ நானுதேசிகள்: நேபாளம் முதல் கேரளம் வரையிலும் தென் கிழக்கு ஆசிய நாடுகளிலும் வாணிகம் செய்த இக்குழுவுக்கு ஐந்நூற்றுவர் என்ற பெயரும் உண்டு.

***௭ திருநெல்வேலி, திருப்புறம்பியம் எண்ணுயிரம் முதலிய இடங்களின் வளஞ்சியர் குழுக்களைக் கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன.

முறையே (III : II) கிராமத் தேக்கத்தைப் பற்றிய கற்பிதக் கொள்கைக்கு ஏற்ற மறுப்பாம். தவிர, மார்க்ஸே எடுத்துக் காட்டுவதைப் போல, உழவே செயற்கைப் பாசனத்தைப் பெரிதும் சார்ந்திருந்ததும், செயற்கைப் பாசன வசதியைச் செய்து தருவதில் அரசு தலைமையான பொறுப்பு வகித்ததும் வரலாற்று உண்மைகளாகும். அதனால், உழவால் விளக்கம் பெற்ற கிராமம் அரசைப்பற்றி அக்கறை கொள்ளாதிருக்க முடியாது. எனவே, 'இராமன் ஆண்டாலென்ன? இராவணன் ஆண்டாலென்ன?' என்ற அக்கறையின்மையோடு, 'தானுண்டு தன் காரியமுண்டு' என்ற ஒற்றைச் சாண் நினைப்பில் கிராமங்கள் இயங்கியதே பின்னாளில் பாரதத்திற்கு நேர்ந்த அவலத்துக்கு மூலகாரணம் என்பது சிக்கலான உண்மையை அளவு கடந்து எளிமைப்படுத்தும் கொள்கையாகும்.

## 16. குடும்பம்

சாதியும் கிராமமும் போல் கூட்டுக்குடும்பமும் இந்திய வாழ்வுக்கு அடிப்படை ஆயிற்று. ஒரு கூட்டுக் குடும்பம், ஓர் இல்லத்தில் வாழ்வது; ஒரே அடுக்களையில் சமைத்த உணவை உண்பது; உடைமையைப் பொதுவாக உடையது; மூன்று அல்லது நான்கு தலை முறைகளைச் சேர்ந்த ஒரு குலத்தினரைக் கொண்டது. தந்தைவழிக் கூட்டுக் குடும்பம் என்பது, பொது வான ஆண் மூதாதையரிடமிருந்து நேர்வாரிசாக உள்ள ஆண்களும் அவர்களுடைய தாயும் மனைவியரும் மணமாகாத புத்திரிகளும் அடங்கியதாகும். மறுமணத்தை அனுமதிக்காத சாதிகளில், கைம்பெண்களும் பிறந்த வீட்டில் வாழ்வர். தாய் வழிக் குடும்பத்தில், குடும்பத் தலைவி, தன் உடன் பிறந்தார், தன் மக்கள், தன் சகோதரிகளுக்கும் பெண்களுக்கும் பிறந்த மக்கள் ஆகியோருடன் வாழ்வாள். அதில் திருமண உறவு கொண்டவர் எவரும் குடும்பத்தில் இடம் பெறார். திருமணமான பெண் தன் குழந்தைகளுடன் தாய் வீட்டில் வாழ்வாள்; அவள் கணவன் விருந்தினன்போல வந்து போவான். தன் தாய் வீட்டிலேயே வாழ்வான் அவன்.

கேரளத்தில் தாய்வழிக் குடும்பம் பெருவழக்கு எய்தியது.* பிற மாநிலங்களில் தந்தை வழிக் கூட்டுக்குடும்பமே தொல் காலந்தொட்டு நிலைகொண்டது.

## (அ) உறுதிப்பொருள் நான்கு.

வாழ்வின் உறுதிப்பொருள் (புருஷார்த்தம்) நான்கு என்பது இந்தியப் பண்பாடு. அவை அறம், பொருள், இன்பம், வீடு என்பன**. பிறப்பு இறப்புக்குக் காரணமான வினைக் கட்டிலிருந்து விடுபட்டு மோட்சம் அடைவதே வீடு என்பர். அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றையும் ஓதி முப்பால் என்று பெயர் பெற்றது திருக்குறள். வீட்டுக்கு வள்ளுவர் தனியே விளக்கம் தந்தாரல்லர். அதற்குப் பரிமேலழகர் காரணம் கூறுவார்: "வீடு என்பது சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்து ஆகலின், துறவறமாகிய காரண வகையாற் கூறப்படுவதல்லது, இலக்கண வகையாற் கூறப் படுவன ஏனை மூன்றுமே ஆம்." தொல்காப்பியர் கொள்கையும் இதுவே (பொருள் 417). துறவறமாகிய காரணவகையால் வள்ளுவர் வீட்டைப்பற்றிப் பேசுவதைக் கற்றோர் அறிவர். "வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை" (362) என்பது வள்ளுவர் தரும் துறவுக்காட்சி. "யான், எனது என்னும் செருக்கு" அறுத்துப்

பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு*** (358)

என்று அறிவுறுத்துவார் அவர்.

---

* சங்ககாலத்தில், சேரவேந்தர் குடி தந்தைவழி முறையில் அமைந்ததே. ஆனால் சேரநாட்டு மக்கள் எம்முறைக் குடும்பம் கண்டனர் என்பதை அறிவதற்கு முடியவில்லை.

** இவற்றைத் தருமம், அருத்தம், காமம், மோட்சம் என்று வடமொழியில் குறிப்பிடுவர்.

*** பேதைமை: அறியாமை; சிறப்பு—பிறவாமை சிறந்தது என்பதால் சிறப்பு எனப்பட்டது. அறிவு—மெய்யறிவு; தத்துவஞானம்.

உலக இயலுக்குரியன அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றே. இங்கு அறம் என்பது சமயத்தையன்று, உலக வாழ்வுக்கான நெறிகளையே குறிக்கும். அறத்தின் சிறப்பான கூறு ஒழுக்கம் என்பர். பொருளும் இன்பமும் அறவழியில் அமைய வேண்டுமென்பர் கோவூர் கிழார் (புறநா. 31). நாடோ, காடோ, மேடோ, பள்ளமோ, நல்லவர் வாழும் நிலம் நன்னிலமாகும் என்பர் ஔவையார் (புறநா 187). நல்வினையால் புகழ் எய்துவோரே துறக்க இன்பமும் பெறுவர் என்பர் மோசிகீரனார் (புறநா 50). "அறத்தான் வருவதே இன்பம்" (39) என்றும், ஈன்றாள் பசிகாண்பாளாயினும் சான்றோர் பழிக்கும் வினை செய்யக் கூடாதென்றும் (656) அறிவுறுத்தும் திருக்குறள். ஆனால் பொருளையோ இன்பத்தையோ சான்றோர் இகழ்ந்தாரல்லர். "செய்க பொருளை" (759) என்பது வள்ளுவரின் ஆணை. செய்த பொருளால் தானும் வாழ்ந்து பிறரையும் வாழ்விப்பதே சான்றோர் நெறி. காதலும் கலைகளும் இன்பத்தைத் தருவன என்று தொல்லோர் போற்றினர். ஆடல், பாடல், காவியம், ஓவியம் முதலான பல கலைகளையும் துய்க்கும் திறனைப் பெறவேண்டுமென்று வாத்சாயனரின் காமசூத்திரம் கூறும். காதற் கவிதைகளுக்குப் பல மரபுகளைப் படைத்துச் சிறந்த அகப்பொருள் இலக்கியத்தைச் சமைத்த பெருமை தமிழுக்கு உரியது.

ஆக, அறத்தைத் துறந்து இன்பத்தையும் பொருளையும் நாடுவதும், பொருளின்பங்களைத் துறந்து அறத்தை நாடுவதும் உலக இயலுக்கு ஒவ்வாதன என்பதே பண்டைய இந்தியா கொண்ட முடிவு. மூன்று உறுதிப் பொருள்களும் இசைந்தமைந்ததே இலட்சிய வாழ்வு என்பது அதன் கொள்கை. எனவே, பகவத்கீதையில் கிருஷ்ண பகவான் கூறுவார்:—

"அர்ஜுனா, மிகுதியாக உண்போனுக்கோ, ஏதுமே உண்ணாதவனுக்கோ இந்த யோகம் அமையாது. மிகுதியாக உறங்குவோனுக்கோ, விழித்தே இருப்போனுக்கோ இந்த யோகம் கைவராது.

"உண்பதிலும் இன்பவிளையாட்டிலும், வினையாற்றுவதிலும், உறங்குவதிலும் விழித்திருப்பதிலும் அளவாக ஈடுபடு

வோனுக்கே துயரை அழிக்கும் இந்தயோகம் கைகூடும்.''
(6:16—17)

இந்த வாழ்வின் குறிக்கோள் வீடுபேறு என்பது மெய்யே. ஆனல் அறம் பொருளின்பங்களைத் தழுவிய நிறைவான வாழ்வின் முடிவாகவே விமோசனத்தைப் போற்றினர். பண்டைய வாழ்வின் மற்ருெரு அடிப்படையான ஆசிரமங்களைப் பற்றிய கொள்கையும் இதனையே வலியுறுத்தும்.

## (ஆ) கல்வி

பிரமசரியம், இல்வாழ்வு, வானப்பிரஸ்தம், சன்னியாசம் என்னும் நான்கும் ஆசிரமங்களாம். விரதம் காத்து ஆசானிடம் ஓதும் கல்விப் பருவமே பிரமசரியம். பிரமசரியத்தின் தொடக்கமாக உபநயனம் என்னும் பூணூல் தரிக்கும் சடங்கு அமைந்தது. அச்சடங்கில் புனிதமான ரிக்வேதத்தின் விழுமிய மந்திரமாகப் போற்றப் பெறும் காயத்திரியை ஆசான் சிறுவன் செவியில் ஓதுவார்:

செங்கதிர்த் தேவன் சிறந்த ஒளியினைத்
தேர்கின்றோம்——அவன்
எங்கள் அறிவினைத் தூண்டி நடத்துக.*

உபநயனம் முதல் மூன்று வருணங்களுக்கு உரியது என்றும், அச்சடங்கின்போது இரண்டாம் பிறப்பு எடுப்பதால் அவர்கள் இருபிறப்பாளர் ஆவர் என்றும் வடநூல்கள் கூறும். ஆனல் கிறிஸ்து பிறப்புக்கு முன்பே, அனேக க்ஷத்திரியரும் வைசியரும் அச்சடங்கை முழுவடிவத்தில் செய்யாது விடுத்தனர் என்று பாஷம் ஊகிப்பார். அதனலேயே இருபிறப்பாளர் என்ற சொல் அந்தணரைமட்டும் குறிப்பதாக, மென் மேலும் அதிகமாக, வழங்கப்பட்டது. சங்க நூல்களும் அந்தணரை மட்டுமே இருபிறப்பாளர் என்று குறிப்பிடுகின்றன. ஆயினும் இன்றும் பார்ப்பனர் மட்டுமன்றி, கம்மியர் முதலிய கலைத்தொழிலாளரும் திருநூல் அணிகின்றனர்.

---

* இது பாரதியார் செய்த தமிழாக்கம் பாஞ்சாலி) சபதம் 153: 1—3).

வேத காலத்தில் சிறுமிகளுக்கும் உபநயனம் செய்வித்தனர்; பின்னுளில் பையன்களுக்கு மட்டும் செய்விப்பது வழக்க மாயிற்று.

அரிய நினைவாற்றலுக்குரிய ஆசிரியரும் மாணுக்கரும் வழி வழியாக நோன்பிருந்து வேதம் பயின்றதாலேயே, மூவாயிர மாண்டுக் காலமாக மாற்றமுருத வடிவில் நான்மறை வழங்கி வருகிறது. வேதம் ஓதுவதில் பிழையோ வழுவோ இழைப் பதைத் தவிர்ப்பதற்குத் தொல்லோர் மேற்கொண்ட விழிப் பான முயற்சிகளை இன்று அனைத்துநாட்டு அறிஞரும் ஒருமுக மாகப் பாராட்டுகின்றனர். குருகுலத்தில், வேதத்தோடு, வேள்விக்கலை, ஒலிஇயல், சொல்லியல், செய்யுள் இயல், இலக் கணம், வானஇயல் என்னும் ஆறு வேதாங்கத்தையும் கற் பித்தனர். முதல் மூன்று வருண மாணுக்கர் இவற்றைப் பயில வேண்டுமென்று நூல்கள் கூறும். ஆனுல் நடைமுறை யில் சிலரே இந்தப் பயிற்சியை முழுமையாகப் பெற்றனர். அரசர் முதலிய உயர் குடிகளில் பிறந்த இளைஞர் போர்க்கலை, ஆட்சிக்கலை முதலானவற்றைப் பயின்றனர். உழைப்பாளி குடிகளில் பிறந்தவர்களில் மிகப் பெரும்பான்மையோர், தத்தம் தந்தையிடம் தொழில் பயின்றனர். ஆனுல் கைத் தொழிலாளரிடம் வேறு குடிச் சிறுவர்களும் பயிற்சி பெற் றனர் என்று ஊகிக்க இடமுண்டு.

சங்ககாலத் தமிழகம் கல்வியைச் சிறப்பாக போற்றியது.

உற்றுழி உதவியும், உறுபொருள் கொடுத்தும்,
பிற்றைநிலை முனியாது, கற்றல் நன்றே* (புறநா, 183)

என்று பேசுவான் ஒரு மன்னன். கற்ருரே கண்ணுடையர் என்றும், கல்லாதவர் முகத்து இரண்டு புண்ணே உடையர் என் றும் கூறுவார் வள்ளுவர் (393). பல்வேறு குடிகளில் பிறந்த வர்கள் கல்விகற்றுச் சிறந்துச் சங்கப்புலவர் வரிசையில் இடம்

---

* உற்றுழி உதவியும் —ஆசிரியருக்கு இடையூறு நேர்ந்த போது, அதை நீக்குவதற்கு முன்வந்து உதவியும். உறு பொருள்—மிக்கபொருள். பிற்றைநிலை—வழிபாட்டு நிலையை, முனியாது-வெறுக்காது.

பெற்றனர். ஆசிரியரைக் கணக்காயர் என்பது அந்நாளைய வழக்கு. ஆயிரம் மாணவர்களை ஆதரித்துக் கல்வி புகட்டுவோரைக் குலபதி என்பர். சங்கப் புலவர்களிலே ஒருவரான கிடங்கில் நக்கண்ணனார்* குலபதி என்று குறிப்பிடப்பெறுகிறார்.

புத்தர்காலத்திலேயே காசியும் தட்சசிலமும் கல்வி மையங்களாகப் புகழ் அடைந்திருந்தன. சமயக் கல்வியின்நிலைக்களனாக விளங்கியது காசி. தட்சசீலத்தில், கலைகள் விஞ்ஞானங்கள் முதலிய பல பாடங்களும் கற்றுத்தரப்பட்டன. பார்ப்பனப் பிள்ளைகள் நான்மறை பயிலவும், க்ஷத்திரியர்கள் வில்வித்தையும் அரசியலும் கற்கவும், இளவைசியர்கள் சிற்பம் முதலிய தொழிற்கலைகளைக் கற்றுக்கொள்ளவும், பாரதநாட்டின் பல பகுதிகளிலிருந்தும் தட்சசிலம் வந்தனரென்று பௌத்த ஜாதகக் கதைகளிலிருந்து அறிகிறோம். மகதநாட்டு மன்னன் அஜாதசத்துருவின் அரண்மனை வைத்தியனும் புத்தர் பெருமானின் நண்பனுமான ஜீவகன் தட்சசீலத்தில் ஆயுர்வேதம் பயின்றவனே. இலக்கண மேதை பாணினி, அரசியல் கர்த்தா சாணக்கியர், ஆயுர்வேத முதல்வர் இருவரில் ஒருவரான சரகர் ஆகியோரும் தட்சசிலத்தில் பயின்றோரே. சங்ககாலத்துக்கு முன்பே, காஞ்சியும் இந்தியக் கல்விமையங்களில் ஒன்றாக ஏற்றம் பெற்றது. சமணரும் பௌத்தரும் கண்ட பல துறவி மடங்கள் கல்விநிலையங்களாக விளங்கின. அவற்றில், பீகாரில் குப்தர் காலத்தில் எழுந்த நாளந்தாப் பல்கலைக்கழகம் தன்னேரில்லாப் புகழ் எய்தியது. ஹர்ஷன் காலத்தில் (7-ஆம் நூற்றாண்டு) இந்தியாவுக்கு வந்து சென்ற சீன யாத்திரிகன் ஹியூன்சாங் நாளந்தாப் பல்கலைக் கழகத்தையும் விகாரைகளையும் புகழ்ந்து எழுதியுள்ளான். 1197 அளவில் இல்லாமிய படையெடுப்பாளர் விகாரைகளை அழிந்தபின்பே, நாளந்தாவின் சிறப்பு மறைந்தது.

தமிழகத்தில் சங்ககாலக் கல்விமரபு பின்னாளில் ஊற்றம் பெற்றது. கணக்காயர் இல்லாத ஊர் நன்மை பயவாதுஎன்று

---

* இவர் இயற்றிய பாட்டு: குறுந்தொகை 252.

கூறும் திரிகடுகம்* (10). கிராமப் பள்ளிக்கூடத்தில் எண்ணும் எழுத்தும் கற்பித்த கணக்காயருக்கு மானியம் வழங்கினர். சோழர் காலக் கல்வெட்டுக்களும் செப்பேடுகளும் அவற்றில் செய்தி பொறித்தோரின் கல்வியறிவைப் புலப்படுத்துகின்றன. வடமொழிக் கல்விக்குத் தனியே நன்கொடைகள் வழங்கப்பட்டன. சமண, பௌத்தத் துறவி மடங்களும் பின்னளில் எழுந்த சைவ வைணவ மடாலயங்களும் கல்வித்துறையில் அரும்பணி ஆற்றின. கல்வி மையமாக மதுரை ஈட்டிய புகழ் பெரிது. பதினேழாம் நூற்றண்டின் தொடக்கத்தில்கூட மதுரையில் பத்தாயிரம் மாணவர்கள் சமய இயலும் தத்துவ ஞானமும் பயின்றனர் என்று இத்தாலியிலிருந்து கிறிஸ்தவ சமயத் தொண்டு செய்யவந்த தத்துவபோதக சுவாமிகள் (Robert de Nobili) கூறுவார்.

தொல்காலந்தொட்டே கேள்வியைப் போற்றிய நாடு இது. "செல்வத்துட் செல்வம் செவிச் செல்வம்" என்பர் வள்ளுவர் (411). "கற்றிலன் ஆயினும் கேட்க" (414) என்பது அவர் ஆணை. நூல்களைக் கற்க மாட்டாதார் பலரும் கற்றாரிடம் கேட்டு அறிவு பெற்றனர்; கற்றருக்கும் கேள்வியால் அறிவு உரம் பெற்றது. இதிகாசபுராணங்களைக் கதை சொல்லும் காலட்சேப முறையே கேள்வி அறிவைப் பெருக்குவதில் தலைமைப்பாத்திரம் வகித்தது.

## (இ) களவா, கரணமா?

இரண்டாவது ஆசிரமம் இல்லறமாம். இல்லறத்தின் உயர்வை உறுதி செய்யவே திருமணத்தைப் புனிதமாகப் போற்றியது பண்டைய பாரதம். ஒருவனும் ஒருத்தியும் பிறவிதோறும் கணவனும் மனைவியுமாக வாழ்வர் என்ற நம்பிக்கை இல்லறத்துக்கு ஏற்றம் தந்தது. எனவே,

---

* திரிகடுகம்: கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்று. சுக்கு மிளகு திப்பிலி என்ற மூன்று மருந்துப் பொருளைக் குறிக்கும் திரிகடுகம். அது உடல் நலம் பேணுவதை ஒத்து, இந் நூற் செய்யுட்களில் மும்மூன்ருக உரைக்கப்பெற்ற அறங்களும் உயிர்நலம் பேணுவனவாம்.

இம்மை மாறி மறுமை ஆயினும்
நீஆ கியர்என் கணவனை!
யான்ஆ கியர்நின் நெஞ்சுநேர் பவளே!* (குறுந் 49)

என்று தலைவி தலைவனிடம் இயம்புவதாகக் கற்பனை செய்வார் அம்மூவனார். தலைவனும், தலைவியுடன் உள்ள தன் நட்பு இப் பிறப்போடு அழியாது மறுபிறவியிலும் நிலைபெறும் என்று கூறுவதாகப் புனைந்துரைப்பார் பரணர்:

இன்றை அன்ன நட்பின் இந்நோய்
இறுமுறை எனஒன்று இன்றி
மறுமை உலகத்து மன்னுதல் பெறுமே** (குறுந்.199)

எனவே, புனிதமான நிகழ்ச்சிக்குச் சடங்கு வகுக்கும் மனிதப் பண்பு, வாழ்வின் தலையாய நிகழ்ச்சியாகவும், பிறவிதோறும் தொடர்ந்து வருவதாகப் போற்றப்பெற்ற தாம்பத்திய உறவுக்குத் தோற்றுவாயாகவும் விளங்கும் திருமணத்துக்குக் கரணம் (சடங்கு) அமைத்தது இயல்பே.

பண்டொழிந்த காலத்தில், குலங்களில் மக்கள் வாழ்ந்த போது, கண்டதும் காதலும், காதல் கொண்டதும் கூடலும் இயற்கையாக இருந்திருக்கலாம். அதனைக் காந்தர்வம் என்று வடநூலாரும், களவு என்று தமிழ்ச் சான்றோரும் கூறுவர். ஆனால்அது நாகரிகச்சமுதாயத்தில் பரவலாகநிலவியது என்று கூறுவது அறிவுக்கு ஒவ்வாதது ஆகும். களவில் பொய்யும் வழுவும் தோன்றியதால் கரணம் ஏற்பட்டது என்று கருதுவது நேரிதே.

பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப (பொருள் 145)

என்று தொல்காப்பியர் கூறுவது அந்தப் பழைய நிகழ்ச்சியை நினைவு கூர்வதே. ஆனால் அகப்பொருள்பற்றிய சங்க நூல் களின் அடிப்படையில், சங்ககாலத்திலும் களவுத் திருமணமே

---

* இம்மை மாறி-இப்பிறப்பு நீங்கி, மறுமை ஆயினும்—மறுபிறப்பு உண்டாயினும், நீ ஆகியர்-நீயே ஆகுக. நின் நெஞ்சு நேர்பவள்-நின் மனத்துக்கு ஒத்த காதலி.

** இந்நோய்-இந்தக் காதல் நோய், இறுமுறை-அழியும் முறை. மன்னுதல் பெறும்-நிலைபேற்றை அடையும்.

பெருவழக்காக இருந்ததென்றும், அதுவே தமிழர் நெறி என்றும் முடிவு கூறித் தமிழர் பண்பாட்டைப் போற்றுவதோ தூற்றுவதோ* உண்மை ஒன்ருக வேருென்றை விரிவுரை செய்வதே ஆம்.

தமிழ் அகப்பொருள் இலக்கியம் மேனுட்டு ஆயர்மரபு இலக்கியம்** போன்றது. ஆட்டிடையர் வாழ்க்கையை எழிலிலும் எளிமையிலும் சிறந்ததாகப் பாவித்து எழுதுவது ஆயர் மரபு. அது சித்திரிப்பது ஒரு சற்பனை உலகம். ஆடுகள் மேய, ஆயர் உல்லாசமாகக் குழல் ஊதி மகிழ்வரென்றும், குழலூதுவதில் போட்டியிடுவரென்றும், காதல் வயப்பட்டும் காதலியைப் பிரிந்தும் உள்ளம் கிளர்ந்தெழுவதைப் பாட வல்லாரென்றும், இறந்த தோழனின் பண்பு நலன்களையும் இசைப்புலமையையும் போற்றி இரங்குவரென்றும், ஆயர் மரபு இலக்கியத்தில் பேசப்படும். தமிழில் முல்லை, மருதம் முதலிய நிலத்துக்குரிய நிகழ்ச்சிகளுக்கும் வருணனைகளுக்கும் இலக்கணம் உள்ளதைப்போல், மேனுட்டு இலக்கியத்தில் திட்டமான வரையறைகளுக்குட்பட்ட துறை ஆயர்மரபு இலக்கியமே. ஆயராக வாழ்ந்த முன்னேர்களைப் பற்றிய நினை

---

* நம் காலத்தில் நயத்தக்க நாகரிகமாகக் கருதப்பெறும் காதற் திருமணம் சங்ககாலத்தில் தமிழர் நெறியாக விளக்கம் பெற்றதென்று கூறி அகப்பொருள் இலக்கியத்தை ஆதரவு காட்டிப் பேசுவோர் உளர். களவு நெறி போற்றும் இயற்கைப் புணர்ச்சி அநாகரிகமானது என்பாரும் உளர்.

** இதன் முதல்வர் என்று போற்றப்பெறுவோர் தியோக்கிரிட்டஸ் (Theocritus) என்ற கிரேக்கக் கவிஞர். பையான் (Bion), மாஸ்க்கஸ் (Moschus) என்ற கிரேக்கக் கவிகளும் இத்துறைக்கு வளம் கூட்டினர். லத்தீன் மகாகவி வர்ஜில் (virgil) இத்தாலியப்புலவன் தாசோ (Tasso), ஆங்கிலக்கவிஞரான ஸ்பென்சர் (Spenser), ஷேக்ஸ்பியர், மில்ட்டன், ஷெல்லி, ஆர்னல்டு முதலியோர் இத்துறையில் இலக்கியம் படைத்துப் புகழ் எய்தினர்.

விலிருந்து தோன்றிய இலட்சியக் கற்பனையே கிரேக்க ஆயர் மரபு. அதன் இலக்கியச் சுவையில் ஈடுபட்ட பிறமொழிக் கவிஞர்கள்தத்தம் மொழியிலும்ஆயர்மரபுஇலக்கியம் படைத்தனர். கிரேக்கக் கவிஞரைப் போலவே, சங்ககாலத் தமிழ்க் கவிகளும் முன்னுளைய இயற்கைப் புணர்ச்சி நினைவைக் கருவாகக் கொண்டு, தமது மனோபாவனைச் சிறப்பால் அருமையான மரபுகளை வகுத்து, அவற்றின் வரையறை கடவாதபோதே புதுமை நயம் மிக்க ஆற்றல் இலக்கியத்தைப் படைத்தருளினர்.

இதனை உணராது, களவு நெறியே சங்ககாலத் தமிழரின் வாழ்க்கை நெறி என்று சாதிப்போர்க்கு, அகப்பொருள் இலக்கணமும் இலக்கியமுமே ஏற்ற மறுப்பாம். களவு வழியிலேயே தமிழர் இல்லறம் புகுந்தனரெனில், அதற்குக் களவு என்ற பெயர் ஏன் அமைந்தது? மகள் தன் களவைப் பெற்றோருக்கு மறைத்தாளென்று புலவர் பாடுவதேன்? தலைவன் இருள் மழை விலங்குகளுக்கு அஞ்சாது, காடும் மலையும் இரவில் கடந்து வந்து, தலைவியை இரகசியமாகக் கண்டு கூடினன் என்றோ, காவல்மிகுதியால் அவளைக் காணாது மீண்டான் என்றோ செய்யுட்கள் செப்புவதேன்?

கழியக்* காதலர் ஆயினும் சான்றோர்
பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார் (அகநா. 112)

என்று தலைவனைத் தோழி இடித்துரைத்துத் 'தொன்று இயல் மரபின் மன்றல்** 'நிகழவேண்டுமென்று வற்புறுத்துவதேன்? பெற்றோர் செய்விக்கும் மன்றலைத் 'தொன்று இயல் மரபு' என அவள் உரைப்பது, களவே தமிழர் நெறி என்ற கணிப்போடு எவ்வாறு பொருந்தும்? களவைச் சமுதாயம் விரும்பிப் போற்றியதெனின், உடன்போக்கு***க்கு இடம் ஏது? தலைவியின்

---

* கழியக்காதலர்-மிகக்காதல் கொண்டார். 'பழியொடு வரும் இன்பம்' என்று நீடித்த களவின்பத்தைக் குறிப்பிடுகிறாள் தோழி. வெஃகார்-விரும்பார்.

** தொன்றுதொட்டு வந்த முறையிலான திருமணம்

*** உடன்போக்கு-பெற்றோருக்குத் தெரியாமல் தலைவி தலைவனுடன் சென்று விடுதல்.

களவை அறிந்த பெற்ருேரும் உடன்பிறந்தாரும் குடிக்கு இழுக்கு என்று கொதித்தெழுவதேன்?

உயர்வுதாழ்வு பாராட்டாத உணர்வு காதல். உயர்குடிப் பெருமகன் பணிப்பெண்ணைக் காதலிப்பதற்கோ, காரோட்டியைச் சீமாட்டி விரும்புவதற்கோ தடை இருக்கமுடியாது. சாதி, குடி, அறிவு, செல்வம் முதலியவற்ருல் ஒத்தவரே காதலிப்பர் என்று கூறுவது காதற் தத்துவத்துக்கு இல்லாத வரையறையை விதிப்பதாகும். ஆனல் பிறப்பு (சாதி), குடிமை (குடிக்கேற்ற ஒழுக்கம்), அறிவு, திரு முதலியவற்ருர் ஒத்த தலைவனும் தலைவியுமே காதலராவர் என்றும், தலைவன் தலைவியினும் உயர்ந்தோனுயின் தடையில்லை என்றும் கூறுவார் தொல்காப்பியர் (பொருள் 93, 273). உயர்நிலைத் தலைவி தன்னிலும் தாழ்ந்த நிலைத் தலைவனைக் காதலிப்பதற்கு இடம் தராத வரையறை இது. இந்த வரையறையே அகத்திணை இலக்கணம் புலவர்கள் புனைந்துகொண்ட ஒன்று என்பதைப் புலப்படுத்தும்.

அகத்திணை இலக்கியம் உலக இயல் வாழ்வின் படப்பிடிப்பு அல்ல என்பதை இன்னெரு வகையிலும் ஊகிக்கலாம். சங்க காலத்தில் பரத்தையர் இருந்தனர் என்பதும், மேல்வருக்க இளைஞர் பலர் பரத்தைநாடிகளாக இழிவுற்றனர் என்பதும், மதுரைக் காஞ்சி, சிலப்பதிகாரம் முதலியவற்ருல் விளங்குவது மெய்யே. ஆனல் பரத்தைமை என்பது சிறுபான்மையோரைப் பீடித்த நோயே. மக்கட் தொகையுடன் ஒப்பிடும்போது விலைமகளிர் சிலரே. அவர்களும் பெரும்பாலும் புகார், மதுரை முதலிய பெருநகரங்களிலேயே வாழ்ந்தனர். ஆனல் அகத்திணை இலக்கியத் தலைவர்கள் மனைவியரை நீங்கிப் பரத்தையரை நாடிச் செல்வோராகக் காட்சி தருகின்றனர். 966 கற்பியற் பாக்களில் 279 பரத்தையிற் பிரிவுக்குரியனவாக உள்ளன. இது உண்மை வாழ்வின் வெளியீடு எனில், குலமகளிர் பாதி விலைமகளிர் பாதியாகப் பெண் குலம் அமைந்திருந்தது என்று தோன்றும். அத்தகைய இழிநிலை ஒரு நாளும் சமுதாயத்துக்கு வாய்க்கவில்லை என்பது வெளிப்படை. எனவே, அகத்திணைக் கற்பனையைச் சமுதாய வாழ்வின் சித்திரமாக்க் கொள்வது பிழையே.

அகப்பொருள் இலக்கியம் இயற்கைப் பொருள்களின் இயல்புகளைச் சுவையாகச் சித்திரிப்பதிலும், காதல் என்னும் பண்பின் தன்மைகளை நுட்பமாக வெளியிடுவதிலும், உலக இயல்போடு ஒத்தனவே. ஆனல் அவற்றுக்கு வாய்ப்பாக அது அமைத்துக் கொள்ளும் மரபுகளும் நிகழ்ச்சிகளும் புனைந் துரையே. எனவே,

நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்* (பொருள் 53)

என்ருர் தொல்காப்பியர். பெரும்பான்மையும் புனைந்துரையே அமைதலின், நாடக வழக்கை முன்னர்க் கூறினர் எனலாம். அகத்திணை நிகழ்ச்சி கற்பனை என்பதாலேயே, அகத்திணைப் பாக்களில் அவற்றுக்குரிய மாந்தரை இயற்பெயர்களால் கூறு தலாகாது என்ருர் தொல்காப்பியர் (பொருள் 54). தலைவன், தலைவி, தோழி, செவிலி என உறவுப்பெயராற் கூறலாம். நாடன், துறைவன் போன்ற நிலப்பெயராலோ, உழவன், ஆயன்போன்ற தொழிற்பெயராலோ கூறலாம். ஆனல் இட்டு வழங்கும் பெயரால் குறிப்பிடக்கூடாது. பெயர் கொடுத் தால் வரலாற்றுணர்ச்சியே தோன்றுமென்று, அவ்வாறின்றிக் காதல் மனக் கற்பனையிலே நாம் லயிக்க வேண்டுமென்று, பெயர் சுட்டா வரையறையைச் சான்ருேர் கண்டனர்.

களவுநெறியே தமிழர் நெறி என்று அகவிலக்கியக்கற்பனை யிலிருந்து துணிவதின் தவற்றைப் புறப்பாடல்களான வரலாற் றுப் பாடல்களிலிருந்தும் தெளியலாம். இங்கு முதற்கண் குறிப்பிடத்தக்கது, பாரி மகளிரை வாழ்க்கைப் படுத்துவதற் குக் கபிலர் மேற்கொண்ட முயற்சியாகும். சங்கப் புலவர் பாராட்டும் புகழ் உடைய பெரும்புலவர் கபிலர். குறிஞ்சிப் பாட்டு வாயிலாகக் களவொழுக்கத்தினைச் சிறப்பாகப் பாடிய வர் அவர். அதன்மூலம் ஆரிய அரசன் பிரகத்தனுக்குத் தமிழ்ச் சுவையை அறிவுறுத்தினுர் என்பர். ஆனல் உயிர்த் தோழனுன பாரி உயிர்நீத்தபின், களவுபாடிய கபிலர் பாரி மகளிரைக் களவு நெறியில் படர்ந்து கணவரைத் தேடிக்

* நாடக வழக்கு — புனைந்துரை வழக்கு. புலனெறி வழக் கம்-புலவரால் கைக்கொள்ளப்படும் செய்யுள் வழக்கு.

கொள்ளுமாறு கூறினரல்லர். மாருகத் தாமே அவர்களைத் தக்காருக்கு மணம் புரிவிக்க முயன்ருர். பாரி மகளிர் வேளிர் குலப் பெண்கள்; எனவே, அவர்களை வேளிர் குலத்திலேயே கொடுக்க முற்பட்டார். அதன்பொருட்டு முதலில் விச்சிச் கோன் என்ற வேளிடம் பாரி மகளிரை அழைத்துச் சென்று அவர்களை மணந்து கொள்ளுமாறு வேண்டினுர்.

யானே, பரிசிலன், மன்னும் அந்தணன்: நீயே
வரிசையில் வணக்கும் வாள்மேம் படுநன்;
நினக்குயான் கொடுப்பக் கொண்மதி* (புறநா. 200)

என்று அவர் விடுத்த வேண்டுகோளை விச்சிக்கோன் ஏற்ருன் அல்லன். அடுத்து, இருங்கோவேளிடம் சென்று,

யானே
தந்தை தோழன்; இவர்என் மகளிர்;
அந்தணன், புலவன், கொண்டுவந்தனனே (புறநா. 201)

என்று கூறி, ''யான்தர இவரைக் கொண்மதி'' என்று கேட்டுக் கொண்டார். எனவே, இலக்கியத்தில் களவு பாடிய கபிலரே, நடைமுறையில் மரபுநெறியிலேயே பாரிமகளிர்க்கு மணம் புரிவிக்க முற்பட்டார் என்று அறிகின்ருேம்.

பதிற்றுப் பத்துப் பதிகங்களிலிருந்து சேர மன்னர்கள் வேளிர் மகளிரை மணந்த செய்திகளை அறிகிருேம். ஒருசேரன் சோழன் குலப் பெண்ணை மணந்தான் என்றும் அறிகிருேம். ஆனுல் அவர்களில் எவரும் களவு நெறியில் மணம்புரிந்தன ரென்று கூறப்பெறவில்லை.

கரிகாலனும் அவன் தந்தையும் வேளிர்குலப் பெண்களை மணந்தனர் என்ற மரபுரையிலும் களவு நெறிச் செய்தி இடம் பெறவில்லை.

---

* பரிசிலன்-பரிசில் வேண்டி இரப்போன். (இரப்போனே கொடுக்கிறேன் என்று நகைச்சுவை தோன்ற நயம் படக்கூறுகிருர்). மன்னும்-நிலைபெற்ற, வரிசையில்—தகுதியான முறையில், வணக்கும்-(பகைவரைப் போரில்) பணியச் செய்யும், வாள் மேம்படுநன்-வாளால் மேம்படுபவன்: கொண்மதி-கொள்வாயாக.

வேறு புறப்பாடற் செய்திகள், அரசர் தமக்குப் பெண்தர மறுத்தோருடன் போர் புரிந்ததை எடுத்துரைக்கின்றன. மூவேந்தரில் எவருக்கும் பாரி பெண்கொடுக்க மறுத்ததாலயே, மூவேந்தரும் பாரியின் பறம்பு மலையை முற்றுகையிட்டனர். எனவே, அதைப்பற்றிக் கபிலர் பாடிய பாட்டுக்கள் (புறநா. 109, 110, 111) மகள் மறுத்தல் என்னும் துறைக்குரியனவாக அமைந்தன. மூவேந்தரும் பறம்பை முற்றுகையிட்டபோது, கபிலரால் பழக்கப்பெற்ற கிளிகளும் குருவிகளும் வெளியே பறந்து சென்று விளைபுலங்களிலிருந்து நெற்கதிர்களைக் கொண்டுவந்தன என்று நக்கீரரும் ஔவையாரும் கூறுவர் (அகநா. 78, 303). பல்லாண்டு முற்றுகை நீடித்ததென்றும், பின்னர் பாரி வென்றானென்றும் நக்கீரர் கூறுவார். ஆனால் எவ்வாறோ மூவேந்தரும் பறம்பைக் கைக்கொண்டனரென்றும் பாரி உயிர் நீத்தான் என்றும் அறிகிறோம் (புறநா. 112-114).

'நின் மகளைத் தருக' என்னும் அரசனோடு மாறுபட்டு நிற்றலை மகட்பாற் காஞ்சி என்பர். அத்துறைக்குரிய 21 பாட்டுக்கள் (336-54: 356) புறநானூற்றில் உள்ளன. இவையெல்லாம் மகளைத்தர மறுத்த சீறூர்த் தலைவருடன் அரசர் நிகழ்த்திய போர்களைக் குறிப்பிடுகின்றன. இவ்வாறு அரசர் வன்முறையால் பெண்ணை அடைந்து மணப்பதை இராக்கதம் என்பர் வடநூலார். காசிவேந்தன் தன் பெண்களுக்காகச் சுயம்வரம் ஏற்பாடு செய்தபோது, பீஷ்மர் அங்குச் சென்றுத் தன் தம்பிக்காகக் காசி அரசகுமாரிகளைக் கவர்ந்து வந்தாரென்றும், அவரை எதிர்த்த அரசர்களை யெல்லாம் முறியடித்தாரென்றும் பாரதத்தில்* படிக்கிறோம். அதேபோன்ற இராக்கதத் திருமண முறையைத் தமிழ் வேந்தரும் போற்றினர் என்பதையே பாரியோடு அவர்கள் இகலியதும் மகட்பாற் காஞ்சித்துறைப் பாட்டுக்களும் புலப்படுத்துகின்றன.

மகள் மறுத்தல், மகட்பாற்காஞ்சி என்ற துறைப் பெயர்களே வேறு ஓர் உண்மையையும் நமக்கு உணர்த்தும். பெண்ணை மணக்க விரும்பிய அரசன் தந்தையிடம் போய்த்

---

* ஆதிபர்வம்; அத்தியாயம் 109.

தான் பெண்கேட்டான்; அவன் மறுக்கவே போர் மூண்டது. எனவே, கொடுப்பதற்குரியவன் தந்தை என்பதே சங்ககாலக் கொள்கை என்பதும், களவு நெறியே தமிழர் நெறி என்பது தவறு என்பதும் விளங்கும். அத்துறைகளுக்குரிய பாட்டுக் களில், பெண்ணுக்கு வேந்தனை மணக்க விருப்பமில்லை என்ற செய்தி இருந்தாலும், வேந்தரின் கைக்கிளை*யால் விளைந்த போர்கள் என்று கூறலாம். ஆனால் தந்தைக்கும் அண்ணன் மாருக்கும் விருப்பமில்லை என்ற செய்தியே அப்பாட்டுக்களில் வருகிறது. எனவே, ஆணும் பெண்ணும் தாமே வாழ்க்கைத் துணைவர்களை அடைந்தனர் என்ற கொள்கைக்கு அப்பாட்டுக் களும் தக்க மறுப்பாக உள்ளன.

காதற் திருமணமே நடந்ததில்லையென்று நாம் கூறேம். மரபுத் திருமணத்திலும் காதல் மலர்வதுண்டு; பெண் விரும் பும் தலைவனையே பெற்றோர் மருமகனாக வரிப்பதும் உண்டு; பெற்றோரைப் பொருட்படுத்தாது தன்மனங்கவர்ந்த மணாள னோடு சென்று மணம்புரிந்த பெண்களும் இருந்தனராகலாம். ஆனால் பெற்றோர் செய்வித்த மரபுத்திருமணமே சங்ககாலத் திலும் பெருவழக்காயிருந்தது என்பது தெளிவு. எனவே கோவலனுக்கும் கண்ணகிக்கும் மரபுத் திருமணமே நடந்த தாகக் கதையை நடத்துகிறார் இளங்கோஅடிகள்.

உறவினர் இருவகைப்படுவர். தாய், தந்தை, உடன் பிறந்தார், அத்தை, மாமன், அத்தான், மருமகன், மருமகள் முதலிய உறவினர் ஒருவகை. கணவன் அல்லது மனைவியும், அவன் அல்லது அவள் மூலம் ஒருத்தி அல்லது ஒருவனுக்கு ஏற் படும் உறவினரும் வேறு வகை. திருமணத் தொடர்பால் ஏற் படும் இரண்டாம் வகை உறவினரைக் குறிப்பிடும் சொற்கள் தமிழில் வெகுசில; வடமொழியில் திருமணம் மூலம் ஏற்படும் ஒவ்வொரு வகை உறவினருக்கும் பெயர் உண்டு. இந்த வேற் றுமை தமிழின் வளக்குறைவாலோ தற்செயலாகவோ நேர்ந்த தன்று. தமிழர்களின் மரபுத் திருமணத்தில் உறவு முறை யிலேயே பெண் எடுப்பது வழக்கமாக இருந்து வந்ததால்— இன்றும் அது பெருமளவு நீடிக்கிறது-திருமணவழி உறவின

---

* கைக்கிளை — ஒருதலைக்காமம்.

ருக்குத் தனியே பெயர் அமையத் தேவையில்லாது போயிற்று. போதாயனர் காலத்துக்கு முன்பிருந்தே, தென்னாட்டில் அத்தை அல்லது அம்மான் அல்லது அக்காள் பெற்ற மகளை மணப்பது பெருவழக்காக இருந்து வருகிறது*. எனவே இரத்த உறவினரே திருமண உறவினராகவும் உள்ளனர். அந்நிலையில் அத்தை, அம்மான், அத்தான், அக்காள், மருமகன், மருமகள் முதலிய இரத்த உறவுப் பெயர்களே திருமணவழி உறவினருக்கும் பயன்படுவது இயல்பே. தன் சாதியிலேயே புதிய புதிய குடிகளில் திருமண உறவு கொள்ளும் வகையில் வடநூல் விதி அமைந்துள்ளதால்** வடபுலத்தில் திருமண உறவினருக்கு இரத்த உறவுப் பெயர்கள் பொருந்தா. எனவே வடபுல மொழிகளில் திருமணவழி உறவினரைக் குறிப்பதற்கு வேறு பெயர்கள் அமைந்தன. ஆக, முறைப்பெண்ணை மணப்பதே மரபாக இருந்ததென்பதைத் தமிழ் உறவுமுறைச் சொற்களிலிருந்தே ஊகிக்கலாம். முறைப்பெண்ணை மணப்பதை உரிமையாகவும் பெருமையாகவும் கடமையாகவும் போற்றிய சூழலில், முறைப்பெண்ணைக் காதலித்து மணப்பதும் இயல்பே.

---

* அத்தையே அம்மானை மணந்த நிலையில், அத்தைமகள் என்பதே அம்மான் மகளையும் குறிக்கும்.

** தந்தை வழியிலோ தாய்வழியிலோ சொந்தக்காரரின் குடும்பங்களில் பெண் எடுப்பதை ஆரிய மரபு அனுமதிக்காது. இரண்டு மூன்று தலைமுறை கடந்த தொடர்பால் தூரத்து அத்தையாகவோ மாமனாகவோ உள்ளவரின் பெண்ணைக்கூடக் கட்டிக்கொள்ளக் கூடாதென்பது ஆரிய வரையறை. தான் வாழும் கிராமத்திலேயே பெண் எடுப்பதற்கும் தடைவிதித்தது ஆரியமரபு. ஆகவே, ஊருக்குள்ளோ, உறவினருக்குள்ளோ பெண் எடுக்காது, புதிய புதிய குடும்பங்களில் திருமண உறவு கொண்டு, சொந்தத்தை விரிவாக்குவதே ஆரிய மரபு என்றும், சொந்தத்தைப் பெருக்குவதற்குப் பதிலாக, முறைப்பெண்ணை மணந்து பழைய உறவுக்குப் புதிய வலுத்தருவதே திராவிட மரபு என்றும் கூறலாம். ஒரு சாதியின் பல கிளைகளுக்கு இடையே திருமண உறவும்

முறைப்பெண் இல்லாததாலோ, வேறு காரணத்தாலோ, பெற்றோர் தன் மகனுக்குக் குலம், குணம் முதலிய பொருத்தம் நோக்கிப் புதிய கிளையில் பெண் எடுத்தனர் என்று கொள்வதற்குத் தடையில்லை. காதற் திருமணங்கள் சிலவற்றாலும் புதிய மண உறவு ஏற்பட்டிருக்கலாம். ஆனால் முறைப் பெண்ணை மணத்தல் பெருவழக்காக இருந்ததாலேயே, இரத்த உறவுப் பெயர்களே மணஉறவுப் பெயர்களாயின என்பது தெளிவு. உறவுக்கு வெளியே பெண் எடுத்தோரும் வழிவழி வந்த இரத்த உறவுப் பெயர்களாலேயே புதிய மணவழி உறவினரைக் குறிப்பிட்டனர்.

---

இரத்தக் கலப்பும் உண்டாவதற்கு வாய்ப்புத் தருவது ஆரிய மரபு. சாதிக்குள்ளே தன் கிளைக்கு அயலான எந்தக் கிளையிலும் பெண் எடுக்கத் தடையில்லை என்றாலும், நடைமுறையில், முன்பே உறவுகொண்ட சில குடும்பங்களுக்குள் கொண்டு கொடுத்தலே திராவிட மரபு.

திராவிட மரபின் தொன்மையைப் போதாயனரின் தரும சூத்திரத்திலிருந்து ஊகிக்கலாம். கி. மு. ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த அவர், முறைப்பெண்ணை மணப்பதைத் தென்னாட்டின் தனிச் சிறப்பாக மொழிந்து, அதற்கு ஆதரவும் தருகிறார்.

ஆரிய திராவிட மரபுகளின் செல்வாக்கு மகாராஷ்டிரத்திலும் குஜராத்திலும் ஒரிசாவிலும் ஒருங்கே காணப்படுகின்றன. அம்மான் மகளை மணக்கும் முறை மகாராஷ்டிரத்தில் நிலவுகிறது; குஜராத்திலும் ஒரிசாவிலும் சில சாதிகள் அம்முறையைக் கடைப்பிடிக்கின்றன. திராவிடமொழியினரை அடுத்து வாழும் மகாராஷ்டிரர்கள் அத்தைமகளை மணப்பதையும் அனுமதிப்பர். (அம்மான் மகளான சுபத்திரையை அர்ஜுனன் மணந்தது போன்ற மகாபாரதச் செய்திகள் உள. இந்தியப்பண்பாட்டின் கருவூலமான மகாபாரதத்தில் அவ்வாறு திராவிட மரபுகள் இடம் பெற்றது இயல்பே.)

## (ஈ) மணவினைச் செய்திகள்

தமிழகம் திருமணவினைக்கு சந்திரன் ரோகிணியோடு கூடிய நாளையே பெரிதும் நாடியது என்பது வேளிர் மரபினரான நல்லாவூர் கிழார் பாட்டாலும்(அகநா. 86), பழங்குடி மரபினரான மூதெயினனுர் பாட்டாலும் (அகநா.136), சிலப்பதிகாரத்தாலும் விளங்கும். போதாயன கிருஹ்ய சூத்திரமும் மானவ கிருஹ்ய சூத்திரமும், ரோகிணியையே மணவினைக்கு ஏற்ற சுப நட்சத்திரங்களில் முதன்மையானதாகக் கூறுவது இங்குக் குறிப்பிடத்தக்கது.

அகப்பாட்டு இரண்டும் வதுவை நன்மணத்தைச் சிறப்பாகக் குறிப்பிடுகின்றன. புத்திரப் பேறுடைய மங்கலமகளிர் நால்வர், 'கற்பில் வழுவாது கணவனைப் பேணுவாயாக!' என்று மணமகளை வாழ்த்தி நீராட்டுவதையே வதுவை நன்மணம் என்பர். வதுவைக் கலியாணத்துக்குப் பின்னர், பெண்ணின் பெற்ருேரும் சுற்றத்தாரும் அவளைப் 'பேரில் கிழத்தி ஆகுக' என்று கூறி மணமகனுக்குக் கொடுப்பர் என்பர் நல்லாவூர் கிழார். ஆனல் அவ்வாறு மகட்கொடை செய்யும்போது வேறு சடங்கு இருந்ததா என்பதை அவர்குறிப்பிடவில்லை. மூதெயினனுர் பாட்டில், சகுனம் பார்த்தலும், கடவுள் வழிபாடும், மணமுரசு முழக்கமும் குறிப்பிடப் பெறுகின்றன. இரண்டு பாட்டுமே மணவொலி மிக்க பந்தலைக் குறிப்பிடும். மணல் பரப்பிய இடத்தில் பெரிய பந்தர் அமைத்து, மனைவிளக்கு நிறுத்திப் பூமாலைகளைத் தொடர்ந்து தொங்கவிடுவர் என்பர் நல்லாவூர் கிழார். உளுத்தம் பருப்புடன் கூட்டிச்சமைத்த பொங்கலை விருந்தினருக்கு அளிப்பர் என்றும் அவர் கூறுவர். சில குடிகளில் இறைச்சியும் கூட்டி ஆக்குவர் என்று மூதெயினனுர் பாட்டிலிருந்து அறியலாம். இறைச்சியுடன் கூட்டிச் சமைத்த நெய்மிக்க வெண்சோற்றை வரையா வண்மையோடு விருந்தினர்க்கு அளிப்பர் என்பது அவர் கூற்று.

மணமகன் மணமகளுக்குத் தாலிகட்டும் செய்தி இரண்டு பாட்டிலும் கூறப்பெறவில்லை. ஆனல் ஆய் அண்டிரனின் மனைவியர் மங்கல சூத்திரம் அணிந்திருந்தனர் என்று முடமோ

சியார் கூற்றிலிருந்து ஊகிக்கலாம். ''ஈகை அரிய இழை அணி மகளிர்*'' என்று அவர்களை அவர் குறிப்பிடுவார் (புறநானூறு 127). கோவலனுக்கும் கண்ணகிக்கும் திருமணம் செய்விக்கும் நாளில், முரசும் மத்தளமும் சங்கும் ஒலிக்க, மங்கல சூத்திரத்தை ஊர்வலமாகக் கொண்டு வந்தனர் என்பர் இளங்கோ அடிகள்.** தனிமைத் துன்பத்தில் தவித்த கண்ணகியை ''மங்கல அணியின் பிறிது அணி மகிழாள்'' (4:50) என்று குறிப்பிடுவார் இளங்கோ. மணப்பெண்ணை நீராட்டிய மாதர் நால்வரும் சுமங்கலிகள் என்பதை 'வால் இழை மகளிர்' என்ற தொடரால் நல்லாவூர் கிழார் குறிப்பிடுவதால், 'வால் இழை' (தூய அணி) என்பதும் தாலியைக் குறிப்பதாகலாம். அது எவ்வாறு ஆயினும், சங்ககாலத்தில் தாலி கட்டும் சடங்கு வழக்கிலிருந்ததை மோசியார் வாக்காலும் சிலப்பதிகாரச் செய்தியாலும் அறியலாம்.

வைதிகமரபில், மணமகன் மணமகளின் கைத்தலம் பற்றும் வினையே—இதனைப் பாணிக்கிரகணம் என்பர்-அவர்களைத் தம்பதியாக்குகிறது. மனு அதனைக் கூறுவார் (3:43). சாணக்கியரும் அவ்வாறு கருதுவதாலேயே, திருமண ஒப்பந்தத்திலிருந்து விலகுவதெனில் பாணிக்கிரகணத்துக்குமுன் விலகவேண்டுமென்பார் (அதி 3—அத் 72). தமிழரும் பாணிக்கிரகணத்தைப் போற்றினர்.

மத்தளம் கொட்ட, வரிசங்கம் நின்றுஊத
முத்துடைத் தாமம் நிரைதாழ்ந்த பந்தற்கீழ்,
மைத்துனன் நம்பி மதுசூதன் வந்துஎன்னைக்
கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன், தோழி! நான்***
(6:6)

---

* ஈகை அரிய இழை-மங்கலிய சூத்திரம், அணி-அணிந்த

** ''அகலுள் மங்கல அணி எழுந்தது.'' (சிலப்பதிகாரம் 1:47) (அகலுள்-ஊரில், எழுநதது-வலம் செய்தது)

*** வரி சங்கம்-ரேகைகளைஉடையசங்கு;முத்துடைத்தாமம் -முத்துச்சரங்களால் அமைந்த மாலை; நிரை தாழ்ந்த—வரிசையாகத் தொங்குகின்ற.

என்று நாச்சியார் திருமொழியில் ஆண்டாள் தம் திருமணக் கனவைப் பாடுவார். சங்க இலக்கியத்திலேயே கைத்தலம் பற்றும் வினை இடம் பெறுகிறது.

நேர்*இறை முன்கை பற்றி, நுமர் தர
நாடறி நன்மணம் அயர்கம் (231—32)

என்று தலைவன் தலைவிக்கு உறுதி கூறினானென்று கபிலரின் குறிஞ்சிப்பாட்டில் வருவதால், பெண்ணின் பெற்றோர் அவள் முன்கையையெடுத்து மணமகனிடம் தர, அவன் அதனைப்பற்றி மணவினை நிகழ்த்துவான் என்று உணரலாம். எனினும், தாலி கட்டும் வினையே திருமணத்தை உறுதி செய்யும் தலைமைச் சடங்காக ஏற்றம் பெற்றது.முதற்கண்,திராவிடரே இம்முறையைக் கண்டு விரும்பிப்போற்றினர் என்று கருதலாம்.

முன்னாளில், குழந்தைகளுக்குக் காப்பாகத் தாலி அணிவிப்பர். ''பொன்னுடைத் தாலி என்மகன்'' என்று அகநானூறும் (54), ''தாலி களைந்தன்றும் இலனே'' என்று புறநானூறும் (77) குறிப்பிடும். பிறந்த ஐந்தாம் நாளில் இதனைப் பூட்டுவது மரபு என்பர். திருமாலின் சங்கு, சக்கரம், தண்டு, வில், வாள் என்னும் ஐந்தாயுத வடிவாக இதனை அமைத்தனர். எனவே, இது ஐம்படைத்தாலி என்றும் பெயர் பெறும். ஐம்படை என்றும் (3:135) ஐம்படைத்தாலி என்றும் (7:56) மணிமேகலை இதனைக் குறிப்பிடும். குழந்தைகட்கு இரட்சையாகத் தாலி அமைந்ததுபோல், பத்தினி வாழ்வுக்குப் பாதுகாப்பாகத் தாலி கட்டும் வழக்கம் நிலைகொண்டது.

பாணிக்கிரகணத்தோடு ஓமம் வளர்த்தலும் தீவலம் செய்தலும் சப்தபதியும்**யும் வைதிக மணவினையில் இடம்பெறும். இந்தச் சடங்குகளை அந்தணர் செய்தனர் என்று கலித்தொகையிலிருந்து அறிகிறோம் (69:3-5). பிறரும் செய்தனர்

---

* நேர் இறை-நுண்ணியமூட்டுவாயை உடைய (உன்முன்கையை). நுமர்-உன் பெற்றோர். நாடறி-பலர் அறியும், அயர்கம்-நிகழ்த்துவோம்.

** சப்தபதி: திருமணத்தில் தீவலம் வருகையில் மணமகன் மணமகளை மந்திரபூர்வமாக ஏழடி எடுத்துவைக்கச் செய்யும் சடங்கு.

என்பது சிலப்பதிகாரத்தால் விளங்கும். கோவலனும் கண்ணகியும்,

மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத்
தீவலம் செய்வது காண்பார்கண் நோன்பு
என்னை*! (1:52: 53)

என்று மகிழ்ந்து மொழிவார் இளங்கோ அடிகள்.

வைதிக மரபில் மணவினை நிறைவுற்றவுடன், அம்மி மிதித்தல், அருந்ததி காணுதல் முதலிய சடங்குகள் நிகழும். அவற்றைப்பற்றிப் பழைய தமிழ் நூல்களில் செய்தி இல்லை. அருந்ததியைக் கற்புக்கு முன்மாதிரியாகச் சங்கச் சான்றோரும் போற்றினர் என்பதே நாம் அறிவது**

## (2). இல்லற நெறி

திருமணம் செய்து இல்லறம் புகுந்தவன், பிரமசாரி, வானப்பிரஸ்தன், சன்னியாசி என்னும் மூவகையினருக்கும் உணவு முதலியன கொடுத்துப் பாதுகாப்பான் என்பார் வள்ளுவர்:

---

* மறைவழி-வேதநெறி. நோன்பு என்னை-என்னதவம் செய்திருக்கவேண்டும்!

** 'வடமீன் புரையும் கற்பின் மடமொழி அரிவை' (புறநா-122 வடமீன்–அருந்ததி, புரையும்-ஒக்கும், மடமொழி அரிவை-மென்மொழிப்பெண்)
'அருந்ததி அனைய கற்பின்' (ஐங்குறு 442).
'விசும்புவழங்கு மகளிருள்ளும் சிறந்த
செம்மீன் அனையள்!' (பதிற்று 31:27-28) (விசும்பு வழங்கு மகளிர்-வானுலகில் திரியும் தெய்வப்பெண்கள். செம்மீன்-அருந்ததி)
பெருநல் வானத்து வடவயின் விளங்கும்
சிறுமீன் புரையும் கற்பின் நறுநுதல் (பெரும்பாண். 302-303)
வடமீன்போல் தொழுதேத்த வயங்கிய கற்பினள். (கலித். 2—21) (வயங்கிய-விளங்கிய).
தீதிலா வடமீனின் திறம் இவள் திறம் (சிலப்பதிகாரம் 1:27)

இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை* (41)

இல்லறத்தான் பொருள் ஈட்டி அரசுக்கு இறை செலுத்தித் தன் குடும்பத்தை நடத்துவதோடு, பிதிரர் தேவர், விருந்தினர், உறவினர் ஆகியோரிடத்தும் தன் கடமையை ஆற்ற வேண்டுமென்பார் வள்ளுவர் (43).

இல்லறத்தின் சிறப்பு மக்கட்பேறு. குழந்தையைப் போற்றி மகிழ்வித்து மகிழ்வதில் இந்தியப்பண்பாடு முதலிடம் பெற்றது. அடிபடாத குழந்தை படியாதுஎன்று பொருள்தரும் பழமொழி ஆங்கிலத்தில் உண்டு; அதுபோன்ற மூதுரைகளைப் பண்டைய இந்திய இலக்கியத்தில் காணமுடியாது என்பர் பாஷம். பண்டைய பாரதத்தில் குழந்தைகளுக்கிருந்த உரிமையும் சலுகையும் பெருமையும், நவீன காலத்துக்கு முன்னர், அனேக ஐரோப்பிய குழந்தைகளுக்குக் கிட்டியதில்லை என்றும் அவர் கூறுவார். இளநகை பூத்த குழந்தை மழலை பேசி மடியில் அமரும்போது, அதன் உடம்பில் படிந்த அழுக்கும் அவனைப் புனிதமாக்கும் திருவருட் கொடையே என்று காளிதாசனின் சாகுந்தல நாடகத்தில் துஷ்யந்தன் பேசுவதை மேற்கோள் காட்டுவார் பாஷம்.**

'குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்தில்' என்பது தமிழ்ப் பழமொழி. பலரோடு பகிர்ந்துண்ணும் பொருட் செல்வம் உடையனுயினும், அறிவை இன்பத்தால் மயக்கும் குழந்தையைப் பெருதவன் வாழ்வு பாழே என்பான் பாண்டியன் அறிவுடை நம்பி:

படைப்புப்பல படைத்துப் பலரோடு உண்ணும்
உடைப்பெருஞ் செல்வர் ஆயினும், இடைப்படக்
குறுகுறு நடந்து, சிறுகை நீட்டி,
இட்டும், தொட்டும், கவ்வியும், துழந்தும்,
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்,

---

* இயல்பு-அறஇயல்பு, மூவர்-ஏனைய ஆசிரமங்களைச் சார்ந்த மூவர் (பிரமசாரி, வானப்பிரஸ்தன், சன்னியாசி): நல்லாறு-நன்னெறி, நின்ற-நிலையான.

** The wonder that was India

மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைத் தாம்வாழு நாளே* (புறநா 188)

யாழையும் குழலையும் காட்டிலும் மக்களின் மழலையே பெற்றோர்க்கு இனிது என்பர் வள்ளுவர்:

குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்
மழலைச்சொற் கேளா தவர். (66)

ஓசைநயமோ பொருளோ இல்லையென்றாலும், புதல்வரின் மழலை பெற்றோர்க்குத் திருவருட்பேறும் என்றார் ஔவையார்:

யாழொடும் கொள்ளாப் பொழுதொடும் புணரா;
பொருள்அறி வாரா; ஆயினும், தந்தையர்க்கு
அருள்வந் தனவால், புதல்வர் தம்மழலை.** (புநா. 92)

பொதுவில் மக்கள் என்று மொழியாது, புதல்வர் என்றே புகன்றார் ஔவையார். குலம் விளங்கச் செய்வோன் மகனே என்ற கொள்கை, மகனுக்குச் சிறப்புத் தந்தது. நற்புதல்வரைப் பெற்றோர் இம்மையில் புகழும் மறுமையில் துறக்கமும் எய்துவர் என்பது பலரும் கூறும் பழமொழி என்று கோசிகன் கண்ணனார் கூறுவார்:

'இம்மை உலகத்து இசையுடன் விளங்கி,
மறுமை உலகமும் மறுஇன்றி எய்துப,
செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்

---

* படைப்பு-செல்வம். உடைப்பெரும்-உடைமைமிக்க. இட்டும்-கலத்தில் இருப்பதைத் தரையில் இட்டும், தொட்டும்-அதனைப்பிசைந்து தோண்டியும், துழந்தும்-கையால் துழாவியும். அடிசில்-சோறு. பயக்குறை-பயனாகிய குறை, குறை-இன்றியமையாப் பொருள்.

** யாழ்-யாழோசை, கொள்ளா-ஒத்திருக்காது. பொழுது-காலம். பொருள் அறிவரோ: பொருளும் அறிய முடியாது.

சிறுவர்ப் பயந்தசெம்ம லோர்'எனப்
பல்லோர் கூறிய பழமொழி.* (அகநா 66)

அறப்போர் தொடங்கும் அரசன், பசு, பார்ப்பனர், பெண்டிர், பிணியாளர் ஆகியோருடன்,

பேணித்
தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்
பொன்போல் புதல்வர் பெருஅ தீரும்

பாதுகாவலான இடத்தை அடைவீர் என்று அறிவிப்பான் என நெட்டிமையார் கூறுவதால் (புறநா 9), பிதிரர்க்குப் பிண்டம் வைப்பதற்குப் புத்திரரை நாடினர் தொல்லோர் என்பது விளங்கும். பிதிர்க்கடன் செய்வதற்குப் புதல்வரைப் பெற்று முன்னேரைக் காத்தாய் என்று கபிலர் சேரனைப் பாராட்டுவதும் இங்குக் குறிப்பிடத்தக்கது**. புதல்வியரையும் விரும்பிப் போற்றினர் என்பது மெய்யே. கடவுளை இரந்து மகளைப் பெற்ற தந்தையையும் கபிலர் குறிப்பிடுவார் (ஐங்குறுநூறு 257). எனினும், ஆண்வழி முறையைக் கொண்டாடியதாலும், தென்புலத்தாருக்குக் கடன் இறுப்பவர் புதல்வரே என்று நம்பியதாலும், பண்டைய இந்தியர் புதல்வர்க்கு ஏற்றம் தந்தனர்.

இல்லறத்தாரின் கடன் மூன்று என்பது பண்டைய இந்தியாவின் நம்பிக்கை. அவை முனிவர்க்கும் தேவர்க்கும் தென்புலத்தார்க்கும் ஆற்ற வேண்டியனவாம். வேதம்ஓதி முனிவர் கடனையும், வேள்வியில் அவி சொரிந்து தேவர் கடனையும், சிராத்தம் செய்யும் புதல்வரைப் பெற்றுப் பிதிரர் கடனையும்

---

* இசை-புகழ். மறு-குற்றம். மறுஇன்றி எய்துவர் என்றதால் மறுமை உலகம் துறக்கமே ஆகும். செறுநரும் விழையும்-பகைவரும் விரும்பும். செயிர்தீர்-குற்றமில்லாத. காட்சி-அழகு. பயந்த-பெற்ற, செம்மலோர்-தலைமையை உடையோர். பல்லோர்-பலர்.

** இளந்துணைப் புதல்வரின் முதியர்ப் பேணித்
தொல்கடன் இறுத்த வெல்போர் அண்ணல்! (பதிற்று. 70;21-22) (முதியர்-முதுமை எய்தி மாண்டு பிதிரர் ஆனேர்).

தீர்க்க வேண்டும் என்பர் மனு (6:36). மூன்று கடன்களையும் செல்வக்கடுங்கோ வாழியாதன் தீர்த்தான் என்பார் கபிலர் (பதிற்று 70). இறந்தோர்க்குப்பிண்டமும் நீரும் அளிப்பதற்கு ஆண்மகவு வேண்டுமென்று, பெருஞ்சேரல் இரும்பொறை யாகம்* செய்ததை வருணித்து, வேள்வி செய்ததால் வீறுசால் புதல்வனைப் பெற்றானென்றும் கூறுவர் அரிசில்கிழார் (பதிற்று 74). அவரும் அப்பாட்டில் அவன் பிதிரர்க்குக் கடன் இறுக்கும் புதல்வனைப் பெற்றான் என்பதோடு, 'கேள்வி கேட்டு' முனிவரையும், 'வேள்வி வேட்டு'த் தேவரையும் இன்புறுத்தினன் என்றும் மொழிவர். இம்மூன்று கடன்களும் தொன்று தொட்டு வழிமுறையாக வருவன; எனவே, 'தொல்கடன், என்பர் கபிலர்.

மூன்று கடன்களைத் தீர்ப்பதோடு, சுற்றம் பேணியும் விருந்து ஓம்பியும், வறியார்க்கு உதவியும், அறவோர்க்கும் துறவோர்க்கும் ஆவன செய்தும், வையத்துள் வாழ்வாங்கு வாழ்வான் இல்லறத்தான். எனவே, கோவலன் மனையை மறந்தபோது,

> அறவோர்க்கு அளித்தலும் அந்தணர் ஓம்பலும்
> துறவோர்க்கு எதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
> விருந்து எதிர் கோடலும்** *(16:71—73)*

இழந்தேன் என்று கூறுவாள் கண்ணகி.

## (ஊ) வானப்பிரஸ்தம்

மக்கள் வளர்ந்து திருமணம் புரிந்து வாழ்வில் நிலை கொண்டபின், பொருளின்பத்தேட்டங்களிலிருந்து விடுபடுகிறான் தந்தை. அதிகாரத்தையும் பொறுப்பையும் மக்களிடம் ஒப்படைத்துவிட்டு வானப்பிரஸ்தன் ஆகிறான். இல்லாளுடன் கானகம் சென்று தவம் செய்வதே வானப்பிரஸ்தம் என்பர்.

---

* இதைப் புத்திரகாமேஷ்டியாகம் என்பர்.

** அறவோர்-துறவாது விரதங்காத்தோர். அளித்தல்-கொடுத்தல். ஓம்பல்-பேணுதல். எதிர்தல்-எதிர் கோடல்; எதிர்கொள்ளுதல். தொல்லோர் சிறப்பின்-முன்னையோரால் சிறப்பிக்கப்பெற்ற.

காடு செல்வதல்ல சிறப்பு; வாழ்க்கைப் போரிலிருந்து விலகுவதே வானப்பிரஸ்தப் பண்பு. தன்வரையில் ஆசை ஏதும் இல்லாது, தன் அனுபவத்தில் பிறந்த தெளிவால் மக்களுக்கும் பிறருக்கும் அரிய யோசனை கூறி உரிய உதவி செய்வான் வானப்பிரஸ்தன். எனவே, தவமே செய்தான் எனினும், அவனுக்குச் சமுதாயத் தொடர்பு உண்டு. தன்னை நாடிவந்தோர்க்கு அல்லன கடிந்தும் நல்லன உணர்த்தியும் உதவுவது அவன் பணி.

காலாகாலத்தில் அதிகாரத்தையும் பொறுப்பையும் அடுத்த தலைமுறையிடம் ஒப்படைப்பதற்கு வழிசெய்யும் வானப்பிரஸ்தத்தைத் தொல்காப்பியர் விதந்தோதுவார்:—

காமம் சான்ற கடைக்கோட் காலை
ஏமம் சான்ற மக்களொடு துவன்றி,
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே*

(பொருள் 192)

## (எ) சன்னியாசம்

நான்காவது ஆசிரமமாகிய சன்னியாசம் என்பது வீட்டிற்கு ஏதுவாகிய துறவறமாகும். தவம் செய்யும்போது யாதாயினும் ஒரு தொடர்பு உளதாயினும், அதனைப் பற்றறத் துறத்தல் சன்னியாசமாம். இது யாக்கை, இளமை, செல்வம் ஆகியவற்றின் நிலையாமையை உணர்ந்தவர்க்கே கைவரும். துறவியே மெய்யறிவு பெற்று அவா அறுத்து வீடு பேறு அடைவான் என்பது குறள்.

சங்கரர், விவேகானந்தர் போன்ற சிலஞானிகள் இளமையிலேயே துறவிகளாயினர் என்பது மெய்யே. ஆனால் பொது

---

* காமம் சான்ற கடைக்கோட்காலை-இன்பம் நிறைவாக நுகர்ந்து முடிந்த (முதுமைக்) காலத்தில். ஏமம்-பாதுகாப்பு. துவன்றி-கூடிநின்று. கிழவனும் கிழத்தியும்-தலைவனும் தலைவியும். சிறந்தது-வீடுபேறு, பயிற்றல்-அதற்கான வழியில் பழகுதல், இறந்ததன்-முற்கூறிய இல்லறத்தின்.

வில் முதல் மூன்று ஆசிரமங்களையும் வாழ்ந்து கடந்தவர்களே சன்னியாசிகளாக வேண்டுமென்பது முன்னோர் கருத்து. மனைவியரோடு இல்லறத்தில் இன்புற்ற ஒருவன் அடவிபுகுந்து துறவியாகி, அருவிநீரில் ஆடியும், யானை கொணர்ந்து தரும் விறகால் செந்தீப் பேணியும் வாழ்வதைச் சித்திரிப்பார் மாற்பித்தியார் (புறநா 251, 252).

உலக இயல் வாழ்வில் எக்குடியில் பிறந்தவராயினும், அவர் உலகப் பற்றை நீக்கித் துறவியான பின்னர், அவரை இறை உணர்வு பெற்றவராகப் போற்றுவது இந்தியப் பண்பாடு. பாயிரத்திலேயே, கடவுள் வாழ்த்தும் உலகவாழ்விற்கு முதற்தேவையான மழையின் சிறப்பும் (வான்சிறப்பு) பாடியவுடன், முற்றத்துறந்த முனிவரின் பெருமையைப் பேசுவார் வள்ளுவர். அறம்பொருளின்பங்களை உலகிற்கு உள்ளவாறு உணர்த்துவார் அவரே என்பதாலும், கடவுளரைப் போலவே அவரும் வணக்கத்துக்கு உரியர் என்பதாலும், பாயிரத்து மூன்றும் அதிகாரமாகவே அமைந்தது நீத்தார் பெருமை.

சங்ககாலத்தில் வாழ்ந்த அறிவரும் துறவிகளே.

மறுவில்[1] செய்தி மூவகைக் காலமும்
நெறியின் ஆற்றிய அறிவன் (பொருள் 75)

என்பது தொல்காப்பியர் திருவாக்கு. முக்காலமும் உணர்ந்த அறிவர் கணியரா[2]கவும் விளங்கினர். அறிவர்கூற்றை யாவரும் போற்றிப் பின்பற்றுவரென்ற வகையில், அவரை இலக்கியம் சிறப்பிக்க வேண்டுமென்றும்[3], அகப்பொருள் புனைந்துரையில் அவர் இடித்துரைப்போராகவும்[4] வாயில்களில் ஒருவகையினராகவும்[5] இடம் பெறுவர் என்றும் தொல்காப்பியர் கூறுவதிலிருந்து, அறிவர்க்கிருந்த பெருமையை ஊகிக்கலாம். பிற

---

[1] மறுஇல்-காமம், வெகுளி, மயக்கம் என்றும் மூன்று குற்றமும் இல்லாத. செய்தி-ஒழுக்கம்.
[2] கணியர்-சோதிடர்.
[3] பொருள் 509.
[4] பொருள் 154.
[5] பொருள் 193. வாயில்-தலைவனையும் தலைவியையும் இடை நின்று கூட்டும் தூது.

துறவியரைப்போல் அறிவரும் பிச்சை எடுத்து உண்டனர். இரவலரைப் போல் பல இல்லங்களில் ஐயம் பெற்று உண்ணுது, அவர் ஓர் இல்லத்தில் செந்நெல் சோறும் நெய்யும் பிச்சையாக ஏற்றுப் புசிப்பர் என்றும், கரகத்தில் குடிநீர் பெற்றுச் செல்வர் என்றும், குறுந்தொகைப் பாட்டிலிருந்து (277) அறிகின்றோம்.

சங்கப்புலவர்களில் ஒருவர், பக்குடுக்கை* நன்கணியார் ஆவர். அவர் சோதிடர் என்பதை அவரது பெயரே உணர்த்தும். மேலும், இன்பமும் துன்பமும் பின்னிப்பிணைந்தனவாக உலகவாழ்வில் பொருந்தியிருப்பதால். உலக வாழ்வு கொடிது என்பதை உணர்ந்து, வீட்டின்பத்துக்கு வழிதேட வேண்டுமென்று அவர் பாடுவதும் (புறநா. 194) அவர் அறிவர் என்பதை உணர்த்தும். அவர் பக்கையே உடையாகக் கொண்டிருந்தார் என்பதிலிருந்து, அறிவர் எத்துணை எளிமையான ஆடை அணிந்தனர் என்பதை அறியலாம்.

சங்க இலக்கியத்தில், தத்துவ ஞானத்தின் தன்னேரில்லா வெளியீடாகத் திகழ்வது, 'யாதும் ஊரே, யாவரும். கேளிர்' என்று தொடங்கும் பாட்டாகும் (புறநா 192). அதனை இயற்றியவர் கணியன் பூங்குன்றன் ஆவர். சங்ககால அறிவர்களிடையே அவர் சிறப்பிடம் பெற்று விளங்கினர் என்று அப்பாட்டிலிருந்தே ஊகிக்கலாம்.

## 17. பெண்கள் நிலை.

ஒரு சமுதாயம் பெண்ணினத்துக்கு அளிக்கும் உரிமை பெருமைகளை உரைகல்லாகக் கொண்டு, அச்சமுதாயத்தின் பண்பாட்டை மதிப்பிடுவர் அறிஞர். இவ்வகையில் இந்தியப் பண்பாட்டுக்குக் குணமும் உண்டு, குறையும் உண்டு.

கலைகளின் அதிதேவதையாகக் கலைமகள் என்னும் சரஸ்வதியையும், பொருட் செல்வம் முதலிய நலங்களுக்கு இறை

---

* பக்குடுக்கை-பக்கு உடை: சிதைந்த ஆடைஎன்றோ பையே ஆடையாகப் பயன்பட்டதென்றோ கொள்ளலாம். பக்கு-சிதைவு, பை.

யாகத் திருமகள் என்னும் ஸ்ரீலட்சுமியையும், வெற்றி பெற்றுத் தருவோளாகக் கொற்றவை என்னும் துர்க்கையையும் வழி பட்டுப் பெண்மையைப் போற்றுவது பாரதம். உலகமும் பூமிதேவி என்றே பரவப்பெறும்; "நிலன் என்னும் நல்லாள்"* என்பர் வள்ளுவர்; "மாநில மடந்தை"** என்பர் சங்கச் சான்றோர் நத்தத்தனார். இந்து மதக் கிளையான சாக்தம்*** உலகவிந்தையை ஆக்கிய சக்தியை அன்னையாக வழிபடுகிறது.

உலகஇயல் வாழ்விலும் தாயைத் தலைமையாகப் போற்றுவது இந்நாட்டு மரபு. தாய் தந்தையரைத் தேவரேபோல் நாள்தோறும் வழிபடவேண்டுமென்பது ஆசாரக்கோவையின் ஆணை (4,16). தாயிற் சிறந்த கோயில் இல்லை என்பது பழமொழி. ஆசானைவிடத் தந்தை நூறு மடங்கும் தந்தையை விடத் தாய் ஆயிரம் மடங்கும் உயர்ந்தவர் என்பர் மனு (2:145).

மனைவியைச் சகதர்மிணி என்று வடநூல்களும் வாழ்க்கைத்துணை என்று வள்ளுவமும் குறிப்பிடுகின்றன. மனையின் ஆக்கம் அவளேயே பொறுத்தது என்பர். வருவாய்க்குத் தக்க செலவு செய்யும் அறிவும் அவளுக்குத் தேவை என்பர் வள்ளுவர் (51). உருவோடு அறிவு உடையாள் இல்வாழ்க்கைப் பெண் என நவிலும் நான்மணிக்கடிகை (52). மனைமாட்சியின் உயிர்ப்பு கற்பு. அருந்ததி அனைய கற்பரசியாக விளங்குவாயாக என்று பெண்ணை வாழ்த்தி அறிவுறுத்துவது சான்றோர் நெறி. கணவன் காவலின் சிறுமையையும் மனைவியின் மனக்காப்புப் பெருமையையும் மனுவும் (9:12) வள்ளுவரும் (57) ஓதுவர். ஐயிருதிங்கள் அசோக வனத்தில் அவலமுற்ற சீதையும், மனக்காப்பாலேயே, தேவரையும் மூவரையும் அஞ்சி ஓடச் செய்த இராவணேசுவரனை எதிர்த்து வென்றாள். பெண்கள் மென்

---

* குறள் 1040.
** சிறுபாண். 1.
*** சாக்தம்-சக்தியைப் பரதேவதையாக வழிபடும் கொள்கை.

மையோடு மனத்திண்மையும், ஆண்கள் வன்மையோடு மன நொய்ம்மையும் உடையர் என்பது சான்றோர் உணர்ந்த உண்மை. எனவே, மனைவி தன்னைக் காத்தலோடு தன் கண வனை அறநெறியில் காத்துக் குடும்பத்தின் புகழை விளக்கம் பெறச்செய்யவும் வேண்டுமென்பர்.

தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண். (56)

என்று கூறும் குறள். மகளிரின் கற்புத்திண்மையால் அநீதி அழியுமென்பதை இதிகாசங்களும் சிலப்பதிகாரமும் மணிமே கலையும் புலப்படுத்துகின்றன. பெண்ணுக்கு உயிரினும் நாணம் சிறந்தது என்றும், நாணத்தினும் சிறந்தது குற்ற மற்ற கற்பு என்றும் தொல்காப்பியம் கூறும்:

உயிரினும் சிறந்தன்று நாணே; நாணினும்
செயிர்தீர் காட்சிக் கற்புச்சிறந் தன்று* (பொருள் 113)

முன்னாளில் பாரதம் பெண் கல்வியைப் போற்றியது. வேதத்தில் பெண்கள் யாத்த சூக்தங்கள் உள. யாஞ்ஞவல்கி யர் என்ற ஞானியுடன் கார்கி என்ற நங்கை நல்லாள் மெய்ப் பொருளைப் பற்றித் திறம்பட வாதம் செய்தாளென்பதைப் பிருகதாரிணயக உபநிடதத்தில் படிக்கிறோம். பௌத்த பிக் குனிகளில் சிலர் இயற்றிய கவிதைகள் பாலி இலக்கியத்தில் சிறப்பிடம் பெறுவன. சங்கப் புலவர்களில் கவித்துவத்தால் சிறந்தோரில் ஒருவர் ஔவையார். வெண்குயத்தியார், பாரி மகளிர், காக்கை பாடினியார், ஆதிமந்தியார் முதலிய பெண் பாற் புலவர்களும் அரிய கவிதைகளை இயற்றினர். பக்தி இயக்கப் பெரியார்களில் ஆண்டாளும் காரைக்கால் அம்மை யாரும் இலக்கியச் சுவை மிகுந்த ஞானப்பாடல்களைப் பாடிய பெண்களாவர்.

அரசியலில் பங்குபெற்ற பெண்களும் இருந்தனர். பாண் டிய வமிசத்தைத் தோற்றுவித்து அரியணை ஏறியவரே பெண் என்பது தொல்பழங்கதை. சந்திர குப்த விக்கிரமாதித்திய னின் மகளான பிரபாவதி தேவி, தனது கணவனான வாகாடக

* சிறந்தன்று-சிறந்தது. செயிர்தீர்-குற்றம் தீர்ந்த, கற் புக்காட்சி-கற்புச்சிறந்ததென்று மனத்தால் உணர்தல்.

வேந்தன் இளவயதில் இறந்ததால், தன்மக்களுக்கு வயது வரும் வரையில் அரசுப்பொறுப்பை நிர்வகித்தாள்; கூர்ஜரத்தைச் சகர்களிடமிருந்து வெல்வதில் தகப்பனுக்குத் துணையாயிருந் தாள். ஹர்ஷனுடைய ஆட்சியில் அவன் சகோதரி ராஜ்ய ஸ்ரீக்குப் பொறுப்பு இருந்தது. ராஜராஜ சோழனுக்கு அவன் தமக்கை குந்தவை செய்த உதவி பெரிது. ஜயசிம்மனின் சகோ தரி அக்காதேவி ஆட்சிப்பொறுப்போடு போரிலும் முற்றுகை யிலும் கூடப் பங்குகொண்டாள். காகதீய வமிசத்தில் அரசு கட்டில் ஏறிப் புகழ் எய்தியவள் ருத்ராம்பாள். மதுரை நாயக் கர் வமிசத்தில், திருமலை நாயக்கனுக்கு இணையான புகழ் எய் தினள், அவனுடைய பின்தோன்றல் ராணி மங்கம்மாள்.

ஆயினும் பெரும்பாலான உயர்குடிப் பெண்கள் வெளி உலகத் தொடர்பில்லா வீட்டரசிகளாகவே இருந்தனர் என் பது வட நூலைப்போல தமிழ் நூலும் தரும் காட்சியாகும். 'மனைக்கு விளக்காகிய வாணுதல்' என்பது புறநானூற்று வாக்கு (314).

> வினையே ஆடவர்க்கு உயிரே; வாணுதல்*
> மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர். (135)

என்பது குறுந்தொகையின் கூற்று. போர், பொருள், தூது முதலியவற்றுக்காகத் தலைவன் தலைவியைப் பிரிந்து சென்றான் என்றே அகத்திணை இலக்கியம் கற்பனை செய்யும்; தலைவியும் வினையாற்றச் சென்றாளென்று கவிதை கூறாது.

சங்ககால மறக்குடிப் பெண்களின் வீரம் பற்றிக் குறிப் பிட்டோம் (IV: 10). கணவனைப் போரில் இழந்த பெண், தன் ஒரே மகனான பாலகனையும் களத்துக்கு அனுப்பினாளென்று படிக்கிறோம் (புறநா 279). மகன் போரில் தோற்றோடினான் என்று கேட்டுச் சினந்த தாய், அது உண்மையெனில் அவனுக் குப் பால் தந்த மார்பை அறுத்தெறிவேனென்று கூறிக் களத் தில் பிணங்களைப் புரட்டிப் பார்த்து, மார்புகிழிந்து மாண்ட மகனைக் கண்டு "ஈன்ற ஞான்றினும் பெரிது உவந்தனள்" என்று அறிகிறோம் (புறநா 278). ஆனால் பெண்ணே களம்

* வாணுதல்-ஒளிபொருந்திய நெற்றி (யை உடைய)

புகுந்து அமர்நிகழ்த்தினுளென்று எவரும் கூறுர். பொன்முடி யாரும்,

ஒளிருவாள் அருஞ்சமம் முறுக்கிக்
களிறுஎறிந்து பெயர்தல் காளேக்குக் கடனே*

(புறநா. 312)

என்ருரே யன்றிக் காளேயோடு பெண்ணுக்கும் அப்பொறுப்பு உண்டு என்ருரில்லே. அறப்போர் தொடுக்கும் அரசன், பெண் களேக் காவலான இடம் செல்லுமாறு முரசறைந்து எச்சரிப் பான் என்பர் நெட்டிமையார் (புறநா 9). பாசறையிலிருந்த பெண்களே முல்லேப்பாட்டு (45-49) குறிப்பிடுவது மெய்யே. அவர்கள் தற்காப்புக்காக இரவைப் பகலாக்கும் ஒள்ளிய வாளே உடையர் என்பதும் உண்மையே. ஆனுல் விளக்கு அணேந்தால் ஏற்றிவைப்பதற்கு எண்ணெய்ப் பந்தம் ஏந்திச் சென்றேரே அவர்கள்.

மனேவாழ் மகளிர் பலகற்ற நிலேயிலும் உலக அனுபவம் பெருத காரணத்தால் பேதையர் எனப்பட்டனர். கண்ணகி பூம்புகாரை நீங்கியவுடனேயே, 'மதுரை மூதூர் யாதோ?' என்று கோவலனே வினவியதில் இப்பேதைமையே புலனுகிறது. உலக இயல் அறிவு வளரா இந்நிலேயினே உன்னியே, மனேவி யைப் பூங்கொடி என்பதும் கணவனேக் கொழுநன் என்பதும் பெருவழக்கானது. அமைதி நாட்டத்தையும் ஆக்க நல வேட் கையையும் இயல்பாகக் கொண்ட பெண்குலம், போரும் பூச லும் நிறைந்த பொல்லாத காலத்தில் பொதுவாழ்வில் பெயர் எடுப்பது அரிதே. இந்நாளில் ஆண்களோடு பெண்கள் சரிநிகர் சமானமாக வாழும் நாடுகளிலும், படைவீரராகவும் படைத் தலேவராகவும் பணியாற்றும் பெண்கள் சிலரே. போர்வீரத் தைப் போற்றும் சமுதாயத்தில் மகளிர் களம் புகுந்து விந்தை நிகழ்த்தும் உரம் உடையரே ஆயினும், போர்களில் பெண்கள் அழிந்தால், வமிசம் விளங்குவதற்கு வாய்ப்புக்குன்றும் என் பதை மறப்பதற்கில்லே. ஆடவர் பலர் களத்தில் உயிரிழந்

---

* சமம்-போரில், முறுக்கி-சுழற்றி, களிறு-(பகைமன்னர்) யானேயை, எறிந்து-கொன்று, பெயர்தல்-மீண்டுவரு தல்.

தனராயினும், பலதார மணமுறையால் அனைத்துப் பெண்களும் இல்லறம் ஓம்பி மக்கட் செல்வத்தை அடைவது சாத்தியம். பெண்களே களம் புகுந்து பல்லாயிரக்கணக்கில் மாண்டனர் எனின், மக்கட் செல்வப் பெருக்கத்துக்கு வழியில்லாது போகும். முன்பே, ஆண்களைப் போல் நோய்நொடிகளால் இறந்த பெண்களோடு, பேறுகாலப் பராமரிப்பு இன்மையாலும் பெண்கள் பலர் மாண்ட சூழலில், போருக்கும் பெண்களை அனுப்புவதிலும் கொடுமை வேறு இருக்க முடியாது. தாய்வழிக்குலங்களின் அனுபவத்திலிருந்து இந்த உண்மைகள் ஒருவகையாக விளக்கம் பெற்றதால், எந்த நாகரிகச் சமுதாயமும் பெண்களைப் போர்க்களம் அனுப்புவதற்கு விரும்பவில்லை. பொதுவாழ்வில் போரே தலைமைவினையாக இருந்த முன்னாளில், மகளிர் பெரும்பான்மையாக மனையுறைவோராகவே இருந்தனர் என்பதில் வியப்பில்லை.

மனிதகுல வரலாற்றிலிருந்து இன்னொரு உண்மை விளங்கும். காட்டில் புகுந்து விலங்குகளை வேட்டையாடிய நிலையிலும், ஆடுமாடுகளை ஓட்டிச் சென்று மேய்த்த ஆயர் வாழ்விலும், கடலுள் திமிலில் சென்று மீன் பிடித்துவந்த நெய்தல் நில வாழ்விலும், ஆடவரே பெரும்பொறுப்பு வகித்தனர். தினைப்புனம் காத்தும் உப்பும் மீனும் மோரும் விற்றும் உறுதுணையாக மகளிர் செயலாற்றினராயினும், ஆண்களே கடினமான பணிகளை மேற்கொண்டனர். வீட்டைச் சுற்றியுள்ள நிலத்தில் பயிர் செய்த காலத்தில் பெண்கள் பயிர்ச் செலவுப் பொறுப்பை வகித்தனர். ஆனால் ஏர் கட்டி உழுது பயிரிடும் முறை வந்த பின்னர், ஆடவர்க்கே தலைமைப் பொறுப்பு அமைந்தது. ஆக, உழைப்பை எளிதாக்கிய தொழிற்புரட்சிக்கு முன்னர், பெரும்பாலும் ஆடவரே பொருளுற்பத்தியில் பொறுப்புமிக்க பணியாற்றினர் என்பதை மறுக்கமுடியாது. எனவே, மருத நில நாகரிகத்தில், பொருளாதாரத் தேவை கருதி ஏழைப் பெண்கள் பலரும் நடவு, களையெடுப்பு முதலிய வேளாண்மைப் பணிகளிலும், நூல் நூற்றல்* போன்ற குடி

---

* "பருத்திப்பெண்டின் பனுவல்" என்று புறநானூறு (125) கூறும். (பனுவல்—சுகிர்ந்த பஞ்சு) நூற்றல் தொழில் பயின்ற பெண்களைக் குறிப்பிடுவதே இது.

சைத் தொழில்களிலும் பங்குபற்றிய போதிலும், பொறுப்பான கடினப்பணிகளை மேற்கொண்டோர் ஆடவரே. பிழைப்புக்கு உழைக்கும் நிலையில் இல்லாத உயர்குடி மகளிர் இல்லறப் பொறுப்போடு அமைந்தனர்; இல்வாழ்வுக்கு வளம் கூட்டும் இசை அனைய கலைகளில் ஓய்வு நேரத்தில் ஈடுபட்டனர்.

இந்தச் சூழலில், தன்னுரிமை நிறைவோடு, எவரையும் சாராது வாழ்வதற்குப் பெண்ணுக்கு வாய்ப்பில்லை. எனவே, இளமையில் தந்தையையும், மணமானபின் கணவனையும், விதவையானால் மகனையும் சார்ந்து நிற்பாள் பெண் என்று ஓதினார் மனு (5:148). பொதுவாழ்வின் சிக்கல்களை மனை உறை மகளிர் அறியார்; குடும்பச் சூழலில் அன்பே பேணும் மகளிர் பொதுவாழ்வில் வன்முறையும் விரகும் பயில்வதற்கு* உடன்படார். அதனால், பொதுவாழ்வில் பெண் பேச்சுக்குச் செவி கொடுக்காதே என்று எச்சரிக்கும் பெண்வழிச் சேறல் அதிகாரத்தை (91) பாடினார் வள்ளுவர். எனவே இவற்றைக் கருதி, மனுவும் வள்ளுவரும் பெண்ணுக்கு இழிவு சூழ்ந்தனர் என்பது வரலாற்றுப் பார்வை அறியாப் பேதமையாகும். பார்க்கப் போனால், பெண்களைப் போற்றி மகிழ்விக்கும் இல்லங்களில் கடவுளர் விரும்பி எழுந்தருள்வர் என்றும், மகளிரைப் போற்றாத மனைகளில் எந்தக் காரியமும் பயன் தராது என்றும் மொழிவார் மனு (3:56) கற்புடைப் பெண்மையிலும் சிறந்தது ஒன்றுமில்லை என்பார் வள்ளுவர் (54).

விதவைக்கு மறுமண உரிமையை மறுத்தது இந்தியப் பண்பாட்டின் பெருங்குறையே. பாடுபடும் குடிகளைச் சேர்ந்த பெண்கள் விதவையானால் மீண்டும் மணப்பதற்குச் சமுதாயம் பெருந்தடையாக இருந்ததில்லை என்பது மெய். தமயந்தியின் மறுசுயம்வர விரகையும** அர்த்தசாத்திரம் கைம்பெண்ணின் மறுமணம்பற்றிப் பேசுவதையும் (அதி 3—அத் 59) கருதுங்

* வன்முறையும் விரகும் (விரகு-தந்திரம்) பொதுவாழ்வில் இன்றியமையாதன என்று குறளின் பொருட்பால் கூறுவதை முன்பே கண்டோம் (III:8).

** பாரதம் வனபர்வம்: அத்தியாயம் 68. சூதாடி நாடு இழந்த நளன், காட்டில் தன் மனைவி தமயந்தி படும்

கால், தொல்காலத்தில் உயர்குலங்களும் விதவை மறுமணத் துக்கு இடம் தந்தன என்பது விளங்கும். ஆயினும், கிறிஸ்து பிறப்புக்கு முன்பே உயர்குல விதவை மறுமணம் செய்து கொள்வதற்குச் சமுதாயம் தடை விதித்தது. ''மதிப்புக்குரிய மகளிருக்கு மறுமணம் அனுமதிப்பார் எவரும் இலர்'' என்ற மனுவாக்கை (5:162) மறுத்தார் எவரும் இலர்.

விதவைகள் காய்கனி கிழங்குகளால் சிற்றுணவு கொண்டு வாழ்நாளெல்லாம்நோன்பிருக்கவேண்டுமென்பர்மனு(5:157, 158). கணவனை இழந்தவள் கூந்தலை மழித்துவிடும் வழக்கம் தமிழகத்தில் தோன்றியது. தலையை மொட்டையடித்தும், மங்கலிய சூத்திரத்தோடு அணிகள் அனைத்தையும் நீக்கியும், அல்லி அரிசியும் வேவித்த வேளைக்கீரையுமே உண்டும், பருக் கைக்கற்கள் மீது பாயலுமின்றிப் படுத்தும், விதவைகள் காலந் தள்ளினர் என்பதைப் புறநானூற்றிலிருந்து அறிகிறோம்*. உயர்குலப் பெண்கள் சிலர் மாண்ட கணவனோடு தீப்பாய் வதற்கு இதுவும் ஒரு காரணமாயிற்று என்பதைப் பூதப்பாண் டியனுடன் தீப்பாயும்போது அவன் தேவி பாடிய பாட்டால் (புறநா 246) அறியலாம்**. கணவனோடு தீப்பாயாது,

---

துன்பத்தைக்கண்டு, அவள் தன் தந்தையிடம் போய் விடுவாளென்ற துணிவுடன், நள்ளிரவில் அவள் துயி லும்போது, அவளைப் பிரிந்து சென்று, மாற்றுருப் பெற்று, அயோத்தி அரசனிடம் தேரோட்டியாகவும் சமையற்காரனாகவும் அமர்ந்தான். தந்தை இல்லம் சென்ற தமயந்தி, கணவன் இருப்பிடம் பற்றி உள வறிந்து, அவனை அடையும் பொருட்டு ஒரு சூழ்ச்சி செய்தாள். தனக்கு இரண்டாவது சுயம்வரம் என்று அயோத்தி அரசனுக்குச் செய்தி அனுப்பினாள். அவள் எதிர்பார்த்தவாறு, அயோத்தி அரசனுக்கு நளன் தேரோட்டிவந்தான். அதன் பின், யாவும் நலமே எய்தின.

* பாட்டுக்கள் 25, 246, 248, 250, 261, 280.

** தீப்பாய்தலுக்கு இன்னொரு காரணம், கணவனிட மிருந்த பாசம் என்பது சொல்லாமல் விளங்கும்.

கைம்மை நோன்பால் வருந்தி ஆறுகுளங்களுக்குச் சென்று நீராடும் மகளிரைப்போல் விதவை வாழ்க்கை வாழேன் என்று கண்ணகியும் கூறுவாள்.* ஆனால் கணவனோடு தீப் பாய்ந்தவர் சிலரே என்று ஊகிக்கலாம். வடபுலநிலையும் அதுவே. இராமாயணத்தில், தயரதன் உடலை ஈமப்பள்ளியில் ஏற்றியபோது, அவன் தேவியர் பலரும் எரியில் மூழ்கினராயினும், முப்பெருந்தேவிகளான கோசலையும், சுமித்திரையும், கைகேயியும் உடன்கட்டை ஏறினாரல்லர். பாரதத்தில் பாண்டு இறந்தபோது, மூத்த மனைவி குந்தி தீக்குளிக்கவில்லை; இளைய மனைவி மாத்திரி மட்டும் தீக்குளித்தாள். இடைக்காலத்திலேயே உடன்கட்டை ஏறுதல் என்னும் கொடுமை அதிகமாயிற்று:

பலதார மணத்தாலும் மகளிர் அல்லலுற்றனர். ஒன்றானால் தாரம், இரண்டானால் பாரம், மூன்றானால் கோரம் என்பர். ஒருவனுக்கு ஒருத்தி என்பதே பொதுவழக்கு ஆயினும், வசதி உள்ளவர் பலதார மணம் செய்வதற்குத் தயங்கினரல்லர். கரிகாற்சோழன், ஆய் அண்டிரன், பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் விண்ணந்தாயன் முதலியோர் பல மனைவியரை மணந்திருந்தனர் என்று புறநானூற்றிலிருந்து அறிவோம். முதல் மனைவியிடம் புதல்வன் பிறக்கவில்லையென்று இரண்டாம் மனைவியை மணந்தவர்களில் ஏழைகளும் இருந்தனர்.

பண்டை நாளில் வயதுவந்த பெண்களே திருமணம் செய்து கொண்டனர் என்றாலும், நாளாவட்டத்தில், பருவம் எய்துவதற்கு முன்பே பெண்ணுக்கு மணம் செய்விக்கும் வழக்கம் ஏற்பட்டது. எட்டு வயதுப் பெண்ணுக்கு மணம் செய்விக்கலாமென்பர் மனு (9:88, 94). பதினாறு ஆண்டுக்கு உட்பட்ட கோவலனுக்கும் பன்னிரண்டு ஆண்டுக்கு உட்பட்ட கண்ணகிக்கும் திருமணம் நடந்ததென்பது சிலப்பதிகாரக் கதை. ஆனால் இடைக்காலத்திலேயே பால்ய விவாகம் உயர் குலங்களில் பெருவழக்கானது.

இளமையில் திருமணமான உயர்குலப் பெண் பருவமுறுவதற்கு முன்பே கணவனை இழந்தாலும் வாழ்நாளெல்லாம் கைம்மை நோன்பே நோற்றாள்.

---

* சிலப்பதிகாரம் 18:42—45.

குழந்தைத் திருமணம், கைம்மைத்துன்பம், பலதார மணமுறை, பெண்ணுக்குச் சொத்துரிமை மறுப்பு முதலியவற்றால் உயர்குலப் பெண்களைத் துன்புறுத்திய மரபும் இந்தியாவுக்கு உண்டு. இடைக்காலத்தில் குழந்தைத் திருமணமும் கைம்மைக் கொடுமையும் பெருகின. உடன்கட்டை ஏறலும் அதிகமாயிற்று. உரிமை இல்லாப் பெண், குடிவெறியனாகவும் பரத்தைலோலனாகவும் கெட்டலைந்த கணவனிடம் பட்ட துன்பமும் பெரிது.

ஆயிரமாண்டாக நாட்டுக்குக் கேடு சூழ்ந்த இந்த அநீதிகளுக்குச் சடந்த நூற்றாண்டில் மலர்ந்த தேசிய இயக்கமே இறுதி சூழ்ந்தது.



# பொருள் அகராதி

## அ

ஈ



உ



ஊ



எ



ஏ



ஐ

## ச

ப

ம

ய



ர



ல



வ

க்ஷ



ஸ்ரீ



